டாக்டர் சாம் வாக்னின், (Sam Vaknin) எனும் மனநோய் சிகிச்சை நிபுணர் “கொடுந் தற்காதல்” (Malignant Self-Love) எனும் இக்கருத்துப் படிவத்தை முதன் முதலாகக் கண்டு உலகுக்கு எடுத்துரைத்தார்.[122]

இக்கருத்தில் இவர் ஒருவரே உலகிற் சிறந்த நிபுணர் எனக் கருதப் படுகிறார். தற்காதலர்களின் தனிப் பண்புகளை இவர் அறிந்து கூறியது போல வேறெவரும் இது வரை கூறியதில்லை. வாக்னின் மேலும் இக்கருத்தை எடுத்துக்காட்டுகளுடன் நமக்குக் கூறுகிறார்: ‘மானிடர் ஒவ்வொருவரும் தற்காதலர்களே’. இது தனிப்பட்ட முறையில் ஒருவருக்கொருவர் படிப்படியாகச் சற்று மாறுபடும். இப்பண்பை முற்றிலும் கொடியது எனக் கூறிவிட முடியாது. இதுவும் நலமார்ந்த புலன்களால் காணத் தக்க நல்லியல் நிகழ்ச்சிதான். இங்கு தான் வித்தியாசம் ஏற்படுகிறது.

- ஒன்று நலமுள்ள தற்காதல், மற்றொன்று,
- மனநோய் இயல் சார்ந்த (pathological narcissism) தற்காதல்.

இவ்விரண்டில் மனநோய் இயல் சார்ந்ததுதான் முகம்மதுவின் தற்காதல் என்பதை ஆய்வுக்காக எடுத்துள்ளோம்: [123]

எப்போதுமே ‘மற்றோரும் தன்னைப் போன்ற மக்களே’ என எண்ணாது இருத்தல்; உச்சகட்டத்தில் தன்னைச் சுற்றியுள்ளோர் மனிதர்களே அல்ல என்ற எண்ணம்; எல்லோருமே ஒவ்வொரு காட்சிப் பொருட்களே எனும் நோக்கு; அவைகளைத் தனக்கு வேண்டியவாறு ஆதாயமாகப் (சுயநலத்துடன்) பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்றும் வெறிக்கொள்கை; இவர்களைத் தன் தற்காதலுக்கு வேண்டிய சுரண்டலுக்கே உபயோகப்படுத்த (narcissit supply) வேண்டுமே தவிர வேறொன்றுக்கும் இல்லை; தன் ஆழ்மனதில் தன்னைப் பற்றி ஏற்படுத்திக் கொண்ட பெருமிதப் பகட்டான கற்பனைகளால் (grandiose fantasies) மற்றோரைக் காட்டிலும் தான் தனிச்சிறப்பாக நடத்தப்படுதலுக்குச் சகல உரிமை (மற்றோருக்குத் தன் மீது கடப்பாடு) உண்டென நம்புவது; எதிர்பார்ப்பது; இது தன்னிச்சையாக விளைகிறது; இவனது அறிந்து கொள்ளும் ஆற்றலும் (cognition) உணர்வுகளும் தெளிவின்மையால் உருச்சிதைந்து தவறான வழியில் உள்ளது; தற்காதலன் தனக்கே பொய்களைக் கூறிக்கொண்டு, அதையே மற்றோருக்கும் கூறுவான்; தற்காதலருக்கு (முன்பின்) முரண்பாடற்ற கருத்துக்களைக் கூற இயலாது; கூறும் பொய்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சமயத்திலும் வெவ்வேறாக இருக்கும்; தான் மிகச் சிறந்தவனென வெளிப்பூச்சுக்காகக் காட்டிக்கொள்ள அப்பொய்களில் தீண்டாமை, மற்றோர் உணர்வுகளுகளிலிருந்து தான் ஈடு கொடுத்து பாதுகாப்பு அளிக்க நினைப்பது போன்றும்; மற்றெவராலும் தன்னை வெல்ல இயலாதனென நினைப்பு ஆகியவைகள் அடங்கும்; இவனுக்கு ஒவ்வொன்றும் பிறர் வாழ்க்கையை விடத் தன் சுயநலமே முக்கியத்துவம் வாய்ந்தது; சில சமயத்தில் மிக நற்பண்புள்ளவனாக இருப்பான், அடுத்து அடிக்கடி மனம் மாறி, உடனே வலுச்சண்டைக்கும் சென்று விடுவான்; இவனுடைய உறுதிமொழிகள் காட்டுமிராண்டித் தன்மையுடன்தான் இருக்கும்; இவனது விமரிசனம் மிக மூர்க்கத்தனத்துடன் சீற்றங் கொண்டாதாகவும், அச்சுறுத்தலுடன் கூறுவது போலவும் தோன்றும். (உதாரணமாக: “நான் கூறியபடி செய், இல்லாவிட்டால் கேடு விளையும்” எனச் சபிப்பது. ‘You are always correct so long you agree with me’ - concept);

[122] Sam Vaknin and Lidija Rangelovska, *Malignant Self Love - Narcissism Revisited* , Narcissus Publications, CzechRepublic (January 4, 2007),

[123]healthyplace.com/Communities/Personality_Disorders/Site/Transcripts/narcissism.htm

இவன் பெருந்தன்மை இவனது முட்டாள்தனத்தைத்தான் பிறர் மனதில் தோற்றுவிக்கும்;

கீழ்க்காணும் ஒரு கதையில் முகம்மது எப்படித் தன் தரம், பதவி, சமுதாயப்படி நிலையைப் பற்றியும், தனக்கு எல்லோரும் மரியாதை செலுத்த வேண்டுமென எண்ணத்தில் வேறு சிந்தனைகளுக்கு இடமளிக்காமல் மனதை எவ்வாறு ஈடுபடுத்தியிருந்தார் எனவும் தெரிந்துவிடும்.

இந்நிகழ்ச்சி 9 AH (சரியாக முகம்மது மதீனாவுக்குக் குடியேறி ஒன்பது வருடம் கழிந்து - AH என்றால் After Hijira) பானி தமீம் எனும் ஒரு அரேபிய இனத்தைச் சேர்ந்தவர்கள் முகம்மதுவை சந்திக்க வந்திருந்தார்கள். அச்சமயம் கொள்ளையடித்த செல்வம் மிக நிறைந்து கர்வத்துடன் முகம்மது இருந்த காலம். எப்போதும் போன்று அக்கால அரேபிய வழக்கத்தையொட்டி, முகம்மது தங்கியிருந்த இடத்திலிருந்து (hujurat) வெளிவருமாறு வெளியிலிருந்து ஒருவன் உரத்த கூச்சலில் "ஏ! முகம்மது வெளியே வா! உன்னைக் காண வெகு தூரத்திலிருந்து வந்துள்ளோம்" எனக் கூவி அழைத்தனர். அப்போது முகம்மது பெருந்தனக்காரனாகி தன் இளம் மனைவியர்களுடன் கொஞ்சி குலாவிக் கொண்டிருந்தார். கூச்சல் குரலில் தன்னை வெளியில் அழைத்தது முகம்மதுவுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. எல்லையில்லாச் செல்வம் திடீரெனக் கையில் நிறைந்து கிடப்பதால், அதற்குள்ள மிடுக்குடன் ஒரு மன்னருக்குள்ள மரியாதையுடன், பயபக்தியுடன் எல்லோரும் தன்னிடம் பேசிப் பழகி நடத்த வேண்டுமென முகம்மது விரும்பினார். (தமிழில் இவ்வாறு கூறுவது உண்டு: "அற்பனுக்கு 'பவிசு' வந்தால் வீட்டிலேயே அர்த்த ராத்திரியில் குடை பிடித்துக் கொள்வான்") எத்தனை தடவை கூப்பிட்டாலும் 'மரியாதையாக'க் கூப்பிடாததால் கூப்பிட்டதற்கு பதிலளிக்காமல், உடனுக்குடன் அல்லாவின் வசனங்களாக பொசுக்கென பிதுக்கி வெளிவந்தது: (இப்படி ஒரு சிறு நிகழ்ச்சியைக் குறித்துக் கூட அல்லாவுக்கு முகம்மதுவின் மீது இவ்வளவு அவசரக் கரிசனம் ஏன் என நினைக்கத் தோன்றுகிறதா!! இதுதான் முகம்மதுவின் ஆணைக்குக் கீழ்ப்படியும் அல்லா எனும் 'பணியாளர்'! என்பதற்கு மற்றொரு ஆதாரம்)

குரான் வசனங்கள்: **49: 1 to 5**

**குரான் 49:1-** முஃமின்களே! அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் முன்னர் (பேசவதற்கு) நீங்கள் முந்தாதீர்கள்; அல்லாஹ்விடம் பயபக்தியுடன் இருங்கள்;

**குரான் 49:2-** முஃமினகளே! நீங்கள் நபியின் சப்தத்திற்கு மேலே, உங்கள் சப்தங்களை உயர்த்தாதீர்கள்; [[[....]]]

**குரான் 49:3-** நிச்சயமாக, எவர்கள் அல்லாஹ்வுடைய தூதரின் முன்பு, தங்களுடைய சப்தங்களைத் தாழ்த்திக் கொள்கிறார்களோ அ(த்தகைய)வர்[[[...]]]களுக்கு மன்னிப்பும், மகத்தான கூலியும் உண்டு.

**குரான் 49:4 -** (நபியே!) நிச்சயமாக, எவர்கள் (உம்) அறைகளுக்கு வெளியே இருந்து உம்மை இரைந்து அழைக்கிறார்களோ, அவர்களில் பெரும்பாலோர் விளங்கிக் கொள்ளாதவர்களே!

**குரான் 49:5-** நீர் அவர்களிடம் வெளிப்பட்டு வரும் வரையில், அவர்கள் பொறுத்திருந்தார்களானால், அது அவர்களுக்கு நலமாக இருக்கும்; [[[...]]].

இவ்வாறு மேற்கூறிய வசனங்களில் கூறப்பட்டுள்ளது:

## தற்காதலரின் விபரீத வெறி ஈடுபாடு

தற்காதலன் தன்னை எப்போதும் பாராட்டுபவர்கள் சுற்றிக் கொண்டே இருக்க வேண்டுமென விரும்புவான். இதற்காகத் தன்னைச் சுற்றியொரு கற்பனை

வட்டத்தை உருவாக்கிக் கொண்டு, அதன் நட்டநடுவில் நாயகனாகத் தானிருப்பான்; இவனுடைய விசிறிகளாகிய சீடர்களையும் அவ்வட்டத்திற்குள் வைத்து, இவர்களுக்கு அவ்வப்போது பரிசு-கையூட்டு-லஞ்சம் ஆகியவைகளாகக் கொடுத்துக் கெடுத்துத் தன்னையே புகழ் பாட ஊக்குவித்துக் கொண்டே இருப்பான். இவ்வட்டத்திற்கு வெளியில் இருப்பவர்கள் அனைவருமே தன்னுடைய எதிரிகள் என ஒரு கொள்கையாக கணித்துக் கொள்வான் என வாக்னின் கூறுகிறார்: [124]

தற்காதலன் அவ்விபரீதக் கூட்டத்திற்கு ஆசானுமாவான் (guru). எங்கும் உள்ள குருமார்கள் போன்று தன் சீடர்கள் மட்டுமின்றி, அச்சீடர்களின் மனைவி, மக்கள், குடும்ப அங்கத்தினர்கள், நண்பர்கள், கூட வேலை செய்யும் தோழர்கள், ஆகியோருடைய கீழ்ப்படிதலை அதிகாரபூர்வமாகவே நிர்பந்தப் படுத்துவான். எப்போதாகிலும் இச்சீடர்கள் தன்னிச்சையாகத் திரியும் ஆட்டுக்குட்டிகள் போன்று தெரியாத்தனமாகச் செயல் புரிந்தால், அவர்களுக்கும் கொடுமையான தண்டனைகளை முன்னெச்சரிகையாக வழங்கி விடுவான். தன் சொல்படி நடந்து கீழ்ப்படிந்து தன்னுடைய எண்ணப்படி நடந்துகொள்ள தன் சீடர்கள் மீது கட்டாயப் படுத்துவான். இவைகளில் குறையேதும் இருந்தால், இவ்வாசானுடைய கருத்துக்களிலிருந்து விலகிப் போக முடியாதபடி சீடர்கள் மீது ஆதிக்கம் செலுத்தி, அவர்கள் சிந்தனை, சொல், செயல்கள் இவைகளிலும் குறிக்கிட்டுத் திரும்பத் திரும்ப சீடர்கள் மீது தன் கருத்துகளை முழுதுமாக ஏற்றுக் கொள்ளும் வரை மூளையைத் துடைத்துச் சுத்தமாகச் சலவை செய்து விடுவான். சீடர்களுக்கு எதெதில் என்னென்ன உரிமையில்லாத கடமைகளென்னென்ன எனத் தீர்மானிப்பவனும் அவனே! தற்காதலனுடைய ஆதிக்கம் கீழ் கூறியவைகளில் நிறைந்து காணப்படும்: இரட்டுறமொழிதல், என்னென்ன எப்போது சொல்வானென வருவதுரைக்க முடியாதவைகள், தெளிவில்லாக் கருத்துகள், நல்ல சந்தர்ப்பவாதி. எல்லவிதத்திலும் தன்னைச் சேர்ந்தவர்களையே வைதுரைத்து, அவதூறாகப் பேசிக் கட்டுக்கு மீறித் திட்டுவது போன்றவைகளால் ஆதிக்கம் செலுத்துவான். தானொரு மேலாளராகத் தன்னை எண்ணிக்கொண்டு, தற்காதலன் தன் பண்புகளைக் குறுகிய வட்டத்துச் செயல்பாணியில் இயங்குவான். தன்னாதிக்கத்தைச் சின்னஞ்சிறு விஷயத்திலும் செலுத்திப் பிறர் நடத்தைகளையும் அதிநுட்பமாக ஆய்வு செய்வான். தன்னிச்சைப்படித் தன் இலக்குகளையும் ஆசைகளையும் நடைமுறையில் எவர் செயலாற்றாவிட்டாலோ, அல்லது எத்தகவலையும் தன்னிடமிருந்து மறைத்தாலோ மிகக் கடுமையாகக்த் திட்டி கடுந்தண்டனைக்கு உட்படுத்துவான். முன் செய்த செயலுக்காகக் காட்டிக் கொடுத்துவிட அவனை அச்சுறுத்துவான்.

எந்த வரைமுறைகளிலும் ஒவ்வொருவருக்கும் தங்கள் தனி ரகசியங்களைக் காக்கும் உரிமையுண்டு எனும் கருத்தைத் தற்காதலன் ஆதரிக்க மாட்டான். அதே சமயம் தன் சீடர்களை ஐம்புலனுள்ள மனிதர்களாக எண்ணாமல், காட்சிப் பொருட்களென எண்ணி, இவர்களுடைய ஆசாபாசங்களை மதிக்காமல், இச்சீடர்கள் யாவருமே தன்னை மட்டுமே திருப்தி செய்யப் பிறந்திருக்கும் ஜடப் பிறவியென்றும்; மனித உருவில் இயங்கும் இயந்திரமெனவும் (Robot) நடத்துவான். வலுக்கட்டாயமாக மற்றவரெவருக்கும் சுயஆட்சி / தன்னாட்சி உரிமை, அதில் சந்திக்க வேண்டிய பிரச்சனைகள் ஆகியவைகளை நேர்கொள்ள ஒப்புதலளிக்க மாட்டான். தன் சீடன் தனது நண்பனையோ, அவர் குடும்பத்தில் ஒருவரையோ சென்று சந்திக்க அனுமதி கட்டாயம் வழங்க மாட்டான். தன் சீடர்களின் மன

[124] "The Cult of the Narcissist" by Dr. Sam Vaknin, published in *Malignant Self Love - Narcissism Revisited*, and at http://samvak.tripod.com/journal79.html, c. Sam Vaknin, date not given (accessed June 22, 2007).

உணர்ச்சிகளிலும், பாலியல் தேவைகளிலும், பணம், சமுதாய விஷயங்களிலும், தற்காதலனை விடுத்து வேறு வழியில்லை என இவனையே சார்ந்து இருக்க வைத்து, போகப் போகச் சீடனின் அருகாமைக்குரியவர்களிடமிருந்து தனியாக்கி விடுவான். தற்காதலன் தன் சீடர்களைத் தானொருவனே பாதுகாப்பது போலவும் தன் மனமிரங்கி அவர்களுக்கு அருள் புரிவது போலவும் சீடர்களிடம் குற்றங்காண்பான். இதனால் சீடர்களின் சுயமதிப்பைக் குறைத்து, அவ்வப்போது தன் விபரீத நடவடிக்கைகளில் மிக ஈடுபாடுள்ள சீடர்களுடைய தலைசிறந்த திறமைகளையும் குணநலன்களையும் மதி நுட்பத்தையும் (தன் சுயநல உபயோகத்திற்காக) அதிகமாக சிலாகிப்பான். மெய்மை சாராத, உலக நடப்புகளுக்கு அப்பட்டமாக நேர்மாறானவைகளில் தன் எதிர்பார்ப்புகளில் உறுதியாக இருத்திக்கொண்டு இவைகளையும் தன் தனிச் சட்டமெனத் தீர்மானித்து, இதைக் காட்டிக் காட்டித் தன் சீடர்களை இழிவுபடுத்தத் தயங்க மாட்டான்.

முதல் அத்தியாயத்தில், முகம்மது எப்படித் தன் சீடர்களையும் அவர்களது குடும்பங்களையும் பிரித்து சீடர்கள் சுய வாழ்க்கைகளிலும் உட்புகுந்து, தன் அதிகாரத்தைத் தவறான முறையில் பயன்படுத்திக்கொண்டார் (misuse) எனப் பார்த்தோம். **இதே சூழ்நிலை 1400 வருடங்களுக்குப் பிறகும் மாறவே இல்லை. இவைகளைத் தற்காலத்திற்கேற்றவாறு மாற்ற முடியாதவாறு "ஷரியா" சட்டங்களே தடை போட்டு இதுவே இஸ்லாத்தின் முக்கிய கோட்பாடாக உள்ளது.**

முஸ்லிமல்லாத பெண்ணை, இஸ்லாமிய இயக்கத்திற்கு முஸ்லிம்களால் கடத்திச் செல்லப்பட்டு வலுக்கட்டாயமாக மாற்றப்பட்டாலும், இவர்களைச் சுற்றி முஸ்லிம்களை எப்போதும் புடைசூழவிட்டு, இஸ்லாமியக் கோட்பாடுகள்படி அவர்கள் தங்கள் பெற்றோர்களான காபிஃர்களைக் காணக்கூடாதென மனது உருக்கும் கதைகளைக் கூறிப் பல பெற்றோர்களிடமிருந்து எனக்கு (இப்புத்தக (FFI) ஆசிரியருக்கு) அனேக கடிதங்கள் வந்த வண்ணம் உள்ளன.

**தற்காதலின் காரணம்:**

நேரிடையாகத் தன்னையே மிக உயர்ந்தவன் என கூறிக்கொண்டால் அது மற்றவர்களுக்கு வெறுப்பூட்டிவிடுமாதலால், இக்கருத்துக்காகத் தன்னை விலக்கி ஒதுக்கிவிடுவார்கள் எனத் தற்காதலனுக்கும் தெரியும்; இதற்கு மாறாக, தான் மிக கண்ணியமானவன், தன்னடக்கமுள்ளவன் எனத் தற்பெருமை இல்லாதவன் போல, தான் கடவுளுக்காக அல்லது நாட்டுக்காக அல்லது மனித இன மேம்பாட்டுக்காகவே தன்னை அர்ப்பணித்துக் கொண்டவன் எனக்காட்டிக் கொள்வான். தருக்கில்லாமை எனும் இம்முகத்திரைக்குப் பின்னால் எதிராளியைத் தோற்கடிக்கும் ஒரு சூழ்ச்சித் திட்டம் தயாராகக் கட்டாயமிருக்கும்.

தற்காதலன், தன் சீடர்களுக்கு ஏற்கத்தக்க பாதுகாப்பான புதுக் காரணத்தை தேர்ந்தளித்து, அது மிக அரிதெனவும், கண்ணியமிக்கது எனவும் உருவளித்து, இது இல்லாமல் எதையும் செய்ய இயலாதென சீடர்களே உணரும்படிச் செய்திடுவான். இவனொரு புரட்சிகரமான தலைவனெனவும், மானிடர் செய்த பாவங்களிலிருந்து கழுவாய் தேடுதலுக்காகவே (atonement) வந்து உதித்த மீட்பாளன் (resuscitator) என்றும், இவனே மனித இன நம்பிக்கைக்கு முன்னோடி (harbinger) எனப் பரிந்து பேசும் வக்கீல் போலக் காண்பித்துக் கொள்வான். இவன் கூற்றுப்படி, தான் சொல்லும் காரணம் சீடர்களின் உயிரைக் காட்டிலும் மிக உன்னதமானது எனச் சொல்லி இவைகளுக்காகச் சீடர்களுடைய மூளையைச் சலவை செய்து, தான் கூறியவைகளுக்காகச் சீடர்கள் தங்கள் உயிரையும் தன்னைத் தானே நெருப்பில்

கொளுத்திக் கொண்டு (immolation) அர்ப்பணிக்கவோ அல்லது தம் குறிக்கோளுக்காகத் தன் சீடர்களைக் கொண்டே வேண்டாதவர்களைக் கொலை புரியுமளவுக்கு உசுப்பேற்றுவான்.

தன் கோட்பாட்டுக்காகத் தற்காதலன் தன் சீடர்களையே தற்கொலை செய்து கொள்ளத் தூண்டக்கூடத் தயங்கமாட்டான். இதற்கும் உற்சாகப்படுத்துவான். இதற்காகச் சீடர்களிடம் மிகைப்படுத்தி - '**தியாகம் எத்தனை பெரிதோ அதற்குத் தக்க வெகுமதியும் மிகப் பெரிதாகவே கிடைக்குமென**' மயக்கிக் கூறிச் **சிக்க வைப்பான்.** இக்காரணம் தற்காதலன் மனத்தின் தனிப்போக்கைச் (Idiosyncrasy) சார்ந்தே இருக்கும். இக்காரணத்தோடு தானொரு மைய அச்சு போலவும் (main axis), அதில் மற்றவை யாவும் தன்னைச் சுற்றிச் சுழலும் பொருட்கள் போன்றும் காட்டிக் கொள்வான். தான் ஒருவனே சீடர்களுக்கு வழிகாட்டி போலவும், பின்பற்றும் சீடர்கள் போய்ச் சேருமிடத்திற்குத் தானே அவர்களை முன்னின்று நடத்திச் செல்வதாகவும் சொல்வான். இவனில்லாமல் சீடர்களுக்குத் தக்க வெகுமதியும் இல்லையெனவும் சொல்வான். இதனால்தான், இவ்வுலகில் தானொரு தனித்துவம் வாய்ந்த மிக முக்கிய மனிதன், மனித இன விமோசனத்திற்கு இவனிடத்தில்தான் திறவு கோல் உள்ளது எனவும் காட்டிக்கொள்வான்.

தற்காதலன் தான் சொல்லும் கோட்பாட்டை அல்லது சொந்தக் காரணத்தை அல்லது எண்ணத்தைச் செயலில் முடித்துக் காட்டுவதே தன் சுயநலத்தின் எல்லை என மனதில் தீர்மானித்துக் கொள்வான். இதற்கொரு சான்றாக கயானாவில் ஒரு **விபரீத மரபுக் கும்பல் தலைவன் ஜிம் ஜோன்ஸ்** (**Jim Jones**) என்பவன் தன்னைப் பின்பற்றுவோர் 911 சீடர்களைச் சரிக்கட்டி, ஒரு கும்பலாகத் தற்கொலை செய்து கொள்ளத் தூண்டி அதைச் செய்து முடிக்கும் வரை கூட இருந்து **அத்தற்கொலை சடங்கிற்குச் 'சமுக நீதி'** (social justice) **எனவும் பெயரிட்டு, அதற்குத் தலைமை தாங்கினான்.**

அடால்ஃப் ஹிட்லர், மிக உயர்வாகத் தானே தன்னை புகழ்ந்து கொள்ள வில்லை. இதற்காக ஜெர்மனி மக்களுக்கு 'ஆரிய இன'மென ஒரு கருத்தைக் கூறி (Arian race) அதன் மேன்மைக்கு ஆதரவளித்தான். இவனிடத்தில் பக்தி விசுவாசமுள்ளவர்களுக்கு ஆரிய இன மேன்மை என்றால் என்ன என உடனுக்குடன் புரிந்து விட்டது; ஹிட்லரைத்தான் உயர்வாகக் கூற இவ்வாறு திரித்துக் கூறினான் என புரிந்து கொண்டனர். இருந்தும் ஏனைய ஜெர்மானியப் மக்கள் வேறுவிதமாக எடுத்துக் கொண்டனர்; அதாவது மக்களைத்தான் மிக உயர்ந்தவர்கள் என ஹிட்லர் கூறுவதாக நினைத்தனர். ஆரிய இன விஷயத்தில் ஹிட்லர்தான் மக்களுக்கு வெறியை அளிக்கும் இன்றியமையாத உள்ளூக்கம் தருபவன்; ஹிட்லரே, அக்காரணக் கருத்துக்கு மாபெரும் தலைவன் (fuehrer). ஆக ஆரிய இன மேன்மை என்றால், ஹிட்லர் மேன்மை என பொருள்படலாயிற்று.

[[[மொழிபெயர்ப்பாளர் பின்னூட்டம்: இக்கருத்தை, ஹிட்லருடன் கூட இருந்த Hess - Germany is Hitler, Hitler is Germany என நாஸி பொதுக்கூட்டத்தில் கூறியது: Apocalypse World War: Origins of the Holocaust -
http://www.youtube.com/watch?v=DryuVEPR4xI&feature=related ]]]

ஸ்டாலினுக்கோ கம்யூனிசம் (communism) எனும் (பொது உடைமை) கருத்து ஒரு காரணமாயிற்று. எவரெவர் ஸ்டாலினின் கருத்துக்கு உடன்படவில்லையோ அல்லது இழிவாகக் கூறினார்களோ அவர்கள் சமுதாயத்தின் தாழ்ந்த வகுப்புக்கு (தொழிலாளிகளுக்கு, பாமர மக்களுக்கு =proletariat) எதிரிகள் எனக் கூறினான். ஆக, எதிர்த்தவர்கள் கம்யூனிசக் காரணத்திற்காக ஸ்டாலினின் ஆணைப்படிக் கொல்லப் பட்டனர்.

முகம்மதுவும் தன் சீடர்கள் தன்னையே தொழ வேண்டுமென நேரிடையாகக் கூறவில்லை. ஆனால், தான் 'அல்லாவின் தூதன்' என உரிமை கொண்டாடினார். ஆக, அல்லாவின் தூதருக்காக மிகச் சாதுரியமாக "அல்லாவின் தூதருக்கு" அடிமைகள் போன்று கீழ்ப்படிய வேண்டுமென பயமுறுத்திக் கேட்டார். கீழே **குரான் வசனம்** 8:01 மேற்கோளாகக் கூறப்பட்டுள்ளது: "**போரில் கிடைத்த வெற்றிப் பொருள்**களைப் பற்றி உம்மிடம் அவர்கள்(அன்பால்) கேட்கிறார்கள். **(அதற்கு நபியே!) நீர் கூறுவீராக: அன்பால் அல்லாஹ்வுக்கும், (அவனுடைய) தூதருக்கும் சொந்தமானதாகும்;**[[[...]]]".

(**"போரில் கிடைத்த வெற்றிப் பொருட்கள் அல்லாஹ்வுக்கும், (அவனுடைய) தூதருக்கும் சொந்தமானதாகும்**)

கடவுள் எனும் அல்லாவுக்கா (கடவுளுக்கா) பிறரிடமிருந்து திருடிய பொருட்கள் தேவை? உலகிலுள்ள எல்லா பொருட்களையும் உருவகியவர்தானே அக்கடவுள். கடவுள் அல்லாவிடம் திருடப்பட்ட பொருட்களை நேராகக் கொடுக்கத்தான் முடியுமா? ஆக திருடப்பட்ட பொருட்கள் அனைத்தும் தன்னிச்சையாக அல்லாவின் பிரதிநிதி என அதிகாரம் (proxy-intermediary) வழங்கப்பட்ட முகம்மதுவுக்குத்தானே போய்ச் சேர வேண்டும்? யாராவது அல்லாவை நேரில் கண்டு தன் கீழ்ப்படிதலைத் தெரிவிக்க இயலுமா? அஃதே போல, எல்லாக் கீழ்ப்படிதலும் முகம்மதுக்குத்தானே போய்ச் சேர்ந்துவிடும்? உண்மையில் முகம்மதுவைக் கண்டுதான் முஸ்லிம்கள் அஞ்சி நடுங்கினர். ஆனால் அல்லாதான் மிக பயங்கரமான இறைவன் (most fearsome deity) என்றேதான் சித்தரிக்கப்பட்டது. அல்லாதான் இன்றியமையாத ஆதிக்க இயந்திரம். ஆனால் முகம்மது ஒருவர்தான் அல்லா எனும் இயந்திரத்தை இயங்கச் செய்யத் தெரிந்தவர். அல்லா என முகம்மதுவே ஒருவரை உண்டாக்கி இருப்பதால்தான் முஸ்லிம்கள் தங்களைத் தாங்களே மாய்த்துக் கொண்டு அதற்கும் தியாகம் என பெயரிட்டு முகம்மதுவின் ஒளிவுமறைவற்ற கட்டளைகளால் முகம்மதுவுக்கு வேண்டாதவர்களைக் கொன்று கொண்டிருந்தனர் / இன்றும் இருக்கிறார்கள். இதில் கொல்லப்பட்டவர் கொன்றவருக்கு நெருங்கிய உறவினாகக் கூட இருக்கலாம். இந்நுட்பங்களைப் பற்றியா முகம்மதுவுக்குக் கவலை? தற்காதலர் முகம்மதுவுக்குத் தன் சுயநல ஆதிக்கம் திசையெங்கும் கொடி கட்டிப் பறக்க வேண்டும். அவ்வளவே! முகம்மதுவின் தூண்டுதலால் வழிப்பறிக் கொள்ளையடித்தனர். இதையெல்லாம் அல்லாவுக்குக்கா தூக்கி அவிழ்த்துக் கொடுத்தனர். எல்லாமே முகம்மதுவுக்குத்தானே! சுருக்கமாக, அல்லா முகம்மதுவின் கைப்பாவை அல்லது முகம்மதுவுக்கு நம்பிக்கைக்குப் பாத்திரமான, கண்ணால் காணமுடியாத மிக நெருங்கிய நண்பன் (Alter ego).

இங்கு இன்னொன்றைக் கூறவேண்டும். அல்லாவுடன் முகம்மதுவைத் தவிர வேறொருவரை நண்பனாகச் சித்தரிக்கவில்லை. ஒரு சமயம் மெக்கா மக்களைக் கவர்ந்து தன் இஸ்லாத்தில் சேர்க்க அவர்கள் இதுவரை துதிக்கும் அல்லாவின் (கடவுளின்) பெண் கடவுள்களான - அல்-லட், அல்-உஸ்ஸாவைத் தாமே அல்லாவிடம் பரிந்து கூறி அவர்களையும் மக்கள் தொழ அனுமதிக்கலாமே எனத் தாம் நடுவராக இருந்து மத்தியஸ்தம் செய்துவிட இயலும் எனச் சொன்னது, பின்னர் தனக்கே இடராக ஆகிவிடுமென நினைத்து, முன் சொன்ன குரான் வசனத்தை ஷைத்தான் வாயில் நுழைத்தானென அவன் பேரில் அவதூறாகக் குற்றம் கூறி, இதற்காக குரான் வசனங்களையே மாற்றிக் கொண்டார் என முன்னரே பார்த்தோம். ஆக அல்லாவும் தானும் தருக்க ரீதியிலோ அல்லது

நடைமுறையிலோ இணைபிரியாதவர்கள் என முகம்மது தன்னைப் பற்றி ஐயமற்ற கருத்தை முஸ்லிம்களுக்கிடையே உண்டாக்கினார்.

தற்காதலர்களும் ஒரு புனைந்து கொள்ளப்பட்ட பொய்யான கருத்துக்குப் பின்னால் தங்களை மறைத்துக்கொண்டு ஒளிந்து கொள்வர். ஜெர்மானியர் ஹிட்லருக்காகப் போரிடவில்லை. ஜெர்மானியர்களிடம் ஹிட்லர் கூறிய புனைந்து கூறப்பட்ட பொய்க்கருத்துக்காகத்தான் போரிட்டு ஆரம்பத்தில் வெற்றியடைந்து முடிவில் உறுதிப்பாட்டுடன் தோற்றுப் போனார்கள். இக்கதையே எல்லா சர்வாதிகாரிகளுக்கும் ஹிட்லர் போன்றவனின் முடிவே கிடைத்தது.

டாக்டர் வாக்னின் கூறுகிறார்: “எங்கெங்கு தங்கள் தற்காதலுக்குத் தேவையானவை (narcissistic supply) கிடைக்க வேண்டுமோ ஆங்கே மனிதரானாலும் அல்லது பொருட்களானாலும் ஏன் மிருகங்களானாலும், தற்காதலர் தன்னை நுழைத்துக் கொள்வார். இவர்களுக்கு ஒரு கடவுளிடமோ இனத்திடமோ தொழும் இடத்திலோ அல்லது எந்த இயக்கத்திலோ மதத்திலோ ஏன்! தன் சொந்த கருத்துக்களிலும் நிரந்தர சிரத்தை இருக்க இயலாது. தற்காதலர்களுக்கு எதெது அந்தந்த சமயத்திற்குத் தேவையோ இவைகளைத் தீவிரப் பற்றுடன் வழிபாட்டு உணர்ச்சியோடு ஏற்றுக் கொள்வார்கள். மேற்கூறியவைகளில் ஏதாவது தேவையற்றுப் போனால் உடனுக்குடன் பழைய தீவிரப் பற்றையும், பழைய கடவுளானாலும், வழிப்பாட்டு உணர்ச்சியையும் முழுதுமாகத் தலை முழுகிவிட்டுப் புதிதாக ஏதாவது ஒன்றை கண்டுபிடித்து அதில் தம் சீடர்களை நுழைப்பார்கள்!”[125]

பிறரை அடக்கி ஒடுக்கி வைக்க முகம்மதுவுக்கு இஸ்லாம்தான் மிக முக்கிய ஏவுகணை (இன்று இஸ்லாம்தான் முஸ்லிம்களுக்கு ICBM - Intercontinetal Ballistic Missile). இன்று கூட உலகில் எந்த அரசாங்கத்தையும் கவிழ்க்க இஸ்லாத்தையே அல்லது முஸ்லிம்களையே நாடித் (தன்)மானங் கெட்ட அரசியல்வாதிகள் ஓடுகிறார்களல்லாவா? முஸ்லிம்களுக்கு இஸ்லாமும் ஒரு அரசியல் சார்ந்த கருவி. சுவரைப் பளபளக்க வைக்கும் பல்வேறு நிற சாந்து எவ்வாறு உபயோகப்படுத்தப்படுகிறதோ, அவ்வாறே இம்முஸ்லிம்களை இஸ்லாமியத் தலைவர்கள் உபயோகிக்கிறார்கள். மிர்சா மால்கம் கான் (Mirza Malkam Khan (1831-1908)) என்னும் முன்னாள் ஆர்மேனியனும் ஜமாலுத்தீன் அஃப்கானி (Jamaleddin Afghani) என்பவரும் சேர்ந்து “இஸ்லாமிய மறுமலர்ச்சி” (the “Islamic Renaissance” = An-Nahda) என ஒரு குழுவை உருவாக்கினர். எவரும் எங்கும் காணமுடியாத, கேட்கமுடியாத, மனித இனத்தையே மிகக் கேவலமாக அளவுகடந்த வெறுப்புடன் மதிக்கும் இக்குழுவின் விளம்பரக் கவர்ச்சி வாசகமாக, இதைச் சொல்கிறார்கள்: “முஸ்லிம்களிடம் இது குரானில் உள்ளது என எதையும் சொல்லிப் பார். பின்னர், இச்சொல்லுக்காக முஸ்லிம்கள் துணிந்து தங்கள் உயிரையும் தியாகம் செய்யத் தயாராகி விடுவார்கள்”.[126]

## தற்காதலர் மரபு வைப்பு

தற்காதலர் எப்போதுமே தன் நினைவாக ஒரு மரபு வைப்பை (Legacy) விட்டுச் செல்வான். அவனுக்குத் தன்னைச் சேர்ந்த மக்கள் தன்னை மறந்து விடுவார்களோ என உள்ளூர பயம். முகம்மதுவும் தன் மரணப்படுக்கையில் கிடக்கும் போது கூடத் தன் சீடர்களை ‘ஜிஹாத்’ஐ கட்டாயமாகத் தொடர்ந்து நடத்த ஊக்குவித்தார். செங்கிஸ்கானும் (Genghis Khan) தன்னால் இனி உலகை வெல்ல முடியாது எனக் கருதித் தன் எண்ணத்தைத் தம் மக்கள்தான் முடித்துக் காட்ட

[125] healthyplace.com/Communities/Personality_Disorders/Site/Transcripts/narcissism.htm
[126] Amir Taheri Neo-Islam http://www.benadorassociates.com/article/19333

வேண்டுமென விரும்பினான். தற்காதலருக்குத் தான் விட்டுச் செல்லும் மரபுவைப்பு தான் மிக முக்கியம். இவர்கள் எண்ணத்தை நிறைவேற்ற எத்தனை உயிர்கள் பலியானாலும் இதற்காகச் சிறிதும் கவலைப்பட மாட்டார்கள். இவர்களை எப்போதும் மக்கள் மறந்திடாமல் தங்கள் நினைவில் இருத்தி வைத்திருக்க வேண்டும். அவ்வளவேதான்!

ஹிட்லருக்கு 51வயதில், 'பார்கின்சன் நோய்' எனும் 'நடுக்குவாத தாக்கம்' இடது கையில் உண்டானது. இதை மறைக்கத் தன் சட்டைப்பையில் பாதிக்கப்பட்ட அக்கையைத் தோரணையாக எப்போதும் நுழைத்துக் கொள்வான். இந்த செயற்பாணியே ஜெர்மன் மக்களுக்கும் எடுப்பான நாகரிகமானது (கையை தோரணையாக மேலுடுப்பு கிழே உள்ள சட்டைப்பையில் நுழைத்துக் கொள்வது). போகப்போக நடுக்கமும் மிக முற்றிவிட்ட நிலையில் வெளியில் பலர் முன் தோன்றுவதைத் தவிர்த்தான். தன் அந்திம காலம் நெருங்கி விட்டதென ஹிட்லருக்குத் தெரிந்து விட்டது. அந்திம காலத்திலும் பித்துப் பிடித்த அநாவசியப் போரின் நிறுத்தத்தை அறிவிக்காமல், படு முட்டாள்தனமாக இன்னும் அதிகக் கடுப்பு உணர்ச்சியுடன் மிக உக்கிரமாகத் தன் பாதாள ரகசிய அறை (சிறை!) யிலிருந்து தன் எதிரிகள் மீது தாக்குதல்களை நடத்த உத்தரவிட்டான். ஏனெனில் தன் வாழ்க்கைப் பந்தயத்தில் தான் தோற்றுவிடுவது திண்ணமென அவனுக்குத் தெரிந்திருந்தது. தற்காதலர்கள் இவ்வாறே, தங்கள் மரபுவைப்பை விட்டுச் செல்வார்கள். சத்தாம் ஹுஸ்ஸைனும் அவ்வாறே செய்தழிந்தான்.

இஸ்லாத்தை ஒரு மதம் எனக் கூறுவதே மிகத் தவறு. அதை விபரீத மரபு சடங்குகளில் வெறிப்பற்றீடுபாடு கொண்ட ஒரு இயக்கம் (cult) என்றேதான் பாகுபடுத்திக் கூறவேண்டும். இவ்வியக்கம் எல்லோரையும் தன்னாதிக்கத்துக்கு உட்படவைப்பதே தவிர இதில் வேறொன்றுமில்லை. இவ்வியக்கத்தில் மதக் கோட்பாடு என்பதே வெளிப் பகட்டுக்காக, உலகை ஏமாற்றச் செய்யும், இனிப்பு ரொட்டியின் மீது சர்க்கரையால் மூடப்பட்ட (வரையப்பட்ட) மிக மெலிந்த படுகை போன்றது. இதில் உண்மையே இல்லாதவைகளை ரகசியமான-உண்மையெனவும் இட்டுக்கட்டி, சுயநல நோக்குடன் ஏதேதோ புதிது புதிதாகக் கண்டுபிடித்து முகம்மது இறந்து 200 ஆண்டுகளுக்குப் பின்னர், யார் யாரோ கூறியது என - இஸ்லாமியச் சித்தாந்த வல்லுனர்களால் நம்பத்தகுந்த (?) 'ஹத்தீஸுகளென' எழுதி வைக்கப் பட்டது. இதுதான் 'ஹத்தீஸ்களின் உண்மை வரலாறு'. இக்கருத்தை நிரூபிக்க இஸ்லாத்தின் நூல்களில் உள்ள முரண்பாடுகளே தக்க ஆதாரம். இதைதான் இன்றும் "ஷரியா" என இஸ்லாமியச் சட்டமாக ஏற்க கிளர்ச்சிகள் உலகெங்கும் நடக்கின்றன. 'ஷரியா'தான் உணர்ச்சிக் கொந்தளிப்பான இஸ்லாத்துக்கு ஊக்கமளித்து வரும் முக்கிய இயக்க சாதனம். ஷரியாவிலுள்ள கோளாறுகளை உலகில் எல்லா நாடுகளிலும் நுழைக்க எல்லா முஸ்லிம்களாலும் எல்லாவிதத்திலும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன!

ஷரியா சட்டம் எந்த நாட்டிலாவது அமலாக்கப்பட்டால் அந்நாடு 1400 ஆண்டுகளுக்குப் பின்னால் (முகம்மதுவின் நாட்களுக்குப் பின்) தள்ளப்படும். இஸ்லாத்தில் முன்னோக்கிய பார்வையோ சிந்தனையோ கிடையவே கிடையாது. 1400 ஆண்டுகளுக்கு முன்னர் முகம்மது நாட்களில் சிந்தனை சொல் செயல்பாணி எவ்வாறு இருந்ததோ அவ்வாறே ஆகும்! இது இன்று உலகுக்குத் தேவையா?

ஆரம்ப நாள் சீடர்களான முஸ்லிம்களாலும் சும்மா இருக்க முடியுமா! தமது இஸ்லாமிய மரபு சார்ந்த விசுவாசத்தையும் ஆதிக்கத்தையும் உண்டாக்கிக் காண்பிக்க, காலப்போக்கில் அவர்கள் பங்குக்காக, இஸ்லாமும் பழங்காலத்திற்கு உரியது எனவும் ஆகவே மூல ஆதாரமுள்ளது. ஆகையால் நம்பத்தக்கது என

அவரவர்கள் விருப்பத்திற்கேற்ப ஹத்தீஸுகளாக எழுதி இஸ்லாம் எனும் அரசியல் சார்ந்த இயக்கத்தை ஒரு அலங்கார மதமாக வார்ப்பு செய்து, இதற்கொரு மத-முத்திரையும் குத்தி, இதையும் நம்ப ஒரு சுயநல வெறிக்கும்பலும் இந்நோக்குடன் உருவாக்கப் பட்டது. இவைகளுக்கும் குரானில் உள்ள கூற்றுகளுக்கு விளக்கிப் பொருள் கூறுவதில் ஏதேதோ அர்த்தங்களை புதிது புதிதாகக் கண்டுபிடித்து எழுதப்பட்டது; இன்றும் எழுதப்படுகிறது; இன்னும் வரலாம். இவைகளில் உள்ள பல சொற்களுக்குச் சில மறைபொருட்கள் இருப்பதாக விளக்கம் கூறி, இஸ்லாமும் சமயம் சார்ந்தது என்ற தோற்றதைப் பின்னர் உருவாக்கினார்கள். இந்த மடத்தனமான விளக்க உரைகள்கூட கழுதைக்குரிய அறிவு படைத்தவனால் என்னென்னமோ முன்னுக்குப்புரணாக இட்டுக்கட்டி எழுதி வைக்கப்பட்ட புத்தகம் எனத் தீர்மானித்து, ஆதலால் பயனற்றது எனத் தகுதிபடைத்த அறிஞர்களால் குப்பைத் தொட்டியில் வீசி எறியப்பட்டுகிறது. தங்கள் பங்குக்காக சலாஃபிக்களும் வஹாபிக்களும் இஸ்லாமியத்தைச் சீர்திருத்தம் செய்யவோ மாற்றிப் பொருள் கூறவோ விடாமல், மூல அபத்தங்களை அப்படியே நிரந்தரமாக இருக்க வேண்டுமெனத் தங்கள் ஆதிக்கத்தை நிலை நாட்டினர். முல்லாக்களுக்கும் முஸ்லிம்களின் மீது ஆதிக்கம் செலுத்தித் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்ள இச்சட்டங்கள் இஸ்லாமெனும் மின்னோட்டத்தைச் செலுத்த (on & off switches) தேவைப்படுவதால், இன்னமும் 'ஹத்தீஸ்கள் வழியில் 'ஷரியா' எனும் பெயரில் அமலில் உள்ளது. இதற்கு மாறாக எ(வ்.........)வராவது ஏதாவது கூறிவிட்டால், அது அல்லாவுக்குச் செய்யும் தெய்வநிந்தனைச் செயலெனச் (blasphemy) சொல்லப்படுகிறது. இஸ்லாத்துக்கு மாற்றுக்கருத்து கூறியவர் 'தெய்வ நிந்தனை' செய்தவர் என (நர) பலி கொடுக்கப்படுகிறார். இவைகள் குரான், ஹத்தீஸ், சிராத்தில் (Islamic Trilogy = Shariah) உள்ளது. இவைகளில் உள்ளபடியே **'ஈ'**யடிச்சான் காப்பியாக ஆதிகால முல்லாக்களிலிருந்து இந்நாள் முல்லாக்கள் வரை இஸ்லாத்து 'ஷரியா'வைப்பற்றி முஸ்லிம்களுக்குப் (மத்ரசா) பள்ளிவாசலிருந்து, தீவிர சலாஃபி-வஹாபிகளை படைத்துருவாக்கி **'ஜிஹாத்'** எனும் **'பயங்கர வன்முறை'**களுக்கு 'மெஹ்ரிப்' (வெள்ளிக்கிழமை 'ஜும்மா' தொழுகை முடிந்த பின்னர்) இருக்கையிலிருந்து தொடர்ந்து தூண்டிவிட்டு; அடிப்படையில் தங்கள் தொடர்-பிழைப்புக்காக தாங்கள் விரும்பிய வண்ணமே, தம் மாணவர்களைக் கண்காணிக்க ஓட்டுனர் இடத்திலமர்ந்து இஸ்லாத்து, (dar-ul-Islam) காபிஃர்கள் (dar-ul-harb) இரு உலகங்களை ஆட்டிப் படைக்கிறார்கள்.

இஸ்லாம் அரசியல் சார்புள்ள இயக்கக் கோட்பாடுகளைக் கொண்டது. இதன் குறிக்கோள் உலகத்தை இஸ்லாமிய மயமாக்கி (dar-ul-Islam) **(குரான் வசனம் -57:10)**, மக்களை அதிகார-ஆணவத்துடன் கொடுமைப்படுத்தி இஸ்லாமிய **'ஷரியா'** ஆட்சி செலுத்துதல் என்பதேயாம். முகம்மதுவின் 'இஸ்லாத்துக்கு' ஹிட்லரின் **'நாசிசம்'** (Nazism) கார்ல் மார்க்ஸ்ஸின் **'கம்யூனிசம்'** (communism) ஆகியவைகளைத் தவிர மற்றொன்றையும் இதற்கு ஒப்பீடாகக் கூற இயலாது.

மதம் என்றால் என்ன எப்படி இருக்கவேண்டும் என்பது பற்றிச் சற்று சிந்திப்போம். ஒரு நல்ல மதம் கீழ்க் கூறியவாறு இருக்கவேண்டுமென உலகத்தோர் எதிர்பார்க்கிறார்கள்: மதத்தைக் கொண்டு மக்களுக்கு நல்லொழுக்கங்களைப் புகட்டி; மாந்தர்களின் உள்ளுணர்வுகளை வெளியில் கொணர்ந்து; நம் எல்லோர் உள்ளில் என்றும் உயிரூட்ட உறைந்திருக்கும் கடவுளின் மீது சிந்தனைகளை உயர்நிலைக்குக் கொண்டு செல்ல வைத்து; அதே சமயம் நல்ல விஷயங்களில் மேன்மேலும் மனக்கிளர்ச்சியுறத் தக்க சிறந்த புனிதமான முரண்பாடில்லாத நிரந்தரப்பொருள் விளக்கங்களைக் கூறி;

மனித இன மனங்களை எவ்விதப் பிணக்குமின்றி மாசின்றி-வெறுப்பின்றித் தெளிவாக ஒன்று சேர்த்து; அறியாமை எனும் இருட்டிலிருந்து மனத்தெளிவு எனும் வெளிச்சத்திற்கு இட்டுச்செல்வதையே மதமெனக் கொள்ளவேண்டும்.

மேற்கூறிய நிறம் மாறும் (லிட்மஸ் = litmus test) பரிசோதனையில், இஸ்லாத்தைப் பரிசோதித்துப் பார்த்தால், சந்தேகத்திற்கு இடமின்றிப் பரிதாபகரமாகப் படுதோல்வியுறுகிறது. ஆகவே, எந்த அளவுகோலாலும் மதம் எனும் உயர் நிலையில் வைத்து உறுதிபட மதிப்பளிப்பதற்கு இஸ்லாம் எவ்விதத்திலும் அருகதையற்றது என பிறர் கூறாமலேயே, தன்னைத் தானே நிரூபித்துக் கொள்கிறது. கொலை கொள்ளை, பேரழிவு, ஏமாற்றுதல், பொய்கூறுதல், கற்பழிப்பு, அடிமைத்தனம், குயுக்தி-அரசியல் முதலியவற்றை மூச்சுக்காற்றாக அல்லது இயக்கக் கோட்பாடுகளாகக் கொண்ட இஸ்லாத்தையும் கூட ஓர் மதமெனும் உயர் நிலைப் பட்டியலில் சேர்த்தால் அதைவிட வேறொரு மடமை உலகிலுண்டா?

தற்காதலருக்குக் குறிக்கோளும் முக்கியமல்ல. கெட்ட வழிகளானாலும் சரி, தான் எப்போதும் மற்றவர் நினைவில் இருக்க வெண்டும். இவர்களுக்கு நல்லவைகளுக்கும் கெட்டவைகளுக்கும் வித்தியாசமே தெரியாது. தெரியவும் கூடாது எனும் எண்ணம் கொண்டவர்கள். தான் செயலாற்றிய மரபை எல்லோரும் தன் வாழ்நாட்களுக்குப் பின்னரும் தொடர்ந்து அவ்வாறே செயலாற்ற வேண்டும் எனும் பிடிவாதக் கொள்கையுடைய மிகப் பிரசித்தி பெற்ற தற்காதலர்களான அடால்ஃப் ஹிட்லர், ஸ்டாலின், சார்லஸ் மேன்சன், ஜிம் ஜோன்ஸ் மாதிரியே செயலாற்றி ஆரம்ப காலங்களில் வெற்றியுற்றனர். தங்கள் மரபுவைப்பையும் விட்டுச் சென்றனர்; ஆதலால் இவர்கள் எல்லோருமே ஒட்டுமொத்தமாக இன்று எல்லா கெட்டவைகளுக்கும் சான்றாகச் செல்லாக்காசென ஆகி, கெட்ட நடத்தைகளுக்கு ஒரெடுத்துக்காட்டாக நினைவில் உள்ளனர். இதைத்தான் முகம்மது செய்தார். முகம்மது துவக்கிய இஸ்லாம் இயக்கமே சரித்திரத்தால் குப்பைத்தொட்டியில் என்றோ விசிறி எறியப்பட்டாலும், முகம்மது மக்கள் மனத்தைத் துன்புற ஆட்டிப் படைத்தவர்கள் பட்டியலில் உலகத்திலேயே இன்று முதலில் உள்ளார். கிறித்தவ பைபிளில் ஜான்: 14-30 வசனத்தில் உள்ளதை முகம்மதுவுக்காகச் சொன்னதாக இஸ்லாமிய நிபுணர்கள் கருதுகிறார்கள். (John14:30- Hereafter I will not talk much with you: for the prince of this world is cometh, and hath nothing in me). இக்கிறித்தவ பைபிள் வசனம், முகம்மதுவைக் குறித்துதான் முன்னறிவிப்பாகாகக் கூறப்பட்டது என இதற்கும் முஸ்லிம்கள் உரிமை கொண்டாடி விட்டார்கள், போங்கள்! இந்த அநியாயத்தை எங்குரைப்பது?! எங்கெங்கே தம்மைத் தாமே புகழ்ந்து கூறும் வாய்ப்பு கிடைக்கிறதோ, அதை முஸ்லிம்கள் நழுவ விட்டுவிடுவார்களா?! சிக்கெனப் பிடித்துக் கொள்வார்கள். ஆனால் பைபிளையும் கிறித்தவத்தையும் கிறித்தவர்களையும் வெறுப்பதில் முஸ்லிம்கள்தான் முதலாவதாக உள்ளனர்.

**தற்காதலர் கடவுளாக விரும்புகிறார்**

தற்காதலருக்கு முடிவாக வேண்டியது, பிறரை அடக்கியாளும் அதிகாரம். அவருக்கு எல்லோரும் மரியாதை செலுத்தி எல்லோர் கவனத்திலும் எப்போதும் வீற்றிருக்க வேண்டும். தன்னைப் பிறர் புறக்கணிப்பதை அவரால் தாங்கிக் கொள்ள முடியாது. தற்காதலர் எப்போதும் தனிமையை விரும்புவதால், இவர்களுக்குப் பாதுகாப்பின்மை எனும் உணர்வு அதிகமாக இருக்கும். தானொரு பெரிய புரட்சித் தலைவன், பல்வேறு எதிர்பார்ப்புகளுக்கு நம்பிக்கையுடன் வருவதுரைப்பவன், அரிய பெரிய விளைவுகளையுண்டாக்கும் செயல்களின் பிரதிநிதி எனத் தன்னை

முன்னிருத்திக் கொள்பவன். இவைகளைத் தவிரத் தன் புதிய கற்பனையில் புதுப்புது பொய்களைக் கூறி போலியான கடவுள்களுக்கும் செயல்களுக்கும் கருத்துகளைக் கூறுவர். உண்மையில் இவரேதான் இவைகளை உண்டாக்குபவர். எவ்வளவுக்கெவ்வளவு தங்கள் பொய்க் கடவுள்களை உயர்த்திக் கூறி, அதற்கான கருத்துக்களை புகழ்கிறார்களோ, அவர்களுக்குக் கீழ்ப்படிவோரிடம் அதிக அதிகாரத்தை உண்டாக்கிவிடுகிறது.

அல்லாவின் பெயரைச் சொல்லிச் சொல்லி, முகம்மது தன் சீடர்கள் மீது வரம்பில்லா அதிகாரத்தைச் செலுத்தி, அவர்கள் வாழ்க்கைக்கே எசமானன் என்றே ஆனார். 'அல்லா' ஒரே சமயத்தில், 1. பழிவாங்கத் துடிப்பவராகவும்; 2. இஸ்லாத்தின் எதிரிகளைக் காட்டிலும் சதி செய்வதில் மிக்க நிபுணத்துவம் வாய்ந்தவரெனவும்; 3. இரக்கமற்றவராகவும்; 4. அவரே மன்னிப்பவர் என்றும்; 5. தம்மை மிக உயர்வாக மதித்துக் கொள்ளும் தன்மையுடையவர் (Al-Mutakabbir); 6. சர்வாதிகாரியாகவும் (Al-Jabbar); 7. யாராக இருப்பினும், அவரைத் தன்னதிகாரத்திற்கு ஆட்படுத்தும் கொடியவரெனவும் (Al-Qahhar); 8. எவரையும் தாழ்வுபடுத்தத் தயங்காதவரெனவும் (Al-Khafid); 9. இழிவு செய்பவராகவும் (Al-Mudhell); 10. சித்திரவதை செய்து சாவு அளிப்பதில் கொடூரமானவரெனவும் (Al-Mumit); 11. எவருக்கும் ஊறு விளைவிப்பவரெனவும் (Al-Muntaqim); 12. கேடு விளைவுக்குரியவைகளை உண்டாக்குபவராகவும் (Ad-Darr); 13. அடுத்த நொடியில் அவரே அருளிரக்கம் கொண்டவர் எனவும்; 14. நியாயமாக நடப்பவரெனவும்; 15. வானளாவப் பாராட்டுபவராகவும்; 16. வாரி வழங்குவதில் வள்ளல் எனவும்; 17. முன்னேற்பாடோடு வருங்கால உபயோகத்திற்காகச் சேகரித்துக் கொடுப்பவரெனவும்; 18. இரட்டை ஆளுமையோடு (split personality) சித்தரிக்கப் படுகிறது. முகம்மதுவும் 'அல்லாவும் இரட்டை ஆளுமை கொண்டவர் போல ஒருவரே இரு உருவங்களாகக் காட்சியளிக்கிறார்கள் (Dr Jekyl & Mr.Hyde) ஆனால் இருவரும் ஒருவரே என 'விவேகமுள்ளவர்'கள் அறிவார்கள்.

இத்தீர்ப்புகளுக்கெல்லாம் ஒரே பின்சேர்க்கை: மேற்கூறிய கொடியவைகள் நிகழாமல் காக்கவும், எல்லா வல்லமையுள்ள அல்லாவின் கொடைகளை ஒரு நிலையாகக் கிடைக்க வழி செய்யும் இடைத் தரகர் முகம்மது எனும் அல்லாவின் தூதரே! இக்கருத்தே, முகம்மதுவை அல்லாவுக்குப் பதிலாள்-கடவுள் அல்லது கடவுள்-மாற்று (God by proxy) என ஆக்கப்படுகிறது. இதனால், முகம்மதுவுக்கு அடி பணிந்தால், அல்லாவுக்குக் கீழ்ப்படிந்த்தாகுமெனவும், முகம்மதுவுக்கு அதிருப்தியூட்டி சினங்கொள்ளச் செய்தால், அது அல்லாவின் மென்னுணர்வுகளைப் புண்படுத்தி அவருக்கே வெறுப்பூட்டச் செய்து அவரே சபிக்கும்படி ஆகிவிடுகிறது எனப் பொருள் கொள்ளப் படுகிறது.

'கடவுள் அன்புக்காக-தற்காதலர்களும் மதமும்' எனும் ஒரு கட்டுரையில் ("For Love of God – Narcissists and Religion", by Dr Sam Vaknin) இப்பேராற்றலை (dynamism) வாக்னின் விவரித்துக் கூறியுள்ளார். [127]. அப்புத்தகத்தின் உள்ளடக்கச் சுருக்கமாக:

- கடவுள் தானே சர்வ வல்லமைபடைத்தவர் (omnipotent), எல்லாமறிந்தவர் (omniscient), ஒரே சமயத்தில் எங்கும் நிறைந்தவர் (omnipresent) என, எல்லோராலும் மனப்பூர்வமாக வியந்து போற்றப்படுபவர், எல்லோரும் இவ்வொருவரைப் பற்றித் தானே கருத்து பரிமாறிக் கொள்கிறார்கள், மிக

[127] "For Love of God – Narcissists and Religion", by Dr. Sam Vaknin, at http://samvak.tripod.com/journal45.html (no date given) (accessed June 22, 2007), first published in "Narcissistic Personality Disorder" Topic Page on Suite 101, also appearing in *Malignant Self Love – Narcissism Revisited*, Ibid.

பயபக்தியை உண்டாக்குபவர்–ஆகவே தற்காதலர் இக்குணங்கள் பொருந்திய கடவுளாகவே தானும் ஆக விரும்புவார்;

- தற்காதலர்களுக்குக் கடவுள் என்றும் ஆர்வக் கனவு (கற்பனையில் உதித்த கனவுக் கலையாக), மனக்கண்ணில் நிலையாக வீற்றிருக்கும் ஓர் வீறார்ந்த கவர்ச்சிப் படிவம். கடவுள் தானே நம் எண்ண இழுப்புக்கு எல்லா வகையிலும் இசைந்து கொடுப்பவர். மேலும் வேண்டும்போது நம் ஏவலுக்கு அடங்கி நடக்கும் கைப்பாவை போன்றவர் என எண்ணம்;
- ஆக இவ்விதமாகத் தற்காதலர் கடவுளை இலக்காகக் குறி வைத்து, அப்படியே கடவுளையும் மதிப்பில்லா செல்லாக் காசாக எவ்விதத் தொடர்புமின்றி ஆக்கி விடுகிறார். இதனால் தற்காதலர் செய்யும் சமூகப்பணி - மக்களுக்கு உண்மையில் இருக்க வேண்டிய கொஞ்ச-நஞ்ச கடவுள்-நம்பிக்கை. பக்தி, மதிப்பையும் கெடுத்துக் குட்டிசுவராக்கி விடுகிறார். **‘ஷைத்தான் வேதம் ஓதுவது’ போன்று எனும் சொல் இஸ்லாத்தைதான் மனத்தில் கொண்டு கூறப்பட்டதோ?;**
- தற்காதலனும் கடவுள் போலத் தானே ஆகும் இலட்சியத்தை அடைய விரும்பும் கட்டத்தில் கடவுளின் குணாதிசயங்களைப் பின்பற்றுவார், அவைகளைப் போற்றுவார், கடவுள் போலத் தன் நடிப்புத் திறனால் (போலியாக) நடிப்பார், கடவுள் தன்னுடையவர் என்பதால் அவரைத் தாக்கிப் பேசுபவர்களை எதிர்த்துத் தற்காதலர் போராடுவார், ஆகையால், தற்காதலர் தவறாக நடந்து கொள்ள இயலாது என்றும் தோற்றத்தையும் உண்டாக்கி விடுவார். தற்காதலர் இக்குணங்களை ஊதிப் பெரிதாக்கி, கடவுளைத் தவறிழைக்காதவர் எனவும் வழுவற்றவர் எனவும் முழுமையானவரெனவும் நுண்ணறிவுள்ள மிகத் திறமை மிக்கவர் எனவும் கருதுவார். ஆனால், தற்காதலருடைய உண்மையின்மையால், வீணாகப் பொய் எதிர்பார்ப்புகளால் எல்லாமே தப்பித்துக் கொள்ள இயலாதவாறு கடைசியில் ஏமாற்றத்தில் முடிவடைந்து விடுகிறது. இப்போதுதான் தற்காதலருடைய உண்மைத் தோற்றம் தெரிந்து விடுகிறது.
- தற்காதலர் தன் அணுகுமுறைகளால் ஏமாற்றமடைந்தவுடன் முன்னாள் தானே வழிபாடு செய்த கடவுளைக் கூட மதிப்புக் குறைவாக்கிச் சராசரி மனிதனுக்கும் கீழாக நடந்து கொள்ள ஆரம்பித்து விடுவார். (இன்றைய அரசியல்வாதிகளைப் போல எவ்விதக் குற்ற உணர்ச்சியுமின்றி முன்னர் - “வாழ்த்திய வாயே (பின்) கூசாமல் தூற்றும்”.
- இப்போது மட்டும் தற்காதலர் மானிடருக்குடைய தன்மையுடன் இருப்பவர்: சாதாரணமாக, மனித இனம் என்பதே மிக தகுதி குன்றியது எனத் தற்காதலர் உள்ளுணர்வு. ஏனெனில், இவர்கள் மிகவும் வலுவற்றவர்கள், தவறு இழைத்துக் கொண்டே இருப்பவர்கள், கோழைகள், மாபாபிகள் அற்பச் சுயநலவாதிகள், எப்போது பேசவேண்டுமோ அப்போது வாயடைத்துப் போய்விடுபவர்கள், பெரும்பான்மையோர் சாதாரணத் திறமையுள்ளவர்கள். ஆதிக்கத்தின் உருவான கடவுளிடம் இதே மானிட குணாதிசயங்களுடன் தற்காதலர் தனக்குத் தொடர்பு வேண்டியவரைத்தான் வேண்டியிருப்பார்.
- ஆனால், அடுத்தடுத்து தற்காதலருக்கு மனமருட்சியால் தெளிவின்மையோ, அல்லது உருவ வழிபாட்டுகளில் நம்பிக்கையையோ இழந்து விட்ட நிலையில் தற்காதலர் கடவுளை நேசிப்பதாகவும், அவரையே பின்பற்றுபவரெனவும் காட்டிக்கொள்வார். இவ்வாறு ஏமாற்றுதலைக் கையாளக் காரணம்: கடவுளின் பக்கத்தில் தான் எப்போதும் இருப்பதாகவும், அவரே தனக்கு இந்த அதிகாரத்தை

அளித்ததாகவும் இதனால் நிலைநாட்டி விடுவார். இம்மாதிரியே கடவுளை அர்ச்சிக்கும் மத குருக்களும், இறைவழிபாட்டுக் கூட்டத்தின் தலைவர்களும், கிறித்தவ / ஏனைய மதப் போதகர்களும், ஏதாவதொரு மதமெனும் இயக்கத்தில் வெறிஈடுபாடுள்ளவர்களும், ஆகிய இவர்களெல்லோரும் தங்களுக்கு கடவுளிடத்தில் நெருங்கிய தொடர்பு இருப்பதால் கிடைத்தது என வீண் பெருமை கொள்வார்கள்.

- மதத்தால் கிடைத்த அதிகாரத்தால், தற்காதலர்கள் பிறருக்குக் கொடுமைகளை செய்வதில் விருப்பங்கொண்டு, கொடுவெறிக் காமத்தில் பேரார்வம் (sadistic urges) மிகுந்து, பெண்ணின மீது வெறுப்பை (misogyny) தாராளமாகவும் வெளிப்படையாகவும் காண்பிப்பார்கள். ஆனால் பெண்கள் உடலுறவுக்கு மாத்திரம் வேண்டும்போது வேண்டிவைகளை வேண்டியபடி காட்டக் கட்டாயம் வேண்டும்! (காரியம் முடிந்தபின் use & throw செய்திடவும் வேண்டும்).
- தற்காதலருக்கு மதத்தால் கிடைத்த அதிகாரத்தால், ஒரு விதமான கேள்வியும் இன்றித் தங்களுக்குக் கீழ்ப்படியும் அடிமைகளைப் (சீடர்களைப்) பொறுக்கி எடுத்து, அவர்களிடம் ஏறுமாறான, ஒழுக்கக் கேடான அதிகாரத்தைக் காண்பிப்பதில் தன் வல்லமையைக் காட்டுவார்.
- கேடற்ற புனித மத மெய்யுணர்வுகளைக்கூட, கடும் பகைமை எண்ணங்கொண்டுச் சமய குருமார் ஆட்சியிலும், மத இயக்கவெறிச் சடங்குகளிலும், தற்காதலர் முற்றிலும் மாற்றி அமைத்து விடுவார். இவருக்கு பலிகடாவாகக் கிடைப்பவர்கள் எல்லோருமே மிக எளிதில் ஏமாறும் இயல்புள்ளவர்கள் (எளிய ஏமாளிகள்). இவர்களைத்தான் தற்காதலர் ஏற்கனவே அடிமைச் சீடர்களாக்கி விட்டாரே! இவருடன் கூட இருப்பவர் அனைவரும் இவருடைய பிணைக்கைதிகள்தான்.
- மதத்தால் / இயக்கத்தால் கிடைத்த அதிகாரமே தற்காதலருக்குத் தற்காதலை வேண்டிய மட்டும் அதிகரித்துக் கொள்ள அல்லது நிரப்பிக்கொள்ளக் (சரக்கு) கிடைத்துவிடும். இவ்வகையில் தன் கூட இருக்கும் மததைச் சேர்ந்தவர்களும், இவருடைய வட்டாரத்தில் வசிப்பவர்கள், இவருடைய தொகுதி, இவருடைய சபையோர் ஆகியோரெல்லாம் தற்காதலுக்கு வேண்டிய தேவைகளைப் பூர்த்தி செய்து விடுவார்கள். இவர் சீடர்கள் இவர் கட்டளைகளுக்கு அடிபணிகிறார்கள். திட்டுகளையும் ஏற்கிறார்கள், இவருடைய இயக்கக் கோட்பாடுகளைப் பின்பற்றுகிறார்கள், இவருடைய ஆளுமையைப் போற்றுகிறார்கள், இவருடைய சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு மகிழ்ச்சியோடு கைதட்டுகிறார்கள், இவருக்கு வேண்டிய பணிவிடை செய்கிறார்கள், சில சமயங்களில் தற்காதலருடைய சிற்றின்ப வேட்கையையும் திருப்தி செய்ய அர்ப்பணித்துக் கொள்கிறார்கள்; ஆணாக இருந்தால் பரத்தமைத் தரகராகவும் (pimp) அல்லது ஓரினச் சேர்க்கையில் (sodomy) ஒத்துழைக்கும் கூட்டாளியாகவும் (Passive Partner); பெண்ணானால் வேசி (prostitute) போன்று தன்னையே தற்காதலருக்குத் திறந்து காட்டி, மொத்தத்தில் தற்காதலரை வழிபாட்டுக்குரியவராகவும் ஆக்கிவிடுகிறார்கள்.
- தான் ஒரு பெரிய அமைப்பின் தலைவனாக இருப்பதால் இவ்வமைப்பே தற்காதலுக்கு வேண்டிய மட்டும் மன நிறைவை அளித்து விடுகிறது. தானும் கடவுளில் ஒரு பாகமாகி விட்டதாலும், கடவுளுடைய உயர் நிலையில் மூழ்கிக் கிடப்பதாலும், இவருக்கு இடையூறின்றி கிடைத்த கடவுளின் சக்தியோடு அவருக்கு கடவுளுடைய ஆசி கிடைத்து கடவுள் பசியைத் தீர்த்துக்கொள்ள அவ்வப்போது கிடைக்கும் தீனியுடன் (narcissistic supply)

நிறைவேறி விடுகிறது. இது போன்ற உணர்வையும், வேண்டும்போது கடவுளிடம் ஆன்மீகத்துறையில் நெருங்கிக் கூடி உரையாடல் நிகழ்த்துவதாகச் சொல்லிக் கொள்வதால் - இவை யாவும் தற்காதலுக்கு வேண்டிய தேவைகளைப் (exclusive narcisstic supply) பூர்த்தி செய்கின்றன. கடவுள் எப்படிக் கட்டளையிடுவாரோ, அப்படியே தானும் செய்து தற்காதலனும் கடவுளாகவே ஆகிக் கொள்கிறார். தற்காதலருக்கு எவ்வளக்கெவ்வளவு எதிர்ப்பு அதிகமாக உள்ளதோ, அவ்வளவுக்கு இவருடைய படாடோபமும் அதிகமாகிவிடும். தற்காதலர் தன் வாழ்க்கையை இவ்வாறு ஆக்கிக் கொண்டுவிட்டதால், கடவுளையே தன் நகலாக "தலைகீழ் தற்காதலராக" (inverted narcissist), ஆக்கி விடுகிறார். இப்படிக் கடவுளையே இடமாற்றம் செய்வதால், கடவுள் கூட தற்காதலனுக்கு வேண்டிய பற்றாக்குறைகளை இட்டு நிரப்பி விடுகிறார்

- எல்லோரையும் விஞ்சும் ஆற்றல், எல்லோரையும் அடக்கி ஆட்கொண்டு அழிக்கும் சக்தியையும் கொண்ட கடவுள் எனும் உளதாம் பொருளெனத் (entity) தொடர்பு கொண்டு விட்டதால், கடவுள் போலவே தற்காதலரும் ஒழுக ஆரம்பித்து விடுகிறார். கடவுளின் பிரதிநிதியாக அதிகாரம் உள்ளதால் கடவுள் எப்படி செயலாற்றுவாரோ அப்படியே தற்காதலரும் கடவுள் சார்பாக அதிகாரத்தை பயன்படுத்துகிறார்.
- கடவுளையே தன் வாழ்விலும் (எதுவரை வேண்டுமோ அதுவரைதான்!) இலக்காக்கிப் பின்னர் தேவையற்றுப் போனால், அந்த நொடியிலேயே அக்கடவுளைச் செல்லாக் காசென ஆக்கி அதே கடவுளை உளமாறத் திட்ட ஆரம்பித்து விடுவார்.

மேற்கூறியவையனைத்தும் தற்காதலின் எடுத்துக்காட்டமைப்பாகும். இதிலிருந்து அக்கடவுளே தற்காதலருடைய கிடுக்கிப் பிடியிலிருந்து தப்பிச் செல்லமுடியாது. [128]

ஒன்று எல்லோரும் இப்போதாவது தெரிந்துகொள்ள வேண்டும். அதாவது, பல நாள் திருடன் ஒருநாளில் அகப்படுவான். இது உலக நியதி. எத்தனை காலம் தான் இஸ்லாமியம் இவ்வுலக மக்களை ஏமாற்ற இயலும்? (கெடு தேதி 2030) பாவம் அல்லா!!. அல்லாதான் என்ன செய்துவிட முடியும்? ஆகட்டும் பார்க்கலாம்!!

தற்காதலர் தன்னடக்கம் எனும் வெளிப்பூச்சுக்குப் பின்னால் மறைந்து கொண்டு, தரத்தாய்வு, காரண காரியம், அல்லது மதத்தின் மூலமாகக் கடவுளையே இம்மனிதர் (!) உன்னத மேல் பதவிக்குக் கற்பனையில் உயர்த்தி விடுவார். உண்மை இதற்கு மாறானது. தற்காதலர் சொல்லும் அக்கடவுள் சுயநல முன்னேற்றத்திற்கே ஒரு கருவியாக உபயோகப்படுத்தப்படுகிறார். காரணம் மிக உயர்வானாலும் எந்தக் காரியமும் இக்காரணத்தைச் சார்ந்தே இருக்கிறது,

அர்கான் டரௌல் (Arkon Daraul) என்பவர் தற்காதலர் தன்னை நம்புபவர்களைத் தன் இயக்கக் கொள்கைகளைச் சற்றும் நம்ப இயலாதவாறு இருப்பினும் எவ்வாறு திணிக்கிறார் என மேற்கோள் காட்டி விளக்குகிறார்.

கீழே கொடுக்கப்பட்டது ஒரு பேரச்சம் அளிக்கும் திரைப்படத்தில் ஒரு காட்சி: 'வரலாற்றின் இடைக்காலத்தில் அதாவது 1092இல் பெர்சிய நாட்டைச் சேர்ந்த ஒருவன், உலகச் சக்கிரவர்த்தியின் பிரதிநிதியாக, முகமூடி அணிந்து கொண்டு, ஒரு கோட்டைப் பாதுகாப்பு அரண் மதிற்சுவரில் (the Eagle's Nest) மிகச் செங்குத்தான கரடு முரடாக (crag) உயர்வான இடத்தில் நின்று கொண்டான். "ஆங்கே கோட்டையின் உச்சாணிக் கோபுரத்தில் நின்று கொண்டிருக்கும் மனிதனை கவனித்துக் கொண்டே இருங்கள்" எனவும், கீழே தான் கடவுளின் மறு

[128] "For Love of God – Narcissists and Religion", by Dr. Sam Vaknin, Ibid.

அவதாரமான, ‘ஹசன்’, ‘சாபத்’இன் மகனெனவும், தானே மலைககளுக்கான ‘ஷேக்’ எனவும், திட்டமிட்டுக் கொலை புரிபவர்கள் தலைவனெனவும் உரிமையுடன் உரக்கக் கூவினான். சிறிது நேரத்தில் கீழே இருந்தவர் சாடை காட்டிய உடன், மேல் கோபுரத்தில் வெள்ளை அங்கியில் இருப்பவன், தன் கைகளை விரித்து வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டே கீழே இக்கோட்டையைச் சுற்றி நுரையோடு பெருக்கெடுத்து வேகமாக ஓடும் நீரோட்டத்தில் குதித்தான். பிறகு, ‘இதோ இவனைப் போல என் எந்த கட்டளைக்கும் பணியும் 70000 ஆண்-பெண் இருவரும் ஆசியாவின் ஒவ்வொரு இடத்திலும் இருக்கிறார்கள். கேட்டுக்கொள். மாலிக் ஷா, என்னைப் போல எவராலும் இம்மாதிரி செய்து காட்ட முடியுமா? இவன் என்னை அவனிடம் சரணடையக் கேட்கிறான். அவனுக்கு இதுவே என் பதில்’. இது ஓர் திரைப்படக் காட்சிதான். இம்மாதிரி காட்சி பயங்கர திரைப்படத்தில் மட்டுமே இருக்கலாம்.

உண்மையாக இதே போல சரித்திரத்திலும் ஓரிடத்தில் நிகழ்ச்சி உண்டு. இதை எழுதியவர் உண்மையை மழுப்பிவிட்டார். ஹசனின் ஆட்கள், 40000 தான். சாபத்க்கு இவ்வளவு சக்தி எங்கிருந்து வந்தது? ரகசிய சங்கத்தின் இவனுடைய சீடர்கள் எப்படி ‘காஸ்பியனிலிருந்து எகிப்து’வரை கிலியை உண்டாக்கி இருக்க முடியும்? ஆனால் இன்றோ, ‘ஹசீஷின்’’ எனும் வெறி மயக்க மருந்தூட்டும் குழு (Hashishin - druggers) போன்று ‘இஸ்லாம் இயக்க உட்பிரிவில் அதாவது இஸ்மைலி’கள், உள்ளனர். இவர்கள் தலைவர்தான் மிகப் பிரபல ‘ஆகா கான்’ (Agha Khan). [129]

ஒரு சமயத் தலைவர் இட்ட கட்டளைகளுக்குச் சீடர்களின் நிபந்தனையற்றுச் சொன்னதை நிறைவேற்றி அடிபணியும் நடத்தையால் மட்டுமே அந்த ஒரு வெறிப்பற்றீடுபாட்டு இயக்கம் உண்மையாக மதமாக / சமயமாகிவிட முடியுமா? நிச்சயமாக முடியாது! இதன் நேர்மாறு சரியெனச் சொல்லலாம். கடவுளிடம் ஆத்மானுபவமடைந்து தெளிந்த நல்லாசிரியர்கள் (நல்ல ஆசரணமுள்ள நல்ல ஆசிரியர்கள்) தங்கள் சீடர்களின் கண்மூடித்தனமான பக்தியை பயமுறுத்திக் கேட்க மாட்டார்கள். இவர்கள் சீடர்கள் ஒவ்வொருவரையும் “எல்லாவற்றிலும் அவநம்பிக்கை கொள், நான் உன் தலைவன் என்பதால் நான் கூறியபடி அப்படியே ஏற்றுக்கொள்ளாதே! என் கூற்றில் தவறுகளைக் கண்டு பிடி. சந்தேகங்களை எழுப்பு! ஐயப்படு! சிந்தனை செய். பரிசோதனை செய்! பின்னர் உன் மனத்திற்குச் சரியெனப் பட்டால் அல்லது உகந்ததானால் அப்போது அவ்விஷயத்தின் சார்பாகத் தீர்மானம் செய்துகொள்” என்றுதான் போதிப்பார்கள். இன்றும் சில மதத் தலைவர்கள் அப்படியே போதிக்கிறார்கள். இப்படித்தான் புத்தர், சாக்ரடீஸ் போன்ற சமய மேதைகள் தம் சீடர்களுக்குப் போதித்தனர்.

இவ்வாறே Akhenaten-னும் தன் சீடர்களுக்கும் போதித்தார். **“உண்மை அறிவு என்று கூறிய எதையும் தக்க சான்றின்றி, உண்மையென ஊகிப்பது அல்லது ஏற்றுக்கொள்வது மடத்தனத்தை விட இன்னும் மோசமானது. அறிவுள்ளவர் எப்போதும் எதையும் ஐயப்படாமல் ஒப்புக்கொள்ள மாட்டார். தலையாட்டிப் பொம்மையாகிவிட மாட்டார். மடையன்தான் அடம் பிடிப்பான். அவ்வப்போது பிறர் சொல்படி தனக்குகந்தால் தனது எண்ணங்களை மாற்றிக்கொள்வான். இவனுக்குத் தன் மடமையைத் தவிர மற்ற உலகத்திலுள்ளவை எல்லாமே தெரியும்”** என்றார்.

ஐயப்படும்போதுதான் அறிவு பிறக்கும். உண்மை மலரும். உண்மை அறிவு பிறந்தால் ஆத்மானுபவம் உண்டாகும். ஐயமின்றிக் கண்மூடித்தன பக்தியை

---

[129]From *A* History *of Secret Societies* by Arkon Daraul (Citadel Press 1961/1989)

அதிகாரத்துடன் பயமுறுத்திக் கேட்பவர்கள் தற்காதலர்கள்தான். இவர்கள் போதனை கடவுளைப் பற்றி மேன்மையான அனுபவத்தை அளிக்காது, நல்வழியிலிருந்து இடரான வழிக்கு வழிகாட்டுவார்கள். தற்காதலர் தன் சீடர்களுடைய தளைகளை நீக்கிவிட மாட்டார்கள். மாறாக தடைகளை உண்டாக்கிச் சீடர்களை அடிமையாக்குவார்கள். ஆதலால், எல்லாவற்றிலும் எப்போதும் ஐயம் கொள்; தன்னைத் தவிர உன் நம்பிக்கைகளின் மீது ஐயமுறு. ஆனால் உன் உள்ளார்ந்த ஆற்றலில் ஐயம் கொள்ளாதே! சந்தேகம்தான் அறிவின் முதற்படி. இதுதான் நமக்குக் கட்டற்ற வாழ்வை அளிக்கும்.

தற்காதலர் இரக்கமற்றவர். ஆனால் இவன் தன் சுயநல வேட்கையில் மடையனல்ல. இவர்கள் மற்றவர்களுக்கு மனதை எவ்வளவு தூரம் காயப்படுத்தினோம் என அறிந்தவர்கள். இவர்கள் பலம் மற்றவர்களைப் புண்படுத்துவதில்தான் உள்ளது, இவர்களுக்குத் தடையற்ற ஆதிக்கம் விருப்பமானது. தன் சீடர்களின் தயங்காத கீழ்ப்படிதலை ஆணையிட்டு, அவைகளால் கிடைக்கும் கடவுளாக ஆகிவிட்ட அனுபவத்தில் திளைக்கிறார். தங்களைக் கடவுளாகவே எண்ணி விடுவதால், யாராருக்குப் பயனளிப்பது, அல்லது யாரைத் தண்டிப்பது, யார் யார் வாழ வேண்டும், யார் யாரை அழித்திட வேண்டுமெனவும் தீர்மானிப்பார். மற்றவர்கள் வாழ்வை அடக்கி ஆள்வதில்தான் தற்காதலர் எனும் உள நோயாளியின் வாழ்வே அடங்கியுள்ளது. இச்செயல் தூண்டுதல்தான் தொடர்க் கொலையாளிகளை (chain-killers) முடுக்கி விடுகிறது. இந்தத் தூண்டுதலால்தான் மற்றவர் வாழ்வை அவர்களால் எளிதில் அழித்திட முடிகிறது. இதுவே சிற்றின்ப வேட்கை மிக அதிகமுள்ள மனித மிருகங்களைச் சிற்றின்பத்திற்குச் சித்திரவதைக்குப் பிறகு தங்கள் பலிகளைக் கொலை செய்யத் தூண்டுகிறது (aphrodisiac-உடலுறுப்புகளை வெட்டிப்போடுவது, தலையில் பாறாங்கல்லால் சிதைப்பது போன்று). பிறர் அழிவில் தங்கள் சக்தி பிறக்கிறது என விபரீத எண்ணமும் அவர்களுக்கெழுகிறது. பிறரை அழிக்கும்போது இவர்கள் கடவுளாகிறார்கள். இப்படிப்பட்ட தற்காதலருக்கு அழிக்கத்தான் தெரியும். ஆக்கத் தெரியாது.

மனநோயால் ஏற்பட்ட தற்காதல் (Pathological narcissism) என்பதற்கு முகம்மதுவே உதாரணம். முகம்மதுவிடம் இரக்கமின்மை, உலகில் எங்கும் காணமுடியாத படாடோபம், தன்னை ஏற்றுக் கொண்டவர்களுக்குத் தாராளம் - ஆகியவையெல்லாம் இருந்தது. முகம்மது தன் சீடர்களின் மனதில் தன்னைப் பற்றி ஆழப் பதியவைத்து, அவர்களிடம் என்றும் தன் உயர்வை நிறுவி, சீடர்கள் மனத்தில் ஏதாவது நம்பிக்கை இழந்திருந்தால் அதைச் சீர் செய்து விடுவதும் உண்டு. தன் சொந்த நம்பிக்கை, வெறி, மற்றவர்களைத் தன் பேச்சால் கவரும் ஆளுமை இவைகளுடன் பிறருக்கு மனவேதனை அளிக்கும் முகம்மதுவின் தற்காதல் ஆளுமைக் கோளாற்றால், இஸ்லாமும் இவர் சீடர்களும் உண்மையில் மிகவும் புண்பட்டனர்.

### தற்காதல் எப்படி, ஏன் உண்டாகிறது

**உயர்வு - தாழ்வு மனப்பான்மைகள்**: (Superiority- inferiority Complexes)

குழந்தைக்கு தாழ்வு மனப்பாங்கு கீழ்க்கண்ட காரணங்களால் ஏற்படலாம்: மெய்யான தாழ்வு மனப்பாங்கு இயல்பாக இருத்தல்; சமூகப் புலன் உணர்வால் தான் உதறித் தள்ளப்பட்டோம் எனும் அறிவைத் தானே பெறுதல். இதை ஈடு செய்ய, மனமறிந்து நிகழாத செயல்கள் சார்ந்த இயல்பு மீறிய உணர்ச்சி அமைப்பினாலும் உண்டாகலாம்; அல்ப்ஃரெட் அட்லர் (Alfred Adler) ‘உயர்வு

மனப்பான்மை' (Superiority Complex) எனும் ஒரு சொல்லை முதன்முதலில் உருவாக்கினார். இது, தான் நடத்திய சில செய்கைகளைச் சாதனையென தனக்குத் தானே மிகைப்படுத்திக் கூறுவதாலோ அல்லது நினைப்பதாலோ உண்டாகும்.

உயர்வு மனப்பான்மை கீழ்க்கண்ட காரணங்களால் ஏற்படலாம்: பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைத் தவறான வழிகளில் வளர்த்தல். இதன் பங்குதான் மிகப் பெரிய காரணம், இக்காரணமே பெரியவரான பின்னர், இக்குழந்தைகளைத் தற்காதலர்களாக உருவாக்கி விடுகிறது எனலாம்; குழந்தைகளின் உள்ளப்படியே அவர்களுக்குத் தாராளமாகச் செலவழிக்க அள்ளிக் கொடுத்தலாலும் (10 ரூபாய் போதுமானதாக இருக்கும்போது, அதற்குப் பதிலாக 100 ரூபாயை அளித்தல்-பணத் திமிரால்), வளரும் இளமைப் பருவத்தில் அளவுக்கு மீறித் தகாதவைகளை அனுமதியளிப்பது; குழந்தைகளை அளவுக்கு மீறிப் புகழ்வது, அதிகமாகத் திருப்தி செய்வது; அளவுமீறி செல்லம் கொடுத்துக் குழந்தையின் குணநலங்களைக் கெடுத்தல்; எந்தந்த தக்க ஒழுங்குமுறைகளைக் கடைபிடிக்க வேண்டுமோ, அதன்படி செய்யாதிருத்தல்; குழந்தைகளை அவர்கள் தரத்திற்கு அதிகமாக மதித்தல்; ஆகியவைகளால் குழந்தையைக் கெடுத்தல் எனலாம். இதற்கு எதிர்மாறாக, எதிலும் பற்றக்குறையை உண்டாக்குதலில் கூட தற்காதல் உண்டாகலாம். தாயன்பு கிடைக்காமை, எதிலும் சிக்கனத்தாலும் இது ஏற்பட வாய்ப்புண்டு. எதற்கும் எங்கும் ஒரு சமநிலை (equilibrium) தேவை.

குழந்தைப் பருவத்தில் தாயன்பை முழுக்கக் காட்டலாமல்லவா? ஏழ்மை, இல்லா ஏலாமையென்றாலும் அதையும் தகுந்தபடி எடுத்துக் கூறலாமல்லவா? இதுவே குழந்தைகளுக்குப் போகப்போக முன்னேற்றமடைய ஒரு உள்ளார்வத்தை உண்டாக்கி, ஊக்குவிக்கும் தூண்டுகோலாகலாம்.

மேலும் இதற்கு நேர்மாறாக-எங்கேயோ யாரிடமோ காட்ட முடியாத கோபக் குமுறல்களைத் தங்கள் குழந்தைகளிடம் காட்டிச் சிறு தவறுகளுக்காகவும் மிருகத்தனமாக அடித்தல், திட்டுதல்; குழந்தைகளை முழுதுமாகப் புறக்கணித்தல்; குழந்தைகளிடமே பாலியலில் ஈடுபடுதல் முதலியன செய்தால் தகுமா?

குழந்தைப் பருவ நிறைவின் போதும் கூட மனது முழு வளர்ச்சி அடையாததால் அக்குழந்தை நன்கு வளர்ச்சியடைந்து வாலிபப் பருவத்திலும் அதற்குரிய மனப் பக்குவம் அடைவதில்லை. இதனால், செயல்திறமற்ற மனப்பான்மை வாழ்க்கையில் வளர்ந்து விடுகிறது. இதற்கு நேர்மாறாக, சிறுவயது குழந்தைக்கு வேண்டிய மிக அவசியமான ஆதரவையும் ஊக்கத்தையும் அளிக்காவிட்டால் குழந்தை வளர்ந்த பின்னர் தற்காதலராகத்தான் மாறும்.

முகம்மதுவுக்கு ஒரு வயதாகு முன்னரே இவரை வளர்க்க முன் பின் தெரியாதவரொருவரிடம் கொடுக்கப்பட்டார். முகம்மதுவின் இளவயது விதவைத் தாயார் அமீனாவுக்கு, இயல்பாகத் தோன்ற வேண்டிய தாய்ப்பசம் அற்றுப் போனதா? இல்லை என இந்த தாயைக் குறித்துக் குறை செல்ல முடியாது. சந்தர்ப்பமும் பொருளாதார சூழ்நிலையும் அவ்வாறு அவளுக்கு அன்று இருந்தது. மெய்மையில் 'அமீனா'வை வறுமை வாட்டியது. முகம்மது தந்தை இறந்து ஆறு மாதங்களுக்குப் பின் பிறந்தார். பொருளாதாரச் சூழ்நிலை அப்படியிருந்தது. அவளும் தான் என்ன செய்வாள்? ஆனால் எல்லாமறிந்ததாகச் சொல்லும் இதே முகம்மது கொள்ளயடித்துச் செல்வந்தனாகி, வயதான பிறகும் போது தாயாரின் கல்லறையில் அவருக்காகத் தொழுகை ஏன் நடத்தவில்லை? அப்போது கூடத் தாயை முகம்மது மிகவும் வெறுத்தார். இதற்கெல்லாம் மிக முக்கிய காரணம், பொருளாதார வசதியின்மையால் அமீனா முகம்மதுவை எப்படி வளர்த்திருக்க வேண்டுமோ

இதில் உள்ள குதர்க்கத்தை ஆராய்வோம். நமாசைக் கெடுக்க ஷைத்தான் வந்தானாம். அல்லா அருளிய சக்தியால் அவன் கழுத்தை நெரித்து மூச்சுத் திணறச் செய்தாராம். அவனை மசூதித் தூணில் கட்ட நினைத்தாராம். உடன் சாலமோன் அரசர் கூறியது நினைவுக்கு வந்ததாம். அல்லாவிடம் தனக்கொரு பேரரசை அருள வேண்டிக்கொண்டாராம். உடன் சைத்தான் வெட்கமடைந்து தலை குனிந்து கொண்டானாம்! ஒவ்வொரு சொற்றொடரும் ஒன்றுக்கொன்றுடன் தொடர்பின்றி உள்ளது. இறுதியில் பிடிபட்ட ஷைத்தான் என்ன ஆனான்? கழுத்து நெரித்தவுடன் மூச்சுத் திணறி பின் எழுந்து கட்டை அவிழ்த்துக்கொண்டு ஓடி விட்டானா! அதைப் பற்றி முடிவான சொல்லில்லை. ஆக, சொற்களில் எந்த முடிவான கருத்தும் காணப்படவில்லை!! இது மனநோய் ஆய்வில், இது மனநோயின் ஒரு அறிகுறி (symptom) எனலாம். ஆகையால் உண்மை நடப்புகளுக்கும், கற்பனைப் படிவங்களுக்கும் வித்தியாசம் அறிய முடியாது. சாலமோன் அரசரைப் பற்றியும் மனநோய் பற்றியும் மேலும் சற்று விளக்கமாக 'பக்கமூளையில் வலிப்புக்கான அறிகுறிகள்' (Symptoms of Temporal Lobe Seizure ) பற்றி கூறப்படும் பத்தி முடிவில் அளிக்கப்பட்டுள்ளது.

அல்-புகாரி ஹத்தீசில், ஆயிஷா விவரிக்கிறார்: "முகம்மதுவின் மீது சூனியம் வைக்கப்பட்டது. அதனால், முகம்மது தன் மனைவிகளுடன் பாலியல் உறவு கொள்ளாமல் இருக்கும் போது கூட, அவருக்கு உடலுறவு பூண்டதுபோல புணர்ச்சியின்பப் பரவசநிலை உண்டாகும் (Orgasm without coitus). [[[மொழிபெயர்ப்பாளர் பின்னூட்டம்: இச்செய்தியும் 'இஸ்லாத்து தக்கியா' இதற்கு ஆயிஷாவும் உடந்தை போல் தெரிகிறது. முகம்மதுவின் உடல் வியாதி முதிர்ச்சியால் ஒரு கட்டத்தில் புணர இயலாததை சூனியம் என திரித்துக் கூறப்பட்டுள்ளது. இதுவும் ஹத்தீஸ் தீட்டியவரின் மற்றொரு பொய்(கை)வண்ணம். ஒரு பொய்யை மறைக்க ஓராயிரம் பொய்களைக் கூறவேண்டிவருகிறது. இது தான் இஸ்லாம். சுபானல்லா!]]] ஆனால் உண்மையில் அவ்வாறு நடந்திருக்காது. இது சூனியத்தில் மிக மோசமான சூனியம் எனும் வெற்றுக் கற்பனை. இச்சூனியத்தால் அவர் மனைவிகள் எதிர்பார்த்தவாறு உடலுறவு கொள்ள முடியாததால் மிகவும் ஏமாற்றம் அடைந்தனராம். ஒரு நாள் முகம்மதுவே என்னிடம் (ஆயிஷாவிடம்) கூறினார்: 'அல்லாவிடம் நான் கேட்டேன், சூனிய சமாச்சாரம் என்ன' எனக் கேட்டேன். இதற்காக அல்லா இருவரை என்னிடம் அனுப்பினார். ஒருவன் என் தலைப் பக்கத்திலும், மற்றொருவன் கால் பக்கமும் உட்கார்ந்து கொண்டனர். தலைப் பக்கம் உட்கார்ந்தவன் கேட்டான்- 'இவனுக்கு ((முகம்மதுவுக்கு) என்ன நேர்ந்தது?' என வினவினான். இவனுக்குச் 'சூனியம் வைக்கப்பட்டுள்ளது' என்றான். யார் வைத்தது? என்பதற்கு, 'இப்படிச் சூனியம் வைத்தவன் பானி ஜுரைஃக் இனத்துக்கு நட்புள்ள யூதன் லாபித் இப்னு அல்-அ'சம்' என்றான். (Labid bin Al-A'sam, a man from Bani Zuraiq - ally of the Jews) 'அவன் பிறரை ஏமாற்றுவதில் வல்லவன். அவன் சூனியம் வைக்க எந்தப் பொருளை உபயோகித்தான்?' 'அப்பொருட்கள்களில் ஒரு சீப்பும் அதில் சிக்கி இருக்கும் தலை முடிகளும் சேர்த்து உபயோகிக்கப்பட்டது' என்றான். 'அவைகள் தற்போது எங்கிருக்கிறது?' இது தர்வானில் ஒரு கிணற்றில் ஒரு கல்லுக்கு அடியில் ஆண் இனப் பேரிச்ச மரத்தின் பிரிக்கப்பட்ட மட்டைக்குள் மகரந்தத் தூள் தூவப்பட்டு வைக்கப்பட்டுள்ளது என முகம்மது கனவில் கண்டார். அங்கு சென்று முகம்மது இவைகளை எடுத்து வந்தார். இக்கிணறின் தண்ணீர் கூட 'மரு தோன்றி இலை'யென (henna leaves) (தமிழ் நாட்டில் இதை மருதாணி இலை என்பர்) இருந்தது. அப்பேரீச்சமரமும் ஒரு பிசாசு போலக் காணப்பட்டது (!?!). அதற்கு (ஆயிஷா) 'நீங்கள் 'நஷ்ரா" எனும் வைத்தியம் செய்து கொள்ளலாமே' என்றேன்.

'அல்லாவே என்னை குணப்படுத்திவிட்டார். இதன் கெட்ட விளைவுகளை என் மக்களுக்குள் பரவ விட நான் விரும்பவில்லை' என்றார் முகம்மது. [207]

முகம்மதுவுக்கிருந்த வியாதிகளின் தாக்கத்தால் அவர் உடல் துர்நாற்றம் வீசியது. அதை மறைக்க முகம்மது அதிகமான வாசனைத் திரவியங்களை உபயோகித்தார். பின் வரும் பத்திகளில் இதைப் பற்றி விவரம் காண்க.

இன்னொரு ஹத்தீசில், "எப்போது முகம்மதுவுக்கு 'இறைச் செய்தி' (வஹி) வருகிறதோ, அவர் ஒரு போர்வைக்குள் இருப்பார். அவ்வாறு இருக்கும்போது ஒரு சமயம், அங்கே ஓமர் 'யாலா'வைக் கேட்டான். உனக்கு முகம்மதுவுக்கு வஹி வரும்போது பார்க்க வேண்டுமா? எனக் கேட்டான். ஓமரும் முகம்மதுவின் பேர்வையை ஒரு பக்கமாக மெதுவாகத் தூக்கிக் காண்பித்தான். ஆங்கே கடும் புயற்காற்றின் பேரிரைச்சல் போலவும், (அல்லது) மிகக் கோபத்தால் வெளிப்படும் செறுமும் சத்தத்துடன் (snort) வெடிப் பெருமூச்சு வெளி வருவது போல வந்து கொண்டிருந்தது. இவ்விபரீத ஒலி ஒட்டகம் இளைப்பாறும் போது உண்டாகும் ஒலி போன்றே எனக்குத் தோன்றியது.[208]

இன்னொரு ஹத்தீசில் (அல்-புகாரி) எவ்வெப்போது காப்ரியேல் தனது வஹிகளை முகம்மதுவுக்குத் தெரிவிக்கும் போதும் முகம்மதுவின் நாக்கையும் உதடுகளையும் செயற்படத் தூண்ட முயல்வான். ஆனால் காப்ரியேலுக்கும் அசைக்க முடியாமல் போய்விடும். இதனால், அப்போது முகம்மதுவுக்கு இறைச் செய்தி (வஹி) வந்து கொண்டிருக்கிறது என நமக்குத் புரிந்துவிடும்". [209]

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் பட்டியல்களில் முகம்மதுவுக்கு அவ்வப்போது வந்து கொண்டிருந்த 'இறைச் செய்தி (வஹி)களின் விளைவு எதெது உடல் சார்ந்தவைகளெனவும் (physical) எதெது உளவியல் சார்ந்தவை (psychological) எனவும் இரு கூறுகளாக அனேக ஹத்தீசுகளிலிருந்து தொகுத்தெடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது. மனமருட்சி அல்லது பிரமைத் தோற்றம் (hallucinations); ஒரு தேவதை அல்லது பிரகாசமான ஒளியைக் காணும் போது ஏற்படும் உடல் மாற்றம் போலத் தோன்றும்; உடல் தசைகள் திடீரென வேதனையுடன் இறுகிப் போகும். வயிற்று வலி எழும். சுகவீனமும் ஏற்படும்; மிக உணர்ச்சி வசப்பட்டு மனக் கவலையுடன் பயத்தால் இது முகம்மதுவை மூழ்கடித்து விடும்; கழுத்துப்பட்டைத் தசைகள் முறுக்கிக் கொள்ளும்; உதடுகள் அசைவதைக் கட்டுப்படுத்த முடியாமல் அடிக்கடி உதடுகள் இரண்டும் ஓசையுடன் சப்புக் கொட்டிக் கொண்டே இருக்கும்; குளிர்காலத்திலும் வியர்த்துக் கொட்டும்; முகம் சிவந்து போகும்; முகமும் அமைதி இழந்து நிதானத்தில் தடுமாற்றம் ஏற்பட்டுவிடும்; இதயத் துடிப்பும் பதைபதைப்பும் அதிகமாகும்; ஒட்டகம் போல மூச்சுக்காற்று, கோபத்தால் செறுமும் சத்தத்துடன் இருக்கும்; எப்போதும் தூக்கத்தில் இருப்பதுண்டு; தற்கொலை செய்து கொள்ள வேண்டுமென எண்ணங்களும் எழும். இவைகளெலாம் **'பக்கமூளை வலிப்பு'க்கான அறிகுறிகள்** எனலாம். (Temporal Lobe Epilepsy [TLE]). இதைத் தமிழில் 'காக்காய் வலிப்பு' 'அல்லது 'இசுப்பு / இழுப்பு' எனக் கூறுவர். இதன் இயல்பு - இந்நோய் முன்னெச்சரிக்கை ஏதுமின்றி, திடீரெனத் தாக்கும். இக்காரணங்களால் முகம்மதுவின் விஷயத்தில் பக்கமூளை வலிப்பு (காக்காய் வலிப்பு / இசிப்பு) இருந்தது உண்மைதான் என மனநோய் அறிவியல் வழியிலும் இஸ்லாத்து நூல்களில் உள்ள வசனங்களாலும் சந்தேகத்திற்கிடமின்றி உறுதிபடக் கூறலாம்.

[207] Sahih Bukhari Volume *7, Book 71, Number 660:*
[208] Sahih Muslim Book 007, Number 2654:
[209] Sahih Bukhari Volume 6, Book 60, Number 451:

அல்-புகாரி: “முகம்மது கூறியவாறு: தனது ‘இறைச் செய்தி’ அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டார். 'நான் நடந்து கொண்டு போகும் போது, திடீரென வானத்திலிருந்து ஒரு பேரிரைச்சல் கேட்டது. நானும் அண்ணார்ந்து வானத்தை நோக்கினேன். இதில் எதிர்பாரா அதிர்ச்சியாக நான் ‘ஹீரா’ குகையில் கண்ட அதே தேவதை வானத்திற்கும் பூமிக்கும் நெடியதாக ஒரு இருக்கையில் அமர்ந்து கொண்டிருந்தது. எனக்கு பயம் பிடித்து வீட்டிற்கு நடுநடுங்கி ஓடிவந்தேன். மனைவி கதீஜாவிடம், ’என்னைப் போர்த்திவிடு என அடிக்கடி கேட்டுக்கொண்டேன்’ என ஹத்தீஸ் எடுத்துரைக்கிறது. [210]

**தற்கொலை எண்ணங்கள்**

வரலாற்றுப் பதிப்பாளர்கள் நமக்குக் கூறுவது: முகம்மது அனேக தருணங்களில் தற்கொலை முயற்சிகளில் ஈடுபடும்போது அவ்வப்போது ‘காப்ரியேல்’ தான் தடுத்துத்துக் காப்பாற்றினான் எனக் கூறப்பட்டுள்ளது. முகம்மது தானொரு கவிஞனாகவோ, அல்லது வருமுன் உரைப்போனாகவோ (kahin) ஆகப்போவதாகவே நினைத்தார்.

முகம்மது கூறியது ‘என் வாழ்க்கையில் காப்ரியேலை வெறுத்தது போன்று வேறொருவரையும் நான் அவ்வளவாக வெறுத்ததில்லை. எனக்கு இறைச்செய்தி வசனங்களாகக் கிடைத்ததை குஃரைஷ் மக்களிடம் பகிர்ந்து கொள்ளவும் விரும்பவில்லை, நானே பல தடவை மலை உச்சிக்குச் சென்று அங்கிருந்து கீழே விழுந்து என் உயிரை மாய்த்துக் கொள்ள நினைத்ததுண்டு. அது மனத்திற்காவது ஆறுதல் அளித்திருக்கும். நான் மலை உச்சிக்கு விரக்தியில் ஓடிச் செல்லும் போது உடன் வானிலிருந்து ஒரு பெருங்குரல் கேட்டது. “ஓ! முகம்மது! நீதான் அல்லாவின் தூதன். நான்தான் காப்ரியேல், அல்லாவின் ‘இறைச்செய்தி’யை கொண்டு வருபவன்” எனக் கேட்டது. மறுபடியும் அதே குரல் அவ்வாறே மீண்டும் கூறியது. நானும் சற்று நின்று கவனித்தேன். ஆங்கே காப்ரியேல் தன் கால்களை அடிவானத்தில் வைத்திருந்ததைப் பார்த்தேன். இக்காட்சி என் எண்ணங்களைச் சிதறடித்தது. அப்படியே நானும் உணர்வு மழுங்கி நின்றேன். காப்ரியேலைப் பார்ப்பதைத் தவிர்த்து, வேறொரு இடத்தில் பார்த்தாலும் அங்கேயும் காப்ரியேலைக் கண்டேன். அவன் எங்கும் நிறைந்திருந்தான். இவனைத்தான் நான் முன்பே சந்தித்திருக்கிறேனே” என்றார். [211]

முகம்மது பார்த்த உருவங்கள் அனைத்துமே, அவர் தம் தலை நிழலைப் பார்த்துதான் தவறாக எண்ணிவிட்டார். முகம்மது எந்தப் பக்கம் திரும்பினாலும், அவ்வுருவம் அந்தந்தப் பக்கங்களில் தெரிந்தது. இதைத்தான் அனேக உருவமென மனதில் ஒரு மாயக் காட்சியை உருவகப்படுத்திக் கொண்டுவிட்டார். இதுவும் சித்தப்பிரமை இருப்பதற்கான சான்று. மனமருட்சியால் இவ்வாறு மனநோய் மருத்துவத்துக்குரியவை அல்லாத மன நிலையிலும் ஏற்படலாம்.

இதற்கான உதாரணங்கள்: 1. பெருமூளை சம்பந்தப்பட்ட புண்ணாகவோ புண்ணோ, அவ்வுறுப்புச் சிதைவாலோ/அல்லது கோளாறாலோ இருக்கலாம். (cerebral lesions); 2. புலன் உணர்வு இழந்த நிலை (sensory deprivation); 3. ஒற்றைத் தலைவலியில் உண்டாகும் வேதனையாலும், மாறி மாறி வரும் உணர்வுக்காக எடுத்துக்கொண்ட மருத்துவத்தாலும் உண்டாகலாம் (migraine and psychedelic drugs)

சில மனமருட்சிகள் மிக எளிதானது அல்லது முற்றிப் போகாதது. சில நோயாளிகள் விளக்கில் பல நிறங்களைப் பார்ப்பது போலவும், அல்லது வடிவியல் சார்ந்த

---

[210] Bukhari Volume 6, Book 60, Number 478

[211] Sira Ibn Ishaq p. 106

(கணித அமைப்பு போன்று- geometrical designs) காட்சிகளையும் காண்பார்கள். இம்மாதிரி மனப்பிரமை, பின்மூளை வலிப்பினாலும் உண்டாகலாம் (occipital lobe epilepsy). காணும்படி முகம்மதுவுக்கு ஏற்பட்ட மனமருட்சிக் காட்சிகள் - மிக சிக்கலானது (Complex visual hallucination); மூளை நரம்பியல் கோளாறுகளான (neurological disorders) நடுக்குநோய் வாதமும் (Parkinson's disease); க்ரூட்ஸ்பெ·ல்ட் - யாகூப் நோயாலும் கூட ஏற்படுகிறது (Creutzfeldt-Jakob disease); இந்த மனநிலையில் பல்வேறு மிருகங்களின் உருவங்களும், பலதரப்பட்ட மானிட உருவங்களும் அல்லது புராணக் கதைகளில் வரும் சில சிறிய அல்லது மிகப் பெரிய உருவங்களும் அல்லது தேவதை, பேய் பிசாசுகள் உருவங்களும் தோன்றலாம். [212]

இது சத்தத்துடனோ ஏதோ ஒரு வாசனையுடனோ அல்லது நாக்குச் சுவையுணர்வைச் சார்ந்து (gustatory) அல்லது மோப்ப-முகர்வுகளாலும் (olfactory) உடல் சார்ந்த புலனில்லா உணர்வுகளாலும் இயக்கவகைப் புலனில்லா உணர்வுகளாலும் (somatosensory and kinesthetic hallucinations) பக்கமூளைவலிப்பின் அறிகுறிகளாலும் (temporal lobe seizures) தெரியலாம். இறைச் செய்தி கொண்டு வந்த காப்பிரியேல் முகம்மதுவின் உடலை முறுக்கியதால் ஏற்பட்ட வேதனை, வயிற்றையும் முறுக்கி விட்டு தாங்கொணா வலியையும் ஏற்படுத்தி இருக்கலாம். ஆக இவைகளே 'ஹீரா' குகையில் நடந்த நிகழ்ச்சிக்கு விளக்கமாகிறது.

அடுத்து விஞ்ஞானி ஸ்காட் ஆட்ரன் (Scott Atran) இன்னும் விவரிக்கிறார், - மனமருட்சி அல்லது சித்தப்பிரமையின் போது: பாதாம் பருப்பு போன்ற உள் மூளையின் உட்புறமிருக்கும் பகுதியில் நினைவலைகள் கடல் குதிரை போன்ற ஒரு பகுதியில் திடீர் மாற்றங்கள் (hippocampus and amygdala) உண்டாகும். உணர்ச்சிப் பெருக்கில் மனதுக்குள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு செல்வது போலவும் (vestibular) இருக்கும். ஏதோ ஒரு வாசனையுடனோ அல்லது நாக்குச் சுவையுணர்வைச் சார்ந்த அல்லது முகர்வுணர்வு சார்ந்த அல்லது சத்தத்துடன் சங்கீதக் குரல்கள், காற்றில் மிதப்பது போன்ற உணர்ச்சியும், தித்திக்கும் அமுதச் சுவையும்; அல்லது உடல் எரிந்து போவது போன்ற நாற்றமும் அல்லது தன்னை யாரோ அன்பாய் தடவிக் கொடுத்துக் கொஞ்சுவது போன்றும், சுவர்க்கத்தின் பூ மணமும் அல்லது நரகக் கெட்ட துர்நாற்றத்தையும் உணர்வர். உதாரணமாக, பாதாம் பருப்பு போன்ற உள் மூளையின் உட்புறமிருக்கும் நினைவு பற்றிய நடுப் பகுதியால் மதச் சடங்குகளில் மிகை ஈடுபாடும் முகர்வுணர்வுகளுக்கு ஊதுபத்தி மணமும் ஒரு முனைப்பாக அறியலாம். பக்கமூளை வலிப்பில் ஏற்படும் (ஈட்டி குத்தினால் வரும் அதிக வலி போன்று) ஏற்றம், வலிப்பு சம்பந்த அனுபவமும் அல்லது வாசனைகளை நுகரும் அனுபவமும் உண்டாகலாம். [213]. காப்ரியேலுக்கே 600 இறக்கைகள் இருந்ததாக முகம்மது கூறுகிறார்.[214]

முகம்மதுவால் எப்படி 600 என எண்ணிக்கை இவ்வளவு துல்லியமாக கணிக்கப்பட்டது? அல்லது கொத்து மதிப்பாக ஊகிக்கப்பட்டதா? இக் காட்சி சாதாரணமான மானிடர்களால் நினைத்துப் பார்க்கவும்கூட மிகக் கடினமானது. முகம்மது 'புரா·க்' எனும் கலப்புக் காட்சியளித்த வாகனத்தில் (அதில் மனித முகம் + வரிக்குதிரை உடல் + கணக்கில்லா இறக்கைகளென இருந்ததாம்!) அமர்ந்துதான் மதீனா மசூதியிலிருந்து எல்லோரும் தூங்கியவுடன் (இது நள்ளிரவாகத்தான் இருக்க முடியும்) இரவில் கிளம்பிப் பின்னர் - ஜெருசலேமிலிருந்து அல்லாவின்

[212] Often mischievous form of spirits in Arab mythology, capable of appearing in human and animal forms.
[213] Scott Atran, NeuroTheology: Brain, Science, Spirituality, Religious Experience by Chapter 10 http://jeannicod.ccsd.cnrs.fr/docs/00/05/32/82/RTF/ijn_00000110_00.rtf
[214]Bukhari:Volumne 4, Book 54, Number 455

சுவர்க்கபுரிக்குப் பயணமாகப் போய், காலை விடிவதற்குள் திரும்பி வந்துவிட்டார்!!. அதுதான் அல்லாவின் அதாவது முகம்மதுவின் மாட்சி! இதை 'மீரஜ்' பயணம் எனக் கூறுவர். இக்குதிரை மனித முகமும் மிகப் பெரிய ராட்சச இறக்கைகளும் கொண்டது. இம்மாதிரி அபத்தங்களை நம்ப முடியாமல் முகம்மது மனப்பிரமையில் ஏதேதோ பிதற்றுகிறார் என்றுதான் எல்லோருக்கும் தோன்றும்.

எகிப்திய இஸ்லாமிய வல்லுனர் வரலாற்று ஆசிரியர் ஹேய்கல் சுவர்க்கத்தில் முகம்மது கண்டதை ஆங்கே சென்று நேரில் கண்டதுபோலத் தாமும் கூடவே சென்றது போல விவரிக்கிறார் (எப்படி! அவரைத்தான் கேட்க வேண்டும்!!). சுவர்க்கத்தில் எங்கும் எதிலும் வெள்ளியால் நிர்மாணிக்கப்பட்டு இருந்தது. நட்சத்திரங்கள் தங்கச் சங்கிலிகளால் விண்ணில் தொங்கடப்பட்டு இருந்தன. (இது முகம்மதுவின் அறிவின்மையை நிரூபிக்கிறது. இவருக்கு நட்சத்திரங்கள் என்றால் அக்காலத்து வழக்கப்படி 'கிறிஸ்மஸ்' தினத்தில் வீட்டுக்கு வீடு வாசல்களில் தொங்கும் விளக்கு ஒன்றுதான் தெரியும் எனத் தெரிகிறது! (இக்காலத்திலும் இவ்வழக்கம் உள்ளது) இக்கட்டுக்கதையும் முகம்மது காலத்தில் (நம்பப்பட்ட) (ப்)டாலமி - Ptolemy's cosmology-அண்ட அமைப்பு பற்றிய விஞ்ஞானத்துடன் ஒத்திருக்கிறது. இதில் ஒரு சுவர்க்க தேவதை தூங்காமல், சுவர்க்க ரகசியங்களைக் களவாடச் சுவர்க்கச் சுவரைத் தாண்ட முயற்சிக்கும் பேய்களைத் தடுத்து எப்போதும் போராடிக் கொண்டிருக்கிறது. இதுவும் குரானில் கூறப்படுகிறது. இதில் ஒவ்வொரு பிசாசும் ஒருவர் தோளில் மற்றொரு பிசாசு நின்று சுவர்க்கச் சுவரைக் கடக்க முயல்வதாக உள்ளது. அதற்காக எரி நட்சத்திரக்கற்களை பேய் பிசாசுகள் மீது வீசி தேவதைகள் அவர்களை எரித்து அழித்திடுவார்கள். [215]

சுவர்க்கத்தில் முகம்மது அங்கிருந்த ஆதாம், மற்ற இறைத் தூதர்களான, நோவா, ஆரூன், மோசஸ், ஆபிரஹாம், டேவிட், சாலமோன், இத்ரிஸ் (Enoch), யாஹ்யா எனும் ஜான் (John, the Baptist), கிறிஸ்துவுக்கு ஞானஸ்னம் செய்வித்தவர், கிறிஸ்து முதலியோர் வீற்றிருக்கக் கண்டார். அங்கே இறப்பு தேவதை **அஸ்ரைலைக்** (**Azrail**) கண்டார். அத்தேவதையின் இரு கண்ணின் இடைவெளி தூரம் 70000 நாட்கள் முழுதும் நடந்தால் எத்தனை தூரத்தில் இருக்குமோ அவ்வளவு தூரத்தில் அமைக்கப்பெற்று உட்கார்ந்திருந்தது. அதாவது, இறப்பு தேவதையின் இரு கண்களுக்கும் இருந்த இடைவெளி சந்திரனுக்கும் சூரியனுக்கும் உள்ள தூரத்தைக் காட்டிலும் பத்து மடங்கு அதிக தொலைவு. அஸ்ரைலிடமோ 100,000 பேர்கள் அடங்கிய பட்டாளம் இருந்தது. அவன் ஒரு மிகப் பெரிய புத்தகத்தில் பிறப்பு இறப்புக் கணக்கை எழுதிக் கொண்டிருந்தான். பிறகு உலகத்தில் நடக்கும் பாபங்களை நினைத்து அழும் தேவதையையும் கண்டார். அங்கே பழிக்குப் பழி வாங்கும் தேவதையையும், ஆணவ நோக்குடன் முகம் முழுதும் கழலை நிறைந்து அங்கிருக்கும் நெருப்பு அரியாசனத்தில் வீற்றிருக்கக் கண்டார். அங்கே ஒரு தேவதை பாதி பனிக்கட்டியிலும் பாதி நெருப்பு சூழ்ந்தும் பக்கத்தில், 'அல்லாவே! பனிக்கட்டியையும் நெருப்பையும் ஒன்றாகவே அருகில் தங்கள் சட்டங்களுக்குக் கீழ்ப்படியச் செய்துவிட்டீர் எனப் பிலாக்கணத்தில் அழுதுகொண்டே கிடந்தது. இதையடுத்து ஏழாவது சுவர்க்கத்தில் இப்பூவுலகைக் காட்டிலும் பன்மடங்கு பெரிதான உருவத்தில் ஒரு தேவதைக்கு 70000 தலைகள்; ஒவ்வொரு தலையிலும் 70000 முகங்கள்; ஒவ்வொரு முகத்திலும் 70000 வாய்கள், ஒவ்வொரு வாய்க்குள்ளும் 70000 நாக்குகளுடன், ஒவ்வொரு நாக்கும் 70000 புதுப்புது மொழிகளில்

[215] Quran, 72:8; 37:6-10; 63:5.

மகிழ்ச்சியுடன் சுவர்க்க மரபு மொழிகளில் அல்லாவின் புகழ் பாடிக் கொண்டிருந்தது. [216]

ஆகா! அற்புதம்! பெருக்கல் கணக்கு போட்டால் தலைசுற்றும்!! இதனால் முகம்மதுவுக்குக் கற்பனா சக்தி மிக அதிகம் எனத் தெரிகிறது. ஆனால், இவருடைய சிந்திக்கும் திறன் பிறரை ஏமாற்றவும், நெறி பிறழ்வான எண்ணத்தைச் செயலாற்றவும்தான் உபயோகப்படுத்தப்பட்டது. இதை யாராவது தன் மனக் காட்சியிலும் கூட உருவாக்க முடியுமா? இதை உண்மை என எவராலாலும் நம்ப முடியுமா? மேற்கூறியவைகளை இப்போது கணக்கிடுவோம்!!

முகம்மது இவ்வுலகத்தைக் காட்டிலும் பன்மடங்கு பெரிய ஒரு தேவதையைக் கண்டார் எனச் சொல்வது எதிரிடையாகக் கருத்தளிக்கும் சொற்கள் கொண்ட சொற்றொடருக்கு (oxymoron) எடுத்துக்காட்டு - 'ஒளிரும் இருட்டு'; 'அன்புத் தொல்லை' cruel kindness போன்ற 'முரண்தொடை'.

- இத் தேவதைக்கு 70000 தலைகள்; ஒவ்வொரு தலையிலும் 70000 முகங்கள் ஆக முகங்களே 4900,00,00,000
- ஒவ்வொரு முகத்திலும் 70000வாய்கள் =343,000,000,000,000 மொத்த வாய்கள்
- ஒவ்வொரு வாய்க்குள்ளும் 70000 நாக்குகள்=ஆக, 24,010,000,000,000,000,000 நாக்குகள்
- **ஒவ்வொரு நாக்கும் 70000 மொழிகள் பேசும் மொழிகள் = 1,680,700,000,000,000,000,000,000;**

**அதாவது 1.68 septillion மொழிகள் =** According to the French method of numeration (which is followed also in the United States), the number expressed by a unit with twenty-four ciphers annexed.

அல்லா எதற்காக இப்படிப்பட்ட அச்சுறுத்தும் பயங்கர உருவத்தைப் படைத்து இதைக் கொண்டு தன்னையே இத்தனை மொழிகளில் ஏன் புகழச் செய்தார்? விந்தையாக அல்லவா இருக்கிறது!!! அதாவது 1.68 septillion மொழிகள்!!! உதாரணமாக, ஒருவர் தன் வீட்டில் கணக்கில்லாக் கணினிகளில் ஒலி பெருக்கிகளுடன் பதிப்பு நாடா அல்லது குறுந்தகட்டில் பலதரப்பட்ட பேசும் மொழிகளில் உச்ச அளவில் ஒலியில் கிளப்பி இவை நடுவே ஒருவரை நாள்தோறும் நிரந்தரமாக அறை நடுவே உட்கார வைத்தால் அவருக்கு எப்படி இருக்குமெனச் சற்று யோசித்துப் பாருங்கள். இது போதாதா ஒருவனைப் பைத்தியமாக்க? இம்மாதிரி ஒலிகளை ஒரே சமயத்தில் கேட்டுக்கேட்டு அல்லா தாமும் ஒரு சித்தபிரமை உள்ளவராக ஆகி, தம்மைப்போல முகம்மதுவையும் படைத்ததால், முகம்மதுவுக்கும் சித்தபிரமை பிடித்துவிட வைத்துவிட்டாரா? இதனால் தான் குரான் ஒரே பிதற்றல்மயமாக இருக்கிறதா? இருக்கலாம் என்றே இப்போது எனக்குத் தோன்றுகிறது! அல்லாவே மிக ஆசைப்பட்டுத் தம்மைப் போலொருவரை தம்முடைய மிக உற்ற நண்பனெனத் தம் மன உணர்வைக் காட்டிக்கொள்ள ஒரு தன்னிகரில்லாப் படைப்பல்லவா முகம்மது! தற்காதலர்களுக்குத் (narcissist) தங்களை யாராவது எப்போதும் புகழ்ந்து கொண்டே இருக்க வேண்டுமெனத் தணியாத ஆசை இருக்கும்! முகம்மது மாதிரி தானே இவர் உண்டாக்கிய அல்லாவும் இருக்க முடியும்? அல்லது அல்லா உண்டாக்கிய முகம்மதுவும் அப்படித்தானே இருக்க முடியும்?

முகம்மது எப்போதுமே தனி ஆள். கதீஜா எனும் மெக்காவில் பெரும் செல்வச் சீமாட்டியை மணம் புரிந்தாலும், சிறு பிள்ளைப் பிராயத்திலிருந்து தனிப்பட்ட முறையில் முகம்மது ஒரு முக்கியமானவர் என எவருமே அது வரை

[216] Muhammad Husayn Haykal (1888, 1956): The Life of Muhammad, translated by Isma'il Razi A. al-Faruqi. ISBN: 0892591374 Chapter 8: From the Violation of the Boycott to al Isra'.

கருதியதில்லை. முகம்மது மெக்கா மக்களால் எப்போதுமே இகழ்வாகப் பேசப்பட்டார். இதைத் தவிர முகம்மதுவின் சித்தப்பிரமையால் விளைந்த அல்லாவின் வசனச் சொற்களனைத்தும் அனைவரையும் நகைக்கத்தான் வைத்தது. முகம்மது எனும் தற்காதலருக்குப் பொருத்தமான மனைவியாகக் கதீஜா, ஒரு தலைகீழ் தற்காதலராகக் (inverted narcissist) கிடைத்தார். முகம்மதுவுடைய இவ்விபரீதச் சொற்களையும் அல்லாவின் இறைச்செய்தி எனப் பொருள்விளக்கம் கூறி முகம்மதுவை அவள் உற்சாகப்படுத்தினாள். இது தற்காதலாரான முகம்மதுவுக்குத் தேவையான மனப் பற்றாக்குறையை நிரப்பிக் (narcissistic supplies) கொடுத்தது. தனக்கு அவ்வப்போது உடலுக்கும் மனத்துக்கும் வேண்டிய தேவைகள் அனைத்தையும் கவனித்துக் கொண்ட கதீஜா மறைந்த பின்னர் நம்பிக்கைக்கு உகந்தவர் இல்லாததால் வாழ்க்கையில் தற்காதலருக்கு வேண்டிய புகழ் ஊக்கத்தை நிரப்ப வேறு யாருமே கிடைக்காததால், மனச்சோர்வு கொண்டு பொறுத்துப் பொறுத்துப் பார்த்துவிட்டு, கேட்க ஆளில்லாததால் புகழ் ஊக்கத்தைக் கொடுத்து நிரப்ப கதீஜாவுக்கு இணையாக அடிமைகள், வைப்பாட்டிகள், ஓரிரவுக் கன்னிகள் என வகைவகையாகக் கணக்கில்லா உடலுறவுகளைக் கொண்டு, பல இளம் பெண்களைப் புணார்வதற்காக மணந்தார். முகம்மதுவுக்குக் கணக்கில்லாத கண்ட கண்ட பெண்கள் உடலுறவால் போகப்போக பற்பல நோய்களும் ஒவ்வொன்றாக ஒட்டிக்கொண்டன. ('வினை விதைத்தவன் வினையறுப்பான்' எனும் மூதுரைக்கு இணங்க). ஒவ்வொருத்திக்கும் எத்தனை வியாதிகளோ! யார் கண்டார்கள்!!

வாக்னின் கூறுகிறார்," தற்காதலர் உணர்வுகளில் மனச்சோர்வு முக்கிய அங்கம் வகிக்கிறது. **தற்காதலருக்குத் தேவையான ஊக்க நிறைவு** (**narcissistic supplies**) கிடைக்காவிட்டால் தனக்குதானே மனச்சோர்வு உண்டாகி விடுகிறது. இவர்களுக்குத் தற்காலத்தில் கிடைக்க வேண்டிய புகழ்ச்சி, கவனிப்பு, ஆதரவு முதலியவை வேண்டிய மட்டும் தொடர்ச்சியாகக் கிடைக்காததாலும்; பழைய நாட்களில் போதுமான அளவு மன நிறைவு கிடைக்காதது அடிக்கடி நினைவுக்கு வருவதாலும் மன வாட்டம் ஏற்பட்டு விடுகிறது. மனச்சோர்வு இருப்பவர்கள் யாரிடமும் வலிந்து சண்டைக்குச் செல்வது இயல்பு. இது தற்காதலுள்ள எவருக்கும் பிறர் ஆத்திரம் உண்டாக்காமலே உண்டாகும் ஆக்கிரமிப்பு. சுற்றி வளைக்காமல் சொன்னால், இந்த ஆக்கிரமிப்பு மனிதச் சூழ்நிலையில் மனச்சோர்வுள்ளவரையே நோக்கி மிக அதிகமாகக் காணப்படும். நடைமுறையில் மன நிறைவு நிர்வாகம் தற்போது கட்டுப்படுத்தப்பட்டதால் அல்லது கிட்டத்தட்டக் கிடைக்காததால், அதை மாற்றி அமைக்கப் புற ஆக்கிரமிப்பே தற்காதலர் இயல்பில் அவர்களை வேறுபடுத்திக் காட்டுகிறது. தற்காதலருக்கு மனச் சோர்வு இருந்தாலும் இல்லாவிட்டாலும், ஆத்திரம் உண்டாக்காமலேயே உண்டாகும் ஆக்கிரமிப்பைத் தற்காதலர் எந்தச் சூழ்நிலையிலும் விட்டுவிட மாட்டார். இதோடு தன்னியல்பான பெருமிதப் பகட்டு, எதிலும் தனக்கு உரிமை உண்டெனும் எண்ணம், செருக்கு, கற்பனையில் கூட மற்றெவரும் தன்னைப் போல் ஒருவன்தானே எனும் நினைவு இல்லாமை ஆகியவைகளிலிருந்து எந்நாளிலும் விடுபடுத்திக் கொள்ள மாட்டார்.[217]. இப்பேற்பட்டவர்களுக்கு இவ்வுணர்வு நிரந்தமானது.

முகம்மதுவின் மனச் சோர்வால் அதன் பின்விளைவாகத் தற்கொலை எண்ணங்கள் ஏற்பட்டன. தற்கொலையையும் நிறைவேற்றத் துணிவில்லாமைக்குக் காரணம் ஏன் என நாம் நன்கறியலாம். **தற்காதலர் எந்நாளிலும் தற்கொலை செய்துகொள்வது மிக அரிது.** தற்கொலை முயற்சியிலிருந்து காப்ரியேல் காப்பாற்றி, "முகம்மதுவே! தாங்களே அல்லாவின் தூதர்" எனப் பல தடவை

[217] /www.mental-health-matters.com/articles/article.php?artID=92

அச்சத்தைப் போக்கிச் சொன்னாலும், அதற்குப் பின்னரும் முகம்மது எத்தனையோ முறை தற்கொலை முயற்சியில் அடிக்கடி ஈடுபட்டார் எனச் சொல்லப்படுகிறது! தற்காதலர் தற்கொலைத் திட்டத்தை நிறைவேற்றாததற்குக் காரணம் இதனால் பிறர் அனுதாபத்தைப் பெறத்தான் என தெளிவாகிறது. தற்காதலர் எந்நாளிலும் சத்தியமாகத் தற்கொலை செய்து கொள்ளமாட்டவே மாட்டார். எல்லாமே பிறர் அனுதாபத்தைச் சம்பாதிக்கும் ஒரு தனி உத்தி என்றுதான் சொல்லவேண்டும்.

'தான் உலகில் எல்லோரைக் காட்டிலும் மிகச் சிறப்பானவன், முக்கியமானவன் என்ற எண்ணமுள்ள தற்காதலனுக்குத் தற்கொலை எண்ணம் எப்படி வரக்கூடும் என்பதற்கு "அகாதா கிரிஸ்டி" எழுதிய 'மரித்தவர் கண்ணாடி' எனும் புத்தகத்தில் (Agatha Christie in Dead Man's Mirror) நமக்கு ஏற்ற உதாரணமாக விளக்குகிறார். தற்காதலர் (narcissists) எவராவது முட்டிங்காலால் தவழ்ந்து செல்பவரானாலும் இவனுக்குத் தொல்லை கொடுத்தால் அப்பேற்பட்டவனையும் அழிப்பதில் முதலில் ஈடுபடுவான். இம்மாதிரி நடந்து கொள்வது அவனுக்கு மிக அவசியம். மேலும் இச்செய்கை அவனுக்குத் தன்னிச்சையாக உண்டாகிறது. "இப்பேற்பட்ட இவனா தன்னை மாய்த்துக் கொள்ளத் தற்கொலை முயற்சியில் ஈடுபட்டுவிட முடியும்?!" என "அகாதா கிரிஸ்டி" கேட்கிறார். [218]

இதை வாக்னினும் இவ்வாறு விளக்குகிறார், "ஏன் தற்காதலர் (narcissists) உண்மையில் தற்கொலை செய்து கொள்வதில்லை?" - "ஏனெனில், தற்காதலர் வெகு நாட்களுக்கு முன்னரே இறந்துவிட்டார். தற்காதலர்கள் என இப்போது உண்மையில் மற்றோர் காண்பது இயற்கை விதிகளைக் கடந்து, முன் **இறந்து போன சடலத்திற்கு மறு உயிர் கொடுக்கப்பட்டவர் - 'ஓர் நடைப்பிணம்'** (zombie) போன்று தான் காணப்படுகிறார். 'தற்காதலர் இம்மாதிரி நடந்துகொள்ளக் காரணமான உள்ளத்திலிருக்கும் அந்த வெற்றிடம் என்ன (void)' என்பதைப் பல மனநோய் சிகிச்சையளிக்கும் மருத்துவ நிபுணர்கள், இக்கருப் பொருள் பற்றி இன்றும் ஆய்வு செய்தும் விவாதித்தும் வருகின்றனர். இதைப் பற்றிய பொதுக் கருத்து இதுதான்: உண்மையான தற்காதலர் மன வளர்ச்சியடையாது, மனித இயல்பை முழுதும் கந்தல் கந்தலாக, மனதில் உள்ளவைகளைக் கிழித்துக் களைந்துவிட்டு, எப்போதும் தன்னைக் கொண்டே தன்னை கீழ்ப்படியச் செய்து கொண்டு, இதே போன்று மனத்தில் இருக்கும் எவ்வித மனிதத்தன்மையையும் நசுக்கிக் கொண்டவர்தான். இப்போதிருப்பவர், எதற்கும் எவருக்கும் உடன்படாத, தன்னை எப்போதும் எந்த இடத்திற்கும் தக்கவாறு மாற்றி அமைத்துக் கொள்ள முடியாதவர். ஆகவே எதற்கும் உபயோகமற்றவர்"[219]

"மனச்சோர்வை நீக்க மருத்துவம் தேவைப்படும். **அதிவேக-அதிசோர்வு மனக்கோளாறுள்ள நோயாளிகள்** (bipolar patients), போன்று அல்லாமல் தற்காதலர் வேண்டுவதெலாம் **தங்கள் மனதிலுள்ள மனச்சோர்வை அகற்றி இவர் விரும்பும் வெறி அளிக்கும் தன்நிலை உணர்வை** (manic euphoria) **அளிக்கவல்ல**, தனக்குத் தேவையான மனப் பற்றாக்குறையை நிரப்பக் கிடைத்தால் அதுவே அவருக்குப் மிகப் போதுமானது, அது எங்கிருந்து கிடைத்தாலும் சரி." என்பது வாக்னினின் கருத்து. [220]

---

[218]*Dead Man's Mirror* by Agatha Christie - in "Hercule Poirot The Complete Short Stories" - Great Britain, HarperCollins Publishers, 1999
[219] http://samvak.tripod.com/faq48.html
[220] http://samvak.tripod.com/journal71.html

**பக்கமூளை வலிப்பு - Temporal Lobe Epilepsy -** TLE

மறைந்துவிட்ட அப்துல்லாவின் மனைவி அமீனாவின் ஆறு மாதக் குழந்தையாக முகம்மது இருக்கும் போதே, வளர்க்க எடுத்துச் சென்ற நாடோடிப் பெண் ஹலீமாவும் அவள் கணவனும்தான் முகம்மதுவுக்கு ஐந்து வயதாகும் போது பக்கமூளை வலிப்புக்கான (காக்காய் வலிப்பு) அறிகுறிகள் இருப்பதை முதலில் சந்தேகித்தவர்கள். பெசன்டைன் பேரரசைப் பற்றி ஆராய்ச்சி செய்த சரித்திர ஆசிரியர் **Theophanous (752-817) முகம்மதுவுக்கு காக்காய் வலிப்பு இருந்தெதென முதன் முதலில் பதிவு** செய்துள்ளார். இது ஒரு முக்கியக் குறிப்பாகும். இவர்கள் அனைவரும் அன்று கண்டது, பதிவு செய்தது யாவும் உண்மைதான் என இன்று உறுதியுடன் கூறிக் கொள்ளலாம்.[221]. ஏனெனில் இதற்கெல்லாம் அடிப்படை ஆதாரம் இஸ்லாத்து நூல்களிலிருந்து ஆவணமாக, 'ஷரியா'வாகத் காணப்படுகிறது. இவைகளோடு கூடுதலாக இன்றைய மனநோய் மருத்துவ அறிவியல் சார்ந்த நோய்க்குறிகளாலும் மிகத் தெளிவாக உறுதியுடன் கூற இன்று முடிகிறது. இதே இங்கு போதுமா? இன்னுங்கொஞ்சம் வேணுமா?

பக்கமூளை வலிப்பு (காக்காய் வலிப்பு) என்பதற்கு 1985இல் அகில உலக மூளை வலிப்பு நோய் எதிர்க் கூட்டிணைவு (International League Against Epilepsy (ILAE)) எனும் குழு சரியான வரையறை செய்தது. "இத்தேக நிலையில், மருத்துவ ரீதியாலோ அல்லது பக்க மூளைப் பகுதிகளில் தூண்டுதலில்லாமலோ உண்டாகும் வலிப்பு அல்லது இழுப்பு (வெட்டி வெட்டி இழுக்கும் இசிப்பு) அடிக்கடி உண்டாகும். சில சமயம் எச்சரிக்கைக்கான அறிகுறிகள் அறிந்தும் அறியாமலும் பாதிக்கப்பட்டவருக்கு திடீரெனவும் ஏற்படலாம். இவ்வாறு மிகச் சிக்கலான வலிப்பில் சில சமயங்களில் வல இட இரண்டு பக்கமூளைகளுக்கும் இவ்வலிப்பு பரவினால், நினைவு நிலையும் பழுதாகலாம்'"'. [222]

முகம்மதுவுக்கு இருந்த காக்காய் வலிப்பு மேற்கூறிய இரு விதங்களிலும் சேர்ந்ததுதான் ஏற்பட்டது. வலிப்பேற்படும் போது, பல தடவை முகம்மதுவுக்கு சுயநினைவு தவறிப் போனது. ஒரு ஹத்தீசில் இவ்வாறு உள்ளது. கா'பாவைப் புனர் நிர்மாணம் செய்யும்போது, முகம்மதுவுக்கு **அகத்தூண்டுதலால்** வலிப்பேற்பட்டுத் தரையில் நினைவின்றி (!) விழுந்து விட்டார் (**காக்காய் வலிப்பையே** இவ்வாறு வெளிப்படுத்தி நம்பத்தக்க ஹத்தீசை (சா<u>ஹீஹ்</u>) Sahih Bukhari ஆசிரியர் எழுதியுள்ளார்). அவ்வலிப்பு நிலையில், முகம்மதுவின் கண்களிரண்டும் வானத்தை நோக்கி அசையாது இருந்தன. இது கட்டாயம் காக்காய் வலிப்பு தான். சந்தேகமில்லை. (Sahih Bukhari, Volume, Book 26, Number 652) [223]. காக்காய் வலிப்பேற்பட்டவர்களைக் கண்டாலும் இவ்வாறே இருக்கும்.

Website: emedicine.com எனும் இணைய வலை இவ்வாறு தெரிவிக்கிறது: "பக்கமூளை வலிப்பு வரைபடத்தில் மூளையின் செயல்பாடுகளை காணும் போது (EEG- electroencephalograph) உளவியல் வகையில் வழக்கத்திற்கு மாறாக, 90% 'பக்கமூளைவலிப்பு' நோயாளிகளுக்கு முன்னரே வலிப்பு இருந்து என இவர்கள் நோய்ச் சரித்திரக் குறிப்பில் காணப்படுகிறது". முகம்மதுவுக்கும் சிறு பிராயம் முதல் இவ்வலிப்பு (Temporal Lobe Epilepsy (TLE)) இருந்துள்ளது. இருவர் முகம்மதுவின் இதயத்தைப் பிளந்து பனிக்கட்டியால் சுத்தம் செய்தனர் என அவர் கூறியுள்ளார். இதைப் பற்றி முதல் அத்தியாயத்தில் பார்த்தோம். அமெரிக்க நரம்பியல் சிகிச்சை நிபுணர் Harvey Cushing தன் அனுபவத்தில் கூறியுள்ளது: "ஒரு சிறுவனின் மூளையில்

---

[221] Theophanes, 1007, Chronographia, vol. 1, p334
[222] www.emedicine.com/NEURO/topic365.htm
[223] Sahih Bukhari, Volume, Book 26, Number 652

‘க்ளையோமா’ (glioma) எனும் புற்றுக் கழலை (கட்டி) இருந்தது. இதனால் இச்சிறுவன் முப்பரிமாணத் தோற்றத்தில் (three dimensional vision) வெண்மை உடுப்பணிந்தவன் ஒருவன் காட்சியளித்தாகக் கூறியுள்ளான்”.[224]

பக்க மூளை வலிப்புள்ளவர், தன் சித்தப்பிரமையில் வெளிப்புறத்தில் ஒலி-ஒளி தோற்றத்தில் காட்சிகளைக் கண்டதாக ஐரிஷ்-அமெரிக்க நரம்பியல் நிபுணர் Robert Foster Kennedy (1884-1952) முதன் முதலில் தெரிவித்துள்ளார். [225]

முகம்மது பற்றி இனிக் கூறுவோம். ‘சிராத்’தில் - இப்னு இஷாக் எழுதியவாறு “முகம்மது தன் இளமைப் பருவத்தில் குஃரைஷ் சிறுவர்களுடன் கற்களைச் சுமந்து செல்லும் விளையாட்டின்போது, ஒவ்வொருவரும் தன் மேல் அங்கியைக் கழற்றி அதை கழுத்திலோ அல்லது இடுப்பிலோ கட்டிக்கொண்டு விளையாடுவதுண்டு. அப்போது முன்பின் இதுவரை கண்டிராத ஒரு உருவம் ‘உன் மேலங்கியை அணிந்து கொள்’ என என்னை அறைந்தது. பின்னர் ‘நானும் தோழர்களுடன் கழுத்தில் கற்களைச் சுமந்தேன்’ என முகம்மது சொன்னார்.[226]

முகம்மதுவைப் போன்று ஏனைய மனமருட்சியுள்ளோரும் மிக்க சீற்றத்துடன் எல்லோரையும் எப்போதும் திட்டிக்கொண்டே இருப்பார்கள். வலிப்பு வந்தவர்களின் நடப்புகளிலும் இவ்வாறுதான் மாறாது ஒத்திருக்கிறது.

**பக்க மூளையில் வலிப்புக்கான அறிகுறிகள்:**

பக்கமூளையில் வலிப்பு உண்டாகு முன் ஒளி நிறைந்த சூழ்நிலையிலோ அல்லது எச்சரிக்கை அறிகுறிகளாகவோ விபரீதப் புலனுணர்வான வயிற்றுக் கோளாறு உண்டாகும். பரபரப்பூட்டும் பதற்ற நிலை அல்லது சித்தப்பிரமையில் ஏற்படும் மாயத் தோற்றமோ ஆவியுருவாகவோ வாசனையாகவோ நாவில் ஓர் சுவையாகவோ **புலன் சார்ந்த கற்பனை வடிவமாகவோ இந்நிகழ்ச்சி முன்னரே வந்துள்ளதென உள்ளுணர்வோ** (déjà vu) ஏற்படும். திடீரென உண்டான பழைய நினைவுகளால் உணர்ச்சி வெள்ளம் பொங்கும். மேற்கூறியவை அனைத்தும் முகம்மதுவுக்கு எவ்வப்போது காக்காய் வலிப்பு உண்டானதோ அச்சமயத்தில் எல்லாம் இருந்தது.

மூளைவலிப்பின் போது இருக்கும் ஞாபகசக்தியின் ஒரு பகுதியுடனோ அல்லது முழுமையான ஞாபகசக்தியுடனோ அனுபவம் ஏற்படும். ஆனால் வலிப்பில் மன விழிப்பு நிலை (consciousness) போகப் போகக் குறையும். மற்ற அறிகுறிகள் எப்போதும் போலல்லாமல் தலையின் அசைவுகள் முன்னைக் காட்டிலும் மிக அதிகமாகி வெட்டி வெட்டி இழுக்கும், மேலும் கண்கள் ஒரு ஓரத்தில் சொருகிக் கொள்ளும். இம்மாதிரி கா’பா புனர் நிர்மாணம் செய்யும் போது உண்டானது (!) என இஸ்லாமியக் குறிப்புகள் கூறுகின்றன.

திருப்பித் திருப்பி உண்டாகும் உடல் அசைவுகள், ஒரே சீரான சதை இறுக்கத்தால் உடலே ஒரு பக்கமாக (கையோ, காலோ, முகமோ, அல்லது உடலில் மற்ற தனிப்பட்ட இடங்களிலோ முடக்கிவிட்டு இழுப்பு ஏற்படும். இவையனைத்தும், பக்கமூளை வலிப்பின் (TLE) அறிகுறிகள். தாங்க முடியாத வயிற்று வலியால் அசௌகரியம், வயிற்றைக் குமட்டிக்கொண்டு வாந்தி வரும் உணர்வு, உடலெங்கும் வியர்த்துக் கொட்டுதல், வெளிறிப் போன முகம், இதயத் துடிப்பில் படு வேகம், பார்வை மங்கல், எண்ணத்தில் விழிப்புள்ள நிலை, முன் இருந்த ஆளுமைப் பண்பு

---

[224] Cushing: Brain 1921-1922 xliv p341
[225] Kennedy: Arch Int Med 1911 viii p317.
[226] Sirat Rasoul p. 77

ஆகியவைகளில் நிதானமின்மை முதலிய மாற்றங்களும் ஏற்படும். இவையனைத்துமே சித்தப்பிரமைக்கான அறிகுறிகள்.[227]

D. Mogens Dam உலகப் பிரசித்தி பெற்ற டேனிஷ் நாட்டு வலிப்பு மருத்துவ வல்லுனர் (epileptologist). இப்பிரிவில் அவரெழுதிய புத்தகங்கள் அனேகம். மிகச் சாதாரணமான, முழுமையிராத வலிப்புக்கு இவ்வாறு விளக்கம் கூறுகிறார். சாதாரண முழுமையிராத வலிப்பில் ஞாபக சக்தி இருக்கும், பின்னர், ஒளிவட்டத்துடன் மனதில் ஓர் உருவமோ மணமோ உருவாகிக் கடுமையான உடல் நடுக்கம், இழுப்பு (convulsion) ஆகியவை உண்டாகும். இது ஒரு கனவுபோல இருக்கும். இதனால்தான் இந்நோயாளி தானொரு பைத்தியமென எண்ணி விடுகிறார்.[228]

ஹீரா குகையில் முதலில் வலிப்பேற்பட்ட போது தானொரு பைத்தியம் என்றே எண்ணிய முகம்மதுவைக் கதீஜாதான் முதன் முதலில் வேறு திசையில் திருப்பி, முகம்மதுவை அவரொரு ‘தூதர்’ என்பதற்கு இசைய வைத்து அதையே முகம்மதுவின் மனத்தில் நிரந்தரமாக்கினாள். இதேயே அவர் தன் இறுதிக் காலம் மட்டும் மனத்தாலும் சொற்களாலும் செயல்பாணிகளாலும் நிரூபித்துள்ளார்.

Dr. Dam எழுதுகிறார், ‘காக்கை வலிப்பு உள்ளவர்களுக்கு ஏனைய மாந்தர்களிடமுள்ள ஆளுமை இருப்பது போல, இவர்களுக்கென தனித் தன்மை உண்டா இல்லையா என மிகுந்த நாட்களாக விவாதிக்கப்படுகிறது. பக்கமூளை வலிப்புக் கோளாற்றால் பாதிக்கப்பட்டவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் உணர்வுகளில் நிதானமின்மையுடன் முன் தாக்கும் மனப்பாங்கும் இருக்கும். தானொரு தன்நிகரில்லதவன் அல்லது மிகச் சிறந்தவன் (paranoia) என்ற உணர்ச்சி வசத்துடன் சுயநலமாகவோ, மற்றவர்கள் செய்த எந்த உடலசைவும் தனக்கு ஏற்படுத்தும் ‘உரிய மரியாதை காட்டத் தவறிவிட்டார்கள்’ என்றோ பொருள் காண்பார்கள். இவர்கள் எப்போதுமே ஆழ்ந்த சிந்தனைகளில் ஈடுபட்டு மதப்பற்று உடையவர்களாயும் மனித அறிவுக்கெட்டாத ரகசியங்களிலும் ஆன்மீகத்தில் எதையும் சரியா தவறா என எடைபோடுவதில் அக்கறையுவர்களாகவும் இருப்பார்கள்.[229]

Dr. Dam மேலும் எழுதுகிறார்: பக்கமூளை வலிப்புள்ளவர் (Temporal Lobe Epilepsy-TLE) மிகவும் உற்சாகமின்றி தற்கொலை எண்ணமுடையவராகவும், சித்தப்பிரமை பீடித்தவராக இருப்பார்கள். யாரோ ஒருவர் தன்னை அடிக்கடி வருத்துவதாக எப்போதுமே நினைப்பார். ஆனால், **மனச்சிதைவு நோயால் பாதிக்கப்பட்டவரை விட** (schizophrenia) **பக்கமூளை வலிப்பு உள்ளவருக்கு** (TLE) **மற்ற எவருடனும் மனவெழுச்சித் தொடர்புச் சற்று சீர்பட்டே இருக்கும்.** மனச்சிதைவு நோய் உள்ளவர் போல்லாமல், பக்கமூளை வலிப்புக்காரருக்கு (TLE) நினைவு தன்னைப் பற்றியே இருக்கும், இவரால் உறுதியுடன் எதையும் தீர்மானித்துக் கொள்ள இயலும். மனச்சிதைவு நோய் உள்ளவரானால், உண்மைக்கு அப்பாற்பட்டு சமூகத்துடன் ஒட்ட ஒழுகாமல் விலகியே இருந்து பேசும்போது கூட தடுமாற்றத்துடன் இருக்கும். மேற்கூறியவைகளை மனதில் வைத்துக் கணிக்கும்போது முகம்மதுவுக்கு பக்கமூளை வலிப்பு முகம்மதுவின் இறுதி காலங்களில் உண்டாகவில்லை. இருப்பினும், அந்தந்த சமயத்தில் தனக்குத் தகுந்த சுயநல ஆதாயமாக குரான் வசனங்களைப் பழைய வழக்கத்தையொட்டி அவ்வப்போது வெளியிடுவதை மட்டும் முகம்மதுவால் நிறுத்த முடியவில்லை.

[227] www.nlm.nih.gov/medlineplus/ency/article/001399.htm
[228] www.epilepsy.dk/Handbook/Mental-complications-uk.asp
[229] Ibid.

முகம்மது தனது ஆரம்ப நாட்களில் மெக்காவில் இருந்துக்கும்போது கூறிய வசனங்களுக்கும் மதீனா சென்ற பிறகு அங்கிருந்து கூறிய வசனங்களுக்கும் மொழியில் முற்றிலும் முரண்பாடான உள்ளடக்க - அமைப்புகள் காணப்பட்டன. மெக்காவிலிருந்து வெளியிட்ட பல குரான் வசனங்கள் கிறித்தவ மதத்தில் உள்ள புனித புத்தகங்களிலிருக்கும் வசனங்களை அப்படியே நகலடுத்துப் பின்பற்றியது எனக் காணப்படுகிறது. ஏனெனில் அச்சமயத்தில் கிறித்தவப் போதகர்கள் வியாபாரச் சந்தைகளில் நிகழ்த்தும் போதனைகளைக் கேட்டுக்கேட்டு முகம்மது மனத்தளவில் ஆழமாகப் பதித்துக்கொண்டு, தானும் வருங்காலத்தில் கிறித்தவ மத போதகர்கள் போன்ற ஒரு போதகராகவே ஆக மிக ஆசைப்பட்டார். ஆனால் வித்தியாசமாக இவ்வசனங்களில் தான் கூறியவைகளை மீறி நடந்தால், நரகவாசம் கட்டாயம் உண்டு எனக் கூடுதலாக எச்சரிக்கைகளும் மிக இருந்தன. தன்னை வேறுபடுத்திக் காட்டித் தொலைய வேண்டுமே! இதைத்தான் முல்லாக்கள் அடிக்கடி ‘தக்கியா’த் தன்மையில் (இஸ்லாத்துப் புனிதமென உலகை ஏமாற்றும் வகையில்) இஸ்லாமியர் முஸ்லிமல்லாதவர்களுக்குக் கேடு எண்ணாதவர்கள் என ஊருக்கும் பேருக்கும் ‘தக்கியா’ போதனைகளென ‘இஸ்லாம் அமைதி விரும்பும் அமைப்பு’ என அவ்வப்போது கூறிக் கொள்வதுண்டு. ஆனால் உண்மையில் வேறாக (நேருக்கு மாறாக), வெள்ளிக்கிழமை மாலை நடக்கும் ‘மெஹ்ரிப்’ ஜும்மா தொழுகை முடிந்தவுடன் முஸ்லிம்களுக்கு வெறி ஏற்படும் வகையில் ‘ஜிஹாதை’ ஒரு சடங்காகவே தொடர்ந்து நடத்தத் தூண்டி விடுவார்கள். இதுதான் உண்மை.

மெக்கா நாட்களில் முகம்மது வெளியிட்ட வசனங்களில் குரான் சுரா (அத்தியாயம்) 91 (The Sun) உள்ளது. நீதி புகட்டும் இக்கதை அரேபியர்களுக்குத் தெரிந்ததுதான். ஒரு தடவை ‘சாமூத்’ மக்களுக்கு நன்நெறி புகட்ட அல்லாவின் தூதராகப் பெண்-ஒட்டகம் ஒன்றை அனுப்பினார். அச்சமயத்தில் மக்கள் இந்த ஒட்டகத்தின் மகத்துவம் அறியாமல் ஒழுங்கற்ற முறையில் எதிர்பார்த்ததற்கு மாறாக அதைத் தங்கள் உணவுக்காகக் கொன்று சமைத்துச் சாப்பிட்டும் விட்டனர். இந்நாட்களில் முகம்மது எழுதிய வசனங்கள் வெளிப்படையாகவே புறச்சமயச் சார்புள்ளதாகவும் (Paganism), சூரிய-சந்திர தொழுகையைப் பற்றியும் மிக இருந்தன. இதை என்னவென்று கூறுவது? இவ்வசனம் இஸ்லாத்து குரானிலிருக்க முடியாதெனவே முதலில் தோன்றும்!!

குரான் அத்தியாயம் 91இல் (The Sun):

சூரியன் மீதும் அதன் பிரகாசத்தின் மீதும் சத்தியமாக
(பின்) அதனைத் தொடர்ந்து வரும் சந்திரன் மீதும் சத்தியமாக-
(சூரியனால்) பகல் வெளியாகும்போது, அதன் மீதும் சத்தியமாக-
(அப்பகலை) மூடிக்கொள்ளும் இரவின் மீதும் சத்தியமாக-
வானத்தின் மீதும், அதை (ஒழுங்குற) அமைந்திருப்பதின் மீதும் சத்தியமாக-
பூமியின் மீதும் இன்னும் அதை விரித்ததின் மீதும் சத்தியமாக-
ஆத்மாவின் மீதும் அதை ஒழுங்குபடுத்தியவன் மீதும் சத்தியமாக-
அப்பால் அவன் (அல்லாஹ்) அதற்கு அதன் தீமையையும், அதன் நன்மையையும்
உணர்த்தினான். அதை (ஆத்மாவை)ப் பரிசுத்தமாக்கியவர் திடமாக
வெற்றியடைந்தார். ஆனால் எவன் அதை(ப் பாவத்தில்) புகுத்தினானோ அவன்
திட்டமாகத் தோல்வி அடைந்தான். 'ஸமூது' (கூட்டத்தினர்) தங்கள்
அக்கிரமத்தினால் (ஸாலிஹ் நபியைப்) பொய்ப்பித்தனர். அவர்களில் கேடுகெட்ட
ஒருவன் விரைந்து முன் வந்தபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸாலிஹ்) அவர்களை
நோக்கி: "இப் பெண் ஒட்டகம் அல்லாஹ்வுடையது, இது தண்ணீர் அருந்தத் தடை
செய்யாது விட்டு விடுங்கள்" என்று கூறினார். ஆனால், அவர்கள் அவரைப்

பொய்ப்பித்து, அதன் கால் நரம்பைத் தறித்து விட்டனர் - ஆகவே அவர்களின் இந்தப் பாவத்தின் காரணமாக அவர்களுடைய இறைவன் அவர்கள் மீது வேதனையை இறக்கி, அவர்கள் யாவரையும் (அழித்துச்) சரியாக்கி விட்டான். அதன் முடிவைப் பற்றி அவன் பயப்படவில்லை.

மற்றொரு குரான் சுரா (The Dawn) 113இல், மேற்குறிப்பிட்ட வரலாற்றுப் பகுதியைச் சார்ந்தது [[[...]]]. முகம்மது மெக்காவில் இருக்கும் வரை, குறிக்கோள் அந்நகரையும் அதன் சுற்றிலும் உள்ளவைப் பற்றியுமே இருந்தது.

அச்சமயத்தில் எழுதிய **குரான் வசனம்: 42:7** - "அவ்வாறே நகரங்களின் தாய்க்கும் (மக்காவுக்கும் அதனைச் சுற்றியுள்ளவற்றுக்கும் அச்சமூட்டி எச்சரிப்பதற்காகவும் எவ்வித சந்தேகமுமின்றி (யாவரும்) ஒன்று சேர்க்கப்படும் நாளைப் பற்றி அச்சமூட்டி எச்சரிப்பதற்காகவும் அரபி மொழியிலான இந்த குர்ஆனை நாம் உமக்கு வஹீ அறிவிக்கிறோம்; ஒரு கூட்டம் சுவர்க்கத்திலும் ஒரு கூட்டம் நரகத்திலும் இருக்கும்". [230]

நகர்களுக்கெல்லாம் தாயகம், உமுல் குஃயுரா, (Umul Qura) மெக்கா, மற்ற வசனங்களில்[231]முகம்மது கூறியது: தான் பிரத்யேகமாக உதித்தது, அல்லாவின் வெளியீடுகள் (போதனைகள்) இதுவரை யாருக்குக் கிடைக்கவில்லையோ அவர்களுக்காவே வந்துள்ளேன் என்றுதான் உள்ளது, குரான் 32:3 & 36.6 இல் உள்ளபடி, யூதர்கள், கிறித்தவர்கள், பாரசீக ஸொராஷ்ட்ரியர்கள் (Zoroastrians - பார்சிகள்) இவர்களுக்காகச் சொல்லப்பட்டதாக இல்லை, ஏனெனில் இவர்களுக்கு கடவுளின் வெளியீடுகள் முன்னரே கிடைத்து விட்டன.

மற்ற குரான் வசனங்களில், **குரான்: 14:4** - ஒவ்வொரு தூதரையும் அவருடைய சமூகத்தாருக்கு அவர் விளக்கிக் கூறுவதற்காக அவர்களுடைய மொழியிலேயே (போதிக்கும்படி) நாம் அனுப்பி வைத்தோம்; அல்லாஹ்தான் நாடியோரை வழி தவறச் செய்கின்றான், தான் நாடியோருக்கு நேர்வழியையும் காண்பிக்கின்றான்; அவன் மிகைத்தவனாகவும் ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.

மற்றொரு **குரான் வசனத்தில்: 16:36** - மெய்யாகவே நாம் ஒவ்வொரு சமூகத்தாரிடத்திலும், "அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள்; ஷைத்தான்களை விட்டு நீங்கள் விலகிச் செல்லுங்கள்" என்று (போதிக்குமாறு) நம் தூதர்களை அனுப்பி வைத்தோம்; எனவே அந்த சமூகத்தவர்களில் அல்லாஹ் நேர்வழி காட்டியோரும் இருக்கிறார்கள்; வழிகேடே விதிக்கப் பெற்றோரும் அவர்களில் இருக்கிறார்கள்; ஆகவே நீங்கள் பூமியில் சுற்றுப் பயணம் செய்து, பொய்யர்களின் முடிவு என்ன ஆயிற்று என்பதைக் கவனியுங்கள்.

**மற்றொரு குரான் வசனத்தில்: 10:47இல்**, "ஒவ்வொரு சமூகத்தாருக்கும் (நாமனுப்பிய இறை) தூதர் உண்டு; அவர்களுடைய தூதர் (அவர்களிடம்) வரும்போது அவர்களுக்கிடையில் நியாயத்துடனேயே தீர்ப்பளிக்கப்படும் - அவர்கள் (ஒரு சிறிதும்) அநியாயம் செய்யப்பட மாட்டார்கள்".

மேற்கூறிய வசனங்களாலும், மிக திட்டவட்டமாக, முகம்மதுவுக்கு மெக்கா விட்டு வெளியில் சென்று குரான் வசனங்களை போதிக்கும் நாட்டமில்லை எனத் தன் வசனங்களால் கூறியுள்ளார். இருப்பினும், போகப்போக, கையில் செல்வம், குடியேறிய இடத்தில் தனக்குக் கிடைத்த வெற்றி, வசதி, ஆதிக்கம்

---

[230] The same claim is made in *Quran, 6:92*

[231] "Nay, it is the Truth from thy Lord, that thou mayest admonish a people to whom no warner has come before thee: in order that they may receive guidance."(Quran 32:3) and In order that thou mayest admonish a people, whose fathers had received no admonition, and who therefore remain heedless (of the Signs of Allâh). (Qura'an, 36:6)

ஆகியவைகளுக்குப் பின்னர், முகம்மதுவின் பேராசை அதிகரித்தது. இச்சமயத்தில்தான் 1. ஒன்று தன் குமபலில் சேர வேண்டும் அல்லது 2. தன் குமபலில் சேராதவர்கள் கொல்லப்படுவார்கள் என அதிகாரத்துடன் பயமுறுத்துகிறார்.

மேலும் மெக்காவை விட்டு மதீனா வந்தவுடன் உதிர்த்த வசனங்கள், சட்ட மொழியில் இருந்தது. இம்மொழி ஒரு சர்வாதிகாரிதான் ஜெயித்த புதுப் பிரதேசங்களில் தனது ஆட்சிக்குட்பட்டவர்களின் மீது ஆணவ அதிகாரத்துடன் புதுப் புது சட்ட திட்டங்களைத் தனது உத்தரவாக (laws and ordinances) அறிவித்த முறையில் உள்ளது. A. S. Tritton கூறுகிறார்: மதீனா குரானில் உள்ள வசனங்கள், மிக நீண்டும், எளிதில் புரிந்துகொள்ள முடியாதபடியேதான் உள்ளன. (காரணம்: 1. பைபிளின் நகலெனத் தெரியக்கூடாது. 2. எவ்வளவுக்கெவ்வளவு குழப்பத்தை உண்டாக்க முடியுமோ அவ்வளவுக்கெவ்வளவு இஸ்லாமிய இயக்கத்துக்கு நல்லது) ஆகவே இதைக் கேட்பவர்கள் படிப்பவர்கள் மிகக் கவனத்துடன் இருக்கவேண்டும் அல்லது இதன் தொடரை இழக்க நேரிடும். மேலும், இதில் உபயோகிக்கப்பட்ட மொழி, வசன நடையிலும் இடையே கவிதையொலியுடன் இலக்கண வார்த்தைகளும் உள்ளன. இதில் முக்கியமாக-சட்டங்கள், சமுதாய நடப்புகளின் கருத்துகள், செயல் திட்டங்களின் விவரம், அல்லாவின் தூதருடன் சம நோக்கில்லாதவர்களுக்கு (மிக முக்கியமாக யூதர்களுக்கு) கண்டித்து சொல்லப்பட்ட சொற்களோடு உள்நாட்டு நடப்புகளும் இருக்கின்றன. இவைகள் வலுவற்ற முகம்மதுவின் பேராசையை வெளிப்படுத்துவதாகவும் இருக்கிறது. பல இடங்களில், முகம்மதுவின் கருத்து வறுமையை மறைத்து வார்த்தைகளை இழுத்திழுத்து எழுதப்பட்டவைகளாகவும் உள்ளன. [232]

பல ஹத்தீஸுகளில் முகம்மது பேய்பிசாசுகளுடன் (jinns) எதிர்பாராத சந்திப்பு நேர்ந்ததைப் பற்றிக் கூறியிருக்கிறார். ஒரு கதையில் பேய்களையும் அவர்கள் நரகத்திலேயே இருந்து இவர்களையும் இஸ்லாமுக்கு மதமாற்றம் செய்யத்தான் முகம்மது ஒரு இரவு முழுதும் கழித்ததாக வேறு கூறியிருக்கிறார். குரானில் மட்டுமே 30 இடங்களில் ஜின்களைப் பற்றிக் குறிப்புரை காணப்படுகிறது.

இங்கு நாம் கவனத்தில் கொள்ள வேண்டியது பைபிளில் கூறப்பட்ட உண்மைகளைப் பற்றி ஆழ்ந்த அறிவு முகம்மதுவுக்குக் கிடையாது. அவ்வப்போது யார் யாரோ சொல்லி கேட்டதுதான், முகம்மது சாலமோனைப் பற்றி ஓர் குறிப்புக் கூறினார் என முன் பத்தியில் கூறியிருந்தோம். பேரரசர் சாலமோன் மிக ஒழுக்கமான கற்றறிந்த மாமேதை; நீதி தவறாதவர்; எல்லோராலும் எக்காலத்திலும் போற்றப்படுபவர் எனவே உள்ளது. அப்பேரரசர் ஒரு கடவுள் தூதருமல்ல. அரசர் சாலமோன் முகம்மது கூறியது போல தொழுகையைப் பற்றி எந்தச் சொல்லையும் கூறியதே கிடையாது. இவ்வரசர் செல்வத்தைக் காட்டிலும் ஆன்ம ஞானத்தையே கடவுளிடம் வேண்டிக் கொண்டவர். முகம்மதுதான் எல்லோரையும் அடக்கி ஆளும் மாபெரும் சக்தியையும் ஒரு மாபெரும் ராஜ்ஜியத்தையும் அடைந்துவிடத் தன் பேராசையை அவ்வப்போது காட்டிக் கொண்டு தன்னையும் ஏமாற்றிகொண்டு பிறரையும் தீர்மானமாக ஏமாற்றுகிறார். இதில் மாற்றுக் கருத்து கூறக் கூட எவராலும் இயலாது.

[232] A.S. Tritton, *Islam: Belief and Practice 1951, p. 16.*

**பக்கமுளை வலிப்பின் மற்ற அறிகுறிகள்**

கீழ்க்கண்ட ஐந்து தனித்தன்மையுள்ள தோற்றத்தால், ஒரு வலிப்புக்கும் மற்றொரு வலிப்புக்கும் இடையே உள்ள நாட்களில், வலிப்பில்லாதபோது, இக்கோளாறுகள் உள்ளதை கண்டறியலாம்.

1. (Hypergraphia) = **'மிகு எழுதற்கோளாறு'**: அதீதமான கொள்கைப் பிடிவாதம். இவர்கள் குறிப்பேடுகளில் விவரமாகவும், தினக்குறிப்புப் புத்தகத்திலும் எழுதிக் கொள்வர்கள் (writing extensive notes and diaries). முகம்மது எழுதப்படிக்கத் தெரியாவராகையால், குரானைத் தொகுத்து, வசனங்களை **அப்துல்லா அபி (இப்னு) சாரா** என்பவனைக் கொண்டு எழுதிவைத்தார். சான்று இப்னு இஷாஃக் சிராத் பக்கம் 550இல் உள்ளது.

2. (Hyperreligiosity): மிக 'அதிகமான மதவெறிப் பற்று' அல்லது மத ஆர்வக்கோளாறு மட்டுமல்லாமல், விஸ்தாரமான வெளி உலகப் பிரபஞ்சத்தைப் பற்றியும், மத சம்பந்தமானவற்றில் மனிதனின் கடமை பற்றிய தத்துவ விளக்கங்களைப் பற்றியும் ஈடுபடுவார்கள். ஏதோ தங்களுக்குப் பிரத்யேகமாக கடவுளின் வழிகாட்டுதல் உள்ளது எனவும் நம்புவார்கள். இதனால்தான் முகம்மதுவுக்கு அதீதமான அக்கறையோடு கடவுளைக் காண்பது போன்றும், இனியும் காண முடியும் என்று நம்பிக்கையும் இருந்ததால் தாமே தனியாக இஸ்லாமெனும் தனி இயக்கத்தை ஆரம்பித்தார். மிக 'அதிகமான மதவெறிப் பற்று' என்பதே வெளிப்பூச்சுக்கு மட்டுமே!

3. (Clingingness): பற்று கொண்டவரிடத்தில் உணர்ச்சியுடன் ஒட்டிக் கொண்டிருப்பதில் பேரார்வம். முகம்மது தான் சிறுவனாக இருக்கும்போது தன் தாய் மாமன், 'அபூ தாலீப்'லிடம் உணர்ச்சிபூர்வமான ஒட்டுதல் கொண்டிருந்தார். முகம்மதுவைப் பற்றி நாம் இதுவரை படித்தவற்றால், தன் சிறு வயதில் எல்லோராலும் புறக்கணிக்கப்பட்ட அனுபவம் அவருக்கு இருந்தது. இதனால் அவர் 'உணர்ச்சி பூர்வமாகப் பிறரைச் சார்ந்து இருத்த'லில் மிகத் தேவை கொண்டிருந்தார். (உதாரணம்-கதீஜா). எப்போதாவது இவர்களும் தன்னை விட்டுவிடுவார்களோ அல்லது நிராகரிக்கப்பட்டு விடுவோமா என்று உள்ளூர பயந்து கொண்டிருந்தார். இதில் கொஞ்சமாவது சந்தேகத்திற்கு இடமிருந்தால் மிகவும் வேதனைப்பட்டுள்ளார்.

4. (Altered interest in sex): பாலியலில் மாறுபட்ட ஈடுபாடு: முகம்மதுவுக்கு பாலியலில் ஈடுபாடு அதிகமாகவே எப்போதுமிருந்தது. ஆனால் முகம்மதுவுக்கு வயதாக ஆக பாலியலில் எல்லையில்லா ஆர்வமிருந்தும் தமக்கிருந்த உச்சகட்ட உடல் நோய்களின் கடுந்தாக்கத்தால் **பாலியலில் ஒரு கட்டத்திற்குப் பின் முன் போன்று செயலாற்ற உடலில் தெம்பில்லாது** (sexual erectile dysfunction) போனது. இது ஒரு காலத்தில் முழுதும் நின்றே போயிற்று. **இதன் விளைவு, முகம்மது தம் பெண்டிர் மீதே சந்தேகம் கொண்டு கருப்புக் கூடார அங்கியால் அவர்களை உடல் முழுதும் மூடிக் கொள்ள வைத்தார்.** ஆக ஹத்தீஸிலும் அவ்வாறே எழுதப்பட்டு விட்டதால் இதே 'ஷரியா சட்டமாகி விட நேர்ந்தது. ஷரியா சட்டத்தால் முஸ்லிம் பெண்களுக்குத்தான் அன்றிலிருந்து இன்று வரை **'நிஜாப்'பில் (தலை மூடிக்கொண்டு முகம் மட்டும் மூடாமல்) அல்லது நிகாப்'பில் (கண்ணில் ஜன்னல்)** உடலெங்கும் கருப்பங்கியால் மறைத்து அணிந்து கொள்ளுதலில் விடிந்தது.

5. (Aggressiveness): முரட்டு மனப்பாங்கு (ஆக்கிரமிப்பு): இதனால், ஆக்கிரமிப்பு உணர்ச்சி அனேக தடவை மாறிக்கொண்டே இருக்கும். ஒரு கட்டத்தில் முழுதுமாகக் குறைந்துவிடும். சில சமயம் மிக அன்புடனும் மற்றோரு சமயத்தில் கட்டுக்கடங்காமல் முரட்டு மனப்பாங்கால் தன் கோரிக்கைகள் நிறைவேறாவிட்டால் சடுதியில் எரிச்சல் கொண்டு முன்கோபமடைந்து விடுவார். முகம்மதுவின் ஒழுகலாற்றில் இவைகளை அடிக்கடிக் கண்டுகொள்ளலாம்.

அல் புகாரி கூறுவது போல: “முகம்மதுவுக்கு ஏதாவது பிடிக்காத செயல் நடந்துவிட்டால் அதற்குத் தமக்குள்ள வெறுப்பை அவருடைய முகமே காட்டிக் கொடுத்துவிடும்”. [233]

**ஓரிரவுக்குள் “மீரஜ்” எனும் சுவர்க்கப்பயணம்**

இப்பயணத்தை “மீரஜ்” (Mi’raj) ‘சுவர்க்கப் பயணம்’ எனக் கூறுவார்கள். இப்பயணம் முகம்மதுவால் ஓரிவுரக்குள் முடிக்கப்பட்டது!! அல்லாவின் கடைசி தூதர் முகம்மதுவல்லவா? ஆகையால் எதையும் செய்து முடிப்பதில் வல்லவர்! முகம்மது சுவர்க்கபுரி சென்ற வரலாறுகளுக்கு அனேக மரபுக் கூற்றுகள் உள்ளன. எப்போதும் முகம்மதுவுடன் கூடவே இருந்த கடைசி இளம் மனைவி ‘ஆயிஷா’ கூறியதில் இந்நிகழ்ச்சியில் பல வேண்டாதவைகளைக் களைந்து இம்மரபு உண்மைக் கூற்றுகளை ஆய்ந்து நன்கு பின்னி “மீரஜ்”ஜில் நடந்த நிகழ்ச்சிகள் ஒட்டுமொத்த நடப்பாக இப்னு இஷாஃக் (Ibn Ishaq) தன் ‘சிராத்’தில் தொகுத்திருக்கிறார். இவைகளையும் முகம்மது கூறியபடி எழுதியுள்ளார்:

நான் ‘ஜிஹிரி’ல் ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தபோது காப்ரியேல், என்னைக் காலால் உதைத்து உசுப்பிப் படுக்கையை விட்டெழச் செய்தான். எழுந்து பார்த்தபோது ஒருவரையும் காணாததால் மறுபடியும் தூக்கக் கலக்கத்தில் படுக்கையில் மறுபடி வீழ்ந்தேன். இரண்டாம் முறையும் இவ்வாறே நடந்தது. மூன்றாம் முறை என்னை இவ்வாறே தூக்கத்திலிருந்து எழுப்பி, என் கையைப் பிடித்திழுத்துத் தன் பக்கத்தில் நிற்க வைத்துக் கொண்டான். பின் என்னை மசூதி வாசலுக்கு கொண்டு போனான். ஆங்கே வெளுப்பு நிறத்தில் இரு மிருகக் கலவையாக ‘புராஃக்’ எனும் ஒரு விசித்திர உருவம் நின்று கொண்டிருந்ததைக் கவனித்தேன். அவ்வுருவம் காண்பதற்கு ஒரு பாதி குதிரை மாதிரியும் அல்லது கோவேறிக் கழுதை போலும் மறு பாதி நிஜக் கழுதையாகவும் தலைப்பாகம் மனித உருவத்துடன் காணப்பட்டது. ‘புராஃக்’ தன் இரு பக்கங்களில் அனேக ராட்சச இறக்கைகளுடன் இருந்ததால் எக்கணத்திலும் முன்நோக்கிப் பாய்ந்து பறக்கத் தன் கால்களால் அடிக்கடி தரையைத் தட்டித் தட்டி உதைத்துக்கொண்டு தன்னால் இனி காத்திருக்க இயலாதது எனக் கூறுவது போன்று தயாராக நின்று கொண்டிருந்தது. அதன் பக்கத்தில் நின்று அதன் மீது தானும் ஏறிகொண்டு என்னையும் அதில் காப்ரியேல் உட்கார வைத்துக் கொண்டான். சாதா மனிதனாகிய நான் முதன் முதலில் அம்மிருகத்தின் மீது ஏறி உட்கார்ந்ததால் அதற்கு விருப்பமில்லாதது போலத் தன் தலையை அங்குமிங்கும் அசைத்து ‘ஒரு மனிதனை என் மீது ஏற்றாதே’ எனும் பொருள்படக் கனைத்துத் தன் வெறுப்பைக் காட்டியது. காப்ரியேல் தன் கைகளை அம்மிருகத்தின் மீது வைத்து, “ஓ! புராஃக்! இப்படிச் செய்ய உனக்கு வெட்கமாக இல்லை? மேன்மை தங்கிய அல்லாவைத் தவிர உன் மேல் உட்கார்ந்து சவாரி செய்ய அவருக்குச் சமமான தூதர் முகம்மதுவை

[233] Bukhari, Volume 4, Book 56, Number 763.

அழைத்துவரத் தான் அல்லாவே உன்னை இங்கு அனுப்பியுள்ளார் என்பதை நினைவில் கொள். உன் கடமையைத்தான் நீ இப்போது செய்கிறாய்." என எச்சரிக்கை செய்தான். இதைக்கேட்ட அந்த மிருகம், வெட்கப்பட்டு, நடுங்கி உடல் முழுதும் ஒரே வேர்வை கொட்டியது; பின் நான் ஏறிக் கொள்ள வசதியாக அமைதியுடன் எனக்குக் காண்பித்துக் கொண்டது' **முகம்மதுவும், காப்ரியேலும் ஆகாய மார்க்கமாக ஜெருசலேம் கோவிலுக்கு முதலில் வந்து சேர்ந்தனர். அங்கே, ஆப்ரஹாம் மோசஸ் ஏசு கிறிஸ்து, ஆகியோர் மற்ற தூதர்களுடன் இருந்தனர். அங்குள்ள எல்லோரும் கேட்டுக்கொண்டதன் பேரில், அங்கே நடந்த தொழுகைக்கு முகம்மது தாமே தலைமை தாங்கித் தொழுகையை நடத்திக் கொடுத்தார்**! (இஸ்லாத்து தொழுகையா அல்லது யூதர்கள் தொழுகையா அல்லது கிறித்தவத் தொழுகையா எனப் புரியவில்லை! இதைப் பற்றி ஒரு தகவலுமில்லாத்தால் கொடுக்கவில்லை. இல்லாவிட்டால் அவருக்குத் தெரிந்த சடங்குகளடங்கிய இஸ்லாத்து தொழுகையை மட்டுமே செய்து முடித்தாரா? அல்லது அங்குள்ள எல்லோரும் எப்போது இஸ்லாத்துக்கு மாற்றிக்கொண்டனர் எனும் சந்தேகங்கள் எழக்கூடாது! தான் எல்லோரையும் விடச் சிறந்தவன் அல்லது அங்கிருந்தவர்கள் எல்லோரும் தனக்குக் கட்டுப்பட்டவர்கள் என காட்டிக்கொள்ள முகம்மது எப்போதும் போல விட்ட வாய் சவடாலா? ஏதும் புரியவில்லை. ஆக மொத்தம் தன் one-upnessஐக் கூறிக்கொள்ள ஆப்ரஹாம், மோசஸ், ஏசு கிறிஸ்து ஆகியோர் மற்ற தூதர்களைப் பற்றிக் கூறியது போலுள்ளது. தொழுகை முடிந்த பின்னர், காப்ரியேல் இரு பாத்திரங்கள் கொண்டு வந்து ஒன்றில் பாலும் மற்றொன்றில் போதை மதுவும் கொண்டு வந்தான். அவைகளில் முகம்மது பாலை மாத்திரம் வாங்கிக் குடித்தார். மதுவைத் தொடவில்லை. காப்ரியேல் சொன்னான்: 'நீங்கள் இயல்பாகவே உண்மை வழியை காட்டி விட்டீர்கள். இதனால், **உமக்கும், உங்கள் மக்களுக்கும் இப்புவியில் மட்டும்** (!?) **மது விலக்கப்பட்டுள்ளது**' என்பதை உறுதிப்படுத்தினான். பின்னர் சுவர்க்கப் பயணத்தை இனிது முடித்து மெக்கா வந்து சேர்ந்தோம். மற்ற விவரங்கள் கீழேயுள்ள புத்திகளில் விவரிக்கப் பட்டுள்ளது.

காலையில் அங்குள்ள குஃரைஷ் மக்களுக்கு ஒரே இரவில் 'மீரஜ்' எனும் சுவர்க்கப்பயணம் முடிந்து நடந்த நிகழ்ச்சிகளை முகம்மது கூறியவுடன் அது அவர்கள் எல்லாரையும் திகைத்து தடுமாறச் செய்தது. 'அல்லாவின் பெயரால், தாங்கள் கூறுவதெல்லாம் ஒரே அபத்தக் களஞ்சியமாக உள்ளதே! இங்கிருந்து ஒரு மூடுவண்டியில் சிரியா செல்வதற்கே போக-வர சுத்தமாக ஒரு மாதமாகிறது. இவ்வளவு தூரம் சுவர்க்கத்திற்குச் சென்று அங்கிருந்து ஒரே இரவில் எப்படி உம்மால் இவ்வளவு காரியங்களையும் முடித்துத் திரும்பி இவ்வளவு தூரம் வந்திருக்க முடியும்? இதைத் தவிர உம் விபரீத விளக்கங்களைக் கணக்கில் கொண்டால் ஒரு இரவில் இவ்வளவு தூதர்களையும் இடங்களையும் சுவர்க்கத்தில் அல்லாவையும், நரகத்தில் பலரையும் பார்த்துப் பேசிப்பழகியது எனக் கேட்டால் நம்பவே முடியவில்லையே! தலைவரே!! ஒரு மண்ணாங்கட்டியும் புரியலையே தலைவரே! இது எங்களைக் கிண்டல் செய்யக் கூறியதா? இதைத் தவிர, நீங்கள் நல்ல குறட்டை விடும் தூக்கத்தில் வெவ்வேறு நேரத்திலும் மசூதிலேயே இரவு முழுதும் கழித்ததாகப் பலர் சாட்சிகளாக அல்லாவின் பெயரில் சத்தியம் செய்கிறார்களே!' எனத் திகைத்துக் கூறினர். [234]

[234] Sira: Ibn Ishaq:182

உறுதிப்படுத்திக் கொண்டிருந்தார். கடைசியில் நான் தூங்கிவிட்டேன் என நினைத்து விட்டார் என எனக்குத் தெரிந்தது! ஆனால் நான் அசலில் தூங்கவில்லை. அவரையே கவனித்துக் கொண்டிருந்தேன். பின், இரவு அங்கியைக் கையில் எடுத்துக்கொண்டு, மெல்லத் தன் செருப்பையும் அணிந்து, சப்தமில்லாமல் கதவைத் திறந்து வெளியில் மூடிக்கொண்டு வெளியில் கிளம்பினார். முகம்மதுவின் இவ்விபரீதச் செயலைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த நானும் என் தலையை அங்கித் துணியால் மூடிக்கொண்டு முகத்திரை அணிந்து மணிக்கட்டுச் சுற்றை சற்று இறுக்கிக் கொண்டு முகம்மதுவை விட்டு சற்று தூரத்தில் தொடர்ந்து கல்லறை (Baqi) வரை சென்றேன். அங்கு முகம்மது நெடுநேரம் வரை நின்றுகொண்டிருந்தார். பின் தன் கைகளை மூன்று முறை உயரே உயர்த்தினார். அவர் வீடு திரும்பும் போது முகம்மதுவுக்கும் முன்னால் விடுவிடுவென்று வீட்டிற்கு ஓடோடி வந்தேன். பின் படுக்கையில் உறங்குவது போலக் கிடந்தேன். முகம்மது அறையுள் வந்தவுடன், முதல் கேள்வியாக என்னிடம் "ஆயிஷா ஏன் உனக்கு மேல்மூச்சு வாங்குகிறது?" நானும் "ஒன்றுமில்லை" எனச் சமாளிக்க மழுப்பினேன். உண்மையைச் சொல், இல்லையெனில் 'மறைந்திருந்தே பார்க்கும் மர்ம'த்தை அவ்வுருவம் என்னிடம் சொல்லிவிடும் என்றார். என்னால் இனி ஒன்றையும் மறைக்க முடியவில்லை. 'என் பெற்றோர் உமக்குப் பிணைக்கைதியாகட்டும்' (may my father and mother be ransom for you) எனத் தொடங்கி, நடந்தவை முழுதும் கூறிவிட்டேன். முகம்மதுவோ, 'எனக்கு முன்னாலிருந்த நிழலுருவம் உன்னுடையதுதானே"! என்றார். நானும் "ஆம்" என்றேன். பின்னர் என் மார்பு வலிக்கும்படி என்னைத் தள்ளி அடித்தார். "அல்லாவும் அவர் தூதரும் உனக்கு நியாயமின்றி செயலாற்றுவார்களா?" என்றார். இதற்கு ஆயிஷா, "எதையும் அல்லாவிடமிருந்து மறைத்துவிட முடியாது" என்றாள். முகம்மது, "நீ என்னைக் கவனித்துக் கொண்டிருக்கும் போது கேப்ரியேல் என்னிடம் எல்லாவற்றையும் கூறிவிட்டான். நீ அவனைக் காணாதவாறு தன்னை மறைந்துக் கொண்டான். நீயோ அரை குறையாக உடையணிந்ததால் கேப்ரியேலும் உன் முன் வரவில்லை." என்றார். எல்லாவற்றிற்கும் முன்னதாக, நான் என் படுக்கையை விட்டு பாஃகிக்கு வர, கேப்ரியேல் என்னிடம், "உன் அல்லா உன்னைக் கல்லறைக்கு வந்து விட ஆணையிட்டுள்ளார். கல்லறையில் உள்ள முஸ்லிம்களுக்காகவும், அல்லாவை நம்புபவர்களுக்காகவும் தொழ உன்னைக் கூப்பிடுகிறார். முடிந்தால் அங்கு வந்து உன்னோடு சேர்ந்து கொள்வார்" என்றான்.[274]

நட்ட நடு நிசியில், பாஃகிக்கு (கல்லறைக்கு) இட்டுச் சென்று, 'ஆங்கே இறந்தவர்கள் சார்பாக அல்லாவிடம் மன்னிக்கக் கேள்' என அல்லாவே கேப்ரியேல் மூலம் ஏன் ஆணையிடவேண்டும்? அல்லாவின் உள்நோக்கம் அப்படி இறந்தவர்களை மன்னிக்க வேண்டுமென்றால் அதை நேரிடையாகவே, முகம்மதுவை நடு இரவில் அவரது படுக்கையைவிட்டுக் கிளப்பாமலேயே, செய்திருக்கலாமே! குரான்தான் இருக்கவே இருக்கிறதே!. முகம்மதுவும் ஒரு வசனத்தைப் பொசுக்கென வெளீயில் விட்டிருக்கலாமே! முகம்மதுவின் 'சுன்னா' எனும் 'ஷரியா' சட்டங்களை இயற்றியவர்கள் அளவுக்கு மீறிய தங்கள் இஸ்லாமிய ஆர்வ நேர்மையையும் (அதாவது வெறிப்பற்றீடுபாட்டுடன்), முகம்மதுவின் மனநோய் நிலையையும் அப்பட்டமாக நிரூபித்துத் தொலைத்து விட்டனரே. இக்கல்லறை-அழைப்பின் நோக்கமென்ன? அல்லா ஜானே! ஹத்தீஸில் (Bukhari Volume 1, Book 3, Number 57) இம்மாதிரி வரலாம் என எண்ணி, "நரக நெருப்பு

[274]Sahih Muslim Book 4, Number 2127

உங்களுக்காகக் காத்திருக்கிறது" எனத் தம் கைகளைக் கழுவி ஈரக்கைகளால் முகத்தைத் துடைத்துக் கொள்ளும்போது கோபித்துக்கொண்டார். [275]

முகம்மதுவின் எண்ணத்திற்கு மாறாக எவராவது நடந்து கொண்டால் உடன் சாபம் தூள் பறக்கும். முஸ்லிம்களின் சுகாதாரத்தைப் பற்றி முகம்மதுவுக்கு கவலையில்லை. ஆனால் தற்காதலரான அவருக்குத் தம் 'சமயச் சடங்குகளில்' (ritual) அக்கறை அதிகம். இவைகளில் நம்பிக்கையின்மையால்தான் இக்கா∴பிர்களைக் கொலை செய்யவேண்டும் என நினைத்தார். காபி∴ர்களுக்கு எதையும் கேள்வி கேட்டு அதனால் திருப்தியடைந்த பின்னரே ஒப்புக்கொள்ளும் வழக்கமாயிற்றே! இவைகளைப் பற்றி கேள்வி கேட்காமல் இருக்க மனிதனாகப் பிறந்த எவராலும் முடியாதே! உதாரணமாக தண்ணீரில்லா இடங்களில் "தையம்மும்" எனும் சடங்கைப் பற்றிக் கூறலாம். மலம் கழிந்த (No. 2) பின்னர், 'மலத்தைத் துவாரத்தைக் கல்லால் துடைத்து' 'மூன்று முறை கையால் தரையில் அடித்து அதே புழுதிக் கையால் முகத்தை மூன்று முறை துடைத்துக்கொண்டால்' அல்லாவின் திருவருட்பேறு கிடைக்குமாம்! முகம்மது கூறிய "தைய்யமும்" எனும் இஸ்லாத்துச் சடங்கு இதுதான்!! இச்சடங்கையே தண்ணீருள்ள இடங்களிலும் மரபுப் பற்றுடைய முஸ்லிம்கள் சிலர் இந்நாட்களிலும் செய்கிறார்களே!

முகம்மதுவைப் போலத் தம் கால்களைத் துடைத்தும், காலுறைகளை அணிந்து கொள்ளும் போது ஈரக்கை சடங்கைச் செய்தால்தான் நரக நெருப்பிலிருந்து முஸ்லிம்கள் தங்களைத் தற்காத்துக் கொள்ளச் சுலபமான வழியென எழுதியுள்ளார்! புகாரி தன் ஹத்தீசில் கூறியபடி: இதை அல்-முகிரா இப்னு சுபா தெரிவித்ததாகச் சொல்கிறார். 'ஒரு பிரயாணத்தின் போது முகம்மதுவுடன் நானும் இருந்தேன். அப்போது அவர் மலசலம் (No. 2) கழிக்கச் சென்றார். முடிந்தவுடன் புட்டத்தைக் கழுவும் சடங்கிற்காக (ablution) தண்ணீரை வார்த்தேன். இதைத் தொடர்ந்து முகம்மது தன் ஈரக்கைகளுடன் முகத்தையும் கைகளையும் கழுவித் துடைத்துப் பின்னர் தம் முகத்தையும் தலையையும் துடைத்துக்கொண்டார். கடைசியாக தம் தோலாலான காலுறையையும் துடைத்து அணிந்தார்.[276]

மற்றொரு ஹத்தீஸில் புகாரி எழுதினார்: - 'ஓத்மானின்' எனும் '**அடிமை**' (கவனிக்கவும்) 'ஹம்ரான்' கூறியதாக உள்ளது: " என் எசமானர் ஓத்மான் இப்னு ஆபா∴ன் ஒரு குவளையில் (tumbler) தண்ணீர் கொண்டு வரச் சொல்லி என்னைப் பணித்தார். அத்தண்ணீரால் கைகளில் ((முதலில் வலது, பின் இடது) ஊற்றி ஓத்மான் *மூன்று* தடவைக் கழுவினார். (விரல்களிலிருந்து முழங்கை வரை); பின்னர், அக்குவளையிலிருந்து கையால் தன் வாயை *மூன்று முறை* கொப்பளித்தார். அடுத்து, மூக்குத் துவாரத்தில் தண்ணிரை மூச்சால் இழுத்து அத்தண்ணிரை மூன்று தடவை மூக்கிலிருந்து ((முதலில் வலம், பின் இடம்) தண்ணீரைப் பீச்சி அடித்தார். இதற்கடுத்து, முகத்தையும் மூன்று முறை கழுவினார். அடுத்து ஈரக்கையால் மூன்று தடவை நன்றாக தலையைத் துடைத்தார். பின் இரு பாதங்களிலிருந்து ((முதலில் வலம், பின் இடம்) என கணுக்கால்கள் வரை மூன்று தடவைக் கழுவினார். பிறகு அல்லாவின் தூதர் கூறுகிறார்: 'என்னைப் போல எவன் ஒருவன் கழுவும் போது இச்சமயத்தில் வேறொரு காரியத்தையும் செய்யாது இச்சடங்குகளைச் செவ்வனே செய்து அவனே இரு தடவை 'ரகத்' தொழுகையைச் (two-rak'at) செய்தால், பழைய பாபங்கள் யாவற்றிலிருந்தும் மன்னிக்கப்படுகிறான். (சுபானல்லா!) இதற்கெல்லாம் பிறகு, கட்டாய கூட்டுத் தொழுகையையும் செய்தால்,

[275]Bukhari Volume 1, Book 3, Number 57
[276]Bukhari Volume 1, Book 4, Number 182

இத்தொழுகைக்குப் பின்னர் செய்யும் பாபங்களிலிருந்து அடுத்த கட்டாய கூட்டுத் தொழுகை வரை செய்யப் போகும் பாபங்கள் தானாகவே மன்னிக்கப்பட்டு விடும்'. (பாபங்களை எளிதாகப் போக்கும் வழி எப்படி! வேண்டுமென்றே பாபம் செய்தாலும், பாப விமோசனத்திற்கும் உபாயம் கைவசம் உடன் உள்ளது.[277]

'நிர்ப்பந்தம்' எனும் சொல்லுக்கு இவ்வாறு பொருள் விளக்கம் கூறலாம் (Definition of 'Compulsion'):' திரும்பத் திரும்ப ஒரே ஒழுகலாற்றை, மனதாலோ அல்லது காரியங்களாகவோ செய்ய வேண்டியவைகளை சமயப் புத்தகங்களில் உள்ளபடி செய்யாவிட்டால் பாபமெனக் கருதப்பட்டு, அச்செயல்களுக்குத் தண்டனையாக நரகம் என அச்சுறுத்திச் செயலாற்றச் செய்வது' எனலாம்.

மேலும், இச்சடங்குகளைக் கட்டாயப்படுத்த நரகவேதனை என சொல்லிச் சொல்லி பயங்காட்டி மன வேதனைகளை ஒருங்கே அளிக்க முகம்மதுவின் இஸ்லாத்தால் மட்டுமே முடியும். அடுத்து, இதனால்தான் பலர் 'ஜனநாயக நாட்டில்' இருந்து கொண்டே இஸ்லாத்து சலுகைகளைப் பெற இஸ்லாத்துக்கு மாறிப் பல தாரங்களை மணப்பது-புணர்ந்து 'ஜல்சா' செய்வதற்குத் தானென இப்போதாவது தெரிகிறதா! இஸ்லாமே விதிமுறைகளாலும், சடங்குகளாலும் நிறையப் பெற்றது. கழுவுதல் (wodoo = ablution); உடலுறவுக்குப் பின் 'குஷால்' எனும் குளியல் (ghusl= bathing after sex); கட்டாயத் தொழுகை (salat= obligatory prayer); கட்டாய 'ஹஜ்' யாத்திரை ரம்சான் மாத முழுதும் பகலில் மாத்திரம் பட்டினி ஆகியவை எல்லாமே அப்படித்தான்! இன்னொரு ஹத்தீஸில் முகம்மது கூறியது,"முஸ்லிம்கள் மூத்திரம் போகும்போது ஆண்குறியிலிருந்து மூன்று தடவை நிறுத்தி நிறுத்தி மூத்திரப்பையைக் காலி செய்ய வேண்டும்". ஒரு தடவையோ அல்லது இரண்டு முறையிலோ மூத்திரம் போகக்கூடாது. இதனால் ஈரான் நாட்டு ஆயத்துல்லா முடிவுக்கு வந்தபடி, ஆண் குறியிலிருந்து மூத்திரம் கழித்தபின், கடைசியில் சொட்டும் மீதி சொட்டுகளை தங்கள் உடுப்பில் துடைத்துக் கொண்டால் போதுமானது. இதனால் மிச்ச மீதி சொட்டு மூத்திரம் சொட்டிவிட்டதே, அது இஸ்லாத்தில் 'ஹராம்' ஆயிற்றே என நமாஸை ரத்து (annul) செய்யத் தேவையில்லை என சொட்டு மூத்திரத்தைப் பற்றியும் இவ்வளவு தெளிவான விளக்கங்களோடு இஸ்லாத்து இயக்க ஈரான் தலைவரே "ஷரியா" எனும் உச்ச நீதிமன்றத் தீர்ப்பெனத் திருவாய் மலர்ந்து விதித்துவிட்டார்!!

**மனச்சிதைவு நோய்** - Schizophrenia

மனச்சிதைவு அல்லது முறிந்தமனம் என்பது - மனநோய் சார்ந்த எண்ண ஆளுமைக் கோளாற்றைச் சார்ந்தது. எதற்கும் ஒவ்வாத கருத்துக்களை தம் விருப்பப்படி மனத்தால் கற்பித்துக்கொண்டு பொருத்தமற்ற உணர்ச்சிகளுடன் செயலாற்றுவதால் இது விளைகிறது. இந்நோயால் பாதிக்கப்பட்டவர் தன் சிந்தனைத்திறனில் அல்லது புலனுணர்வில் வழக்கத்திற்கு மாறான விபரீத எண்ணங்களுக்கு ஆட்பட்டு ஒன்றுக்குப்பின் ஒன்றாக தொடர் விளைவு நிகழ்ச்சிகளில் ஈடுபடுவார். தான்தோன்றி ஒலிகளால் (Auditory hallucinations) சித்தபிரமையை உண்டாக்கிக்கொண்டு தாமே எல்லோரையும்விட மிகச் சிறப்பானவன் என்றோ அல்லது இயல்புக்கு மீறிய மிக விபரீத கருத்துக்களுக்கு இரையாகி தாறுமாறான சிந்தனை சொல் செயல் ஆகியவைகளில் ஈடுபட்டால் அவருக்கு மனச்சிதைவு உண்டாகி இருக்கிறது எனலாம்.

- **மனச்சிதைவுக்கான மற்ற அறிகுறிகள் :**

[277] Bukhari Volume 1, Book 4, Number 161:

சின்னஞ்சிறு குழந்தைப்பருவத்திலிருந்தோ அல்லது வாலிபப் பருவத்திலோ அல்லது வாழ்க்கை முடிவிலோ தாம் செய்யும் தொழிலில் அல்லது தம் குடும்பத்திற்கும், சமூகத்திற்கும் ஆற்றும் கடமைகளில்கூட குறைபாடுகளுக்கான சான்றுகளை வெளிப்படையாகத் தெரியும்படி தாங்களே தோற்றுவித்துக் கொள்வார்கள்.

முகம்மது தாம் வேலை செய்யும் நிறுவன எஜமானி கதீஜாவை மணப்பதற்கு முன், நம்பிக்குகந்தவர் எனும் பொறுப்புடன் (Amin=Trustee) 'சிரியா' சந்தையில் கதீஜாவின் விபாரச் சரக்குகளை விற்கவும் அங்கிருந்து அவள் கொடுத்த பட்டியல்படி வியாபாரத்திற்கு வேண்டிய சரக்குகளை வாங்கி வரவும், அப்பயணத்தை முதன்முதலில் மேற்கொண்டார். இந்த வேலையில் சேர்வதற்கு முன் முகம்மது வேறெந்த வேலையிலும் ஈடுபட்டதில்லை. தாய்வழிமாமன் சிபாரிசால் கதீஜாவிடம்தான் வேலையில் முதன்முதலில் அமர்ந்தார். வாலிப (உடல்) முறுக்கில் கிடந்த முகம்மதுவைக் கண்டு தன் எல்லாவிதத் தேவைகளுக்கேற்றவர் (ஆம்! அதற்கும் சேர்த்துத்தான்!) என கதீஜாவே தீர்மானம் செய்து முகம்மதுவிடமே மையல் கொண்டு ஒரு திட்டத்துடன் (தம் தந்தை 'குவைலீது'க்கு முகம்மதுவைக் கண்டாலே ஆகாது; இப்படி இருந்தும்) 'மூன்றாம் முறையாக' முகம்மதுவை மணந்து கொண்டாள். அப்போது முகம்மதுவின் வயது 25; கதீஜாவுக்கு 40 வயதேதான்! முகம்மதுவுக்கு இதுதான் முதல் திருமணம். மணந்த பின்னரும் குடும்பப் பொறுப்பின்றி 'ஹீரா' குகையில் முகம்மது தன்னந்தனியாக தன் நாட்களைக் கழிப்பது வழக்கம். தான் கொண்டு சென்ற உணவு தீர்ந்துபோனாலோ அல்லது உடலுறவுப்பசி ஏற்பட்டாலோ முகம்மது அவ்வப்போது வீட்டுக்கு வருகை தந்து தமக்கு வேண்டிய உணவைச் சேகரித்துக் கொண்டு மனைவியுடன் உடலுறலில் ஈடுபட்டுத் திருப்தியடைந்து கொள்வது வழக்கம். பின்னர் பழையபடி 'ஹீரா' குகைக்கே வழக்கமாக முகம்மது திரும்பிச் சென்று விடுவார். தாம் செய்ய வேண்டிய 'அமீன்' (Amin) தொழிலிலும் சரி அல்லது மனைவி, குழந்தைகள், சமூகம் ஆகியவைகளுக்குத் தாம் செய்ய வேண்டிய கடமைகளிலும் சரி சற்றும் கவனம் செலுத்தாமல் ஏராளமான குறைபாடுகளுடன்தான் ஏனோதானோவெனத் தம் வாழ்க்கையைக் கழித்தார். ஆகவே ஆரம்ப நாட்களிலிருந்தே முகம்மதுவுக்கு மனச்சிதைவு நோய் (Schizophrenia) இருந்தது எனத் தீர்மானிக்க இச்சான்றுகளே நமக்கு அடிப்படைக் காரணங்களாக அமைகின்றன! தன் இயக்கப்பணியான 'அல்லாவின் தூதர்' எனும் (சொத்து சேர்க்கும்) தொழிலை, ஆம்! அதை லாப நஷ்டக்கணக்கிட்டு தொழிலாகத்தானே நடத்தினார்! [[[முதலில் முஸ்லிம்கள் தங்கள் சொத்திலிருந்து முன்பணமாகச் செலவழித்தால் 'அல்லா' இம்முஸ்லிம்களுக்கு வெகுமதிகளை இகத்திலும் பரத்திலும் அள்ளி அள்ளித் தந்திருவாரென குரான் மூலம் வாக்களித்திருக்கிறார். முகம்மது வாக்களித்தபடிக் கிடைக்காவிட்டால் இம்முஸ்லிம்கள் இறந்த பின்னர் திரும்பி வந்து இறந்துபோன முகம்மதுவிடம் வழக்கா தொடரமுடியும்?! இதையும் அக்கால படிப்பறிவில்லா முஸ்லிம்கள் நம்பி, இதுவும் 'ஷரியா சட்டமாகிவிட்டது!!]]] ஆகையால் 'அல்லாவின் தூதர்' எனும் சொத்து சேர்க்கும் அரசியல் தொழில்' எனக் கூறுவதில் தவறேது!!

இம்முயற்சியில் துணிகரமாக இறங்குவதற்கு முன் முகம்மது ஓர் தன்னந்தனி ஆள். கதீஜாவை மணப்பதற்கு முன் அவருடைய தொழில் - பெண்களுக்கெனப் பிரத்யேகமாக ஒதுக்கி வைக்கப்பட்ட சொற்ப ஊதியம் தரும் கால்நடை மேய்க்கும் பணியில் இருந்துகொண்டு மற்ற எவருடைய தொடர்புமின்றி வாழ்ந்தார். தமது வாலிபப்பருவத்தில் ஒரு மணக் குழுவில் இருக்க நேர்ந்தபோது கூட மிக அருவருப்புடன் மெல்லவும் முடியாமல், முழுங்கவும் முடியாமல் தமக்கொவ்வாத சூழ்நிலையில் சிக்கித் தவித்து முள்ளின்மீது உட்கார்ந்திருப்பது போன்றே உணர்ந்தார். பின்னர் முகம்மதுவுக்குத் திடீரென வயிற்றைக் குமட்டிக்கொண்டு தாங்க முடியாத வலியுடன் அவதிப்பட்டார். இப்படிப்பட்ட முகம்மதுதான் வயது ஆக ஆக “ஒரு பூவைவிட்டு மற்றொரு பூவில் உட்கார்ந்து தேன்பருகும் பட்டாம் (வண்ணத்துப்) பூச்சியெனக் கண்மூடித்தனமாகப் பாகுபாடற்ற வகைகளில் மாறி மாறிக் கண்டவர் கிடைத்தவர்களுடன் உடலுறவு கொண்டார். தமது 25வது வயதில் கதீஜாவிடமிருந்து மணக்க முன்மொழி வரும் வரை முகம்மது எந்தப் பெண்ணுடனும் எவ்வித தொடர்பையும் கொள்ளாமல் ஓர் கன்னிமை பூண்ட தூய்மையான நங்கைபோன்று வாழ்ந்து வந்தார். கதீஜா இறந்த பின்னர்தான் நன்நடத்தையின்றி தாறுமாறாக வாழ்ந்தார். இவர் செயல்பாங்கைத் தட்டிக் கேட்க யாரும் இல்லாததால், இதுவே முகம்மதுவுக்கு மனச்சிதைவுவகை ஆளுமைக் கோளாற்றில் (Schizoid personality disorder) விளைந்தது.

மனநோய்க்குறி மூலத்தை உறுதி செய்ய அதற்கான புள்ளிவிவரத் தொகுப்பியல் கையேடு-நான்கில் உள்ளபடி (Diagnostic and Statistics Manual of Mental Health IV) எடுத்துக்காட்டுகளுடன் இவ்வாறு விளக்குகிறது:

- **மனச்சிதைவை** (Schizophrenia) **இருவகைப்படுத்திக் கூறலாம் .**

ஒன்று, நேரடியானது (positive); மற்றொன்று: எதிர்மறைவகை இயல்புள்ளது. நேரடி அறிகுறிகள் (positive symptoms) சாதாரண செயல்பாடுகளிலும் கூட தேவைக்கதிகமாகவோ அல்லது உண்மையினின்றும் பிறழ்ந்து கூறதலிலோ தன் இயல்பினைக் காட்டும். அதேசமயம், எதிர்மறையான இயல்புள்ள அறிகுறிகள் (negative symptoms) தரத்தில் குறைந்த நிலைகளில் பிரதிபலிக்கும். ஆக்க பூர்வ அறிகுறிகள் (positive symptoms) உண்மையினின்றும் பிறழ்தல் (தவறான கருத்துகள்) (delusions); தெளிவின்மை (hallucinations); உபயோகப்படுத்தும் பேச்சு முறைகளில் தாறுமாறான குளறுபடிகள் இருக்கும்; பெருமளவில் காண்கின்றபடி தெளிவற்ற அல்லது உடல் விறைப்பு நடக்கை (catatonic behaviour) ஆகியவைகளால் அறியலாம்.

எதிர்மறை இயல்புள்ள அறிகுறிகள் (Negative symptoms): உணர்ச்சியை வெளிப்படுத்தும்போது தம் சொல்லோட்ட நடைநயத்திலும்; ஆக்கச் செழிப்புள்ள எண்ணங்களிலும்; ஒரு குறிக்கோளை நோக்கிச் செல்ல வேண்டிய நடமுறை செயல்பாணிகளை எடுத்துரைப்பதிலும்; இவைகளின் எல்லையும் தீவிரமும் ஒரு கட்டுப்பாட்டுக்குள் இருக்கும்.

மன மருட்சி உண்டாவதற்கான மூல காரணமே தவறான நம்பிக்கைகள் கருத்துக்களேயாகும். மனமருட்சி இவ்வாறாக (உள்ளடக்கங்கள்) வெளிப்படும். உதாரணமாக: 1. பிறருக்குத் தொல்லையை வேண்டுமென்றே அளிப்பது (persecutory), 2. குறிப்பிட்ட ஒருவரை குறியிட்டுக் குறைகூறுவது (Referential), 3. மனம் உடல்சார்ந்த வகைகளில் துன்புறுத்துவது (somatic), 4. ஆன்மீக வகைகளில்

வதைப்பது (religious), 5. தன் ஆடம்பரத்தை (பகட்டு ஆரவாரத்தை) ஒப்புக்கொண்டு அதற்குத் துணையாக இருக்கும்படி கட்டாயப்படுத்தல், முதலியன.

மேற்கூறியவைகளில், தவறான கருத்துக்களை / நம்பிக்கைகளை மனத்தில் இறுத்திக் கொண்டு வேண்டுமென்றே பிறருக்குத் தொல்லையளிப்பது (Persecutory delusions) அடிக்கடி எங்கும் நடக்கும் சாதாரணமாக நிகழ்ச்சிதான். இவ்வாறு பிறருக்குத் தொல்லைகொடுப்பவர் தாமே சித்திரவதைக்கு ஆட்படுவதாகவும்; தம்மைத் துன்புறுத்த யாரோ பின்தொடர்வதாகவும்; வஞ்சிக்கப்படுவதாகவும்; தம் மீது யாரோ வேவு பார்ப்பதாகவும்; தம்மை முட்டாளாக்குவதில் யாரோ தீவிரமாகச் செயல்படுவதாகவும் நம்புவார்.

சுட்டிக்காட்டும் நபரைக் குறியிட்டுக் குறைகூறுவது (Referential delusions): இதுகூட எங்கும் நடப்பதுதான். தாம் குறிப்பிடும் நபர் 1. தம்மிடமே சில செய்கைகளில் மிக மோசமாகக் நடந்து கொண்டாரெனவும்; 2. பிறரிடம் தம்மைப்பற்றி தவறான அபிப்பிராயங்களைக் கூறியதாகவும்; 3. ஒரு குறிப்பிட்ட புத்தகத்தில் இருக்கும் மிக மோசமான பத்தியில் உள்ளதுபோன்றே தாம் இருப்பதாகக் குறிப்பிட்டும்; 4. பத்திரிக்கைகளில், பாட்டுகளில், பல சந்தர்ப்ப சூழ்நிலையில் தம்மைப்பற்றி குறைகூறி ஒப்பீடு செய்ததாகவும் தவறாகக் கூறுவர்.

மேற்கூறிய இரண்டுக்கும் வேற்றுமைகளைக் கூறுவது (Persecutory & Referential delusions) சில சமயங்களில் எளிதன்று; இப்படி இவரே கூறுவதற்கு எதிராக (உண்மைக்குப் புறம்பாக) மிகத் தெளிவான சாட்சியங்கள் இருந்தபோதிலும், அந்தந்த சமயத்தில் இவருக்கு இருக்கும் மனநிலையைப் பொருத்தே இவருடைய சொல்நயம், செயல்பாணி இருக்கும். தவறான (மனக்)கருத்துடன் விபரீதமாக நடந்துகொள்வது என்பது மனச்சிதைவின் தனித்தன்மையுள்ள பண்புதான். இதில் யாருக்கும் எவ்வித கருத்து வேற்றுமை கிடையாது. ஆனால், இதில் “விபரீதத்திற்கு” ஓர் எல்லையை வகுப்பதென்பதோ அல்லது அதைப்பற்றித் தீர்மானிப்பதோ இன்னும் மிகக் கடினம் (extent of bizarreness), அதிலும் பல்வேறு கலாச்சாரங்களுக்கும் ஒரு பொதுவான கருத்தைத் தீர்ப்பாகக் கூறுவது அவ்வளவு எளிதன்று. ஒவ்வொரு சமயத்திலும் ஒவ்வொரு இடத்திலும் ‘விபரீதங்கள்’ வெவ்வேறு விதமாக இருக்கும். மனமருட்சிகள் அதாவது தவறான நம்பிக்கைகள் / கருத்துக்கள் எவ்விதத்திலும் பொருத்தமற்றதாகத் தோன்றும்போது ‘அதிகமான (அதீத) விபரீதம்'' என அபிப்பிராயங் கொள்ளலாம். இவ்விபரீதங்கள் எவராலும் புரிந்துகொள்ள முடியாதவாறும் இருக்கும்; அல்லது சாதாரண வாழ்க்கை அனுபவத்தில் (பட்டறிவு) இதுவரை யாருக்கும் இல்லாததாகவும் இருக்கலாம்.

எவராலும் நம்பவே முடியாத இயல்புக்கு மீறிய மனமருட்சி அல்லது சித்த பிரமைக்கு ஒரு உதாரணம்: ‘முன்பின் தெரியாத யாரோ ஒரு நபர் ஒருவனின் / ஒருவளின் உள் உருப்பை ஏற்கனவே இருந்த இடத்திலிருந்து எடுத்தெறிந்துவிட்டு அதே பழைய இடத்தில் வேறொருவருடைய உருப்பைப் பொருத்தி, வெட்டுக்காயம் செய்த இடத்தில் எவ்வித தழும்போ அல்லது வடுவோ இல்லை என ஒருவர் சொன்னால் நீங்கள் அவரை நம்புவீர்களா? மற்றோரு உதாரணம்: காவல்துறையினர் தாம் தவறு செய்திருக்கலாம் எனச் சந்தேகப்பட்டு தம்மீது கடுமையான மேற்பார்வை செலுத்துகிறார்களென தவறான எண்ணம்.

மனமருட்சியால் தம் எண்ணம் அல்லது உடல் ஆகியவை தம் கட்டுப்பாட்டில் இல்லை எனக் கருதுவதே விபரீதமாகும்; இப்படி ஆனதற்கு யாரோ முன்பின் அறிமுகமில்லாதவர் தம் எண்ணத்தை தம்மிடமிருந்து எடுத்துச் சென்று விட்டார் ("thought withdrawal" எண்ண எடுப்பு) எனக் கூறுவதும்; அல்லது யாரோ தம் விருப்பத்திற்கொவ்வாத அல்லது அந்நியமான எண்ணத்தில் தம் மனத்தில் செருகிவிட்டார் (thought insertion" எண்ணச் செருகல், (சொருகுதல் எனச் சிலர் கூறுவதுண்டு) எனக் கூறுவதும்; அல்லது தம் உடல், செயல்பாடு ஆகியவைகளை யாரோ வெளி ஆள் அநாவசியமாக கையாளுகிறார் எனக் கூறுவதையும் இக்கணக்கில் சேர்த்து அதற்கு மனமருட்சியால் உண்டான விபரீத கட்டுப்பாடு ("delusions of control") எனச் சொல்லலாம். இவ்வாறு இயல்புக்கு மீறிய அறிகுறிகளே மனச்சிதைவை நிர்ணயிக்கும் அளவுகோலாக எடுத்துக் கொள்ளலாம் (Criterion A for Schizophrenia) [278]

மனநோய்க்குறி மூலத்தை உறுதி செய்ய அதற்கான புள்ளிவிவரத் தொகுப்பியல் கையேடு-நான்கில் உள்ளபடி (As per DSM IV) முகம்மதுவுக்கும் மனசிதைவு இருந்ததற்கான அறிகுறிகள்: 1. தம் மனைவியர்களிடம் உடலுறவு கொள்ளாமலே தாம் அதில் ஈடுபட்டுப் புணர்ச்சிப் பரவச நிலையடைந்ததாகவும்; 2. முன் அத்தியாயத்தில் ஆயிஷா விவரித்தபடி (**இதுவும் முகம்மது ஆயிஷாவிடம் கூறியபடிதான்**) "முகம்மதுவின் உடல் மீது யாரோ இருவர் அறுவை சிகிச்சையில் ஈடுபட்டதாகவும் மாசுபட்ட இதயத்தில் முன்பிருந்த கருப்புக் கட்டிகளைக் களைந்தெறிந்துவிட்டு பனிக்கட்டியால் சுத்தம் செய்தது வெட்டுக்காயம் செய்த இடத்தில் எவ்வித தழும்போ அல்லது வடுவோ இல்லை" எனக் கூறியதையும் கணக்கில் கொண்டால், முகம்மதுவுக்கு மனச்சிதைவு இருப்பதற்கான அறிகுறிகள் கட்டாயம் இருந்தது எனத் தீர்மானம் செய்யமுடியும்.

மற்றொரு அறிகுறி: யூத, கிறித்தவ ஆன்மீகப் புத்தகத்தில் முன்னறிந்து கூறியபடி இனிவரும் கடவுள் தூதர் (தாம் என அவரே தவறாகத் தீர்மானித்துக் கொண்டு), இதனால் முகம்மதுவைக் கொல்ல முயற்சியெடுக்கிறார்களெனக் கூறியதிலிருந்தும், முகம்மதுவுக்கு மனச்சிதைவு ஏற்பட்டதென முடிவு செய்யலாம். இவ்வாறான படு முட்டாள்தனமான தவறான கருத்துக்களை மனத்தில் இறுத்திக் கொண்டு வேண்டுமென்றே பிறர் தமக்குத் தொல்லையளிக்கிறார்கள் (Persecutory delusion) எனும் ஒரு காரணமே முகம்மதுவுக்கு மனச்சிதைவு (Schizophrenia) இருந்தது என கண்டிப்பாக் கூறமுடியும்.

முகம்மதுவின் சிறு பிராயம் முதல் தம் வாலிபப்பருவம் வரை தனி ஆளாகவே கிடந்தார். இவர் தம் 'அல்லாவின் தூதரெனும் புதிய சொத்து சேர்க்கும் தொழில் துறை'யைத் தொடங்கும்போது தமக்கு இணையானவரோ, அல்லது தம்மைவிடச் சிறந்த உயர்குடிப் பெருமகனாரோ, அல்லது முகம்மது கூறிய மிகச் சிறந்த ஆன்மீகத் தத்துவங்களால் கவரப்பட்ட பக்தர்களோ இவரைப் புடை சூழவில்லை. ஆனால் இவர் சீடர் குழுவின் கலவை இவ்வாறாக இருந்தது: 1.

[278] Diagnostic and Statistics Manual of Mental Disorder IV, p. 299

சமூக விரோதிகள்; 2. பழிக்குப்பழி வாங்கத் துடிக்கும் அடிமைகள்; 3. பெற்றோர்களுக்கடங்காத எடுப்பார் கைப்பிள்ளைகள் எனக் குழுமியிருந்தனர். இப்படிப்பட்ட சீர்கெட்ட சீடர் கூட்டத்திற்குத்தான் முகம்மது ஆரம்பகாலத்தில் தலைமை வகித்தார்! அதே சமயத்தில், முகம்மதுவின் சொந்த வாழ்க்கையிலோ ஏராளமான சிக்கல்கள்; பிரச்சினைகள் என உணர்ச்சிபூர்வான தேவைகள் மிகுதியாகக் காணப்பட்டன. சிறு பிராயம் முதல், முகம்மதுவுக்குத் தேவையான அன்பு அரவணைப்பு எனக் கூர்வுணர்வுடன் காட்ட யாருமில்லாத்தால் எங்கும் எதிலும் குழப்பத்தால் நிரம்பி வழிந்தார்.

மனச்சிதைவு ஆளுமையுள்ளவர்கள் எவருடனும் தாமாகவே புதிதாக உறவைத் தொடங்கவோ; அல்லது சொந்தமாகவே எவருடனும் உறவுமுறையை (அழியாமல்) காத்துக் கொள்ளவோ; அதேசமயம் தம் மக்கள் எனக் கூறிக்கொள்ள எவரும் இல்லாததால் திணறுவார்கள். மேற்கூறிய நிர்ப்பந்தங்களில்தான் முகம்மது வாழ்ந்தார். இதனால் இவரைப்போன்றவர்கள் தமக்கென ஒரு உலகை மனத்தால் தாமே நிர்மாணித்துக்கொண்டு அதுதான் தங்களுக்கு பாதுகாப்பிடமென அதில் புகுந்துகொண்டு வாழ்வார்கள். [279]

அச்சிதைவுவகை கோளாறுகளில் (schizophrenic spectrum" of disorders-SPD) மனச்சிதைவு நோயும் (schizophrenia) உள்ளடங்கும். இதற்கான மனநிலைகூட ஒரேவகையான அறிகுறிகளைக் கொண்டவைகளாக இருக்கும். உதாரணமாக: சமூகத் தொடர்புக்கு ஆற்றலின்மையும், உணர்ச்சிகளை வெளியிடுவதில் சொல்திறமின்றியே காணப்படும். இவைகளில் உள்ள முக்கிய வித்தியாசம் - மனச்சிதைவுவகை ஆளுமை உள்ளவர்கள் மனச்சிதைவு உண்டாகும்போது புலனுணர்வுக்குரிய தெளிவின்மைகளில் இருக்கும், பைத்தியக்காரத்தனம் இருக்காது. [280]

முகம்மதுவுக்கோ விபரீதமான இயற்கை விதிகளுக்கப்பாற்பட்டவைகளில் உதாரணமாக பேய் பிசாசுகளை; தேவதைகளைக் காண்பது போன்றவைகளில் திட நம்பிக்கை கொண்டிருந்தார். ஒரு முறை பேய் பிசாசுகளின் நகரத்தில் கூட முகம்மது ஓரிரவு தங்கியதாகக் கூறியுள்ளார்.

வளரும் இளமைப் பருவத்தில் மனச்சிதைவுவகை ஆளுமைக் கோளாறுக்கான அறிகுறிகள் (schizotypal personality disorder): பிறரறியாமல் காரியங்களில் ஈடுபடுவது அல்லது சமூகத்தின்று விடுபட்டதால் உண்டாகும் ம்னக்கவலை ஆகியவைகள் இருக்கும். குழந்தைப் பருவத்தில் இவைகளெல்லாம் வெளிப்படையாகத் தெரியாது. வயதாக ஆக மனஉலைவில் ஈர்க்கப்பெரும். இது முகம்மது விஷயத்தில் உண்மையாயிற்று. ஏனெனில், முகம்மதுவின் குடும்பத்தோர், தாத்தா, தாய்வழி மாமாக்கள் (கா’பா கோவில் காப்பாளர்கள்) மாமிகள் கல்வி கேள்விகளில் சிறந்து இருந்தும், முகம்மது மட்டுமே பள்ளிக்குச் செல்லாமல் கடைசி வரை தற்குறியாகவே இருந்தார் (குரான்: 7:157 & 158)

[279] http://www.mayoclinic.com/health/schizoid-personality-DS00865/DSECTION=symptomsdisorder/
[280] Ibid.

- **பிறரைக்காட்டிலும் தான் சிறப்பானவன்/ள் எனும் மனச்சிதைவு**

‘தான் மிகச்சிறப்பானவன’ எனும் மனச்சிதைவுள்ளவர் (paranoid schizophrenia) மற்ற மனச்சிதைவுள்ளவர்களைக் காட்டிலும் தங்கள் தினசரிவாழ்க்கையில் நன்றாக ஆழ்ந்து சிந்தனை செய்து செயலாற்ற இயலும். இவர்களுக்கு நினைவாற்றல்; மனதை ஒருமுகப்படுத்துதல்; உணர்ச்சிகளில் நிதானம்; முதலியவைகளில் பிரச்சினை இருக்காது. இருப்பினும், ‘தான் மிகச் சிறப்பானவன்’ எனும் மனச்சிதைவுக் கோளாற்றை புறக்கணிக்க இயலாது வாழ்க்கை முழுதும் அவதிப்பட வேண்டியதாகிறது. ஏனெனில் இச்சிதைவு புறக்கணிக்கவியலாது; இது வெறும் கேலிப்பேச்சல்ல. இம்மனநிலை வாழ்நாள் முழுவதிலும் கூடவே இருந்து பல கடுஞ்சிக்கல்களைத் தங்களுக்கே உருவாக்கிக் கொள்ளும. அவைகளில் முக்கியமாக ‘தற்கொலை’ முயற்சியும் ஒன்றாகும்.

இக்கோளாறுக்கான அறிகுறிகள்:

1. தான்தோன்றி ஒலிகள் - அதாவது அநேக குரல்கள் கேட்பது போன்ற செவிப்புலன் சார்ந்த பிரமை; 2. மனமருட்சிகள்; தம்மையே ஏமாற்றிக்கொள்ளுதல்; தவறான கருத்துக்களால் தம்முடன் இருப்பவரே தமக்கு விஷத்தை கொடுக்கப் பார்க்கிறாரெனத் தவறான கருத்துடன் இருத்தல்; 3. ஆவலாலும் அக்கறையாலும் விளையும் கவலை. 4. கடுங்கோபம்; 5. சதா சர்வகாலமும் தனிமை; 6. காரணமின்றி வன்முறையில் இறங்குதல்; 7. நேருக்கு நேராக சரக்கில்லாமல் (blah-blah) வாய்மொழியாக கண்டபடி எதிர்த்தல்; 8. உண்மையான பரிவில்லாமல் பாசாங்கு ஆதரவுப் பாவனை; 9. தற்கொலை எண்ணங்கள் சம்பந்தப்பட்ட ஒழுகலாறு - முதலிய அறிகுறிகளுடன் இருக்கும். தான் மிகச்சிறப்பனவன் என்னும் மனச்சிதைவுக் கோளாற்றுடன் இருப்பவர்களுக்கு அடிக்கடி மாறும் மனப்பாங்குப் பிரச்சினை இருப்பினும், நினைவில் ஆழ்ந்து, கவனத்தை ஒன்றின் மேல் நிலைநிறுத்திக் கவனிப்பது போன்றவைகளில் பாதிப்பு ஏற்படாது. அதே சமயம், இவைகள் நடைமுறைக்குகந்த ஆக்கமுறையான அறிகுறிகளே.

இவ்வாறு உண்டான அறிகுறிகள் நமக்குச் சுட்டிக்காட்டுவது: இந்த அறிகுறிகளால் அசாதாரண எண்ணங்களில் உண்மையின் தத்ரூபத்தை உணரும் சக்தியில் தொடர்பற்றுப் போகும் நிலை என்று சில சமயம் நமக்குப் புலப்படும். தவறான கருத்து மருட்சி (Delusion) மனதை மயங்கச் செய்யும் பிரமை (hallucination) எனும் இரண்டுமேதான் ‘தான்மிகச் சிறப்பானவன்’ எனும் மனச்சிதைவுக் கோளாற்றின் நடைமுறைக்குகந்த அறிகுறிகள்.

- **மனமருட்சியால் உண்டான தவறான நம்பிக்கைகள் / கருத்துக்கள்**:

தான் சிறப்பானவன் எனும் மனச்சிதைவுக் கோளாறு உள்ளோரை புலனுணர்வுக்குரிய தவறான நம்பிக்கையை உருவாக்கிக் கொள்ள கவனத்தை ஒருமுகப்படுத்துகிறது. அதாவது தமக்கு மட்டுமே கொடுமைகளை விளைவிக்க ஒருவர் முயற்சி மேற்கொள்கிறார் எனும் தவறான புலப்பாடு. இவரது நம்பிக்கைகள் தவறானது என நிரூபிக்கப்பட்டாலும் மூளையோ அனுபவத்தைத் தவறாகப் பொருள் கொள்ளக் கற்பிக்கிறது. உதாரணமாக, அரசாங்கம் தன் ஒவ்வொரு அங்க-அசைவையும் வேவுபார்க்கிறது; கூடவே வேலை

செய்பவனொருவன் தனக்கு விஷத்தை கொடுத்துக் கொல்ல முயற்சிக்கிறான் என்பது போன்ற தவறான கருத்துக்களைக் கூறலாம். முகம்மதுவே கூறிக்கொள்ளும் நிகழ்ச்சிகளைப் படிப்போர் நினைவுக்குக் கொண்டு வருகிறேன். முன் அத்தியாயத்தில் கூறியபடி முகம்மது குழந்தையாக இருக்கும்போது இவர் தாத்தா முத்தலீஃப் இவரைப் பாதுகாக்க நியமிக்கப்பட்டிருந்த செவிலித்தாயிடம், 'தம் சிறு செல்லப் பேரன் முகம்மதுவை கிறித்தவர்களிடமிருந்தும், யூதர்களிடமிருந்தும் கவனமாகப் பாதுகாக்க ஆணையிட்டதாக' முகம்மது தாம் வயதில் பெரியவரானவுடன் கூறியிருக்கிறார். - ஏனெனில் முகம்மதுவுக்கு இவ்விருவர்களும் கடுங்காயத்தை உண்டாகிவிடுவர் எனும் தவறான கருத்து இருந்தது. மற்றொன்று பானு நாதிரில் யாரோ ஒருவன் கோட்டை மேற்ச் சுவரிலிருந்து முகம்மதுவின் தலையில் பெரிய பாறாங்கல்லைப் போட்டு தம் மண்டையை உடைக்கப் பார்க்கிறானெனும் தவறான எண்ணம் முதலியன. மனமருட்சி உடையவர் தன் ஆடம்பரத்தாலும் பகட்டாலும், பிறரிடம் தாம் மிகச் சிறப்பானவனென பீற்றிக்கொள்ள இம்மாதிரி மற்றவர்களுக்குத் தெரிவிக்கலாம். உதாரணமாக: சிறகில்லாமல் தன்னால் பறக்க முடியும்; தாம் மிக பிரபலமானவன்; ஆகியன. முன்னொரு முறை முகம்மதுவின் உமிழ்நீர்கூட பிறருடைய எல்லா வியாதிகளைக் குணப்படுத்துமென தாமே கூறிக்கொண்டது; அல்லா தம்மை அவர் தூதராகப் பிரத்யேகமாக தேர்வு செய்தது போன்றவைகளையும் கூறலாம். இம்மனமருட்சிகள் கடைசியில் திடீர்த் தாக்குதல்களிலும், வன்முறைகளிலும்தான் முடிவடையும்.

- **தான்தோன்றி ஒலிகள்:**

ஒலிகளின் புலனுணர்வு மூலமாக அறிவது என இவைகளை வகைப்படுத்தலாம். இவ்வொலிகள் தமக்கு மட்டுமே கேட்கும்; மற்றவர்களால் கேட்க முடியாது எனும் எண்ணம் எப்போதும் இருக்கும். இவ்வொலிகள் ஒரு குரலாகவோ அல்லது பல குரல்களாகவோ இருக்கலாம். இக்குரல்கள் மனமருட்சியுடையவரிடம் பேசலாம் அல்லது சொல்பவரும்-கேட்பவர்களுக்கும் (மனமருட்சிக்கு ஆட்பட்டவர்) உள்ள பரஸ்பர பேச்சுவார்த்தைகளாகவும் இருக்கலாம். ஆனால் இக்குரல்கள் எப்போதுமே வேதனையூட்டுவதாக இருக்கும். இக்குரல்கள் - தாம் என்னென்ன நினைக்கிறோம் அல்லது செய்கிறோம் அல்லது கற்பனையில் (உதிக்கும்) தவறாகவும் இருக்கலாம். இக்குரல்கள் சில சமயங்களில் தமக்கோ அல்லது பிறருக்கோ தீங்கு விளைவிக்க கட்டளைகளைப் பிறப்பிக்கலாம்.' தான் மிகச் சிறந்தவன்' எனும் மனச்சிதைவு உள்ளோருக்கு இக்குரல்கள் நிஜமாகத் தோன்றும். இக்குரல்களிடம் சாதாரணமாகப் பேசவோ அல்லது அக்குரல்களுடன் சண்டை போடுவது போன்று காட்டுக் கத்தலாகவோ இருக்கும். [281]

முன் அத்தியாயத்தில் 1. ஒரு ஹத்தீஸ் மூலமாக நிரூபிக்கப்பட்ட சில நிகழ்ச்சிகள்: உடலுறவு இல்லாமலே புணர்ச்சி இன்பப் பரவச நிலையடைவது போன்ற பில்லி-சூனியத்தை (witchery/witchcraft) யாரோ முகம்மதுவின்மீது வைத்ததால், அவருக்கு மனைவிகள், வைப்பாட்டிகள்- அடிமைகள் என கணக்கற்ற பெண்கள் இருப்பினும் உடலுறவு கொள்ள முடியாது போயிற்று என ஹத்தீஸ் கூறுகிறது. அஃதே போன்ற பற்பல ஹத்தீஸுகள் மூலம் முகம்மதுவுக்கு

[281] http://www.mayoclinic.com/health/schizoid-personality-DS00865/DSECTION=symptomsdisorder/

'உடல்மிகைவளர்ச்சி'யால் புணர இயலாமையில் விளைந்தது (Acromegaly / Impotence) என முன்னரே முழுதும் நிரூபிக்கப்பட்டது. கதீஜா இறந்த பின்னர் முகம்மது மேற்கொண்ட அதீத புணர்ச்சிகளால் 'உடல்மிகைவளர்ச்சி/ புணர இயலாமை எனும் நோயால் துன்புற்றார். இதை மூடி மறைக்க பிற்கால ஹத்தீஸ் நூலாசிரியர்களால் மேற்கூறிய ஹத்தீஸ்கள் உருவாக்கப்பட்டன. 2. இன்னொரு ஹத்தீஸ்: யாரோ இருவர் முகம்மதுவுக்கு இருக்கும் நிலை அவருக்கு முன்னரே அவர்களுக்குள் பேசி ஒரு முடிவுக்கு வந்து முகம்மதுவின் இதயத்தைப் பிளந்து அதிலிருக்கும் மாசுகளை பனிக்கட்டிகளால் சுத்தம் செய்தனர் எனவும் கூறப்பட்டது. இவ்விரண்டு உதாரணங்களால் முகம்மதுவுக்கு மனமருட்சி இருந்தது என்றும்; அம்மனமருட்சியால் தவறான கருத்துக்களும் ஒருங்கே உண்டாயின என்றும் புலப்படவில்லையா? தவறான நம்பிக்கையாக இருப்பினும், (தவறென நிரூபிக்க முடிந்தும்) இவைகளை உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொண்டு, மனமருட்சி, தாறுமாறான எண்ணங்கள், தமக்கும் அமைதியில்லாமையோடு பிறருக்கும் அமைதியில்லாமையை உண்டாக்க, மூர்க்கத்தனத்துடன் வலுச்சண்டைக்கு பிறரை இழுப்பது, போன்ற இத்தகைய குணநலன்கள் முகம்மதுவுக்கு ஒருங்கே இருந்தன. இவைகளை - ஒன்றாய்-குறிப்பிட்ட ஒரு மனச்சிதைவு நோயாகக் குறிக்கும் அறிகுறிகளின் தொகுப்பை (one particular syndrome) "உடல் விறைப்பு நடக்கை" (catatonic behavior) எனக் கூறலாம். இந்நோயால் அவதிப்படுபவர் உடலும் மிகவும் விறைப்பாக ஆகி, எதற்கும் எவருக்கும் எளிதாக, விரைவாக, விடையும் அளிக்கமாட்டார். [282]

குரான் மூலமாகவே முகம்மதுவுக்கிருந்த தாறுமாறான எண்ணங்களை நிரூபிக்க முடியும். ஆனால் இதை ஆய்ந்து ஒரு வடிவில் உண்டாக்க ஆசிரியர் எவருக்கும் 'பயங்கரக் கனவு' போன்றோ அல்லது 'மனக்கிலி' போன்றோ கட்டாயம் உண்டாகிவிடும். முகம்மது எப்போதும் மன அமைதியில்லாது கிடந்தார். தன் உடல் விறைப்பு நடக்கையால் (catatonic behavior) மனத்தால் எவருடனும் எவ்விஷயத்திலும் இணங்காத விறைப்பு மனப்பாங்குடன் உணர்ச்சியற்ற மிருக மனத்துடன் வாழ்ந்தார். இக்காரணங்களால்தான் தன் வாழ் நாளில் 70க்கும் மேலான திடீர்த் தாக்குதல்களை நிகழ்த்தியுள்ளார். இதை நிரூபிக்கும் வகையில், முகம்மதுவின் நெருங்கிய உறவினன், 'அலி' இவ்வாறு கூறினான்: "சமதளப் பரப்பில் நடக்க நேர்ந்தாலும் (flat surface) முகம்மது தமது கால்களை மிக உள்ளூறத்துடனும் அதிக சிரமத்துடனும் ஒவ்வொரு காலையும் பிரயாசையுடன் தூக்கித் தூக்கி வைத்து, ஒரு மேட்டிலிருந்து கீழ் நோக்கிச் சரிவில் செல்வது போன்றே நடப்பார். எப்போதாவது திரும்பிப் பார்க்க நேர்ந்தாலும், தன் முழு உடலைத் திருப்பித்தான் பார்க்க முடியும். மற்றோர் போன்று தலையை மட்டும் திரும்பிப் பார்க்க முகம்மதுவால் இயலாது". [283]

முகம்மதுவின் பிள்ளைப்பருவக் கதைகளாலும், மன மருட்சியாலும், பல்வேறு குரல்களைக் கேட்பது போன்ற நிகழ்ச்சிகளாலும் விபரீத நடவடிக்கைகளாலும் முகம்மதுவுக்கு சிறுபிராயத்திலிருந்து வழக்கத்திற்கு மாறான மனச்சிதைவால் உண்டான சித்தபிரமையால் பாதிக்கப்பட்டிருந்தாரெனத் தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது. இவைகளே மனமருட்சிக் காட்சிகளாலும், மடத்தனமான சிந்தனைகளாலும், அற்பத்தனமான சொற்களாலும் முட்டாள்தனமான

[282] www.emedicinehealth.com/schizophrenia/article_em.htm
[283] The Book of Merits (manaqib) in Sunan Imam at-Tirmidhi. www.naqshbandi.asn.au/description.htm

செயல்பாணிகளாலும் முகம்மதுவுடைய பிற்கால ஒழுகலாறுகளில் (behaviour) ஒருங்கே பிரதிபலித்தன.

**சந்தேகவகை ஆளுமைக் கோளாறு** - Paranoid Personality Disorder

சந்தேகக் கோளாற்றை எப்போதுமே மனமருட்சியுடன் சம்பந்தப்படுத்த முடியாது. பிறருக்குத் தொல்லையை வேண்டுமென்றே கொடுக்கும் தவறான கருத்துக்கள் (persecutory delusions); எதிரியாக இல்லாதவர்களுடன் வன்முறை நடவடிக்கைகள் வேண்டுமென்றே மேற்கொள்வது போன்றவைகளால் முகம்மதுவுக்கிருந்த சந்தேகக் கோளாற்றை உறுதிப்படுத்துகின்றன. சந்தேக ஆளுமைக் கேளாறுள்ளவர் முதிராநிலையிலும்கூட தவறான கருத்துக்கு இரையாகிவிடுறார். தவறான கருத்துக்களுக்குக் காரணம் தாமே செய்து கொண்டதாக இருப்பினும் மனமருட்சி உண்டாவதில்லை.

இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயமே நிரந்தரமான தவறான கருத்துக்கள்தான். மனச்சிதைவில் தவறான கருத்துகள் இருக்கும் ஆனால் சந்தேகக் கோளாற்றில் சில முறை உருவாக்கப்பட்டதாயும் நிரந்தரமாகவும் இருக்கும். சந்தேகக் கோளாற்று அறிகுறிகளில் தவறான கருத்துக்கள் மெல்ல மெல்ல போகப்போக உண்டாகும். இதனால் பாதிக்கப்பட்டவர் சந்தேகக் கண்களுடன் எதையும் நோக்குவார்; எரிச்சலுடன் உள்முகச் சிந்தனையுடன் ஊக்கங்குறைந்து வீண் பிடிவாதத்துடன் பொறாமை பூண்டு சுயநலமாக சமூக விரோதச் செயல்களில் ஈடுபட்டு மனதுக்கொவ்வாதவகையில் நடந்து கொள்வார். சந்தேக ஆளுமைக் கோளாற்றுக்கான (paranoid personality disorder) அறிகுறிகள் மனநோய்க்குறி மூலத்தை உறுதி செய்ய அதற்கான புள்ளிவிவரத் தொகுப்பியல் கையேடு-நான்கில் உள்ளபடி (As per DSM IV) இவ்வாறு வரையறுக்கப்பட்டுள்ளன.

1. வேறு சிந்தனைகளுக்கு இடமளிக்காது, தங்கள் நண்பர்கள், கூட்டாளிகள் மீது ஆதாரமில்லா சந்தேகங்களில் மனத்தை முழுதும் ஈடுபடுத்தல்; 2. எப்போதும் பிறரே தமக்கெதிராகச் சதியில் ஈடுபடுவதாக ஆதாரமில்லாச் சந்தேகங்களைத் தமக்குத் தாமே உருவக்கிக் கொள்ளுதல்; 3. இந்நோயாளிகள் ஏன் இவ்வாறு நடந்துகொள்கிறார்களென மற்றொருக்குப் புரியாமல் இருக்கும்போதே மற்றோர்தான் தம் உயர்வான மதிப்பீட்டைக் கெடுக்கிறார்கள் என நினைந்து காரணமில்லாமல் எதிர்ப்பது; 5. எக்கருத்துரைகளுக்கும் எப்போதுமே தவறான பொருள் கொள்வது; 6. எக்கருத்தையும் புரிந்துகொள்வதற்கு முன்னர் ஆரம்பத்திலிருந்தே தவறாகவே புரிந்துகொள்ளுதல்; 7. மற்றொருவருடனும் ரகசியங்களைப் பகிர்ந்துகொள்ள விருப்பமில்லாமல் இருத்தல்; முதலியன

- **இக்கோளாற்றில் பல வகைகள் உள்ளன:**

1. **தமக்குப் பிறரால் தொல்லை எனும் ஆளுமைக் கோளாறு** (**Persecutory paranoia**): இந்நோயுள்ளவர்கள் தம்மைச் சூழ்ந்துள்ளோர் அனைவருமே தமக்கு எதிரிகளாகிவிட்டனர்; ஆதலால் தன் உயிருக்கு ஆபத்து எப்போதும் ஏற்படலாம் என்னும் தவறான கருத்துள்ளவர்கள். தங்கள் மனமருட்சி காரணமாக, வன்முறையில் இறங்கும் சுபாவத்தால், இவர்களே பயங்கரக்

கொலையாளிகளாகவும் மாறிவிடுவார்கள். 2. **பகட்டால் உண்டாகும் தவறான நம்பிக்கை** (**Delusion of Grandeur**): இந்நோயாளிகள் தாமொரு மிகச் சிறந்தவன் எனும் மனமயக்கம் உள்ளவர்கள். Bleuler **கூறுவது போல, இக்கோளாற்றுடன் பிறர் தம்மை வருத்துவதாக உள்ள மனமருட்சியின்** (Persecutory paranoia) **தொடர்ச்சியாகக் கூட இருக்கலாம்**; 3. **ஆன்மிக உணர்வால் உண்டாகும் 'தானொரு சிறந்தவன்' என எண்ணும் ஆளுமைக் கோளாறு** (**Religious paranoia**). **இக்கோளாறு ஆன்மீகத்தை அடிப்படையாகக் கொண்டது. தானொரு சிறந்தவன் ஆனதால், கடவுள் தூதரென அக்கடவுள் நியமனப்படி கூறும் மதத்தைப் போதிக்க இப்பூவுலகில் அவதரித்ததாக அறிவித்துக் கொள்வார்.** 4. **தானொரு மதச் சீர்திருத்தவாதி எனும் மனமயக்கக் கோளாறு**: (**Reformatory paranoia**): இதனால் தன்னைச் சூழ்ந்திருப்போரை நம்ப வேண்டிய நிலையில் உள்ளவர். தனக்கே குணமாக்க முடியாத வியாதி பற்பல இருப்பினும், இவரால் எந்த வியாதியையும் தான் குணப்படுத்த முடியும் எனவும், மத சீர்திருத்தவாதி எனும் எண்ணம் எனவும் கொண்டவர். ((முகம்மதுவுக்குள்ள அதே வியாதி பிறருக்கும் இருந்தாலும் அதைக் கூடக் குணமாக்க முடியுமெனக் கூறிக் கொண்டது போன்றே-Oh! Doctor, heal thyself first with the same medicine which you prescribe to others) 5. **'காம வெறி' பூண்ட ஆளுமைக் கோளாறு** (**Erotic paranoia**): தம் குடும்பத்தில் உள்ள பெண்ணொருத்தி மிகப் பிரசித்தி பெற்ற குடும்பத்தைச் சேர்ந்தவர் என அவரே தீர்மானித்து, அதைக் காரணமாகக் கொண்டே பற்பல பெண்களுக்குக் காதல் கடிதம் எழுதுபவர். 6. **வழக்காடுவதில் நாட்டம் கொண்ட மனப்பாங்குக் கோளாறு** (**Litigious paranoia**): காரணமில்லாமல் மற்றவர் மீது வழக்காடித் தொல்லை தருபவர். இவரே சிலசமயம் கொலை முயற்சியிலும் தம்மை ஈடுபடுத்திக்கொள்வார். 7. **காரணமில்லா மனச்சோர்வால் உடல் நோயுள்ளதாகத் தாமே ஏற்படுத்திக் கொள்ளும் ஆளுமைக் கோளாறு** (**Hypochondrical paranoia**): தமக்கு ஏதேதோ விபரீத வியாதிகள் இருக்கிறது என அநாவசிய எண்ணங்கொண்டு, தம் வியாதிகள் அனைத்துக்கும் பிறரே காரணம் என எப்போதும் எல்லோரையும் சபித்துக்கொண்டிருப்பவர். [284]

**அதிவேக அதி சோர்வு எனும் மனக் கோளாறு** - (bipolar disorder)

அதிவேக-அதிச் சோர்வு மனக்கோளாற்றுக்கு (bipolar disorder) மற்றொரு பெயர் மட்டுமீறிய கருத்துவெறி கொண்ட மனச்சோர்வுடையவர் எனலாம். (manic-depressive) முகம்மதுவுக்கு இக்கோளாறு இருந்தது. பரபரப்பூட்டும் நாடகப்பாணியில் இக்கோளாறு இங்குமங்கும் மனோநிலையில் ஊஞ்சலாடும். ஒரு நிலையில் சோகத்தால் எரிச்சல் கொண்டு, மனமுறிவுற்று மிக்க துயரத்துடன் காட்சியளிப்பார். மற்றொரு நிலையில் இவரே சாதாரணமாகப் பழகுவார். நிலைகள் மாறும்போது மனப்பாங்கும் மாறிவிடுகிறது. அதிவேக-அதிசோர்வு நிலை உண்டாகும் குறிப்பிட்ட காலப் பகுதிகளை மனச்சோர்வு மனப்பாங்கின் இருவகை நிகழ்ச்சிகளாக மனநோய் மருத்துவத்தில் குறிப்பிடுவார்கள். இவ்வாறு மாறுபட்ட மனோநிலைகள் இக்கோளாற்றின் தனிச்சிறப்புகளென வேறுபடுத்தி விளக்கப்படுகிறது.

அதிவேக - அதிசோர்வு**நோய்க்கு அனேக அறிகுறிகள்**:-

**மட்டு மீறிய கருத்துவெறியின் போது**: 1. **எதற்கெடுத்தாலும் எரிச்சலடைவது**; 2. **தகுதி இல்லாத தற்பெருமையால் அளவு கடந்த பூரிப்பு**; 3. **தூக்கமின்மை**; 4. **மிகுந்த உள்ளூரம்**; 5. **திடீர் நினைவோட்டம்**; 6. **எவரும் தனக்கு ஊறு செய்ய இயலாது**

[284] http://www.depression-guide.com/paranoia.htm

எனும் உணர்வு; 7. நியாயம், நேர்மையின்றித் தீர்ப்பளிப்பது; 8. அத்து மீறி அதிகரித்த பாலியல் புணர்ச்சி வேட்கை; 9. தனக்குத் தீங்குள்ள போதும் ஒன்றும் தீங்கில்லை என மறுத்துப் பொய்யுரைப்பது; மனச்சோர்வுள்ளபோது: தன்நம்பிக்கை இழந்த உணர்ச்சி; 10. தான் எதற்கும் லாயக்கில்லாதவன் எனும் தோல்வி உணர்வு; 11. எழுச்சி குன்றிய நிலை; 12. சோர்வுணர்வு; 13. இறந்து போக விருப்பம் அல்லது தற்கொலை எண்ணங்கள் அநேக தற்கொலை முயற்சிகள் போன்றவை.

இப்னு சா'த் எழுதிய ஒரு ஹத்தீஸில் (Tabaqat, Volume 1, Page 371) முகம்மது விவரமாகக் கூறியவாறு உள்ளது: "சில சமயம் முகம்மது அளவுக்கு மீறி அநேக நாட்களுக்கு முடிவிலாமல் பட்டினி கிடப்பதுண்டு. அதே போல, சில சமயங்களில் உபவாசத்தில் விருப்பமில்லாதவர் போல தன்னைக் காட்டிக் கொள்வார்.[285]

இதே ஹத்தீஸுகளில் ஒரு இடத்தில் ரம்சான் மாதங்களிலும் பகலில் உண்ணும் பெருந்தீனியரென்றும், மற்றொரு இடத்தில் பலநாட்களுக்கு உணவின்றி பட்டினி கிடக்க முகம்மதுக்கு முடியுமெனவும் கூறுகிறது. இது போன்ற குழப்பங்களை இஸ்லாத்து ஹத்தீஸுகளில் காணலாம்.

இக்கோளாறு மட்டுமின்றி, முகம்மது வேறு விதமான வியாதிகளாலும் கூட மிகவும் துன்பப்பட்டார். அவ்வியாதிகளுக்கு மருத்துவ சிகிச்சைக்கு வேண்டிய மருந்து விதிகளை இங்கே விதி வகுப்பது நம் குறிக்கோளல்ல. இங்கே அவருக்கிருந்த சில வியாதிப் பிரச்சினைகளைப் பற்றிக் கூடத் தவறாக கணித்திருக்கலாம். இங்கே குறிப்பிட வேண்டிய நோக்கமே முகம்மதுவின் இயற்கைக்கு மாறான விசித்திரப் போக்குகளுக்கு மாற்று வகையில் விளக்கங் கூறுவதுதான்.

Occam's razor எனும் மூலக் கோட்பாட்டுப்படி தேவைக்கு அதிகமான அனுமானங்களைக் நமக்கு நாமே கற்பித்துக் கொண்டு, அநாவசியமாக வாதப்பிரதிவாதங்களில் இறங்கி நேரத்தை வீணாக்கி உழல வேண்டியதில்லை. முடிவாக ஒன்றோ இரண்டோ மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டு மறுக்க முடியாத சான்றுகள் எந்த ஓரிரு தத்துவங்களில் உள்ளதோ அவைகளே சரி என்று நிரூபித்துக் காட்ட முடியுமானால், இவைகளையே "அதிகம் சரியாக இருக்கும் வாய்ப்புள்ள கோட்பாடு" என்று அறிஞர்கள் கூறுவார்கள். (Occam's razor)

எல்லாவற்றிற்கும் மேலாக, அவருடன் கூடவே இருந்ததவர்கள் எழுதி வைத்த நம்பத் தகுந்த (ஸாஹீஹ்) குறிப்பேடுகள் மூலமாகவே (ஹத்தீஸ்-சிரா போன்றவைகளால், உள்ளது உள்ளபடி) முகம்மதுவின் மூளை வியாதிகளைப் பற்றி நிரூபித்துவிட முடியுமே! இவைகளைத் தவிர குரானில் உள்ள ஏராளமான முரண்பாடுகள் மேலும் கூடுதலாக உள்ளதே. முகம்மதுவின் வலிந்துத் தாக்கும் வன்முறைச் சக்தியால், பேச்சிலும் நடத்தையிலும் அளவோடு நடுநிலையிருக்கும் முஸ்லிம் மக்கள் குரல்கள் கூட அன்றிலிருந்து இன்று வரை, முகம்மது போன்ற ஒழுகலாறுள்ள முல்லாக்களால் மௌனமாக்கப்படுகின்றனவே!!!

கோடானுகோடி முஸ்லிம்கள் ஒரு பைத்தியக்காரனின் கோட்பாடுகளில் இன்றும் ஒட்டிக் கொண்டு அவரையே எல்லா விதத்திலும் பின்பற்றும் பரிதாபத்தை என்னவென்று கூறுவது? உலகில் பல முஸ்லிம்கள் இந்நாட்களில் தாங்களும் கஷ்டப்பட்டுக் கொண்டு பிறரையும் மிகக் கஷ்டப்படுத்துகின்றனர் என்பதில் எவ்வித ஆச்சரியமும் இல்லை. முஸ்லிம்கள் தங்கள் ஆதர்ச புருஷனாக முகம்மது எனும் பல மூளைக் கோளாறுகள் படைத்த ஒரு பிறவியை இன்றும் நம்புகிறார்கள். அவரையே எல்லா விதத்திலும் பின்பற்றுகிறார்கள். முஸ்லிம்களின் ஒவ்வொரு பைத்தியக்காரச் செய்கையையும் கவனிக்கும் போது எவராலும்

[285] Tabaqat, Volume 1, Page 371

முஸ்லிம்களையும் முகம்மதுவுக்குப் பிடிதிருந்த அதே பைத்தியக்காரத்தனம் பீடித்துள்ளது என கண்டிப்பாகக் கூறமுடியும்.

இஸ்லாம்தான் இந்நேரத்தில் உலகத்திற்கே மிகப்பெரிய சாபக்கேடான துன்பியல் நாடகமாகும். இவையனைத்துப் பைத்தியக்காரத்தனமும் முஸ்லிம்கள் தமக்குத்தாமே மிகப் பெரியதாக உண்டு பண்ணிக் கொண்டது. உண்மையில் இவையனைத்தும் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. அதனால், அருவருக்கத்தக்க இழிவான இஸ்லாமிய பைத்தியக்காரத்தனமாகும்.

**'ஹீரா' குகையின் மர்மம்**

இப்புத்தகத் தொகுப்பை படித்துத் தவறுகளைத் திருத்தும் பணியில் ஈடுபட்ட நண்பர் சுவாரசியமான ஓர் விமர்சனம் செய்தார். அதாவது ஹீரா குகையில் முகம்மதுவுக்குக் கிடைத்த அருட்போதனைகள் 'டெல்பிஃக்' என்ற அசரீரி குறி சொல்வதை ஒக்கிறது என மிகப் பொருத்தமாகக் கூறினார்.

டெல்பிஃக் அருள்வாக்கு கிடைப்பது ஒரு புராதன கிரேக்கக் கோவிலில் உள்ள தனி இடம். அங்கு ஐரோப்பாவிலிருந்து மக்கள் பாஃர்னாசஸ் மலையிலுள்ள 'பைதியா' (Pythia) என்ற ஆவியுலக இடையீட்டாளரைத் (medium) தங்கள் வருங்காலம் குறித்து குறி கேட்பது வழக்கம். இப்பணியில் வெவ்வேறு ஆவியுலக இடையீட்டாளர்களான பெண்கள் மூலமாக கடவுள் 'அப்போலோ'வே பேசுவார்.

அப்போலோ கோவிலில் ப்லூடார்ச் (Plutarch) என்பவர் பூசாரியாக இருந்தார். இவர் 'பைதியா'வின் அருள்வாக்குகள் பூமியில் இருந்த ஆழமான பிளவிருந்து கிளம்பும் ஈரம் கலந்த ஆவியைக் காரணமாக கற்பித்துக் கூறப்படுகிறது என்பதை அறிவித்தார். இக்கோவிலின் அருகில் சமீபத்தில் தொல்பெருள் ஆராய்ச்சியாளர்கள் அங்கு அடிக்கடி நடத்திய ஆழ்ந்த ஆய்வின்படி, பூமியிலிருந்து கிளம்பும் போதை தரும் புகையே 'பைத்தியா'வின் உதட்டில் சென்று நாக்கின் தடையை நீக்கி அவர்களை அவ்வாறு பேச வைத்தது என்பதைக் கண்டு பிடித்தனர். [286]

ஆக இன்றோ 'அப்போலோ' அருள்வாக்கு எனும் சொல் மரபு, மந்திரம், மாயம் தவறென நிரூபிக்கப்பட்டுவிட்டது. இதைப் பற்றி 2001 ஆகஸ்ட் மாத 'National Geology' வெளியீட்டில், இவ்வாய்வு பற்றி மிக முக்கியத் தகவல்கள் வெளியாகி உள்ளன. அதன்படி, இரு பாறைகளின் வெடிப்பு இக்கோவிலின் நேர் கீழே ஒன்றை ஒன்று சந்திக்கின்றன. (two faults intersect directly below the Delphic temple). இவ்வெடிப்பின் கீழே உள்ள நீர்ச்சுனையிலிருந்து மனமருட்சியை (சித்தப்பிரமையை) உண்டாக்கும் வாயுப் பொருட்கள் (hallucinogenic gas) கசிந்து வருவதாகக் கண்டறிந்தனர்.

'ப்ளூடார்ச்' தனது கருத்தைச் சரியாகத்தான் கூறியிருக்கிறார். "டெல்பிஃக்கில் அங்கிருந்த பாறைகளின் வெடிப்புக்குக் கீழே உள்ள நீரூற்றிலிருந்து ஓர் மயக்கம் தரும் வாயு கிளம்புவது உண்மைதான்" Jelle De Boe, எனும் Connecticut, Middletown Wesleyan University, புவியியல் நிபுணர் (Geological Expert) இதிலிருந்து கிளம்பும் இனிப்புச் சுவையுள்ள மயக்க மருந்தான Ethylene வாயுவால் குதூகல நிலையளிக்கும் (euphoria) போதைப்பொருள் (narcotic) மிதப்பதவும் கூறியுள்ளார்.

Diane Harris-Cline, a classics professor at The George Washington University in Washington, D.C.பேராசிரியர் நம்புவது, 'Ethylene' எனும் மனமருட்சி தரும் வாயுதான் 'பைதியா'வின் ஆழ்ந்த மெய்மறந்த நிலையைக் கொடுத்தது. அப்பெண் நடந்து

[286] John Roach for National Geographic News August 14, 2001
http://news.nationalgeographic.com/news/2001/08/0814_delphioracle.html

கொள்ளும் விதத்தைப் பற்றியும் விவரித்துள்ளார். "இம்மாதிரி சூழ்நிலையில் ஒரு பெண்ணை ஒரு தனியிடத்தில் எந்நேரமும் (மூடிய / பூட்டிய அறையில்) வைத்திருந்தால், அச்சமூகம் எவ்வாறு எதிர்பார்க்கிறதோ அவ்வாறே அதற்குத் தக்கவாறு அருள்வாக்கு அவளுக்கு தன்னால் பீச்சிக்கொண்டு வந்து விடும்" என பேராசிரியர் கூறுகிறார். [287]

இக்கருத்தை ஒட்டியே De Boer என்பவரும் கூறுகிறார். கிரேக்க மரபுப்படி, 'பைதியா' இவ்வருள் வாக்குகளைக் கோவிலின் அடித்தளத்திலிருக்கும் சிறிய மூடிய அறையிலிருந்து கூறுகிறாள். அவ்வறையில் மாதமொரு முறை சென்றாலே யாருக்கும் மிக்க வீரியம் நிறைந்த 'போதை வாயு'வின் தாக்கத்தால் (concentrations of the narcotic gas) ஆழ்ந்த மெய்மறந்த நிலையைக் கொடுத்துத் தன்னாலேயே அருள்வாக்குகளை அள்ளி வீச வைத்துவிடும் என 'De Boer' நம்புகிறார்.

ஹீரா குகையில் மனமருட்சி தரும் போதை வாயுகள் இருக்க முடியுமெனத் தெரிகிறது, முகம்மதுவை அங்கு அடிக்கடி ஈர்க்க இதே ஓர் தூண்டுகோலாக இருந்திருக்கலாமல்லவா? சிறு பிராயத்தில் முகம்மதுவுக்கு பல தடவை ஏற்பட்ட 'பக்கமூளை ஆளுமைக் கோளாற்றால்' (காக்காய் வலிப்பு) கதீஜாவை மணந்த பின்னர், ஹீரா குகைக்கு அடிக்கடி போய்வரும் போது, அங்கு கிளம்பிய மனமயக்கம் தரும் வாயுவால் கூட அவரை மெய்மறந்த நிலையில் மதி மயங்க வைத்திருக்கக் கூடுமல்லவா? அதனால்தான் அங்கு முகம்மது பார்த்த விபரீதத் தோற்றங்களும் அல்லாவிடமிருந்து வந்ததென 'பொய்'யான அருள் வசனங்களும் இந்த ஆனந்த போதை மயக்க வாயுவினால் கூட (ethylene) உண்டாகி இருக்கக் கூடும் என்ற நம் அபிப்பிராயத்தை எளிதில் ஒதுக்கி விட முடியாது. இப்படிப்பட்ட போதை தரும் மயக்க வாயுவின் தனமையை அறிந்து அதனால் ஏற்பட்ட பழக்கமும் அதனால் ஏற்பட்ட கவர்ச்சியால் முகம்மதுவை அடிக்கடி 'ஹீரா' குகைக்குச் செல்வதை ஒரு வாடிக்கையாகக் கொண்டிருந்தார் எனத் திட்டவட்டமாகக் கூறலாம். 'Ethylene' வாயுவை ஓர் மருந்தாகக் கூட உண்ட பின் மிக மன மகிழ்ச்சியோடு இருக்கும் அனுபவம் இருக்குமானால், ஹீரா குகையில் எங்கும் ஊடுருவிப் பரவியுள்ள ethyleneஐ, அடிக்கடிச் சென்று இதே மயக்கம் தரும் வாயுவை கணக்கில்லா எத்தனையோ நாட்களாக உட்கொண்ட முகம்மதுவுக்கு ஏற்பட்ட தாக்கம் எத்தகையதாக இருந்திருக்கும்? மேலும், புதிதாக மணமாகி சிறு குழந்தைகளுடன் இருக்கும் தந்தையான முகம்மது அவர்களை அப்படியே வீட்டிலேயே 'அம்போ'வென விட்டுவிட்டுப் பல நாட்களுக்கு வேண்டிய உணவை மட்டும் மூட்டை கட்டிக்கொண்டு ஹீரா குகையில் தன்னைத் தாளிட்டு இருக்க எப்படி மனது வந்திருக்க முடியும்? ஆகவே முகம்மதுவை அடிக்கடி வரவழைத்த கவர்ச்சிப் பொருள், ஹீரா குகையிலில் பரவிக் கிடக்கும் மதிமயக்கம் தரும் வாயுதான். இது குகைக்குள் எங்கும் காற்றில் பரவிக் கலந்திருந்தால், எப்போதும் அங்கேயே கிடக்க விரும்பும் முகம்மதுவுக்கு ஏற்பட்ட விபரீத அனுபவங்களுக்கும் விருப்பு வெறுப்புச் சொற்களுக்கும் காரணம், என்றால் ஏதும் பெரிய அதிசயம் இல்லை.

ஹீரா குகை ஓர் மிகச் சிறு குளியல் அறை போன்று, 3.5 மீட்டர் நீளமும், 1.5 மீட்டர் அகலமும் கொண்ட மிகச் சிறிய இடம். அல்லா எனும் கடவுளே முகம்மது விளக்குவது போல அவ்வளவு மிக நெருங்கியவரானால், ஏனிந்த மிகச் சிறிய அறையைத் தன் தூதருக்காகப் பொறுக்கி எடுக்க வேண்டும்? அங்கே ஏன் மயக்கம் தரும் வாயுவைக் கலந்து பரப்பி வைக்க வேண்டும்? மயக்கம் தரும்

[287] ibid.

வாயுவைத் தவிர நோயுண்டாக்கும் ஒரு வித காளானால் (fungi), மூடிக்கிடக்கும் குகையிலிருந்து கிளம்பும் நோய் விளைவை உண்டாக்கும் கிருமி கூட அல்லது அதிலிருந்து கிளம்பும் கண்ணுக்குப் புலப்படாத கிருமி நஞ்சு கூட ஒருவர் மூளையை பாதிக்கலாமல்லவா?. பிரபல எகிப்த்திய ‘பிரமிட்’ஐ “பாஃரோக்கள் சாபம்” (curse of the Pharaohs) என அழைப்பதற்குக் காரணம், அந்த மூடிக் கிடக்கும் பிரமிடிலிருந்த ‘காளானா’ல் உண்டானதுதான்.மூடிக்கிடக்கும் குகையில் மிக வீரியம் கொண்ட விஷ வாயு வீசுவதில் ஏற்றத்தாழ்வு உண்டாகலாம். இதுகூட அவ்வப்போது பூமிக்கடியில் உண்டாகும் நில நடுக்கத்தினால் (earthquakes) போதை தரும் சாற்றாலோ அல்லது ஒழுகிச்செல்லும் திரவத்தாலோ, ரசாயனத்தாலோ, விளைவு / தாக்கம் ஏற்படும் வாய்ப்பு உண்டு. இக்காரணகளால் ஹீரா குகையில் மேற்கூறிய விஷவாயுக்கள், ரசாயனங்கள், வியாதிக்குரிய கிருமிகள், காளான்கள் ஆகியவைகளால் இடத்தை மாசுப்படுத்தி இருக்கலாம் (contaminate) எனும் சாத்தியக்கூற்றை ஒதுக்கித் தள்ள முடியாது. இம்மாதிரியே தலைமுறை தலைமுறைகளாக தவறான கருத்துக்கள் பின் சந்ததியினர்களுக்குத் தாரை வார்க்கப்படுகிறது. இடை நிகழ்ச்சியாக இதற்கும் ஓர் முடிவு கட்ட வேண்டியது இன்று இன்றியமையாததாகிறது.

**நான்காவது அத்தியாயம் முடிவுற்றது.**

---0---

# அத்தியாயம் - ஐந்து (5)

# முகம்மதுவின் இரு முக்கிய உடல் நோய்கள்

**(Muhammad’s Physical Ailments)**

----0----

முகம்மது உடல் ரீதியில் மிகவும் நோயுற்றவர். முகம்மதுவைப் பற்றி பல ஹத்தீஸுக்களில் கொடுக்கப்பட்ட விவரப்படியே இவருக்கு இரு வித நோய்கள் இருந்தன என்பதில் சிறிதும் ஐயமில்லை. இதில் முகம்மதுவைக் கொன்றது ‘உடல் மிகைவளர்ச்சி நோய்’தான் (acromegaly).

### உடல் மிகைவளர்ச்சி நோய்

உடல் மிகைவளர்ச்சி நோய் எனும் நோய் மிக அபூர்வமாக, ஒரு மில்லியன் (10 லட்சம்பேர்) ஜனத்தொகையில் மூன்று பேர்களுக்கு ஒவ்வொரு வருடத்திலும் உண்டாகிறதென கணக்கிடப்பட்டுள்ளது. உடல் மிகைவளர்ச்சி ஒரு நோயாக இதை உடல் ரீதியாகவும் மேலும் வேறுபடுத்திக்காட்ட உள இயல்புகள் தொடர்புள்ள அறிகுறிகளாலும் அறிமுகப்படுத்தி இங்கே கொடுக்கப்பட்டுள்ளது.

மெக்காவிலேயே மிகச் செல்வந்தர் மகளான கதீஜா நாற்பது வயதுக்குள் இரு முறை மணந்து மூன்று குழந்தைகளையும் பெற்றுக் கொண்டு விவாகரத்தும் செய்து அச்சமயத்தில் கணவன் என வெற்றிடத்தை நிரப்ப மூன்றாவது கணவனாக வாலிப முறுக்கில் முகம்மதுவைப் பார்த்து காதல் வயப்பட்டு விட்டாள் போலிருக்கிறது. பின் வந்த நாட்களில் தனிப்போக்குள்ள விசித்திர உடல் தோற்றத்தை முகம்மது தன் நோயால் அடைந்ததால், முகம்மதுவுடன் கூட இருந்த சீடர்கள் சொல்லவும்-முழுங்கவும் முடியாமல் இதன் தொடர்பாகத் தங்கள் கேள்விகளால் உண்டாகும் விபரீத விளைவுகளுக்குப் பயந்து வாயைத் திறவாமல் வாளாயிருந்தனர். ‘அனாஸ்’ (Anas) விவரிக்கிறார்: **“அல்லாவின் தூதரைப் போன்று மற்றொருவரை இது வரை பார்த்திராததால், பார்க்க மிக பயங்கர உருவமாக கைக் கால்கள் பருத்து, உள்ளங்கை மிக மிக மிருதுவாகக் காணப்பட்டார்**. [288]

இவைகளைத் தவிர, முகம்மதுவின் கால்களும், முகத் தோற்றமும் அளவுக்குப் பொருத்தமில்லாமல் மிகப் பயங்கரமாகப் பருத்து வீங்கிப் போய் விகாரமாகக் காணப்பட்டது. இதை ‘இமாம் அல்-திரிமிதி’ முகம்மதுவைப் பற்றி எழுதிய ‘தகைமை” எனும் தன் புத்தகத்தில் (manaqib = Merits) பற்பல நம்பத்தகுந்த ஹத்தீஸுகளில் முகம்மதுவின் உடல் இயல்புகளைப் பற்றித் தனிப்போக்கான விகார உருவத்தையும் மிகத் தெளிவாக விளக்கி எழுதியுள்ளார்.[289]

இவைகளை ஆய்வு செய்தாலேயே முகம்மதுவின் உடல் தோற்றத்தைப் பற்றியும் பற்பல நோய்களைப் பற்றியும் மறைச் செய்திகளை விளக்கும் குறிப்புகள் நமக்குத் தெளிவாகக் கிடைக்கின்றன. ஆனால் முகம்மதுவின் சீடர்கள், இவர்

---

[288] Bukhari Volume 7, Book 72, Number 793

[289] Abū ʿĪsā Muħammad ibn ʿĪsā ibn Mūsā ibn ad-Dahhāk as-Sulamī at-Tirmidhī (824-892) was a collector of hadith. His collection, Sunan al-Tirmidhi, is one of the six canonical hadith compilations used in Sunni Islam. The following hadiths are from his collections.

தோற்றம் பற்றி மிகவுயர்ந்த தரம் சார்ந்தது எனவும், கண்களைக் கூசச் செய்யும் காந்தியுடன் ஒளிக்கதிர்களை உமிழ்ந்து முகமும் சந்திரனையே விஞ்சும்படி இருந்தெனவும் ஏதேதோ '**புருடா**'விட்டு ஹத்தீஸுக்களில் எழுதியுள்ளனர். முகம்மது முன்னிலையில் பயபக்தி (மரியாதை கலந்த பயம்) உண்டாகும் எனத் தகுதிக்கு மீறிப் புகழ்ந்துள்ளனர். இவைகளெல்லாம் நமக்கு இங்கு முக்கியமில்லாதவைகள். **ஒரே ஒரு கேள்வி: 'சாஹீஹ்' புகாரியின் ஹத்தீஸே தவறென முஸ்லிம்களால் கூறமுடியுமா?**

இவைகளைப் போல பல பாரபட்சமின்றி மெய்மையைக் கூறும் நம்பத் தகுந்த ஹத்தீஸுகளும் உண்டு. இக்குறிப்புகள் (Tabaqat) '**தபா**ஃ**கத்'**லிருந்து www.livingislam.org எனும் இணையத்திலிருந்து பதிவிறக்கம் செய்யப்பட்டவை.

அலி இதைக் கதையாக கூறுகிறார்: "அல்லாவின் தூதர் உருவத்தில் மிக உயரமானவருமல்ல மிகக் குள்ளமானவருமல்ல. இவருடைய கை விரல்களும் கால் விரல்களும் மிகக் குண்டாகத் திண்ணுறுதியுடன் இருந்தன. இவருடைய கால் கைகள் இணைப்புகளும் மிகப் பருத்துக் காணப்பட்டன. மார்பிலிருந்து தொப்புள் வரை அதிக மயிர் சூழ்ந்து காணப்பட்டது. முகம்மது நடக்கும் போது உயரமான இடத்திலிருந்து தாழ்வான இடத்திற்கு செல்வது போன்று தன் முன்னால் சாய்ந்து அல்லது மெல்ல மெல்லப் பாய்ந்து கூனிச் செல்வது வழக்கம். இவரைப் போன்ற வினோதமான, தனிப்பட்டுக் காணும், வேறொரு உருவத்தை இது வரை எங்கும் பார்த்தத்ததில்லை. இவர் மண்டையும் பருத்து அதிக அடர்த்தியான தாடியுடன் காணப்பட்டார்".

மற்றொரு ஹத்தீஸில், "அவருக்கு இடைத்தர உயரம்தான் இருந்தது. முகம்மதுவின் தலைமுடியிலுள்ள அலைகளும் மிகச் சிறிய அளவில் காணப்பட்டது. இவருடைய முகம் உருண்டை வடிவத்திலிருந்தது. அவர் நிறம் மிகச் சிவப்பாக இருந்தது. கண்கள் கறுத்து, கண்ணிமையின் மயிர் வரிசை மிக நீண்டு பயங்கரமாக இருந்தது. அவர் முதுகும் தோள்பட்டைகளும் பெரிதாக இருந்தன. இவருடைய கை விரல்களும் கால் கட்டை விரல்களும் பருத்திருந்தது. நடக்கும் போது கடுமுயற்சியுடன் கால்களைத் தூக்கி வைத்துக் கூனல் முதுகுள்ளவர் போல (hunchback) உடலை முன்சாய்த்து நடப்பார். **யாரையாவது திரும்பிப் பார்க்கும் போதுகூட முகம்மது தன் உடல் முழுவதையும் திருப்பித்தான் பார்க்க முடிந்தது.** முகம்மதுவின் கழுத்து மேடுபள்ளமற்று வெள்ளிச் சிலை போன்று காணப்பட்டார். இவர் உடலோ, மிகவும் பருத்துக் கொழுத்து முறுக்கேறிய தசைகளுடன் சமதளமான வயிறு மார்புடன் (barbell like = bar to which heavy discs are attached at each end; used in weightlifting) காட்சியளித்தார். முகம்மதுவுடைய தோள்பட்டை இரண்டும் மிகப் பெரிதாக இணைந்து காணப்பட்டது. தன் முழு அங்கியைக் களைந்து உடையற்று இருக்கும்போது மேனி முழுதும் எண்ணைப் பிசுபிசுப்புடன் ஒளி வீசியது. அக்குள், புயங்கள், மேல் முண்டம் ஆகியவை மிக அடர்த்தியான மயிருடன் காணப்பட்டது. அவரது முன்கைகள், உள்ளங்கைகள், விரல்கள், கால் கட்டைவிரல்கள் ஆகியன மிகவும் பருத்து உடல்வகையில் உருண்டு திரண்டு இருந்தது. முகம்மதுவின் கால்கள் மிக மிருதுவாகவும் **அதிலிருந்து தண்ணீர் எப்போதுமே ஒழுகிக் கொண்டுமிருக்கும்.**

மேற்கூறியவைகளையொட்டி, 'ஹிந்த் இப்னு அலி ஹாலா' என்பவரும் குறிப்பெழுதியுள்ளார். "**முகம்மதுவின் மண்டை பருத்து இருந்தது**. இவரது தலைமுடி சுருள்சுருளாகக் காணப்பட்டது. இவரது உடல் ரோஜா மலரின் நிறமாக, மிகப் பரந்த முன்நெற்றியுடன், கண்ணிமைகளிரண்டும் மிக அடர்த்தியாக நடுவில் ஒன்று சேராமல் தனித்தனியே கிடந்தது. புருவமிரண்டின் நடுவில் ஒரு நரம்பிழை

அதாவது (vein=சிரை, உண்முக நாளம்) மிகத் திண்ணிய உருண்டை ரத்தக்குழாயொன்று காணப்பட்டதால் முகம்மது ஓர் முன்கோபக்காரர் எனப் பார்த்தவர் யாருக்கும் கூறாமலேயே கூறிக் காட்டியது. **முகம்மதுவின் மூக்கு கழுகின் அலகு போல் பருத்து நுனியில் வளைந்து காணப்பட்டது**. முகம்மதுவின் தாடி அடர்த்தியுடன் நீண்டிருந்தது. இவரது கன்னங்கள், தாடைகள் மேலுக்குத் தூக்கி இல்லாமல் வாய் மிக திடமானதாகவும் **இரு பல்வரிசைகளுக்கு நடுவில் இடைவெளி அதிகமாகவும் காணப்பட்டது. முகம்மதுவின் பார்வை வானத்தை அண்ணாந்து பார்க்கக் கூட முடியாததால் எப்போதும் பூமியை நோக்கித் தாழ்வாகப் பார்த்தார். எதையும் எவரையும் உற்றுப் பார்க்காமல் மேற்போக்காய்க் கண் பார்வையைச் செலுத்தினார்"**.

முகம்மதுவின் இன்னொரு தோழர் 'ஜபீர் இப்னு சாமுரா' கூறுவது: "முகம்மதுவின் வாயும் கண்ணும் மிகப் பெரியதாகப் பரந்தகன்று காணப்பட்டது" முகம்மதுவின் நெருங்கிய உறவினர், இப்னு அப்பாஸ் வலியுறுத்திக் கூறுவது: **"முகம்மதுவின் முன்பல் வரிசைகளில் மேலும் கீழுமாக இடைவெளி மிகவும் காணப்பட்டது.** இக்கருத்துகளையொட்டியே 'அலி' என்பவரும் கூறுகிறார். மிக முக்கியமான ஸாஹீஹ் அல்-புகாரி தன் <u>ஹத்தீஸில்</u> எழுதியுள்ளவாறு, **"முகம்மதுவின் இரு பாதங்களும் மேல் கால் வீங்கிக் காணப்பட்டன**.[290]

முகம்மதுவின் உடல்நிலை பற்றி அநேக ஹத்தீஸுகளில் குறிப்பிடப்பட்டுள்ளவைகளுடன் மற்ற சாமானியர்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது வேறுபடுத்திக் காட்டும் வகையில் ஓர் பட்டியல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:

மிகவும் பளுவான தடித்த கைகளும் கால்களும்; பரந்த, ஆனால் நீரிட்டுப் பிசைந்த வேக வைக்காத மாவு போன்ற மிக மென்மையான உள்ளங்கை;மிகப் பருத்த மண்டை; பெரிய எலும்புகளுடன் மூட்டுகள்; மிகப் பரந்த மார்பு, முதுகு, தோள்பட்டை மூட்டுகள்; மிக நீண்ட முன்கைகள்; மிக்க நீண்ட பருமனான கை விரல்களும் கால் (கட்டை) விரல்களும்; மிக நீண்ட கொழுப்புச்சதைப் பற்றுடன் கூடிய, மேல் நோக்கியிருக்கும் கழுகு மூக்கு; மிகப் பெரிய வாயுடன் திண்மையான மிகப் பெரிய உதடுகள்; **முண்டைக்கண்**; பல்லுக்குப் பல் இடைவெளி மேல்வரிசைப் பல்லுக்கும் கீழ்வரிசைப் பல்லுக்கும் அதிக இடைவெளியுடன்; வெள்ளி போன்று மின்மினுக்கும் நீண்டகழுத்து; **மினுமினுக்கும் எண்ணை வடியும் தோல்**; அடர்த்தியான தாடி, தலைமுடி; அடர்த்தியான வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் புருவங்கள்; தரையில் நடக்கும் போதும் கூட தாழ்ந்து கூனியிருக்கும் முதுகு (மேல்மாடிக்கு போவது போல); மனவுலைவுடன் நடப்பது போன்று மிக விரைவாகச் செல்லும் பாணி; **கழுத்தை மட்டும் திருப்பிப் பார்க்க முடியாமல், உடல் முழுதுமே திருப்ப வேண்டிய நிர்ப்பந்தம் (உடல் விறைப்பு நடக்கை**); சிகப்பு கலந்த வெளுத்த வியாதி படைத்த தோல்; மட்டு மீறிய வியர்வை கொட்டுதல்; விசித்திரமான துர்நாற்றத்துடன் எப்போதும் உடல் இருப்பதால் இதை மறைக்க அதிக வாசனைத் திரவிங்களை உபயோகிக்கும் வழக்கம்; **ஒட்டகம் போன்று குறட்டை விடுதல்; அதிகத் தலைவலியால், தலையின் இரு பக்கத்திலும் விரல்களை ஆழப் பதித்துக் கொள்ளும் வழக்கம்; வயதான பிறகு பாலியல் ஈடுபாட்டில் ஆண்மையின்மை; உதடுகள் தன்னிச்சையாக அசைதல்;** மேற்கூறியவைகலெல்லாம் ஒரு காட்சிப் பொருள்கள் போன்று பிறரறிய காணப்பட்டதால் உண்டான மிகுந்த விபரீத நாணம்; ஆகியவை **உடல் மிகைவளர்ச்சி**க்கான (acromegaly) அறிகுறிகள் எனலாம். உடல் மிகைவளர்ச்சி என்பது மிக அபூர்வமான நாளமில்லாச் சுரப்பி வகையில் நோயைக் ஒரு

[290] Bukhari Volume 2, Book 21, Number 230

நோய்க்குறித் தொகுதி (endocrine syndrome). **இந்நோய்த் தாக்குதலால்** ரத்தத்தில் கலந்து உடலுறுப்புகளை உசுப்பி விடுகிற உட்சுரப்புக் கசிவு அளவுக்கு மீறி அதிகமாக உடலில் உற்பத்தியாகி எலும்புகளின் கன அளவைத் தேவையின்றி அதிகமாக்கி விட்டது. கை கால்களின் சதைகள் வேறு இறுகிக் கொண்டு, அளவுக்கதிகமாகக் குளிர்ந்து போய்விட்டது. முகம், மண்டை ஓடு, உதடு, மூக்கு, நாக்கு முதலியன அளவுக்கு அதிகமாகப் பெரிதாகிப் போனதால் **மற்றவர்கள் போல நடக்க முடியாமலும் சரியாகப் பேச முடியாமலும் திண்டாடும்படி ஆகிவிட்டது**. தண்ணீர் விட்டுப் பிசைந்த மாவு போன்று உடலும் மிக மிருதுவாகி விட்டது.

உடல் மிகைவளர்ச்சி நோயின் ஆரம்ப கட்டத்தில் இவ்வியாதிக்குச் சரியானபடி சிகிச்சை செய்து கொள்ளாவிட்டால், சுமார் 40 வயதிற்கு மேல் அதிகமாகி, 60-65 வயதிற்குள் நோயால் பாதிக்கப்பட்டவர் இறந்து போகலாம் என இன்று ஐயத்துக்கு இடமின்றி உறுதியளிக்கப்படுகிறது. இதில் **'acro'** என்றால் (உடலின்) அவயவம் / உருவம் எனவும், **'megaly'** என்றாலும் மிகப் பெரியது எனவும் பொருள் கூறல் வேண்டும் ஆக, acromegaly என்பதற்கு '**அளவு கடந்த மிகப்பெரிய உருவம்**' எனப் பொருள் கொள்ள வேண்டும். நோயுற்றவருக்கு எரிச்சலும் வேதனையை அளிக்கும் விஷயம் என்னவென்றால், நீளும் தன்மையுள்ள உறுதியான குருத்தெலும்பும் தசைகளும் சப்பாத்தி மாவென மிக மிருதுவாக அளவுக்கும் மீறி நீண்டுவிடுவதால் காலால் நடமாடுவதற்குக்கூட மிகவும் வேதனைக்குள்ளாகிறார். விரல்கள், கைகள், காலடிகள் ஆகியவை சாதாரண பருமனுக்கும் அதிகமாகவும், தசைகள் மிக மென்மையுடன் பெரிதாக வீங்கியும் போய்விடுகின்றன.

குறிப்பிடும் அளவிற்கு உடல் வளர்ச்சி உடையோருடைய நோய்க்குரிய அறிகுறிகள்:- முகம் வீங்கிப் போய், முன் நெற்றி முன்புறம் அளவுக்கு மீறி நீண்டு போகும்; கீழ்த்தாடை (mandibular protrusion) முன் நீட்டிக் கொண்டு விடும்; மிகப் பெரிய மூக்கு; மிகப் பெரிய காது; நாக்கு தடித்து, பேசும்போது தெளிவாகத் தெரியும் ஒரு விதமான உச்சரிப்பு சரியில்லாமை; உதடும் அளவுக்கு மீறி வீங்கும்; அளவுக்கு மீறி எலும்பும், குருத்தெலும்பு சவ்வு மிருதுவாகவும் நீண்டும் போவதால் **மூட்டு அழற்சி** (**arthritis**) ஏற்படும்; தசைகள் பருமனாகிவிடுவதால், நரம்புகளும் சிக்கிக் கொண்டு, மணிக்கட்டு அடி பருத்து விரல்கள் சூம்பிப் போகும் நோய்க்கு அறிகுறிகள் (carpal tunnel syndrome) ஏற்பட்டு, இதனால் கைகள் உணர்விழந்து, கைகளும் மிகச் சோர்ந்து விடும்; தாடை எலும்பு வீங்குவதால், பற்களின் இடைவெளி அதிகமாகிவிடும் அபாயம் உண்டாகும். [291]

இவைகளைத்தவிர, மற்ற அறிகுறிகளாவன:
குரல் வளை அழற்சியால் பேசுபவர் என்ன சொல்கிறார் என கேட்பவர்களுக்குப் புரிந்துகொள்ள இயலாதவாறு போய்விடும்; காற்று வரும் வழி அடைக்கப்படுவதால் ஏற்படும் குறட்டை; அளவுக்கு மீறிய வியர்வை; இதனால் தோல் துர்நாற்றம்; அளவுக்கு மீறிய பலவீனத்தால் மிகவும் சோர்வு; எப்போதுமே தலைவலி; கண்பார்வை மங்கிப் போதல்; ஆண்மையின்மை அல்லது உடலுறவு கொள்ள இயலாமை; இவைகளைத் தவிர உடலுறுப்புகளான கல்லீரல் (liver); மண்ணீரல் (spleen), சிறுநீரகங்கள் (kidneys); இதயம் (heart) முதலியன அளவுப் பெருக்கம் அடைந்து விடும்.[292]

---

[291] www.scielo.br/scielo.php?pid=S0365-05962004000400010&script=sci_arttext&tlng=en
[292] http://endocrine.niddk.nih.gov/pubs/acro/acro.htm

முகம்மதுவைப் பற்றி இங்கே கொடுத்துள்ள ஹத்திஸுகளில் இவருக்கு அதிக வெளுப்புள்ள செந்நிற மேனியெனக் கூறப்பட்டுள்ளது. இன்னும் சில ஹத்தீஸுகளில், முகம்மது தன் அக்குளை உயர்த்தும்போதும், குதிரையில் சவாரி செய்யும் போதும் தம் துடைகளில் **வெண்படை** அல்லது வெண்குஷ்டம் (leukoderma) இருந்ததாகக் கூறியுள்ளனர். உடல் மிகைவளர்ச்சியுடையோரில் தோலில் சூரிய ஒளிக்கதிர்களால் ஏற்படும் விளைவு ஆதியில் இருந்த நிறம் நீங்கிக் (Hyper pigmentation) குறைந்தது 40% பேருக்கு இருக்கும். இதுகூட நிறத்திட்பம் கூடி உடலுறுப்புகளில் கருமை நிறம் தரும் நாளங்களில் சுரப்பு அதிகரிப்பதால் ஏற்படுகிறது. இதனால்தான் முகம்மதுவின் முகம் செந்நிறமும், மற்ற உடலுறுப்புகளில் சூரிய ஒளி கிடைக்காததால் வெண்நிறத்தோடும் காணப்பட்டது (melanotrophic hormone). உடல் மிகைவளர்ச்சியின் மற்றொரு அறிகுறி- **அடிப்பாதத்திற்கும் (அதாவது உள்ளங்காலுக்கும்), அதன் மேல் பாகத்திற்கும் உள்ள நிற மாற்றம் மிக்க வெளிப்படையான வித்தியாசத்துடன் இருக்கும்** (dorsal-to-sole). இவைகளெல்லாம் மேற்கூறிய ஹத்தீஸுகளில் எல்லா விவரங்களுடன் கொடுக்கப்பட்டுள்ளன.[293]

முகம்மதுவின் உடம்பிலிருந்து அளவுக்கு மீறிய வியர்வை எச்சமயத்திலும் கொட்டிக் கொண்டு இருப்பதால், அது உலர்ந்து அவர் செல்லுமிடங்களெல்லாம் சூழ்ந்திருப்போர்களுக்கு பொறுக்க முடியாத துர்நாற்றத்தைக் கிளப்பிவிட்டது. **இந்த துர்நாற்றம் முகம்மதுவுக்கே பொறுக்க முடியாது; இதை மறைக்க அளவுக்கு மீறிய அத்தர் போன்ற வாசனைத் திரவியங்களை முகம்மது அள்ளிப் பூசிக்கொள்வதுண்டு**. அதிக வீரியமான, அளவுக்கு மீறிய மணத்தால் கூட இருப்பவர்களுக்கு உடலில் புறப்பொருள் நுழைவின் எதிர் விளைவாகத் தலை சுற்றி மயக்கமும் (allergic) ஏற்படும். ஹேகல் என்பவர் ஸாஹீஹ் அல்-முஸ்லிம் ஹத்தீஸிலிருந்து மேற்கோள் காட்டும்போதுகூட ‘முகம்மது தெருக்களில் நடமாடிச் சென்ற பிறகும் அவ்வீதி வழிகளில் முகம்மதுதான் சென்றார் எனத் தெரியும்படி எவராலும் சகித்துக்கொள்ள இயலாத அதிக வலிமையான அருவருப்பு தரும் துர் நாற்றத்துடன் - ஒருவித விபரீத ஆனால் மிக அசிங்கமான வாசனைத் திரவிய கலவையும் சேர்ந்து சில நேரம் நீடித்திருக்கும்’ என ஜபீர் என்பவர்கூட இக்கருத்தை அப்படியே கூறியுள்ளார்.[294]

முகம்மது தன் மனைவியருடன் உடலுறவு கொள்ளத் தேதிவாரியாக முன்னரே தீர்மானித்துக் குறிப்பிட்ட இரவுகளில் பாலியல் இன்பம் நாடிச் செல்லும் போது கூட மிக விழிப்புடன் வாசனைத் திரவியங்களை உடல் முழுதும் அப்பிக்கொண்டு செல்வதில் கண்ணும் கருத்துடன் இருந்தார். ஆயிஷா கூறியதாக, ஹத்தீஸ் சாஹீஹ் அல்-முஸ்லிமில், ‘என்னைத் தவிர மற்ற மனைவியர்களுடன் உடலுறவுக்குச் செல்லும்போது கிடைத்த எல்லா வசனைத் திரவியங்களையும் நானே அல்லாவின் தூதருக்கு அதிகமாக அள்ளிப்பூசி விடுவது வழக்கம்’ என்கிறாள். [295]

மீண்டும் ஆயிஷா கூறுகையில்: “அங்கு கிடைக்கும் வாசனைத் திரவியங்களுக்குள் மிகச் சிறந்த வாசனைத் திரவியங்களைத் தேடிப்பிடித்து

[293] www.scielo.br/scielo.php?pid=S0365-05962004000400010&script=sci_arttext&tlng=en
[294] Muhammad Husayn Haykal (1888, 1956): The Life of Muhammad, http://www.witness-pioneer.org/vil/Books/SM_tsn/ch7s12.html
[295]Sahih Muslim Book 007, Number 2700

அவைகளை முகம்மதுவின் மீது பூசி, அதனால் அவருடைய நெற்றியிலும் தாடியிலும் ஒளி பளபளக்கும்".[296]

முகம்மதுவே கூறுகிறார்: "இவ்வுலகில் என்னால் பெரிதும் நேசிப்பவைகள்: முதலில் பெண்கள், இரண்டாவது வாசனைத் திரவியங்கள்.[297]

முகம்மதுவின் கூட்டாளிகளில் மிக முக்கியமானர்களில் ஒருவரான அல்-ஹஸன் அல்-பஸ்ரி எழுதியுள்ளபடி: அல்லாவின் தூதரைக் கவர்ந்தவை இரண்டு: ஒன்று பெண்கள், மற்றொன்று வாசனைத் திரவியங்கள்"[298]

இன்னொரு இதே ஹத்தீஸ் பதிப்பில் **ஆயிஷா கூறியது**: "முகம்மதுவுக்குப் பிடித்தவைகள் மூன்று: வாசனைத்திரவியங்கள், பெண்கள், உணவு. முதல் இரண்டும் கிடைத்துவிட்டால் உணவைக்கூட நழுவ விட்டு விடுவார்".[299]

உடல் மிகைவளர்ச்சியின் மற்றொரு அறிகுறி, அளவுக்கு மீறிப் பசி உண்டாகும்.. முகம்மதுவுக்கு உணவுக்கு வசதியில்லை என்பதில்லை. இவரிடமோ (கொள்ளையடித்த) ஏராளமான செல்வம் குவிந்து கிடந்தது.[300]

பிறருக்கு உடலழற்சி ஏற்படும் அளவிற்கு முகம்மது தம்மீது வாசனைத் திரவியங்களை அள்ளிப் பூசிச் செல்வதென்பதால் அவர் உடம்பிலிருந்து கிளம்பும் வியர்வை துர்நாற்றம் அவருக்கே பொறுக்க முடியாத அளவிற்கிருந்தது எனப் புரிகிறது. இவருக்கே பெறுக்க முடியவில்லையானால் பிறருக்கு எத்தகைய வேதனையை அளித்திருக்குமென சற்று ஊகித்துக் செய்துகொள்ளவும். இந்த கெட்ட நாற்றத்தை மறைக்கத்தான் அதிகமான வாசனைப் பொருட்களை உபயோகித்தாரென நமக்குத் தெரிகிறது. உடல் மிகைவளர்ச்சி இருப்பதற்கான இன்னொரு அறிகுறி, எந்நேரத்திலும் முகம்மதுவுக்குத் தலைவலி பலமாக இருந்தது. இத்தலைநோவைத் தணிக்கத் தன் நெற்றிக்கு இரு புறத்திலும் இரு கட்டைவிரலால் அழுத்திக்கொண்டிருந்தார்.[301]

ஸாஹீஹ் (நம்பத்தகுந்த) அல்-புகாரி தன் ஹத்தீஸில் இப்னு அப்பாஸ் கூறுவதாக: "முகம்மது தன் **'ஹஜ்'** யாத்திரையில் **'இஹ்ரம்'** (ihram) அணிந்துகொண்டு (**ஓரங்கள் தைக்கப்படாத இரு வெண்மை நிற தனிவகை அங்கிகள், ஒன்றைக் கீழ் இடுப்புப் பகுதியில் உடுத்தவும், மற்றொன்றை மேல் பகுதி உடலில் போர்த்திக்கொள்ளவும் வேண்டும்**. இந்தப் பிரத்யேக அங்கிச் சட்டம் பெண்களுக்குப் பொருந்தாது; எப்போதும் போலக் கருப்பு நிற உடல் முழுதும் மறைக்கும் முழு அங்கியையேதான் உடுத்த வேண்டும்) 'லஹல் ஜமால்' எனும் நீர்நிலைக்கருகில் எல்லோரும் சற்று ஓய்வுடன் இருக்கும்போது முகம்மது, ஒற்றைத் தலைவலியில் தம் இரு கட்டைவிரலால் இருபக்க நெற்றிப்பொட்டுகளை எப்போதும் அழுத்திப்பிடித்துக் கொண்டு ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தார் என புகாரி ஹத்தீஸ்தான் கூறுகிறது. [302] இதை நாம் இட்டுக்கட்ட வேண்டிய அவசியம் எங்கும்

---

[296]அல்-புகாரி Volume 7, Book 72, Number 806
[297] Ahmad and Nasaa`i
[298] Tabaqat, Volume 1, Page 380
[299] Ibid.
[300] Several ahadith say that Muhammad often slept hungry. These are exaggerations to portray him as a long-suffering prophet. How could he go hungry when he had confiscated the wealth thousands of Jews of Arabia and had hundreds of slaves, is a question that only Muslim forgerers of hadith could answer. When Muhammad migrated to Medina, he was poor. However, he soon accumulated a lot of wealth through pillaging.
[301] The ancient process of drawing blood from the body by scarification and the application of a cupping glass, or by the application of a cupping glass without scarification, as for relieving internal congestion. (*Random House Unabridged Dictionary, © Random House, Inc. 2006.*)
[302]Bukhari Volume 7, Book 71, Number 602

இல்லை. உடல் பெருமிகைவளர்ச்சி (Acromegaly) காரணமாக, ரத்த அழுத்தம் அதிகமாக இருப்பதால், ரத்த ஓட்டம் புறக்கோடி எல்லைவரை, கை கால் விரல் நுனிகள் வரை, செல்ல இயலாது. அதனால் முகம்மதுவின் கைகள் கால்கள் ஆகியவை தொடும்போது எப்போதும் குளிர்ந்தே கிடக்கும்.

அபூ ஜுஹைஹ்ஃபா கூறுகிறார் (அல்-புகாரி): முகம்மதுவின் கைகளை எடுத்து என் தலையில் வைத்துக் கொண்டேன். அது பனிக்கட்டியயைவிடக் குளிர்ந்து இருந்தும், அதிலிருந்து கிளம்பிய கஸ்தூரி மணம் கிறங்க வைத்தது! [303]

ஹைகல் இதையும், ஸாஹீஹ் அல்-முஸ்லிம் ஹத்தீஸிலிருந்து ஜபீர் இப்னு சாமுரா கூறுவதென மேற்கோள் காட்டுகிறார்: “எனக்கு நன்றாக நினைவுள்ளது. எனது குழந்தைப் பருவத்தில், எனது கன்னத்தை முகம்மது துடைக்கும்போது அது மிகவும் குளிர்ச்சியுடனும், கடையிலிருந்து புதிதாக வாங்கிய வாசனைத் திரவியம் போலவும் மணமணத்தது.[304]

உடல் மிகைவளர்ச்சியுள்ளவர்களுக்கு முதுகெலும்பு மிகவும் இயற்கைக்கு மாறாகப் பக்கவாட்டிலும், முன்னிருந்து பின்னாகவும் **முதுகெலும்புத் தண்டு வளைந்து** (kypho-scoliosis or humpback or hunchback) காணப்படும். இக்காரணத்தால்தான் முகம்மது எப்போது நடந்து போனாலும், முன்னால் வளைந்து சென்று கொண்டிருந்தார். உள் மூளையின் அடியிலுள்ள நாளமில்லா சுரப்பி தலைவலியையும், உடல் சோர்வையும், உளவியல் வகையில் நெறிபிறழ்வான பார்வையையும், உடலுறுப்புகளை இயக்கும் நீரில் ஏற்றத்தாழ்வுகளையும் உண்டாக்கியது. முகம்மதுவின் உடல்வாகு குண்டாக இருந்தது. ஆனால் வயிறும் மார்பும் ஒரே நேர்கோட்டில் இருந்தன. உடல் மிகைவளர்ச்சியுள்ள நோயாளிகள் பீப்பாய் போன்ற மார்பு கொண்டவர்களாக இருக்கக் காரணம்: முதுகெலும்பு வளைந்ததாலும், விலா எலும்பு உருவ வடிவமைப்பின் மாற்றத்தாலும் (barrel chest due to changes in vertebral and costal morphology) முதுகெலும்பு பருத்தும், நீண்டும் ஒவ்வொரு முதுகு முள்ளெலும்புத் தட்டும் (inter-vertebral discs) தடித்ததால் கழுத்து, இடுப்பு அளவு சிறிதாகி, நெஞ்சுக்கூடு பகுதியோ ஒல்லியாகவும் ஆகிவிடுகிறது. இதனால் முதுகெலும்பு வழக்கத்திற்கு மாறாக பார்க்க அசிங்கமாக வளைந்து (kyphosis) கழுத்து, முதுகு மேற்பகுதி புடைத்தும் காணப்படுகிறது. இக்காரணங்களால் இந்நோயுள்ளவருக்கு பரந்து வளைந்து பருமனாகி தோள்பட்டை மூட்டுகளும் பெரிதாகி விடுகிறது. நெஞ்சுக்கூடும் அதன் குருத்தெலும்பும் (costochondral junctions) மிக வீங்கி அதே தெளிவாகப் புடைத்து நீண்டு போய்விடுகிறது. இந்நோயால் உடல் உள்ளமைப்பு மறுபடியும் மாற்றி அமைக்கப்பட்டு விட்டதால், எப்போதும் நெகிழும் தன்மையுள்ள மார்பு இயக்கவியல் (elastic chest mechanics) குறிப்பிடும் வகையில் அங்கிருக்கும் சுவாசத் தசைச் செயற்படுதலைப் பழுதாகிச் சுவாசித்தலில் சோர்வை உண்டாக்கி, உடல் மிகைவளர்ச்சி நோயின் உண்மைத் தன்மையை வெளிக்காட்டி விடுகிறது. மூச்சு விடுவதில் ஏற்படும் இடர்பாட்டால் ரத்தத்திற்கும் தசைகளுக்கும் வேண்டிய பிராணவாயு கலப்பதில் சிரமம் உண்டாகிறது. இதனால்தான் இந்நோயாளிகள் எப்போதுமே நீண்ட சுவாசம் செய்கின்றனர். தண்ணீர் உட்கொள்ளும்போது கூட நிறுத்தி நிதானித்துச் சிறுகச் சிறுகப் பருக வேண்டியதாகிறது. இதைத் தொடர்ந்து இடைநிகழ்ச்சியாக, இங்கேயே இதைக் கூறிவிட வேண்டும். **ஏன் முகம்மதுவின் இக்கோரமான உருவை ஓவியமாக வரைவதை முஸ்லிம்கள் மறுப்பதோடு மட்டுமின்றி, அப்படி யாராகிலும் ஓவியங்களை (கேலிச்சித்திரங்களாக்கிக் கூட) வரைந்து தொலைத்தால்**

---

[303] Bukhari Volume 4, Book 56, Number 753
[304] Sahih Muslim 2/256

**உலகெங்கும் சண்டை சச்சரவு, குண்டுவெடிப்பு, நடுச்சாலைகளில் தொழுகை, கொலைகளென வெவ்வேறு இடங்களில் உலகெங்கும் நடக்கின்றன**. இப்போதாவது காரணம் உங்களுக்குப் புரிகிறதா!! இதற்காகக் கலவரங்கள், வன்முறைக் கொலைகள் முதலியன நடக்கின்றன. இஸ்லாத்துக்கும் முஸ்லிம்களுக்கும் சுய சிந்தனை கிடைக்க வழி கிடையாதா?

இப்னு சா'த் ஒரு ஹத்தீஸில் அனாஸ் கூறுவதை மேற்கோள் காட்டும் போது: "முகம்மதுவுக்கு மிக்க தாகமாக இருந்தாலும் மற்றவர்கள் போன்று கிடைத்த தண்ணீரை ஒரே மடக்கில் குடிப்பது போலல்லாமல் அவர் எப்போது தண்ணீர் குடித்தாலும் அதை மூன்று மடக்கு குடிப்பது வழக்கம். ஏனெனில் முகம்மதுவால் ஒரே மூச்சில் தண்ணீரனைத்தையும் குடிக்க இயலாது! ஆனால், இப்பழக்கம் தனக்கு மிக எளிதாகவும் குடிப்பதற்குச் சுவையாகவும் உள்ளதெனச் சொன்னார்" (பாவ்லா). இவ்வாறு கூறிய பின்னர், அனாஸும் முகம்மதுவைப் பின்பற்றி முழு மூச்சை உள்ளே முதலில் இழுத்துக்கொண்டு **மூன்று மடக்கில் தண்ணீரை அருந்துவது வழக்கமாக்கிக் கொண்டார். இதுவும் சுன்னாவில் உள்ளதால், 'ஷரியா சட்டமாகிவிட்டது'**. உண்மையில் உடல் மிகைவளர்ச்சி இருந்ததால், முகம்மதுவுக்கு சொற்பமாகவே மூச்சு உள் இழுக்க முடியும். அதனால் அவர் செய்த அதே மூன்று மடக்குகளில் தண்ணீர் குடிக்கும் பாணியை முஸ்லிம்கள் இன்றும் கடைபிடிக்கிறார்கள்! ஏனெனில் இவைகளெல்லாம் 'ஷரியாவில் இணைக்கப்பட்டுள்ளது!!. **'முகம்மது சொல்வதையும் செய்ததையும் செய்**!' இதுதான் இஸ்லாம்!! இச்செயல், முஸ்லிம்கள் 'அல்லாவின் தூதரை' எவ்வளவு தூரம் மூளையின்றிப் பின்பற்றுகிறார்கள் என்பதைத்தான் மீண்டும் மீண்டும் உறுதி செய்கிறது. மேற்கூறிய ஹத்தீஸுகளைக் காட்டிலும், இன்னும் அனேக ஹத்தீஸுகள் முகம்மதுக்கு சுவாசத்தசை பழுதாகி விட்டதால் மிகக் குறுகிய மூச்சை மட்டுமே உள்இழுக்க முடிந்தது எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனால் முகம்மது மிக அதிக நேரம் எடுத்துக்கொண்டு பேசுவது மட்டுமல்லாமல், இதற்கிடையில் மீண்டும் மீண்டும் உள்மூச்சை இழுத்துக் கொள்வது வழக்கம். **இப்னு சா'த் ஆயிஷாவின் சொற்களில் இவ்வாறு மேற்கோள் காட்டுகிறார். "முகம்மதுவால் தொடர்பாகவும் வேகமாகவும் பேச இயலாது. அவரது பேச்சு விட்டுவிட்டுத் தொடர்பற்று, அப்படிப் பேசினாலும் மிக மெதுவாகத் தெளிவில்லாமல்தான் பேச முடிந்தது"**. [305] இதைவிட ஓர் சான்று தேவையா? இதைத் தொடர்ந்து **"முகம்மது பேசுகையில் கேட்பதற்கும் இனிமையாக இருந்ததில்லை; ஒவ்வொரு சொல்லையும் நீட்டி நீட்டி, ஆனால் சொற்களின் உச்சரிப்பு மிக உறுதிப்பாட்டுடன் இருந்தது**.[306]

உடல் இயக்கச்சிதைவு மாறுபாட்டால் இந்நோயாளிகளுக்கு மிக அதிகமாக வியர்வை உண்டாகிறது (hyperhidrosis). இது இப்படி ஏற்படக் காரணம் வழக்கத்திற்கு மாறாக அதிக வெப்ப நிலையை சகித்துக்கொள்ள இயலாததால், உடலில் எண்ணை அதிகமாக உற்பத்தியாகி தோலில் (sebum) அதிக எண்ணைப் பசபசப்பு ஏற்படுகிறது. இதனால் அவருடலிலிருந்து துர்நாற்றம் தன்னிச்சையாக ஏற்பட்டு விடுகிறது. இதனால்தான் துர்நாற்றத்தைப் போக்க **முகம்மது தன்னை அடிக்கடி தண்ணீரால் துடைத்து விட்டுக்கொண்டு, வாசனைகளை அப்பிக் கொள்வதை வழக்கமாக்கிக் கொண்டார்**. இதுவும் 'ஆக்கிரமிப்பு எண்ணக் கட்டாயச் செயல் நோயாலும் ஏற்படுகிறது (obsessive compulsive disorder = OCD). முகம்மது இறந்து போவதற்கு ஐந்து நாட்களுக்கு முன், அவரது காய்ச்சல் அதிகமாகி இதனால் மயக்கமுற்றார். "என்

[305] Tabaqat Volume 1 page 361
[306] Ibid. page 362

மீது ஏழு பானை (qirab) அளவிற்கு தண்ணிரை ஊற்றவும். இதற்குப் பிறகுதான் உடல் நாற்றம் குறைந்து, நான் மக்களைச் சந்திக்கச் செல்ல முடியும்" என முகம்மது தன் மனைவிகளுக்குள் ஒருவருக்குக் கட்டளையிட்டார். **முகம்மது ஏன் தன் உருவப்படத்தை வரைவதற்குத் தடை விதித்தார் என இப்போதாவது புரிகிறதா? காரணம் முகம்மது தம் முகம், உடல் ஆகியவைகளின் விகாரத் தோற்றத்தைப் பற்றி எப்போதுமே விழிப்பு நிலையிலிருந்தார்.** அதனால்தான் முகம்மது எல்லோரும் எப்போதுமே தன் போதனைகளில் மட்டுமே கவனத்தைச் செலுத்த வேண்டுமெனவும், அதுவே முன்னுரிமைக்குரியது எனவும் தன் உருவ அமைப்பை மறைத்து இவ்வாறு கூறிக்கொண்டார். **மேலெழுந்தவாரியாக 'உருவத்தை வரையக் கூடாதென சொல்லிக் கேட்கத் 'தன்னடக்கத்தைக் காட்டுவதாக'த் தென்படும்;** ஆனால் அதன் பின்னணி உண்மையில் மிக அருவருப்பைத் தரும் செய்தி என நமக்குப் புலப்படும். சாதாரணமாக இயக்க போதனை செய்வோர் படத்துடன் அவர் போதனையைக் குறிப்பிடுவது வழக்கம். முகம்மது தம் போதனைதான் முன்னூரிமைக்குரியது, தம் உருவமல்ல எனக் கூறியதன் காரணம்: தம் உருவம் மிகக் குரூபமானதால் இச்செய்தியை மறைக்க இவ்வாறு திரித்துக் கூறுகிறார் எனப் பளிங்குக்கல்லென மிகத் தெளிவாகத் தெரிகிறது. உடல் மிகைவளர்ச்சி உடையவர்களுக்கு மனநோய்க்குரிய மற்ற அறிகுறிகளான ஆளுமை மாற்றங்கள்தான் இந்நோயை வேறுபடுத்திக் காட்டுகின்றன. உடல் மிகைவளர்ச்சி உள்ளவர்களுக்குத் தான்தோன்றி ஒலிகள், காட்சிகள், மனமருட்சி அல்லது மாயத் தோற்றங்கள் எனப் பல்வகையில் உண்டாகின்றன என Denzil Pinto, A.T. Safeekh, and Mohit Trivedi இம்மூன்று நிபுணர்கள் ஒருங்கே கருதுகிறார்கள்: Bleuler என்பவர்தான் முதன்முதலில் உடல் மிகை வளர்ச்சி (acromegaly) நோயுள்ளவர்களுக்கு உள்ள மன நோய் மருத்துவத்திற்குரிய அறிகுறிகளைப் பற்றி ஆழ்ந்து ஆராய்ச்சி செய்தவர். இவர் விவரிப்பது: 1. ஆளுமை மாற்றங்களுடன் சில நேரங்களில் திடீர் உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டும், இன்னும் சில வேளைகளில் களிப்புடனும், தன்நிறைவுடனும் மாறிமாறிக் காணப்படுவர்; 2. இந்நோயுள்ளவர்களுக்கு மிகக் கவலையுடன் அடிக்கடி முன்னும் பின்னுமாக மனம் ஊசலாடும் (brady phrenia). மனநோயால் மந்த புத்தியுடன் செயல்படுவார்கள்; 3. இன்னும் சில வேளைகளில் தன்முனைப்புள்ள காரியங்களிலும், எவருக்கும் எந்த இடர்பாடு தன்னால் உண்டனாலும் சற்றும் கவலையின்றியும் இருப்பார்கள்.

Avery and Margo எனும் இருவர் உடல் மிகைவளர்ச்சி நோயுள்ளவர்கள் மனச்சோர்வுடன் இருப்பர் எனக் குறிப்பிட்டுள்ளனர்; Sivakumar and Williams எனும் இருவர் சேர்ந்து செய்த ஆராய்ச்சியின்படி இந்நோயுள்ளவர்கள் மனச்சோர்வுடனும், நோய்சார்ந்த சூதாட்டம் போன்ற முயற்சிகளில் ஈடுபட்டு எப்படியாகிலும் தங்கள் நோக்கங்களை அடைய எதிர்பார்ப்பார்கள்; 1983இல் Pye and Abbott எனும் இருவர் செய்த ஆராய்ச்சிகளின்படி இந்நோயுள்ளவர்களுக்குப் பைத்தியமும் சேர்ந்தே இருக்கும். இதற்காக மருத்துவம் பார்க்கும் நோயாளிகள் பிறர் தங்களுக்கு தொல்லை கொடுப்பதாக எப்போதும் புகாரளிப்பார்கள். மனமயக்கமும், தான்தோன்றி ஒலிகளும் காட்சிகளும் ஒருங்கே இவர்களுக்கு எங்கிருந்தோ கிடைக்கும்; Spence என்பவர் கூற்றும் Pye and Abbott கூற்றும் ஒன்றாகவே உள்ளன.[307]. முகம்மதுவின் அந்திம காலத்தில் சாவு நேரம் நெருங்கும் போது உடல் நோவு மிக அதிகமாகி விடாத கடுந்தொல்லைகளோடு துன்பப்பட்டார். முகம்மதுவின் மனைவிகளுக்குள் கடைசி மனைவியான ஆயிஷா இவ்வாறு கூறினார்: "**அல்லாவின் தூதர் போன்று சாகும் நேரத்தில் இவ்வளவு கஷ்டங்களை ஒருங்கே அனுபவித்தது போல**

[307] http://www.ncbi.nlm.nih.gov/pmc/articles/PMC2918321/

**நான் வேறொருவரையும் இதுவரை பார்த்ததில்லை**.[308]. அல்-புகாரியும் இவ்வாறு தன் ஷத்தீஸில் எழுதியுபடி: இந்த ஹத்தீஸ்ஸிலும் ஆயிஷா கூறுகிறார்: "முகம்மதுவின் முடிவுகாலத்தில் சீடர்கள் இருவர் அவரைத் தாங்கித் தூக்கிக் கொண்டு என்னிடம் வந்தனர். அப்படி வரும்போது முகம்மதுவுடைய கால்களில் நடக்க வலுவு இல்லாத்தால், தொளதொளவென தொங்கிப்போய் கால்களிரண்டும் பின்னிக்கொண்டு தரையில் தேய்த்துக்கொண்டே இழுத்து வரப்பட்டார். அல்லாவின் தூதருக்கு இருந்த நோய் மிக அதிகமானதால், மற்ற மனைவியர்கள் அளித்த அனுமதியின் பேரில் என் வீட்டிலேயே நானே அவரைப் பேணிக் காத்தேன். [309]




கீழே உடல் மிகைவளர்ச்சி நோயுள்ளவர்களுக்கு உள்ள உடல் அமைப்பு மாற்றங்களைப் பற்றிச் சில விளக்கப் படங்களுடன் நிரூபிக்கப் குறிக்கப்பட்டுள்ளன. ஆயிரம் சொற்களில் கூறுவதை விடச் சில படத்தின் மூலம் நிரூபித்து விடலாம்: இடப் புறத்தில் உள்ள சாதாரணக் காலடியைக் காட்டிலும் வலப் புறத்திலுள்ள காலடி உடல் மிகைவளர்ச்சிப் பாதிப்பால் மிக குண்டாகவும் உடற்சுமையால் பூமியில் ஆழ்ந்து படிந்துமுள்ளது. முகம்மதுவுக்கு இந்நோய் (**Acromegaly**) இருந்ததற்கு ஹத்தீஸுகளில் உள்ள தக்க சான்றுகளைத் தவிர வெண்கலத்தில் வார்ப்பு செய்யப்பட்ட பதிப்பும் உள்ளது.



[308] Sunan Ibn Majah 1622
[309] Sahih Bukhari, 11:634



Photo of teeth showing classic teeth gapping due to acromegaly on lower jaw. இப்புகைப்படத்தில் உடல் மிகைவளர்ச்சி உள்ளவருக்குக் கீழ்த் தாடையில் உள்ள பற்களின் வரிசையில் அதிக இடைவெளி இருப்பதைக் கவனிக்கவும்





Maurice Tillet (1903- 1955), உடல் மிகைவளர்ச்சி உள்ளவருடைய தத்ரூபமான படம். இவர் ஒரு மல்லர். இதைத் தன் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர். புத்தி கூர்வுள்ளவர். பி்ஃரான்ஸ் நாட்டில் பிறந்தவர். 14 மொழிகளில் பேசத் தெரிந்தவர்.

உடல் மிகைவளர்ச்சி உள்ள வருக்குக் குறிப்பிடத் தக்க தனி விதத்தில் பெரிதாக உள்ள தாடை அமைப்பு, மூக்கு, நெற்றி எலும்பு கரடு முரடாகவும் பின் கழுத்து வீங்கியும் இருக்கும். இங்கே முகத்திற்குரிய மாற்றங்களைக் கூர்ந்து கவனிக்கவும்.

ஆண்மையின்மை

(Erectile sexual dysfunction with libido intact)

முகம்மதுவுக்கு அல்லாவின் அருளால் (??) பலருடன் ஒருங்கே பாலியலில் ஈடுபடும் வலிமை இருப்பதாகப் பொதுவாகவே முஸ்லிம்கள் நம்புவது வழக்கம். இவர்களுக்கு ஹத்தீஸில் உள்ளது என்பதானால் (அதாவது 'ஷரியா' சட்டமாகி விட்டால்) அதுவே (ஸாஹீஹ்) நம்பத் தகுந்ததாகியும் விட்டது. ஒரு ஹத்தீஸில் முகம்மதுவின் பணிப்பெண் சல்மா கூறுவது: " முகம்மது சாகும் போது இருந்த ஒன்பது மனைவியருடன் ஓரிரவில் பாலியலில் ஈடுபட்டார். இவருக்கு ஒன்பது மனைவிகளைத் தவிர ஏனைய மனைவிகளும் உண்டு. ஆனால் இவர்களை இறக்கும் தருவாயில் விவாகரத்து செய்துவிட்டார். ஒவ்வொருவராக உடலின்பம் அனுபவித்த பின்னர், நீராடும் சடங்கை முடிக்க என்னை தண்ணீர் கொண்டு வரச் சொல்லிக் கட்டளையிட்டார். உடல் துர்நாற்றமாக எப்போதுமே இருந்ததால் அப்போது நான் அவரை 'ஒரு குளியல் போதுமா' எனக் கேட்டேன். ஆம்! அதுவே மிக தாராளமானது. மேலும் ஒரு குளியலே என்னைக் கழுவிச் சுத்தம் செய்யும்" என்றார். ((முகம்மது பிறருக்கு விதிமுறை வகுத்ததில், ஒரு பெண்ணுடன் உடலின்பத்தில் களித்த பிறகு குளிக்கும் சடங்கு (Ghusl) செய்யவேண்டும்!!). [310]

ஆயிஷா கூற்றுக்கும் பணிப்பெண் கூற்றுக்கும் உள்ள முரண்பாட்டைக் கவனிக்கவும். கால்கள் தொளதொளவென்று கால்கள் பின்னிக்கொண்டவர் சல்மா கூறுவது போன்று பாலியலில் ஈடுபட்டிருக்க முடியுமா? யோசித்து முடிவு செய்து கொள்ளவும்!! இஸ்லாத்தில் - உள்ளது போன்று சொல்வது கட்டாயமில்லை. சிலர் இப்படித்தான் வாழவேண்டும் என வாழ்வர்; ஆனால் இஸ்லாத்தைச் சேர்ந்தவர்கள் எப்படியும் வாழலாம் என்றுதான் இருப்பர்.

எது எப்படி இருப்பினும், நான் மேற்கொண்ட ஆராய்ச்சிப்படி, முகம்மதுவின் ஆண்மை வீரியம் என்பதே ஒரு பொருளற்ற பேச்சு அல்லது பிதற்றலெனலாம் (hogwash). உண்மையில் தம் **வாழ்க்கையின் கடைசி இருபது வருடங்களுக்கு முகம்மது ஆண்மையின்றி** (sexual erectile dysfunction) இருந்து மட்டுமல்லாமல், மன நிறைவுபடுத்த இயலாத **பால்வினை விழைச்சு** இருப்பினும் (insatiable libido) அதைத் தம் பெண்களிடம் உடலின்பம் அனுபவிக்க இயலாமல் பெண்ணுறுப்புகளைத் தொட்டு மட்டுமே திருப்திபடும்படி நேர்ந்து விட்டது. (Problem of poverty in plenty!! When you want it you can't have it! Pity!)

நெதர்லாந்து Utrecht பல்கலைக்கழகம் மேற்கொண்ட ஆராய்ச்சியில், உட்பகுதி மூளை தன்னிச்சையாக **'நாம் நலத்துடன் இருக்கிறோம்' எனும் வேதியல் சார்ந்த ரசாயனப் பொருட்களை உண்டாக்கி அதன்படி உடலின்பப் பசியைப் பெருக்கி அல்லது தணித்து அதன்படித்தான் செயல் நிறைவேற்றம் புரிய வைக்கிறது என்ற கருத்தை ஆராய்ச்சியின் முடிவாக நமக்களிக்கிறது**.[311]

மற்றொரு ஆராய்ச்சியில் ஆராய்ச்சியாளர்கள் 'அதிவேக அதிசோர்வு'ள்ள நோயாளிகளுக்கு (bipolar patients) முதன்முதலில் மருத்துவச் சிகிச்சை செய்ய ஆரம்பிக்கும் போது அவர்களுக்கு ஏற்கனவே உள்ள மட்டுமீறிய வெறியால்

[310] Tabaqat Volume 8, Page 201

[311] W. R. Van Furth, I. G. Wolterink-Donselaar and J. M. van Ree. Department of Pharmacology, Rudolf Magnus Institute, University of Utrecht, The Netherlands http://ajpregu.physiology.org/cgi/content/abstract/266/2/R606

உடலில் அபினிசார் வேதிப் பொருட்கள் அதிக அளவில் இருப்பது போன்று உடலியக்கத்தில் அதிக மாற்றம் (higher opioid activity) உண்டாவதைக் கவனித்தனர்.[312]

தற்காதலரான முகம்மதுவுக்கோ அடிக்கடி முழுமூச்சாய் அங்குமிங்குமாக ஊசலாடும் மனம் வழக்கமாகவே இருந்தது. பல சமயங்களில் இன்னிறைவு உணர்வுற்று முழு உற்சாகத்துடன் இருப்பார்; மற்ற சமயங்களில் மனச்சோர்வுற்றுத் தற்கொலை செய்துகொள்ளும் அளவிற்கு மிகவும் துன்புற்றுக் கிடப்பார்.

முகம்மதுவுக்கு இவ்வளவு அதிகமான பால்வினை வெறியார்வமிருந்தும் (high libido) இதை நிறைவேற்றிக் கொள்ள கேட்க ஆளில்லாமல் உடலுறவுக்கேற்ற கணக்கில்லாத பெண்களும் நிறைந்து இருந்தும், கதீஜா இறந்த பிறகு, முகம்மதுவுடன் உடலுறவு பூண்ட ஒருவருக்காவது குழந்தை பெற்றுக் கொள்ள ஏன் முடியவில்லை என இக்கண்டுபிடிப்புகள் நமக்குக் கூடுதலாகவும் தெளிவாகவும் அறிவிக்கின்றன. முடிவாக, முகம்மது அந்நாட்களில் (கதீஜா இறந்த பிறகு) அல்லாவே சபித்தது போன்று உடலுறவே கொள்ள இயலாதிருந்தார் என்றே நமக்குத் தெரிகிறது. **கதீஜா இறக்கும்போது முகம்மதுவுக்கு வயது 45.**

இருப்பினும் எனது கருத்தியலில் ஓர் ஓட்டையும் உள்ளது. **பல ஆதாரங்களின்படி, முகம்மதுவின் கடைசி காலத்தில் ஆண்மையற்றும் அறுபது வயதான பின்னரும் எப்படி இவருக்கு 'இப்ராஹீம்' எனும் ஆண் மகவு பிறந்திருக்க முடியும்? முகம்மது மணந்துகொண்ட 'மரியா' எனும் வெளுப்பு உடம்புடன் சுருண்ட தலைமுடி கொண்ட அழகான பண்டைக்கால எகிப்து மரபைச் சார்ந்த கிறித்தவ** (Coptic) **அடிமைப் பெண்ணுக்கு இப்ராஹீம் பிறந்தான்.** முகம்மதுவின் மற்ற அரபு நாட்டு மனைவிகள் இவளை அடியோடு வெறுத்தனர். இக்குழந்தை முகம்மதுவுக்குப் பிறக்காமல் வேறொருவருக்குப் பிறந்தது என சந்தேகப்படும்படி நம்மை வைத்துவிடுகிறது. ஆனால் இதை நிரூபிக்க என்னால் ஆரம்பத்தில் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. பின் ஆராய்ச்சிக்குப் பயன் (இப்போது) கிடைத்தது.

இப்னு சா'த் விவரித்துக் கூறிய ஹத்தீஸ் ஒன்று என் கவனத்தை ஈர்த்தது. *(*Tabaqat. Volume 8, Page 224*)*. இதன்படி, **'மாபுர்' என்ற உடல்கட்டுள்ள எகிப்திய வாலிபன், தன் மரபு சார்ந்த 'மரியாவை'யும் அவள் சகோதரி 'சிரீன்' என்பவளையும் எகிப்திலிருந்து மதீனாவுக்கு வழித்துணையாக உடன் அழைத்துச் செல்வதுண்டு.** ஓர் வதந்தியாக இவன் மரியாவின் கள்ளக் காதலன் எனவும் கூறுவார்கள். இவள் மதீனாவின் வடக்குப் பகுதித் தோட்டத்தில் இருந்தாள். அச்சமயத்தில்தான் முகம்மது இவளுடன் மூழ்கிக் களித்தார். இதைக் கவனித்த முகம்மதுவின் ஏனைய மனைவிகள் மிகப் பொறாமை கொண்டு மரியாவை அடியோடு வெறுத்தனர். இப்பொறாமைச் செய்தி முகம்மதுவின் காதுக்கெட்டியது. 'அலி' என்பவனை 'மாபுரை'க் கொல்ல விரைந்தனுப்பினார். தன் கையில் கத்தியுடன் வேகமாக வந்து கொண்டிருக்கும் 'அலி'யைக்கண்ட 'மாபுர்' தன் முழு அங்கியை உடலுறுப்பு தெரியும்படி வரை தூக்கிக் காண்பித்தான். அவனுக்கு எந்த உடலுறுப்பும் (genital organ = awra(t)h) அங்கில்லாததால் மாபுரைக் அலி கொல்லாது விட்டுவிட்டான். [313]

இது அச்சமயத்தில் இவ்வதந்திகளை ரகசியமாக முடிவு செய்ய ஒரு 'குற்றமறுப்பு' வாத'மாக ஆயிற்று. ஆனால் ஆயிஷா மற்றொரு குற்றச்சாட்டை மரியா மீது கூறினாள். அதன்படி சபி∴வான் எனும் இளைஞன் இவளுடைய

[312]www.ncbi.nlm.nih.gov/entrez/query.fcgi?cmd=Retrieve&db=PubMed&list_uids=6271019&dopt=Abstract
[313] Tabaqat,. Volume 8, Page 224

கள்ளக்காதலன் என கூறியது மிகுந்த அமளியை உண்டாக்கியது. பிறகு இவ்வதந்தியை முறியடிக்க ஆயிஷாவே இவனொரு 'ஆண்தன்மையற்றவன்' எனப் பின்னர் வலியுறுத்தினாள்! தபாரி தன் ஹத்தீஸில் எழுதினார்: "அல்-முகா:கி:ஸ் என்பவன் 'மாபுர்' எனும் ஆண்மையற்ற அடிமையோடு இரு எகிப்திய மரபு கிறித்தவப் பெண்களை அடிமைகளாக "அல்லாவின் தூதர்" முகம்மதுவுக்குப் பரிசளித்தான். இதில் ஒருத்திதான் 'மரியா'. மிகக் கவர்ச்சியான இந்த அழகியை முகம்மது தன் காமக்கிழத்தியாக்கிக் கொண்டார். இவள் சகோதரி 'சிரீன்' என்பவளை பாலியல் அனுபவிக்க அல்-ஹஸ்ஸனுக்கு முகம்மது பரிசளித்தார். சிரினுக்கு ஒரு ஆண்மகன் பிறந்தான். அவன் பெயர் அப்துல் அல்-ரஹ்மான் இப்னு ஹஸ்ஸன். வேறொருவருடன் 'மரியா' பாலியலில் ஈடுபட்டாள் எனும் குற்றச்சாட்டு எழுந்தது. அதில் குற்றம் புரிந்ததாகச் சொல்லப்படும் 'மாபுர்' அல்லது சபி:வான் என்பவர் இருவருக்கும் ஆண்மகனுக்கேற்ற உடலுறுப்பே இல்லை என நிரூபணமான பின்னர் அவனை 'அலி' என்பவன் கொலை செய்யவில்லை.[314]

மாபுர் என்பவன் கதை முற்றிலும் புனைந்தியற்றப்பட்டது. இன்னொரு மரபுப்படி இவன் ஒரு வயதானவன் எனவும் சொல்லப்படுகிறது. இவையெல்லாம் ஹத்தீஸைப் படிப்போரைக் குழப்பமூட்டச் செய்யும். மாரியா, சிரீன் எனும் இரு எகிப்திய மரபுப் பெண்களை 'ஒரு கிழவன் பாதுகாப்பு வழித்துணையாக மதீனா வரை அனுப்பி இருக்க முடியுமா?' எனும் சந்தேகமும் உடன் உருவாகி குழப்பத்தில் நம்மை ஆழ்த்தி விடுகிறது. இவ்விருவரையும் அல்-முகா:கி:ஸ்தான் முகம்மதுவுக்கு பரிசளித்தான். எப்போதுமே குடும்பத்தலைவனாக ஒரு ஆணே இருக்கும் குறுகிய மனப்பான்மையுடன் பெண்களை தன்மானக் கொலை புரியும் (Honour killing) சமூகத்தில் இக்கதையெல்லாம் ஹத்தீஸைப் படிப்போரை இன்னும் திகைப்பூட்டிக் குழப்பமுறச் செய்ய இயற்றப்பட்டதே எனத் தெரிகிறது.

இன்னொரு கதை, 'இப்ராஹீம்' பிறந்தவுடன் முகம்மது தந்தையானதைக் கொண்டாட காப்ரியேல் வாழ்த்துரை வழங்க வந்தபோது அவன் கூவிக் கூறிய சொற்கள் "Assalamo Alaikum ya aba Ibrahim," (Peace to you o! Father of Ibrahim) என ஓர் மரபும் உண்டு. இந்த ஹத்தீஸும் இதனால் முகம்மது இனப் பெருக்கும் திறன் இருந்ததெனத் தெரிவிக்கப் பின் நாட்களில் உருவாக்கிய ஒரு போலி எனவே தெரிகிறது. எது எப்படி இருந்தும் முகம்மதுவின் காமக்கிழத்தி - 'மாரியா'வுக்கே அக்குழந்தை 'இப்ரஹீம்' பிறந்து பின்னர் சில நாட்களுக்குப்பின் இறந்தது பற்றி எவரும் மறுக்க முடியாதல்லவா! ஏனெனில் முகம்மதுவே அக்குழந்தை இரங்கல் தொழுகையின்போது கல்லறையில் உணர்ச்சி வசப்பட்டு வைதுரையில் கூறிய விவரங்கள் இஸ்லாத்து புனித நூல்களில் உள்ளன. அதையும் இப்புத்தகத் தமிழ் மொழிபெயர்ப்பில் காண்பிக்கப்பட்டுள்ளது. இக் குழந்தை ஒன்று முகம்மதுவுக்குப் பிறந்திருக்க வேண்டும். அவரோ இச்சக்தியை இழந்தவர். ஆக இயலாது. அடுத்து **மாரியா வேறொருவருடன் உண்டான உடலுறவால்தான் சூலுற்று 'இப்ராஹிமை'ப் பெற்றெடுத்தாள் என உறுதிப் படுகிறது. ஆனால் முகம்மதுவின் கவனிப்பில் இருக்கும் மணமாகாத இவளொரு அடிமைப் பெண். மேலாக இவளொரு இளவயதுள்ள அழகு மங்கை. இந்த ஆதாரம் போதாதா?** இப்னு சா'த் மேலும் எடுத்துரைக்கிறார். இப்ராஹீம் பிறந்தவுடன் முகம்மது இக்குழந்தையை மிகக் களிப்புடன் தூக்கிக்கொண்டு ஆயிஷாவிடம் காட்டி "இக்குழந்தையைப் பார். இது என் சாயலாக உள்ளதல்லவா?" எனப் பெருமகிழ்ச்சியுடன் கூறியதற்கு "இக்குழந்தை உங்கள் சாயலில் இல்லவே இல்லை" என முகத்தில் அடிப்பது

[314] The History of Al-Tabari: The Last years of the Prophet, translated and annotated by Ismail K. Poonawala [State University of New York Press (SUNY), Albany 1990], Volume IX, p. 147

போன்று படு எரிச்சலுடன் கூறினாள். முகம்மது விடாப்பிடியாக, "பார். என்னைப்போல உருண்டு திரண்ட கன்னங்கள் இருப்பதைப் பார்" எனும் போது ஆயிஷா," எல்லா குழந்தைகளும் பிறந்தவுடன் கன்னங்கள் கொழுத்துதான் இருப்பதுதான் வழக்கம்" என்றாள்.[315]. இதையும் தவிர முகம்மதுவுக்கு நாற்பது மனிதர்களுக்குரிய ஆண்மை இருந்தது என்பதும் ஒரு அண்டப்புளுகு எனக் கூறமுடியும். நாற்பது வயதான கதீஜாவுடன் வாழும்போது அவளுக்கு ஆறு குழந்தைகளைப் பெற்றுக்கொள்ளக் கருவுறச் செய்ய முடிந்தது. இக்குழந்தைகள் முகம்மதுவுக்கு 25 வயது முதல் 35 வயது வரை பிறந்தவைகள். இதன் பின்னர் முகம்மதுவுக்கு ஏராளமாக மனைவிகள், அடிமைகள், காமக்கிழத்திகளென ரகவாரியான தயார் நிலையில் உள்ள பெண்கள் இவருக்கு உடலின்பம் அளிக்கக் கிடந்தும் முகம்மதுவால் ஒருவருக்காவது குழந்தை பிறக்காததுதான் அதிசயமாக இருக்கிறது. இதனால் 'இப்ரஹீம்' முகம்மதுவுக்குப் பிறக்கவில்லை எனவும் உறுதியாகிறது.

Henri Jean Pascal Gastaut, French neurologist (1915-1995) எனும் பி்ஃரான்ஸ் நாட்டு நரம்பமைப்பு ஆய்வு வல்லுனர், **ஆணுறுப்பு நிமிர்ந்திருக்க இயலாமல் ஆனால் பால்வினையார்வம் மட்டும் சற்றும் குறையாது பக்கமூளை வலிப்புடன் இருக்கும்** (Erectile dysfunction with intact libido in men with epilepsy) ஆண்களைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் 1950ம் ஆண்டு முதல் ஆய்வு செய்து வருகிறார்.[316]

Pritchard என்பவர் 'சிக்கலான பகுதியளவு பக்கமூளை வலிப்பால்' (complex partial epilepsy) விளையும் ப்ரோலக்டின் "மிகைச்சுரப்பு" (hyper prolactinemia) என்பதுதான் பக்கமூளை வலிப்புள்ள ஆண்களின் பாலியலில் ஈடுபட இயலாமையை (male sexual dysfunction in epilepsy) உண்டு பண்ணுகிறதெனச் சான்றின்றி ஊகமாய்க் கொண்ட ஆய்வுக்கு பொருள் விளக்கமளித்துள்ளார்.[317]

மேற்கூறிய சில பத்திகளுக்கு முன்பாக, முகம்மது உணர்வுடன் ஈடுபட்டதாக இருப்பினும் ஆனால் மெய்யாக உடலுறவில் ஈடுபட இயலாது இருந்ததாக ஒரு ஹத்தீஸ் உள்ளது. மற்றொரு ஹத்தீசில் உடலுறவில் ஈடுபட இயலாது, முகம்மது தன் மனைவிமார்களுக்கு அதிகபட்சமாகப் பாலியல் உணர்ச்சியூட்டும் உடலுறுப்புகளை மட்டும் மிகுந்த வேட்கையுடன் தடவிக் கொடுக்கத்தான் முடிந்தது எனவும் உள்ளது. தன் மனைவியர் எல்லோரிடமும் ஒரே இரவில் சில தடவை பாலுறவு கொள்ள முடியாததால் உணர்ச்சியூட்டும் முன் விளையாட்டு நடவடிக்கையில் மட்டும் அவர் ஈடுபட்டார் எனவும் ஹத்தீஸில் உள்ளது. ஆயிஷா எடுத்துரைத்தபடி, "உண்மையில் உடலுறவு கொள்ளாது தன் மனைவியரின் பாலியல் உணர்ச்சியூட்டும் அங்கங்களை அன்புடன் தடவிக் கொடுக்க மட்டும் உலகில் வேறொருவருக்கில்லாத தற்கட்டுப்பாடு முகம்மதுவுக்கு மட்டுமேதான் இருந்தது" எனவும் கூறியிருக்கிறாள்.[318]

இவைகளில் எதை நம்பித் தொலைவது? மற்றொரு இடத்தில் **ஆயிஷா கூறுவது: "அல்லாவின் தூதருடைய பிறப்புறுப்புகளை** (awra(h)t (genitalia)) **நான் என்றுமே கண்டதில்லை"** எனவும் கூறி இருக்கிறாள்.[319]

மேற்கூறியவைகளால் முகம்மதுவுக்கு பாலியலில் அளவு கடந்த அவா இருந்ததில்லை எனக் கூற வரவில்லை. கணித்தற்கரிய அளவிற்கு மேலாகவே

---

[315] Tabaqat Volume I, page 125

[316] Gastaut H: So-called psychomotor and temporal epilepsy: a critical study. Epilepsia 1953; 2: 59-76.

[317] Pritchard P: Hyposexuality: a complication of complex partial epilepsy. Trans Am Neurol Assoc 1980; 105: 193-5.

[318] Sahih Bukhari *Volume 1, Book 6, Number 299.*

[319] Tabaqat Volume 1, page 368

இருந்தது. பாலியலுக்காக எவரை வேண்டுமானாலும் அணுகி அழைக்கும் எந்த வாய்ப்பையும் முகம்மது நழுவவிட்டதில்லை. இது இவருடன் பிறந்த இயல்பூக்கம். முகம்மதுவின் மாதர் வாழும் பகுதியில் (harem) கணக்கில்லா மனைவியர், அடிமைகள், காமக்கிழத்திகள் என வகை வகையான பெண்கள் பாலியல் இன்பத்தை அளிக்கத் தயாராக இருப்பினும் இன்னும் அளவில்லாத பாலியல் வேட்கை விருப்பம் தணியாது இருப்பதற்குக் காரணம், அவர் உண்மையில் உடலுறவு கொள்வதில் பசியடங்காது இருப்பதைத்தான் பகிரங்கப்படுத்துகிறது.

இன்னுமொரு ஹத்தீஸில் 'பானி ஜெளன்' (Bani Jaun) மீது திடீர்த் தாக்குதல் நடத்தும் போது, ஜெளனியா என்னும் ஒரு இளம் குழந்தைப் பருவப் பெண் தன்னைப் பாலூட்டிப் பேணி வளர்த்த செவிலியுடன் பிடிபட்டவுடன் அவளை முகம்மதுவின் முன் சீடர்கள் நிறுத்தினர். அப்போது முகம்மது, "உன்னை என்னிடம் தந்துவிடு" அதாவது "உன்னிடம் பாலியலில் ஈடுபட விரும்புகிறேன்" என்றார். இதற்கு அப்பெண் அடங்காக் கோபத்துடன் கடுமையாக எதிர்வாதம் புரிந்தாள். "உன் சரித்திரம் என்னவென்று அறிந்தவள் நான். மேலும் மிகச் சாதாரண கிழவனான உன்னிடம் ஒரு நாட்டு இளம் இளவரசி தன்னை உடலுறவுக்காக அர்ப்பணிக்க எப்போதாவது சம்மதித்துவிடுவாள் என பகற்கனவு காண்கிறாயா?" எனக் கேட்டவுடன் அவளை அடிக்க முகம்மது தன் கையை ஓங்கியவுடன், அப்பெண், "அல்லாவே! இம்மனித மிருகத்திடமிருந்து என்னைக் காக்க உன்னிடம் தஞ்சமடைகிறேன்" என பெருங் கூச்சலிட்டாள்.[320]. தன் குற்றத்தை உணர்ந்த முகம்மது உடனுக்குடன் இப்பெண்ணிடம் வெண்மை நிற அங்கியை அளிக்கத் தன் சீடர்களுக்கு ஆணையிட்டார். கொடுக்கப்பட்ட வெள்ளை அங்கியைப் போன்று இன்னும் பல அங்கிகளை பெண் கைதிகளுக்குத் தங்கள் அவயவங்களை மூடி மறைத்துக் கொள்ள முகம்மது தன்னுடன் என்றுமே கொண்டு வந்ததில்லை. இவ்வங்கிகள் இவளிடமோ அல்லது இவளைப் போன்ற பெண்களிடமிருந்து களவாடியதுதானே!. முகம்மது எந்த பெண்ணுக்காவது அங்கிகளை தானாகவே பரிசாக அளிக்க முன்வந்திருக்கிறாரா?! முகம்மதுவுக்கு பெண்களின் அங்கிகளை வலுக்கட்டாயமாகக் கிழித்துக் களைந்து வன்புணர்ச்சியில் ஈடுபடத்தானே தெரியும்!

ஜெளனியா ஒரு சின்னஞ்சிறு குழந்தையாகத் தன் செவிலித்தாயுடன் அங்கு முகம்மதுவுக்கெதிரில் வந்திருக்க வேண்டும். முகம்மது போன்ற எவரையும் ஒரு நொடியில் கொன்று போடும் சக்தியுள்ளவரிடம் இவ்வளவு துணிவாக, வெடுக்கெனப் பதிலளிக்க ஒரு துடுக்கான பெண் குழந்தையால்தான் இப்படிக் கூற முடியும்! சின்னக் குழந்தையையும் அடிக்கக் கையோங்கிய பின்னரும், செயலில் மெய்ப்பித்துக் காட்ட முகம்மது போன்ற ஒரு மனித மிருகத்தாலும் முடியவில்லையே!

இந்த ஹத்தீஸை அராபிக் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பு செய்தவர் தாமாகவே 'மணப்பெண்ணாக' எனும் தன்நிலை இடைச்சொல்லைப் (parenthesis) புகுத்தியுள்ளார். இச்சொல் எனக்குத் (Dr Ali Sina) தெரிந்த அராபி மொழியிலுள்ள மூலப்பாடத்தில் அப்படி இல்லை. அராபிக் மூலபாடத்தில் "habba nafsika li" என்று தான் உள்ளது. 'ஹப்பா' எனும் சொல் 'மணம்" என்பதற்கு அராபிக் மொழியில் உபயோகிப்பதில்லை (?). அதற்கு உண்மைப்பொருள் ......!! மேலும் விமரிசிக்க ........ இதற்குத் தக்க வார்த்தைகளை இங்கு கூற....!!. முகம்மது இப்பெண்ணை அடிக்கக் கையோங்கியதன் காரணம் எவ்வகையாலும் இன்னும் மேலும் பேசவிடாமல், அமைதிப்படுத்தத்தான். ஆனால், மொழிபெயர்த்தவர் முகம்மதுவின் பொருத்தமற்ற இச்செயலான, 'அடிக்க' எனும் சொல்லுக்கு பதிலாக

[320] Bukhari Volume 7, Book 63, Number 182:

'மெதுவாகத் தட்டி' எனத்தான் மொழிபெயர்த்துள்ளார். அராபி மொழியில் **ahwa** என்று உள்ளது. இது "hawa" என்றில்லை. "hawa" என்றால் **காற்றுப்** போன்று மெல்லத் தட்டு எனும் பொருளாகும். Ahwa எனும் சொல்லுக்கு வேகத்துடனும், வலிமையுடனும் பூமியைத் தோண்டும் '**கடப்பாரை**'யால் **இடிப்பதற்கு ஒப்பாகும்**. கடப்பாரையால் மெல்லத் தட்ட முடியுமா? கடப்பாரையை பூமியில் ஓங்கிக் குத்தத்தான் முடியும் என்பதை நினைவில் கொள்க! இங்கு இன்னுன்றையும் கவனிக்க. முஸ்லிம்கள் தமக்கென திரித்துக் கூறுவதில் உள்ள நிபுணத்துவத்தைக் கவனிக்கவும்! இதற்கும் மேலாக, அக்குழந்தைப் பெண் "இம்மனிதனிடமிருந்து என்னைக் காக்க அல்லாவிடம் தஞ்சமடைகிறேன்" என ஏன் பெருங்கூச்சலிட வேண்டும்? ஏன் முகம்மது பண்பில்லாமல் அக்குழந்தையை வன்செயலால் வலிந்து நையப் புடைக்கத்தானே தன் கையைத் தயாராக ஓங்கி இருக்கவேண்டும்? குரானில் உள்ள வன்முறைக் கொடுஞ் செயல்களை முழுதுமாக ஆழ்ந்து சொல்ல இயலாது, ஹத்தீஸுகளோ ஆங்கிலத்தில் உள்ள மொழிபெயர்ப்புகளையே சார்ந்திருக்க நேரிடுகிறது. இம்மொழிபெயர்ப்பாளர்களோ, படிக்கும் மக்களுக்குக் காதுக்கு அருவருப்பாகவும் கடுமை நிறைந்ததும் உள்ள தகாத சொற்களை உருமறைப்புச் செய்து, மக்களை 'தக்கியா' என்று ஏமாற்ற வண்ணப்பூச்சுச் சொற்களாக மிகக் கனிவான, அடக்கமான, இதமான சொற்களையே உபயோகித்துள்ளனர். என்ன செய்து தொலைவது?

இதனால் முகம்மது ஒரு புனித மனிதன் எனப் பொருள் கொள்ளப் பல இடங்களில் ஒரு காட்சிப்பொருளென உள்ளது. இஸ்லாமிய அராபி மொழிபெயர்ப்பில் எங்குமே மொழிபெயர்ப்பவருக்கு எவைகள் ஏற்றதோ அவைகளை உபயோகிக்கவும் எது ஏடாகூடமாக இருக்குமோ அப்பத்திகளை மட்டும் வசதியாக விட்டுவிட அவர்கள் தயங்குவதில்லை. என்ன செய்வது? ஹத்தீஸ் மற்ற மொழிகளில் செய்யப்பட்டபோது மொழிபெயர்ப்பாளர்கள் உலகத்தோரை இவ்வாறுதான் ஏமாற்றி இருக்கிறார்கள். தமிழில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ள குரான் ஹத்தீசுகளும் இதில் அடங்கியவை. அங்கங்கே பல கடுஞ்சொற்கள் முற்றிலும் விழுங்கப்பட்டு அல்லது உருமறைக்கப்பட்டுக் கனிவான சொற்களே உபயோகிக்கப்பட்டுள்ளது அல்லது மிக அருவருப்பான சொற்களை அப்படியே மொழிபெயர்க்காமலும் கைவிட்டனர் எனத் துணிவுடன் ஆதாரபூர்வமாகக் கூற முடியும்! முகம்மதுவின் ஆண்மையற்ற தன்மையை எவரும் நிரூபிக்கும்போது அதை வீண் கற்பனை, ஊகம் என முஸ்லிம்கள் தட்டிக் கழிப்பதுண்டு. இப்னு சா'த் கூறியதை (இப்னு சா'தின் ஆசிரியர்) வாகிஃதியின் மேற்கோளை அப்படியே கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

அல்லாவின் தூதர் முகம்மதுவே கூறியதாக உள்ளது. 'மற்றவர்கள் போலல்லாமல் எனக்கு உடலின்பத்தில் ஈடுபாடு கொள்ள எனக்கு உடல் வலிமையே இல்லாதிருந்தது. அல்லா எனக்காக சமைக்கப்பட்ட மாமிசத்தை ஒரு பானை நிறைய அனுப்பியிருந்தார். நான் அதை உண்ட பிறகுதான் ஓரளவுக்காவது என் மற்ற காரியங்களில் கவனம் செலுத்த முடிந்தது'. [321]

இதுதான் குரானை இயற்றிய மூல மனிதர் அல்லாவின் தூதர் முகம்மது தானே தன் வாயால் கூறி குற்றத்தை ஒப்புக்கொண்டது. ஆகவே நம்பத்தகுந்தது. (This is the confession straight from the horse's mouth). இதற்கும் மேல் இனி ஹத்தீஸில் மனம் போன போக்கில் கூறப்பட்டுள்ள பாலியலில் முகம்மதுவுக்குள்ள வலுவைப் பற்றிய மொழிபெயர்ப்புகளை, அதாவது நம்பத்தகாத கட்டுக்கதைகளை படிப்பறிவில்லா அந்நாட்களில் வாழ்ந்த அரேபியரை ஏமாற்றக் கூறியவற்றை, இனி

.[321] Tabaqat Volume 8, Page 200

நம்புவதோ அல்லது ஏற்க மறுப்பதோ படிப்பவர்களிடமே விட்டு விடுறேன். அக்கால அரேபியர் மிக அதிகமாக மதித்தது பாலியலில் தங்களுக்குள்ள ஆண்மையைத் (வலிமை) தான். இதைப் பற்றி எப்போதுமே தற்பெருமையாக கூறிக் கொள்வார்கள். முகம்மதுவின் ஆண்மையின்மையை மறைத்து, புகழ்ச்சி உரையால் (gasconading) மட்டுமே ஏதேதோ கூறி இதைச் சரியீடு செய்யப்படுகிறதா? 'உடல் மிகைவளர்ச்சி நோய்' (acromegaly) இருந்தும் பாலியலில் அதிக வலுவைக் கொடுக்க மட்டும் முகம்மதுவுக்கு சமைத்த மாமிசத்தை அனுப்பிய அதே அல்லா, முகம்மதுவின் பொறுக்க முடியாத ஒற்றைத் தலைவலிக்கு (migraines) மருந்தோ அல்லது மாயமோ, அல்லது முன்மாதிரி மாமிசத்தைச் சமைத்தோ ஏன் அனுப்பவில்லை? அல்லது அப்படியே தொல்லைப்படட்டுமே எனத் தண்ணீர் தெளித்து விட்டுவிட்டாரா? சர்வ வல்லமையுள்ள அல்லா (omnipotent) தன் சீடர் முகம்மதுவுக்கு நோயில்லா உடலைத் தமது சக்தியால் உண்டாக்கத் தெரியவில்லையா? அல்லாவுகே வெளிச்சம்! அல்லாவுக்குச் சரிசமான படித்தர முகம்மதுவுக்கு இச்சிறு உடல்கேட்டுக்கு (ஒற்றைத் தலைவலி, உடற்பெருவளர்ச்சி முதலியவைகளுக்கு) மருந்து கூடவா காப்ரியேல் மூலம் குரான் வாஹி அனுப்பியது போல அனுப்ப இயலவில்லை? அல்லது அல்லாவுக்கு அதிகப் புணர்வு செய்ய மட்டும்தான் மாமிச-மருத்துவம் பார்க்கத் தெரியுமா?

அதே ஹத்தீஸில் அடுத்து இவ்வாறும் மாற்றிக் கூறப்பட்டுள்ளது. (அல்லாவிடமிருந்து) காப்ரியேல் எனக்காக சிறு மட்கலத்தில் உண்ண உணவு கொண்டு வந்தான். இதிலுள்ளவற்றை உண்ட பின், எனக்கு நாற்பது மனிதர்களின் ஆண்மையும் ஒருங்கே ஏற்பட்டுவிட்டது"[322] (சற்று மேற்கூறிய Tabaqat Volume 8, Page 200ஐ படித்துக் கொள்ளவும்). ஆக முகம்மதுவின் ஆண்மையின்மையை மூடிமறைக்க ஒரே நூலிலிருந்து ஒரே விஷயத்தில் கூறப்பட்டுள்ள முரண்பாடுள்ள அடுத்தடுத்து வரும் அறிக்கைகள் யாவுமே பொய்யாகப புனைந்து இயற்றப் பட்டவைதான் என இப்போது நமக்குத் தெளிவாகப் புலப்படுகிறது. நிரந்தரமான தன்நலவேட்கைவெறி கொண்ட தற்காதலரான தலைவர் முகம்மது ஓர் ஆண்மையற்றவர் என்பதை முஸ்லிம்களால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை எனத் தெளிவாக நிரூபிக்கப்பட்டுவிட்டது. இம்மாதிரி முகம்மதுவின் வாழ்க்கை வரலாறுகளை ஆழ்ந்து துருவிப் படித்தால் அதில் மறைந்து கிடக்கும் அனேக ரகசியங்களை வெளிக் கொண்டுவர முடியும். இப்ராஹீம் தனக்குப் பிறந்ததாக இருக்க முடியாதென முகம்மதுவுக்கு உள்ளூரத் தெரியும்' ஏனெனில், அச்சமயத்தில் வெகு வருடங்களாக அவருக்கு உடலுறவு கொள்ள முடியாத உடற் கோளாறிருந்தது; உலகத்திற்குத் தம் மிக அழகான எகிப்திய அடிமை, ஓர் விபசாரி என ஒப்புக்கொள்ள முடியாதவாறு தன்மானம்/ 'கைரா' குறுக்கிடுகிறது!. அக்குழந்தை சில நாட்களில் இறந்தும் போனது காரணம் யாரோ - அல்லது என்னவோ? இறந்துபோன அன்று, மசூதிக்குச் சென்று அவனுக்காகத் தொழுகை நடத்தினார். தொழுகை முடிந்த பின், மசூதி மேடையிலிருந்து இரங்கலைப் பேச வேண்டிய சமயத்தில், விபசாரமும் அதற்கான தண்டனைப் பற்றியும்கூட ஓர் விளக்கப் பேருரையை உக்கிரமான எருது போல உறுமினார்: "அல்லாவை நம்பும் சீடர்களே! அல்லாவைக் காட்டிலும் 'கைரா", அதாவது தன்மானமுள்ளவரும், மானக்கேடான விஷயங்களை வெறுப்பவரும் வேறொருவர் இருக்க முடியாது. இதனால் அல்லாவின் தீர்ப்புப்படி, எந்த அடிமையும் ஆணானாலும் பெண்ணானாலும் விபசாரக் குற்றம் (தகாத உடலுறவு) கொள்ளக் கூடாது. முகம்மதுவின் சீடர்களே! எனக்குத் தெரிந்ததை நீங்கள் அறிவீர்களானால்,

[322] Ibid.

உங்களால் கொஞ்சம்தான் சிரிக்க முடியும்; அதிகமாக அழத்தான் நேரிடும்" என அல்-புகாரி ஹத்தீசில் முகம்மது கூறியும் இருக்கிறார். [323]

தன் பிரசங்கத்தில் இன்னும் சொல்லழுத்தம் சேர்ப்பதற்கு, முகம்மது "எனக்கு (மீரஜ் - சுவர்க்க யாத்திரையில்!) மோசமான நரக நெருப்பு காட்டப்பட்டது" என்றார்.[324] . இப்ராஹீம் இரங்கல் கூட்ட பிரங்கத்திற்கும் 'மீரஜ்' சுவர்க்க யாத்திரைக்கும் நரக நெருப்புக்கும் என்ன சம்பந்தம்? இப்பிரசங்கத்தின் உட்பொருள் 'மரியா'வின் காது வரை எட்டவே சொல்லப்பட்டதா? 'மாரியா' முகம்மதுவுக்கு அடிமை; அவளுக்கொரு ஆண் குழந்தை உண்மையில் பிறந்தது. அதற்கு 'இப்ரஹீம்' எனப் பெயரும் இடப்பட்டது. ஆனால் முகம்மதுவுக்கு ஆண்தன்மை இல்லை என்பதும் உண்மை. முகம்மதுவின் ஆண்தன்மை இன்மையால் இக்குழந்தை முகம்மதுவுக்குப் பிறக்க வாய்ப்பில்லை. மரியாவோ அழகான இளவயது நங்கை! அவளுக்குள்ள பாலியல் தாகத்தைத் தணித்துக்கொள்ள வேறொருவருடன் உடலுறவு கொண்டு இக்குழந்தையை ஈன்றிருக்கலாமல்லவா? 'பட்டா' முகம்மது பேரில் இருந்தாலும் 'அனுபவ பாத்யதை' மற்றொருவரிடம்தானே இருந்தது! இது தானே உண்மையும் கூட!! பாவம்! முகம்மது!!

**ஐந்தாவது அத்தியாயம் முடிவுற்றது.**

---0---

[323] Bukhari, *Volume 2, Book 18, Number 154:*
[324] Bukhari, *Volume 1, Book 8, Number 423:*

## அத்தியாயம் - ஆறு (6)

## இஸ்லாமிய இயக்கம் எனும் விபரீத வெறிப்பற்றீடுபாடு இயக்கம்

### (Cult of 'Islam')

----0----

எதிர்பாராத விதங்களில் திடீரென நிகழும் முஸ்லிம்களின் வரம்பு மீறிய விபரீத இஸ்லாமிய வெறிப்பற்றீடுபாட்டால் விளையும் பயங்கர வன்முறைச் செயல்கள் சாதாரண பொதுமக்களுக்கு மிகவும் குழப்பத்தையும் அதிர்ச்சியையும் ஆத்திரத்தையும் ஒருங்கே உண்டாக்கி விடுகிறது. உண்மையைச் சொன்னால், மனப்பூர்வமாக இஸ்லாத்தின் மீதும் முஸ்லிம்களின் மீதும் அளவுகடந்த வெறுப்பு இதனால்தான் தன்னிச்சையாக ஏற்பட்டுவிடுகிறது. எப்படியாவது இஸ்லாமியம் இல்லாத மனித உலகமாக ஆக்கிவிட ஏற்ற வழிமுறைகளைப் பற்றிச் சிந்தித்து செயலாற்ற அமெரிக்கா, நெதர்லாந்து, ஜெர்மனி, பிஃரான்ஸ் போன்ற அநேக நாடுகளில் ஏற்பாடுகள் அணிகளென ஏற்கனவே வகுக்கப்பட்டு வருகின்றன.

சாதாரணமாக, கடவுள், மதம் என எண்ணும்போது - சிந்தனை, சொல், செயல் ஆகியவைகளில் வன்முறைக்கு என்றுமே எங்குமே இடமில்லை என மக்கள் உள்ளத்தில் நிரந்தரமாகப் பதிந்துள்ளது. ஆனால் இஸ்லாத்துக்கு மட்டுமே சிந்தனை, சொல், செயல் ஆகியவைகளில் வன்முறைக்குத்தான் முதலிடம். **கடவுளும் வன்முறையும் ஒன்றுக்கொன்று எதிர்மாறானவை என ஒரு பண்டைக்காலத்து பெசன்டைன் பேரரசரை** (Byzantine Emperor) **மேற்கோளாகக் 'கத்தோலிக்க வடிகன் போப்' ஒரு சொற்பொழிவில் கூறிவிட்டார்** என்பதாலோ, உலகெங்கும் சம்பந்தா சம்பந்தமில்லாத இடங்களிலுள்ள கிறித்தவ சர்ச்சுகளையும் யூதக் கோவில்களையும் (**சினகாக் / சைனகாக்** - Synagogue) கொளுத்தித் தீக்கிரையாக்கி, கொலை கொள்ளை குண்டுவெடிப்பு எனத் திட்டமிட்டு எல்லாவிதக் கொடுஞ்செயல்களிலும் முஸ்லிம்கள் இறங்கி விடுகிறார்கள். இன்னும் எத்தனையோ சொல்லோண்ணா வெறிச்செயல்களில் ஈடுபட்டு, குற்றமில்லாத மக்களுக்குக் கொடுந்தொல்லைகளைக் கொடுக்கிறார்கள். இவ்வன்முறைச்செயல்கள் யாவுமே இஸ்லாமிய இயக்கப்பணி அல்லது நேர்த்திக்கடன் என முஸ்லிம்கள் வீம்புரையும் கூறி மேலும் மக்களைத் துன்புறுத்துகிறர்கள். காரணம் முகம்மது காட்டும் 'ஜன்னத்'தில் (சுவர்க்கத்தில்) எண்ணத்திறகப்பாற்பட்ட புணர்ச்சி இன்பங்களுக்காக வகை வகையான கேளிக்கைக்கைகளுடன் அதற்கேற்ற நிரந்தர வசதிகளும் அல்லாவின் நேர் கண்காணிப்பில் இட ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளதென (reservation) 'இஸ்லாத்து முரசு' கொட்டப் பட்டுள்ளது. இவைகளை அடைய ஒரே இஸ்லாத்துப் பணியான ஜிஹாதில் 'ஷாஹீதாக' மரிக்கவோ (பங்குகொள்ளவோ) தங்களைத் தயார் செய்துகொள்கிறார்கள்.

உலகில் எங்கோ ஒரு மூலையில் யாரோ ஒருவர் முகம்மது பற்றி கேலிச்சித்திரங்களை வரைந்து விட்டார் என்பதாலோ அல்லது யாரோ முகம்மதுவைப் பற்றி திரைப்படத்தை வெளியிட்டாலோ சம்பந்தமில்லா வேற்று இடங்களில் ஆங்காங்கே கொலை, கொள்ளை, வன்முறை என நடத்தி அச்சுறுத்தலால் உலகை அந்நாட்களில் ஆள முடிந்தது போன்று இந்நாட்களிலும் ஆள முடியுமெனக் கனவு காண்கிறார்கள். அந்நாட்கள் இந்நாட்களல்ல.

ஒழுங்குமுறைப்படி அமைந்த மற்ற மதங்களைப் பின்பற்றும் மக்களுக்குத் தங்கள் மதத்தின் மீது நேசம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால், அது பிறரைப்

பாதிக்காது. தானுண்டு தன் ஆன்மீகப்பணிகளுண்டு என இன வேற்றுமையின்றித் தன்நலமில்லாது முடிந்த வரை எல்லோருக்கும் உதவி செய்வதில் அவர்கள் மன நிறைவு காண்பார்கள். ஆனால், குனியக்குனியக் குட்டுவதால் இன்று உலக மக்கள் இஸ்லாத்தை நன்கு அடையாளங் கண்டு கொண்டு விட்டனர். இஸ்லாத்தைப் பின்பற்றுவோர் உலகளவில் (20%) உள்ளனர் என்ற ஒரே காரணத்தால் இஸ்லாம் எனும் வெறிப்பற்றீடுபாடு இயக்கத்தையும் ஒரு மதமாகக் கருதவேண்டுமென வற்புறுத்தி, வலிந்து நிர்ப்பந்தித்தால் இஸ்லாத்தை மதமென சுய புத்தியுள்ள பெரும்பான்மையான மக்கள் அங்கீகரித்து விட முடியுமா? வெறும் விளம்பரத்திற்காக 20% எப்படி கணக்கிடப்படுகிறது என முன்னரே கூறப்பட்டு விட்டது!! (இஸ்லாத்தை விட்டால் கொலை -குரான்: 4.89; 3:85,90,91 இருந்தும், ....

முஸ்லிம்களின் வாதம்: உலகில் 1.5 பில்லியன் அதாவது பதினைந்து கோடி மக்கள் இஸ்லாமைப் பின்பற்றுகிறார்கள் எனும் போது இவர்கள் அனைவருமே முட்டாள்களாக இருக்க முடியுமா? இஸ்லாத்தில் ஏதோ ஒரு வலிமை / ஆழமான செயல்திறம் இருப்பதால்தானே இத்தனை எண்ணிக்கையில் மக்கள் இஸ்லாத்தைப் பின்பற்றுகிறார்கள் அல்லது இஸ்லாத்தில் தொடர்ந்து வாழ்கின்றனர் எனும் கூற்றை நம் முன் வைப்பார்கள். இக்கவரும் சக்தி, வலிமை எதனால், எப்படி, ஏன் ஏற்படுகிறது என்பதெல்லாம் இரண்டாம் பட்சமாகிவிடுகிறது. இந்தக் குதர்க்க வாதத்தைத் தருக்கமுறையில் **argumentum ad numerum** அதாவது **"வெற்று எண்ணிக்கை வாதம்"** எனக் கூறுவார்கள். இது அடிப்படைக் கூற்றிலேயே தோற்று விடுகிறது. இஸ்லாத்தில் ஒரு தடவை நுழைந்தால் வெளியேற முடியாது. இது ஒரு ஒற்றையடிப் பாதை. இஸ்லாத்தை விட்டு வெளியேறினால் கொலையில் தான் முடியும். இப்படித்தான் இந்த 20% உருவாக்கப்பட்டது. ஆக இஸ்லாமே அஸ்திவாரமில்லாத அட்டைக் கட்டடம். இந்த 20%இல் பெரும்பான்மையோருக்கு மன நிம்மதி தொடர இஸ்லாத்தைப் பின்பற்ற வேண்டிய கட்டாயத்தில் முஸ்லிம்கள் ஆழ்தப்படுகிறார்களென உலகத்துக்குத் தெரியும். இவ்வாறு செயலாக்க இஸ்லாமிய நூல்களே வன்முறைக்கு வழி கோல்கின்றன.

[[[மொழிபெயர்ப்பாளர் பின்னூட்டம்: இதற்காதாரமாக: குரானிலுள்ள மிக முக்கிய வசனங்கள் - **4:89; 3:85, 90 & 91 தவிர**; வேண்டுவோர் பார்த்துக் கொள்ளட்டும். இக்கருத்துக்கு ஏற்ற பக்க பலமான ஏனைய குரான் வசனங்கள்: **16:106-107, 2:217, 9:73-74, 5:54, and 9:66;**

சில <u>ஹத்தீசுகளிலிருந்து</u>: Al-Bukhari -- Volume 9, Book 84, Number 58:Vol. 9, Bk 84, No. 59: (83:37); (52:260): Vol. 9, Bk 84, No. 57:(89:271): Vol. 9, Bk 84, No. 64: Vol. 5, Bk 59, No. 632: Vol. 9, Bk 83, No. 37: (89:271): Vo.9, Bk 84, No. 64:

AL-MUSLIM: 5:2323; ABU DAWUD:3.38.4337; 4346; SUNAAN IBN MAJAH HADITHS: 1:168; 4: 2334; 2435; 2436; 2478; TRIMIDHI HADITHS: 57; 58; *RELIANCE OF THE TRAVELLER (ISLAMIC LAW)* -- 08.1- " **WHEN A PERSON WHO HAS REACHED PUBERTY AND IS SANE** IF HE /SHE **VOLUNTARILY APOSTATIZES FROM ISLAM, HE DESERVES TO BE KILLED.**"

இவை தவிர இன்னும் அநேக ஆதாரங்களாக இஸ்லாத்து நூல்களிலிருந்தே காட்ட முடியும்.]]]. இதே இங்கு போதுமா? இன்னுங் கொஞ்சம் வேணுமா?

பெரும்பான்மையான மக்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட கருத்தியல்கள் ஒவ்வொரு சமயத்தில் தவறென்று நிரூபிக்கப்பட்டு இருக்கின்றன. சமீப காலம் வரை நம்மிடையே வாழ்ந்த **மிகப்பிரபல தத்துவஞானி**, **கணித நூல் பேரறிஞர் 'பெர்ட்ராண்ட் ரஸ்ஸல்'**: "பரவலாகப் பல மக்கள் ஒரு அபிப்பிராயத்தை உறுதியாகப் பற்றுப் பிடிப்பில் வைத்துள்ளனர் என்பதால் மட்டுமே அது சரியென எனும் பொதுக்கருத்து ஒப்புக்கொள்ளக்கூடிய ஆதாரமாகாது. 'பெரும்பாலான மக்கள் உண்மையென்று நம்பும் சில நம்பிக்கைகளை நம்பலாமே என ஏறுமாறாகத் தீர்ப்புக் கூறுவது, மிக்க மடமைதான்" என்று கூறுகிறார். ஆதரிப்போர்கள் அனேகர் உள்ளனர் என்று வெற்று எண்ணிக்கையை நம்பி அதைச் சட்டப்படிச் சரியென

எல்லோரும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும் எனும் அழும்பு வாதம் செய்வதும் அதைவிட இன்னும் படு முட்டாள்தனமானது. நல்ல அளவுகோலை ஒரு பொதுவான சட்டமாக வைத்து, இஸ்லாத்தையும் அதன் அடிப்படையில் வன்முறையையும் ஏமாற்றுதலையுமே (ஜிஹாத், தக்கியா) நம்பி இயக்கச் செயல்பாணியில் நடத்திக் காட்டுவதை கவனமாக மனதிற்கொண்டு எடை போடும் போது இஸ்லாத்தையும் ஒரு இயக்கமெனத் தீர்மானித்து உலக மக்களால் ஒப்புக்கொள்ளத்தான் முடியுமா? மற்ற மதங்கள் போல, இஸ்லாத்தையும் மதம் என்ற அங்கீகாரத்தோடு ஏற்றமிகு தகுதியில் முஸ்லிம்கள் தாங்களே தூக்கி வைத்துப் போற்றினால் மட்டுமே அது மதமாகி விடுமா? எல்லா மதங்களும் ஆரம்பிக்கப்பட்ட காலங்களில் 'வெறிப்பற்றீடுபாட்டில்' துவங்கி, போகப்போக அது மதங்களென அங்கீகாரம் பெற்று ஒப்புக்கொள்ளப்பட்டன எனச் சிலருக்குப் பொது அபிப்பிராயம் உண்டு. ஆனால் உலகில் நேர்மையான நல்ல நோக்குள்ள சில மதங்கள் ஆரம்ப காலத்திலிருந்து இன்று வரை ஆன்மீக ஈடுபாட்டை மறக்காமல் உலக மக்களை நல்வழிகளில் உய்விக்க வேண்டும் எனும் மனப்பூர்வமான தன்நலமில்லா அணுகுமுறைகளால் பரஸ்பரம் கருத்துக்களை பரிமாற்றிக் கொள்ள ஊக்குவித்து, நல்ல நோக்கங்களாலும், சுயநலமில்லா சேவைகளாலும், எவ்விதத்திலும் பிறரைப் பாதிக்காமல் இம்மதத்தை நம்பும் சீடர்களின் மனதில் ஆன்மீகத்தை ஆழப் பதிய வைத்து இதன் சிறப்புகளையும், பலன்களையும் சீடர்களைக் கொண்டே மனப்பூர்வமாக அனுபவிக்க வைத்து அவைகளையே பின்பற்றப் போதிக்கிறார்கள். நல்ல மதங்களுக்கு விளம்பரம் தேவையில்லை. அது தானாகவே பெருகிக் கொள்ளும். தங்கள் மதத்தை எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டுமென வன்முறையில் இறங்கும் இஸ்லாமிய அணுகுமுறை அவைகளில் இருக்காது. பின் படிப்படியாக ஒரு மதம் அதன் மாசற்ற தன்மையால் மதம் என்ற பெயருக்கு தகுதியுள்ளதென அங்கீகாரம் பெற்று ஆண்டாண்டு காலமாக நிலைத்து நிற்க முடியும். இம்மதங்கள்தான் அன்றிலிருந்து இன்று வரை பெயர் சொல்லிக் கொண்டு திகழ்கின்றன. உலகில் ஆதி நாட்களிலிருந்து எத்தனையோ மதங்கள் வந்த வழியிலே எச்சுவடுமில்லாமல் காற்றோடு மறையவும் மறைந்திருக்கின்றன.

ஆனால் மதம் என்று பெயரைத் தாங்களே இட்டுக் கொண்டு சுயநல நோக்குடன் சூதுவாதில்லா சாதா மக்களை அச்சமூட்டி வன்முறையால் சில அமைப்புகள் பணிய வைக்கிறார்கள். இவ்வமைப்பின் தலைவர் அனேகமாக ஒரு படிப்பறிவு இல்லாத ஜடமாகத்தான் இருப்பார். இத்தலைவருக்கு உறுதுணையாக இவரைப் போன்ற படிப்பறிவில்லா மனித மிருகங்களின் உதவி கொண்டு, பாலியல், லஞ்சம், பணம், வருங்காலத்தில் கிடைக்கப் போகும் சுவர்க்க இன்பங்கள் என்ற செயலூக்கங்களைக் கவர்ச்சியாகக் காட்டிச் சீடர்களை வெறி ஈடுபாட்டுடன் தூண்டிவிட்டுத் தம் சீடர் எண்ணிக்கையை அதிகரிக்கிறார்கள். இதில் இஸ்லாம் மிகப் பெருமளவில் பங்கு வகிக்கிறது எனத் துணிவாகக் கூறிவிடலாம்.

உண்மை மதங்களுக்கும் (religion) வெறிப்பற்றீடுபாடு உள்ள இஸ்லாமிய இயக்கங்களுக்கும் (cult) இடையே ஒழுகலாற்றில் தனிப்பட்ட மாறுபாடுகள் ஆதாரபூர்வமாக இருக்கத்தான் செய்கின்றன. இருப்பினும், மதங்களை வேறுபடுத்திக் காட்டும் மெய்யான தனிச்சிறப்பு அடையாள இயல்புகளால், இவைகளை 'வெறியீடுபாடாகவோ' அல்லது 'மதமெனவோ' இனவாரியாகப் பிரிக்கக் கற்றறிந்த மக்களையே நீதிபதிகளாக்கித் தீர்ப்பு கூற, தம்மைத் தாமே வெளிப்படுத்திக் காட்டிக் கொள்கின்றன. வெறிப்பற்றீடுபாடுகளும் மதங்களுக்கும் என்றுமே சரிசமமாகாது. **'அன்னப்பறவையும் வாத்தும் ஒன்றே'** (Even if Swan and Duck look alike , are they same?) **எனக் கூற இயலுமா? முகங்கள் ஒத்திருக்கின்றன**

**என விரைந்து பாயும் ஓட்டப்பந்தைய குதிரையும் பின்கால்கள் இரண்டையும் இடித்துக்கொண்டு பொதி சுமந்து மேலும் கீழுமாகக் கத்தும்** (bray) **கழுதையும்** (Even if the face portion of a Horse and donkey look alike, are they same?) **ஒன்றாகுமா? அல்லது வெண் நிறத் தூளாக உள்ள (**Even if Potassium Cyanide (KCN) Powder and Sugar Power look alike as white, are they same?) **எனும் மிகக் கொடிய நச்சுப்பொடியும் வெள்ளை சர்க்கரை பொடியும் ஒன்றாகுமா?**

**Carole Wade** என்பவர் **"உளவியல் 101"** (Psychology 101) எனும் ஆய்வில் கூறுவது: ஒவ்வொரு இயக்கத்தையும், வெறி ஈடுபாடு வகை சார்ந்ததா அல்லது; ஆன்மீக வழிமுறைகளை அடிப்படைத் தத்துவங்களாகக் கருத்தியலில் கொண்டு, இவைகளை நடைமுறையிலும் இத்தத்துவங்களை கடைப்பிடிக்கிறதா அல்லது அரசியல் வகையைச் சார்ந்ததா எனச் சீர்தூக்கிப் பார்த்து அததை இவைகள் ஒவ்வொன்றிலும் இருப்பவர்கள் செயல்பாணி எப்படி உள்ளதெனத் தனித்தனி அடையாளங்களால் வெவ்வேறாகப் பிரித்துக்காட்டியுள்ளார்.

பலவந்தப்படுத்தி பிறரைத் தங்கள் இயக்கத்தில் இணங்க வைத்தல் என்பதற்கான முக்கிய விளக்கக் குறிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

- உடலாலும் உள்ளத்தாலும் கடுந்துன்பம் விளைவிக்கும் தலத்தில் நிறுத்திவைக்கப்படுதல்;
- எக்காலத்திலும் முடியாத எந்த பிரச்சனையையும் எளிதில் தீர்க்க முடியும் அல்லது எல்லா இடரையும் குறைத்துவிட முடியுமென ஒரு சிறு விளக்கத்தைக் கூறி அதை அடிக்கடி வற்புறுத்திக் கூறிக் கொண்டே இருப்பது; அல்லது தம்மால் எந்த பிரச்சனைக்கும் விடை காண முடியுமெனும் தகுதியில்லாப் பிடிவாதம் அல்லது சவடாலடிப்பது;
- தலைவரே கையூட்டுக் கொடுத்து இதனால் வசீகரிக்கும் சக்தியால் அல்லது இதையே தெய்வீக சக்தி என முத்திரையைத் தானே குத்திக்கொண்டு புதிதாகச் சமயம் மாறிய நிலையில் உள்ளவரை முழுதுமாகக் கவரக் குறைந்தது சில காலத்திற்காவது நிபந்தனையற்ற அன்பையும் அங்கீகாரத்தையும் தனிக் கவனிப்பையும் அளித்துப் பின்னர் வழக்கமான கொடூர உருவைக் காட்டும் தம் நிரந்தர நிலைக்கு வந்துவிடல் அல்லது புதிதாக இயக்கத்தில் சேர்ந்த இந்நிலையில் உள்ளவருக்கு குறைந்தது ஆரம்ப நாட்களிலாவது ஒரு புது அடையாளத்தைத் தற்காலக் குழுவில் அளித்து அதனாலும் ஊக்கப்படுத்துவது;
- இந்நிலையில் உள்ளவரை ஒரு கிடுக்கிப்பிடியில் இருத்தி, அவருடைய நண்பர்கள், உறவினர்கள், சமூகப்போக்கிலிருந்தும் தொடர்பற்றுப் பிரித்து வைத்து (சிறை போன்று) தன் பிரத்யேக கவனத்திற்குள் இருத்தியோ அல்லது வெளியே தப்பிச் செல்ல முடியாமல் (கைதி போன்று) வைத்திருத்தல்;

ஆகியவைகளை விளக்கக் குறிகளெனக் கொள்ளலாம். [325]

மேற்கூறியவாறே இஸ்லாத்திலும் ஆரம்ப நாட்களில் இருந்தன; ஆனால் இன்றோ கூடுதலாக இன்னும் பல கட்டுப்பாடாக அமைந்த சட்டதிட்டங்களைச் சுன்னா என (ஸாஹீஹ் ஹத்தீஸுகளில் உள்ளபடி, 'ஷரியா' சட்டங்களென) முகம்மதுவுக்குப் பின் வந்தோர் சேர்த்துள்ளனர். இச்சட்டங்களே 1400 ஆண்டுகள் கழிந்தும் அக்காலங்களில் இருந்தது போன்றே இன்றும் நடைமுறையில் இஸ்லாத்தில் உள்ளன.

இவைகளைப் போலவே, Dr. Janja Lalich and Dr. Michael D. Langone, எனும் இரு ஆதரவு சார்பற்ற நிபுணர்கள்[326]- தாங்களே வெளியிட்ட புத்தகமொன்றில்,

[325] Psychology 101, Carole Wade et al., 2005

வெறிப்பற்றீடுபாடுள்ள இயக்கங்களுக்குச் சிறந்த பொருள் விளக்கங்களை அளித்துள்ளனர். [327]

இதில் “வெறி ஈடுபாடுள்ள பிரிவுகளுக்கு”க்குக் கொடுக்கப்பட்ட கருத்தியல் விளக்கங்கள் ஒவ்வொன்றையும் இங்கு காட்டி, இதில் உள்ள பொருள் விளக்கவுரைகள் இஸ்லாத்தின் நடத்தையுடன் பொருந்துகிறதா என ஒவ்வொன்றாக ஒப்பீடு செய்து பார்க்கலாமா?.

1. வெறி ஈடுபாடுள்ள இயக்கத்திலுள்ள சீடர்கள், எல்லை கடந்த வெறி உணர்ச்சி மிகுந்து, இயக்க ஆணைகளை எவ்வித கேள்வியும் கேட்காது தங்கள் தலைவரிடம் தங்களை முழுமையாக ஒப்படைத்துக் கொண்டு, அல்லது மூல நிறுவனர் உயிருடன் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அந்நிறுவனர் உண்டாக்கிய கருத்துகளை அப்படியே ஏற்று, அவைகளைச் சீர்தூக்கிப் பாராமல் அல்லது நிகழ்காலத்துக்குப் பொருந்துமா என ஒப்பீடு செய்து கணிக்காமல், ஆனால் மிகச் சுத்தமான ஒழுங்குமுறையென அப்படியே நடத்திக் காட்டுதல்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: முஸ்லிம்களும் தங்கள் இஸ்லாமிய இயக்கத்தில் அளவுக்கு மீறிய வெறி உணர்ச்சியுடன் அல்லாவின் தூதரிடம் தங்களை முழுதுமாக ஒப்படைத்துவிட்டு, குரானில் உள்ளவைகளே பேருண்மைகளெனவும் மற்ற நூல்களில் உள்ளவைகளான ‘சுன்னா’வையும் சேர்த்து ‘ஷரியா’ சட்டங்களென எந்தக் கேள்வியும் எழுப்பாது அப்படியே அனுசரிக்கின்றனர்; எதை வேண்டுமானாலும் முஸ்லிம்கள் பின்பற்றித் தொலையட்டும். ஆனால் உலக மக்களும் இவைகளையே கடைபிடிக்க வேண்டுமென அழும்பு வாதம் ஏன் செய்கிறார்கள்!

2. இவ்வியக்கத்தைப் பற்றிக் கேள்வி கேட்பது, சந்தேகம் கொள்வது அல்லது கருத்து அல்லது செய்முறை வேறுபாட்டால் கொள்கைகளை முழுதுமாகவோ அல்லது சிறு பகுதியையாவது ஏற்க மறுப்பது ஆகியவையனைத்துக்கும் ஒவ்வாமையை வெளிப்படையாகக் காட்டி மன உறுதியிழக்கச் செய்து அதிகபட்ச தண்டனையை அளித்தல்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: இஸ்லாத்தில் முஸ்லிம்கள் இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைகளைப் பற்றி கேள்வி எழுப்பினாலும் அல்லது சிறிதாகக் கூட சந்தேகித்தாலும் அல்லது கருத்து வேறுபாட்டால் அக்கொள்கைகளை ஏற்க மறுத்தலும் ‘தெய்வக் குற்ற’மெனத் (blasphemy) தீர்ப்பளிக்கப்பட்டு அதற்கான தண்டனை கொலையில்தான் விடியும்.

3. இயக்கம் சார்ந்த மன மாற்றத்தை உண்டாக்கும் சிந்தனைகளில் ஆழ்ந்து விட வைத்தல், இயக்கம் சார்ந்த நூல்களில் உள்ளவைகளை திரும்பத் திரும்ப மனப்பாடம் செய்து ஒப்பித்தல், இயக்கத்திற்கு வேண்டாதவர்களைப் பற்றிப் பழித்துரைத்தல், வழக்கமான ஏனைய வேலை முறைகளுக்குத் தளர்ச்சியூட்டி ஊக்கக்கேடு செய்துவிடல் ஆகியவைகளை அளவுக்கு அதிகமாக உபயோகப்படுத்தி இயக்கக் கொள்கைகளைப் பற்றியோ அல்லது இயக்கத் தலைவர்களைப் பற்றியோ சந்தேகங்கள் ஏதும் எழாதபடி கவனமாகக் கண்காணித்தல்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: இஸ்லாமிய குரான் ஆணைப்படி முஸ்லிம்கள் ஒவ்வொரு தினமும் அந்தந்த வேளைகளில் மீண்டும் மீண்டும் கூறிச் செய்யும் சடங்குகளான ஐந்து முறைத் தொழுகைகளை (‘நமாஸ்’ எனும்

---

[326] Lalich, Janja and Tobias, Madeleine, Take Back Your Life: Recovering from Cults and Abusive Relationships, Bay Tree Publishing (2006), ISBN10 0972002154, ISBN 13 9780972002158.

[327] Published at ICSA (International Cultic Studies Association) website, Janja Lalich, PH.D. & Michael D. Langone, Ph.D., www.csj.org/infoserv_cult101/checklis.htm, accessed June 21, 2007.

நமஸ்காரத் தொழுகையை) நடத்த (அதில் கூறும் அரேபியச்சொற்களுக்குப் பொருள். விளக்கம், தொடர்பு) (இதனால், எப்படி ஏன் எனப் புரிகிறதோ இல்லையோ) அவ்வப்போது செய்யும் மற்ற எந்த வேலையையும் அப்படியே நிறுத்திவிட்டுத் தொழுகைக்கு மட்டுமே அந்நேரத்தை ஒதுக்கிவிடல், இவைகளைத் தவிர வெள்ளிக்கிழமை மாலை வேளையில் 'ஜும்மா' தொழுகை முடிந்தவுடன் 'மெஹ்ரிப்' சமயத்தில் 'ஜிஹாது'க்கோ அல்லது நாட்டு நடப்புகளைப் பற்றி, அல்லாவின் இடமான அதே மசூதியில், இஸ்லாத்தில் உள்ள கருத்து அளவுகோல்களால் அலசிப் பார்த்து முஸ்லிமல்லாதவர்களுக்கெதிராக 'ஜிஹாத்' என ஆணையிடல், மேலும் பட்டினி கிடத்தல் போன்று வேறு சிந்தனைகளுக்கு சிறிதும் இடமளிக்காமல் மனத்தை முழுதுமாக இச்சடங்குகளில் ஈடுபடுத்திக்கொள்ளல்; இச்சடங்குகள் காலத்திற்கேறவாறு பொருந்துமா எனச் சிந்திக்காமல் கிடுக்கிப்பிடியில் வாழ தங்களையே சமர்ப்பித்துக் கொள்ளல்.

4. அனேக சந்தர்ப்பங்களில் இயக்கத்தலைமை அதிகாரத்துடன் ஆணையிடும் நுணுக்க எதிர்பார்ப்புகளை நிறைவேற்ற வேண்டும்: எப்படி சிந்தனை, சொல், செயல் இருக்கவேண்டும், எவைகளை எப்படி உணர்ந்து கொள்வது போன்றவைகள்கூட இதிலடங்கும். உதாரணமாக, ஒரு பெண்ணிடம் மணக்கும் நோக்கத்துடன் பழக அனுமதி கேட்பது எனும் முக்கிய விஷயங்களுடன், வேலை மாற்றம் செய்யலாமா வேண்டாமா எனும் தனிப்பட்ட முறையில் சொந்தமான கேள்வி போன்றவைகளில் குறிக்கப் பெற்ற மேலிடம் அனுமதி பெறாமல் எந்த காரியத்திலும் இறங்க முடியாது. மேலாக, எந்தெந்த உடைகளை எவ்வெப்படி அணிவது, எங்கெங்கு வசிக்கலாம், குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளலாமா வேண்டாமா, குழந்தைகளுக்கு இயக்க ஒழுக்கப்பயிற்சி எப்படி அளிப்பது, போன்ற செயல்களும் செய்ய நிர்ப்பந்திக்கப்படும்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: ஒவ்வொரு முஸ்லிமுக்கும் வாழ்க்கை எப்படி நடத்தவேண்டுமென முன்னரே வரையறுக்கப்பட்டுள்ளது. முஸ்லிம்களுக்கு எதெது 'ஹராம்' அல்லது அனுமதிக்கப் பெறாதது, எதெது 'ஹலால்' அல்லது அனுமதிக்கப்பட்டுள்ளது, எதெது உண்ணலாம், எந்தக் கையால் உண்ண எந்தெந்த விரல்களை உண்டவுடன் நக்க வேண்டும், எப்படி உடை உடுத்த வேண்டும், காலணி எப்படி அணிய வேண்டும்; பிறப்புறுப்பைச் சுற்றியுள்ள மயிரை பெண்கள் எச்சமயத்தில் சுத்தமாக மழித்து, கணவனுக்குப் பணிவிடை செய்யத் தயாராக்கிக் கொள்ள வேண்டும், தாடி எப்படி வளர்க்க வேண்டும், நெற்றியில் 'சுஜூத்' எனும் கருப்பு அடையாளம் எப்படிக் கொண்டு வர இயலும்; எப்படிப் பல் விளக்க வேண்டும், தொழும்போது எப்படி சடங்குகளை நிகழ்த்த வேண்டும், எதெது தொழுகைகளுக்கு (farting) இடராகும், எப்படி சிறுநீர், மலம் கழிக்க வேண்டும், எப்பேற்பட்டவரை மணக்கவேண்டும், எந்தெந்த குற்றங்களுக்குத் தக்க தண்டனை கிடைக்கும், எந்தெந்த குற்றங்களுக்கு எவ்வளவு முறை சாட்டையால் அடிக்கப்படும் என முன்னரே நிர்ணயிக்கப்பட்டுள்ளது. கொடுக்கப்பட்ட ஹலால், ஹராமை மீறி நடந்தால் எந்தெந்த தண்டனைகள், (குழந்தைகள் முதற்கொண்டு) நிறைவேற்றப்படும் என்றெல்லாம் உள்ளது. அவ்வாறு முடிவு செய்யப்பட்ட அச்சட்டங்கள் இன்றும் அமலில் உள்ளன. அல்லா எனும் கடவுள், இவ்வாறு அடுக்கடுக்காக இஸ்லாத்தில் கூறியது போன்ற இச்சொற்றொடர்கள் வேறெந்த ஏற்றமிகு மதங்களிலும் இல்லவே இல்லை!!

5. இப்பிரிவைச் (group) சேர்ந்த தலைவர், சீடர்கள் மற்ற எல்லோரைக் காட்டிலும் தரத்தில் மிகச் சிறந்தவர்கள் என தங்களுக்கே ஒரு முத்திரையையும் குத்திக் கொள்வார்கள். இதன் தலைவரோ தம்மையே 'மக்களை உய்விக்க வந்த

கடவுளே எனவோ, அல்லது பிரத்யேகமாக கடவுளால் உருவாக்கப் பட்ட மீட்பாளர் (Messiah) எனவோ அல்லது ஓர் அவதார புருடர்' எனவோ தனக்கே பெயரைச் சூட்டி மகிழ்ந்து கொள்வார்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: முஸ்லிம்கள் எப்போதும் அல்லாவின் தூதருக்கென விசேஷமான பதவியில் இருத்தி இருப்பதால், மற்ற எல்லா மதங்களையும், பிரத்யேகமாக கிறித்தவ மதத்தின் மீதும் யூதமதத்தின் மீதும் ஹிந்து மதங்களின் மீதும் சொல்லொண்ணா அவதூறுகளைக் கிளப்பி, அதிலுள்ள சீடர்களைச் சொல்லத்தகாத ஏச்சுச் சொற்களால் ஏசி, அதே தருணத்தில் உலகிலுள்ள எல்லா மதங்களையும் மதிப்பதாகவும் (ஏமாற்றுதலாக - தக்கியாவாக) பறைசாற்றிக் கொள்வார்கள். இவர்களுக்குப் பைபிளில் உள்ள இயேசு கிறித்துவும், யூத மோசஸும், குரானில் உள்ள 'ஈசா', 'மூசா', என்ற இருவரும் வேறானவர்கள் எனக் கூறுவார்கள். முகம்மதுதான் கடவுளால் அனுப்பப்பட்ட 'தூதர்களுக்குள்' கடைசியானவர். முகம்மதுவே, இவருக்குப் பின் அல்லா எனும் கடவுள் எந்த தூதரையும் உருவாக்கப் போவதில்லை எனவும் முஸ்லிம்கள் கூறுவார்கள். இதை மறுத்து ஏதாவது கூறிவிட்டால், முஸ்லிம்கள் தங்கள் முகம்மதுவுக்கு உரிய மரியாதையை உலகிலுள்ள மற்ற எல்லோரும் காட்டத் தவறியதாக மனதிற் கொண்டு, மிகக் கடுமையான வன்முறையில் உலகெங்கும் இறங்கிவிடுவார்கள். இதைத் தவிர முஸ்லிம்கள் எப்போதுமே தாங்கள் உலகிலுள்ள மற்ற எல்லோரைக் காட்டிலும் பொதுநிலை கடந்த மேம்பட்ட நிலையைச் சார்ந்தவர்கள், ஏனெனில், தாங்கள் "ஒரு மிகச்சிறந்த இஸ்லாத்து இயக்கத்தைச் சேர்ந்தவர்கள்" எனத் தற்புகழ்ச்சி செய்து கொள்வார்கள். இவர்கள் சிறுபான்மையினராக முஸ்லிம்களல்லாத ஜனநாயக நாடுகளில் வசிக்க நேர்ந்தால் தங்களுக்கென தனிச் சலுகைகள் கிடைக்கும் வரை ஓய்ச்சல் ஓழிவின்றிக் கிளர்ச்சி செய்து இதன் பயனாகப் பெரும்பான்மையாக உள்ள மதத்தவர்களுக்குக் கிடைக்காத சலுகைகளை அடையும் வரை கலவரத்தில் ஈடுபடுவார்கள். இவைகளுக்காகச் செலவிடும் சலுகைகள் முஸ்லிமல்லாதவர்களின் வரிப்பணத்திலிருந்துதான் முஸ்லிம்களுக்கு செலவிடப் படும். மேலும், பெரும்பானையினர் திரட்டிய பொதுநிதியைத் தங்களால் நடத்தப்படும் பொது பள்ளிக்கூடங்களிலும் கூட்டாண்மைக்குரிய நிறுவனங்களிலும், பொதுநல மருத்துவ மனைகளிலும் செலவு செய்வார்கள். ஆனால் இஸ்லாத்தில் 'சகத்' எனும், வசூலை வேண்டாத வன்முறை, அழிக்கும் செயலான 'ஜிஹாத்' எனும் இஸ்லாமிய கட்டாயப் போருக்கும் புது மசூதிகளை அங்கங்கே கட்டிக்கொள்ளவும் முஸ்லிம்களுக்காகத் தனிப்பட்ட முறையில் செலவு செய்து கொள்வார்கள். 'சகத்'திலிருந்து பிற மதங்களுக்குச் செலவு செய்வதே கிடையாது. கூடவும் கூடாதென ஷரியா சட்ட இஸ்லாத்து விதிகள் வலியுறுத்துகின்றன. அதே சமயத்தில் பொதுமக்கள் நிதியிலிருந்து நடத்தப்படும் மருத்துவமனைகள், பள்ளிக்கூடங்கள் ஆகிய இடங்களிலும் தங்களுக்கெனத் தனி இடம், தனி தொழுகையறை ஆகியவைகளை வற்புறுத்தி அடைந்து கொள்வார்கள். சவூதி அரேபியாவில் பிறமதத் தொழுகைப் புத்தகங்களைத் தங்கள் அறைகளில் வைத்திருப்பதும் கூட தண்டனைக்குரியது. தொழுவது அப்புறம் இருக்கட்டும். ஜனநாயக நாடுகளில் இஸ்லாத்து மசூதிகள் ஏராளமாகக் கட்டப்பட்டுள்ளது. ஆதான் அழைப்பு (நமாஸுக்காக ஐந்து தடவை) ஒரே நாளில் முழு காட்டுக் கூச்சலில் ஓலமிடப்படும். ஆனால் இஸ்லாத்து நாடுகளில் பிற கிறித்தவ சர்ச்சோ, யூத சங்க்யோகோ, ஹிந்து கோவிலோ, கட்ட அனுமதி கிடைக்காது. ஜனநாயக நாடான கனடா நாட்டிலிருக்கும் 'ஒண்டாரியோ'வில், கனடா நாட்டுச் சட்டப்படி அமைந்த நீதிமன்றங்களைப் புறக்கணித்து ஆங்கே இஸ்லாமிய 'ஷரியா' சட்ட

நீதிமன்றங்களே அங்கீகரிக்கப்பட்டு, இதில் முடிவான தீர்ப்புகளே எல்லோரையும் கட்டுப்படுத்துமென முஸ்லிம்களால் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. ஆனால் பலருடைய சோர்வடையாத உரிய கால நடவடிக்கைகளால் இம்முயற்சி முழுதுமாகத் தோல்வியுறச் செய்யப்பட்டது. ஆனால், பிரிட்டனில் அனேக 'ஷரியா நீதிமன்றங்கள்' தங்கள் மிகக் கொடூரமான சட்டத்திட்டங்களுடன் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டு இன்று செயல்முறையில் உள்ளது.

6. இப்பிரிவைச் (group) சேர்ந்தவர்கள் ஒரே மனித இனத்தை இரு வேறுபட்ட கோட்பாடுகளைக் கொண்ட இரு எதிரிக் குழுக்களென உண்டாக்கி (polarised) இவ்விரு குழுக்களுக்குள் எப்போதுமே சண்டை சச்சரவை உருவாக்கி அதாவது, 'நாம்' அல்லது 'அவர்கள்' (we or they) என ஏற்படுத்தி விடுவார்கள்

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: இஸ்லாத்தில் 'நாம்' எனும் சொல்லுக்கு, 'முஸ்லிம்கள்' எனவும், 'அவர்கள்' எனும் சொல்லுக்கு 'முஸ்லிமல்லாதவர்கள்' என இரு குழுக்களாகப் பிரித்துவிடுவார்கள். முஸ்லிமல்லாதவர்களின் மதிப்பைக் குறைக்கும் வகையில் 'கா.ஃபிர்' என இழுக்காகப் பட்டம் சூட்டுவார்கள். வன்முறை-அழிவு எனத் தூண்டாத சாத்வீகப் போதனைகளைக் கூறும் மதங்களும் கடவுள்களும் முஸ்லிம்களுக்குக் கடவுள்கள் அல்ல. ஆனால் அல்லாவெனும் வன்முறை, அழிவு ஆகியவைகளை மட்டுமே தூண்டும் கடவுளை கா.ஃபிர்கள் முழுதுமாக ஏற்பதில்லை. ஆகவே கா.ஃபிர்கள் தங்கள் அல்லாவை அவமதிக்கிறார்களெனச் (one who blasphemes God) சற்றும் யோசிக்காது இம்முஸ்லிம்கள் நேரிடையாகக் குற்றம் சாட்டுவர். முஸ்லிமல்லாதவர்களுக்கு இஸ்லாத்து கொள்கை வேண்டாமென்றால் அது அவமதிப்பாகுமா? அதற்காக முஸ்லிம்கள் வன்முறை, அழிப்பு எனக் கொடுமையான காரியங்களில் இறங்குவதை எவ்வகையில் நியாயப்படுத்த முடியும்? அதற்காக இவ்வாறு கூறப்படும் 'சப்பைகட்டு' வாதங்களையும் கூறுவர். அல்லாவின் இடத்தை அதாவது முஸ்லிம்களுக்கு 'பாத்யதை'யான இடங்களை இதுவரை கா.ஃபிர்கள் அபாண்டமாக ஆக்ரமித்துள்ளதை (Dar al Harb = House of War) 'தக்கியா' எனும் ஏமாற்றுதலாலும், 'ஜிஹாத்' எனும் கட்டாயப் போராலும் கா.ஃபிர்களிடமிருந்து பிடுங்கி / கைப்பற்றி அவ்விடங்களை முஸ்லிம்கள் மீண்டும் அல்லாவின் இடங்களாக (Dar al Islam = House of Islam) மாற்றி அமைக்க வேண்டுமாம். சிந்தித்துப்பாருங்கள்! (**குரான்:57:10**-உலக பாத்தியதை...etc) முஸ்லிமல்லாதவர்களின் தன்மானத்தை மேன்மேலும் புண்படுத்த வேண்டுமென முஸ்லிம்கள் எல்லா வன்முறைச் செயல்களிலும் கட்டாயமாக ஈடுபடுவார்கள்.[328]

இவ்வாறு வரி வசூலிப்பதில் காலதாமதமானாலோ அல்லது வரி கொடுக்க மறுத்து விட்டாலோ, முஸ்லிமல்லாத மக்கள் நாடு கடத்தப்படுவார்கள் அல்லது கொலை செய்யப்படுவர்கள். இக்கருத்தேதான் தற்போது இத்தாலியை மையமாகக் கொண்டு அமெரிக்காவில் வன்முறையில் ஈடுபடும் 'மா.ஃபியா' எனும் ரகசியக் குழுவுக்கு 'உள்ளார்வக் கொள்கை'யாக அமைந்தது. இவைகளுக்குக் கட்டுப்பட்டு எஞ்சி உயிர்வாழ விரும்பினால், பாதுகாப்பு வரி (இஸ்லாத்து நாடானால்-ஜெசியா), சொத்துவரி எனும் அபராதப் பணம் அளிக்கத்தான் வேண்டும். இதில் அடங்குவோர் புறசமயத்தார், பற்பல சிலைகளைத் தொழுபவர்கள் (polytheists) எந்த கடவுள் மீதும் நம்பிக்கையற்றவர்கள் (atheists), ஆவி உலகக் கோட்பாடளர்கள் (animists) ஆவர். இவைகளுக்கு உடன்படாது மறுப்பு தெரிவித்தால் - ஒன்று, இஸ்லாத்துக்கு

[328] Quran 9:29 Fight those who believe not in Allâh nor the Last Day, nor hold that forbidden which hath been forbidden by Allâh and His Messenger, nor acknowledge the religion of Truth, (even if they are) of the People of the Book, until they pay the Jizya with willing submission, and feel themselves subdued.

மாறிவிட வேண்டும் அல்லது (கா∴பிர்கள் என) கொல்லப்படவேண்டும் (convert or get killed). ஆக சுருக்கமாகச் சொன்னால், உலகமே எவ்வகையானாலும் இஸ்லாத்துக்குச் சொந்தமாக ஆக்கிவிட வேண்டுமாம்!

7. இப்பிரிவின் (group) தலைவர் எந்த அதிகாரத்திற்கும் கட்டுப்பட வேண்டியதில்லை. **இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: முகம்மது செய்த எந்த காரியங்களால் ஏற்படும் பின்விளைவுகளுக்கும் அவர் யாருக்கும் பதிலோ காரணமோ கூறவேண்டிய அவசியமில்லை. இதனால், முகம்மது தன்னிச்சைப்படி எத்தனை முறை வேண்டுமானாலும் மணம் செய்து கொள்ளலாம். முகம்மது மனைவியரைத் தவிரத் தன் இஷ்டப்படி எத்தனை பெண்களிடமும் பாலியலில் ஈடுபடலாம். இதில் **ஓரிரவு ஒப்பந்த மணமும்** (one night stand) **அடக்கம்**, (இதை **மூடா** (muta) என ஷியாக்கள் கூறுவர்; **மிஸ்யார்** (misyar) என சுன்னி முஸ்லிம்கள் வேறுபடுத்திக் கூறுவர்) (**குரான்-33:50; 04:24; அல்-புகாரி - 7:62: 24 &: 48 & 53 & 130**). கா∴பிர்கள் இதை முழுக்க முழுக்க விபசாரமெனச் (Adultery) சொல்வார்கள். இதிலிருந்து முஸ்லிம்களுக்குப் பாலியலில் எத்தனை ஈடுபாடென வெட்டவெளிச்சமாகிறது எனெனில், இதை இஸ்லாத்து 'ஷரியா'கூட பரிந்துரைக்கிறது. முகம்மது எத்தனை முறையும் எந்தெந்த இடங்களிலும் தன் இஷ்டப்படி திடீர் தாக்குதல்களை நிகழ்த்தலாம், அதாவது, ஆயுதம் இல்லாத மாசற்ற மக்களையும் கொல்லலாம்; இம்மக்களின் சொத்துகளையும் கொள்ளையடிக்கலாம்; இவர்கள் பெண்டிர், குழந்தைகள் எல்லோரையும் வன்புணர்ச்சி செய்து, அல்லது மீசை முளைக்காத இளம் ஆண்பிள்ளைகளை ஓரினச் சேர்க்கையில் ஆட்படுத்தி, தங்களுக்கே வைத்துக்கொள்ளலாம் அல்லது அடிமைகளாக்கி விற்று காசாக்கலாம்; சிறு குழந்தைகளையும் பாலியலில் ஈடுபடுத்திக் கொள்ளலாம்; முகம்மதுவை விமரிசனம் செய்தவர் எவரையும் முதலில் சித்திரவதை செய்த பின், மெல்ல மெல்ல 'ஹலால்' கொலையும் செய்யலாம்; ஆனால் முகம்மது எவ்வித பொய்யையும் சொல்லலாம், ஏமாற்றலாம்; தான் சிறைப்பிடித்த கைதிகளை மிகக் கொடூரமான முறையில் படுகொலை செய்யலாம்; இவை ஏனென யாருக்கும் பதில் கூறவேண்டிய அவசியம் கிடையாது. இவைகள் ஷரியாவில் உள்ளபடி பின்பற்றப்படுகிறது. முஸ்லிம்கள் மேற்கூறியவைகள் எல்லாவற்றையும் முதலில் முழுதுமாக மறுத்து விடுவார்கள். பின்னர் அது ஏற்கப்படாவிட்டால் அல்லது ஆதாரங்கள் இருப்பதால் தாங்கள் மாட்டிக்கொள்வோம் என உணர்ந்தால், முன்னர் கூறியவைகளை மாற்றிக்கொண்டு, அடாவடியாக எதெது முகம்மது செய்தாரோ அவைகளைத்தான் சட்டபூர்வமாகச் செயல்பாணியில் செய்து காட்டியதாகச் சொல்வார்கள். முகம்மது எதெது செய்தாரோ அவைகளையே இவரைப் பின்பற்றுவோர் செய்ய வேண்டும். அதுதான் அடிப்படை இஸ்லாமிய இயக்கக் கொள்கை அல்லது தத்துவமென அடாவடி செய்வார்கள். அடுத்ததாக, இவைகளை ஏன் செய்கிறீர்கள் என ஆதாரபூர்வமாகக் கேட்டுவிட்டால், வெகுண்டு வெடித்து, குற்றம் சாட்டுவோர் இனவெறியர்களெனவும் தங்கள் நற்பெயருக்கு கேடு விளைவிக்க இஸ்லாத்தை வெறுப்பவர்கள் எனவும் (racists and Islamic haters) கூறிக் குற்றம் சாட்டத் தகுதியுள்ளவர்களையே குற்றவாளிகளென மாற்றி அவர்களிடமே வன்முறைச் சச்சரவில் ஈடுபடுவார்கள். இவர்களிடம் மறுக்க முடியாத ஆதாரங்களைக் காட்டி விட்டால், உடன் தங்கள் குறிக்கோளை அடைய அணுகுமுறையை மாற்றி, இக்குற்றங்களுக்கு எதிர்வாதம் புரிந்து இதற்காதரவாக, தருக்கமுறையில் முன் செய்த யாவற்றையும் மறுத்தோ, அல்லது இடம் பொருள் ஏவலுக்குத் தக்கவாறு இக்குற்றம் செய்ததை நியாயப்படுத்தியோ விடுவார்கள். நாடக பாணியில்

முன்னுக்குப் பின் முரணாக, கொள்கையில் நேர்மாற்றமாக (U-turn) மாற்றிக் கொள்வதை நோக்கும்போது முஸ்லிம்களின் இயல்புகளைப் புரிந்துகொள்ள முடியாமல் மக்களுக்குத் திகைப்புதான் மிஞ்சும். இக்குற்றங்களையே முஸ்லிம்கள் மீண்டும் மீண்டும் புரிந்து எதற்கும் இம்முறைகளையே மேற்கொள்வார்கள். இம்முறைகளைக் கையாள்வதால், இவர்களுக்கு முஸ்லிமலாதவர்களுக்குரிய 'வெட்கம் மானம் சூடு சொரணை' எனும் ஏற்புள்ள பாங்குகள் என்பதே முழுதுமாகக் கிடையாதோ எனக் கூறும்படி இன்று உள்ளது.

முகம்மதுவின் கொடுஞ்செயல்பாடுகளை எல்லோருக்காகவும் ஏற்படுத்தப்பட்ட அளவுகோலால் எதெது சரி எதெது தவறு என அளந்து தீர்ப்பு கூறிவிடக் கூடாது. இதற்கெல்லாம் ஒரு படி மேலாக, அவரே ஒரு அளவுகோல் எனவும் ஆகவே பின்பற்றத்தக்கவர் என்றும் எதெது சரியெனவோ தவறென முகம்மது சொல்கிறாறோ அவைகள்தான் சரி அல்லது தவறாகும் என இஸ்லாத்து 'ஷரியா' கூறுகிறது. முகம்மது ஒரு குற்றம் செய்தால் அதுவே ஒரு புனிதச்செயல். கண்மூடித்தனமான நம்பிக்கையும் பகுத்து ஆராயும் பகுத்தறிவும் உடனொத்து ஒருங்கிருக்க எப்போதுமே இயலாது. இதனால் முஸ்லிம்கள் எல்லையில்லாக் குற்றங்களைச் செய்யும் போதும் கூட என்று மனதிற்கொப்பிச் செய்வதன் காரணம் ஸாஹீஹ் (இஸ்லாமியருக்கு மாத்திரம் நம்பத்தகுந்த) 'ஹத்தீஸ்'களிலோ அல்லது 'சிராத்'திலோ அல்லது இஸ்லாமிய 'ஷரியா' சட்டப்பிரிவின்படி இருப்பதால்தான் அவ்வாறு செய்வதாக நியாயப்படுத்துவர். எந்த நாட்டு எந்த சட்டமும் முஸ்லிம்களைக் கட்டுப்படுத்தக்கூடாதென இவர்கள் 'தடாலடி' எண்ணம். இதற்காகத்தான் முஸ்லிம்களைக் குடிபுக அனுமதித்த நாடுகளிலும், (அமெரிக்கா, இந்தியா போன்ற ஜனநாயக நாடுகளிலும்) இவர்களே சிறுபான்மையினராக இருந்தாலும், 'ஷரியா' நீதிமன்றங்களை ஏற்படுத்த ரகளை செய்கிறார்கள். மற்றோருக்கு குற்றகளெனப் பட்ட குற்றச் செயல்களை முகம்மது புரிந்திருந்தால் அதுதான் சரியான புனிதச்செயல், அதுவே சட்டம், அதுவே அளவுகோல். ஏனெனில் - அது அப்படித்தான்!!. முகம்மது அல்லாவின் தூதர். ஆகவே, முகம்மது சொல்வது அல்லா சொல்வது போலவே எல்லோரும் ஏற்றுக் கொள்ள வேண்டும். அல்லா சொல்வதையே முகம்மதுவும் செய்கிறார். (ஆனால் அல்லாவையே நியமித்தவர் முகம்மதுவல்லவா!) நம் போன்ற அற்ப மானிடப் பிறவிகள் அல்லாவின் குணங்களை அனுபவத்தாலோ பகுத்தறிவிலோ மதிநலத்திலோ கல்வித்திறனிலோ குற்றங்குறைகளைக் காணக் கூறப் போதிய நுண்ணறிவற்ற சாதா மனிதர்கள் எனத் தீர்ப்பளித்து, (tellurian = earthling), 'அல்லா எல்லாமறிவார்' என பிறர் வாயை அடைத்துவிட முயல்வார்கள். காபிஃர்கள் வாயை எந்தக் கடவுளாலும் அடைத்துவிட இயலாது.

8. இப்பிரிவு தங்கள் குறிக்கோளை முடிவில் அடைய, இதற்காக இதுவரை கையாளப்பட்டதும், தற்போது கையாளப்படும் அல்லது வருங்காலத்தில் கையாளப் போகும் வழிவகைகள் ஏதானாலும், அவைகள் எல்லாமே இயக்கத்திற்கு நன்மை பயக்குமானால் அது ஒன்றே போதும் (Basic conviction - ends justify any means). இயக்கத்திற்கு உகந்த முடிவு எப்படிக் கிடைத்தது எனப் பொருட்படுத்தத் தேவையில்லை. முடிவு இயக்கத்திற்கு உகந்ததாக இருந்தாலே போதும்,

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: மேற்கொண்ட வழிமுறை மற்றோருக்குத் தீங்கு விளைவித்தாலும் அதைப் பற்றிக் கவலையில்லை. இஸ்லாத்து இயக்கக் குறிக்கோள் முடிவில் வெற்றியடைய வேண்டும். முடிவு இஸ்லாத்துக்குச் சாதகமாக இருந்தால் அது ஒன்றே போதும், அதற்காக எந்த வழியையும் கையாளலாம். உதாரணமாக, கொலை, கொள்ளை, கற்பழிப்பு,

ஏமாற்றுதல், பொய் கூறல் முதலியன முஸ்லிமல்லாத மக்களுக்கு மகா பாபச் செயல். ஆனால் முஸ்லிம்களுக்கு இஸ்லாத்தை வளர்க்க அல்லது முடிவில் இஸ்லாமிய உலகத்தை நிர்மாணிக்க (establishing Dar-ul-Islam) மேற்கூறிய குற்றங்கள் செய்வது எல்லாமே இஸ்லாத்தில் மிக மகத்தான புனிதச் செயல்- நேர்த்திக்கடன். இதற்காக 'ஷாஹீத்' ஆகி அதாவது உலகிலுள்ள எல்லா காஃபிர்களைஉம் அழிக்கும் 'ஜிஹாத்' போரில் பங்குகொண்டு மரித்தாலும் சுவர்க்கத்தில் கொட்டிக்' கிடக்கும் மகத்தான பரிசுக் குவியல்களை'ச் சொந்தங்கொள்ள இம்முஸ்லிம்களுக்கு எதிர்பார்ப்பு எக்காலமும் உண்டு.

9. இப்பிரிவின் தலைமையிலுள்ளவர் தம் சீடர்களிடம் வேண்டிய மட்டும் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ளவும் மேலும் அவர்களைத் தம் கட்டுப்பாட்டில் என்றும் வைத்துக்கொள்ளவும் சீடர்களுக்குள் மனக்கேடானவை எவைகள் அல்லது குற்றஉணர்ச்சியுடன் இருக்கவேண்டியவை எவைகள் எனும் எண்ணத்தை உண்டு பண்ணுவார். இவ்வுணர்ச்சிகளை அடிக்கடித் தாமே எல்லா விதத்திலும் அறிவுறுத்தி நம்ப வைத்தோ அல்லது அனுபவமிக்க மற்ற இணைச்சீடர்களைக் கொண்டு செய்தோ தம் கோட்பாடுகளுக்கு இணங்க வைத்துவிடுவார்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: முஸ்லிம்கள் எப்போதுமே குற்றவுணர்ச்சியில் வாழ நேர்கிறது. இவர்களுடன் மற்ற உலக மக்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது அவர்கள் எவ்விதக் குற்றவுணர்ச்சிகளுமின்றி வளமான மனப்பாங்குடன் உள்ளனர். இதன் அடிப்படைக் காரணம், இஸ்லாமிய சட்டங்களான 'ஷரியா'வை முஸ்லிம்கள் முறைப்படி எவ்வளவு தூரம் அனுசரிக்க முடிகிறது எனும் பதற்றமான மன நிலையில் ஆழ்த்தப்படுகின்றனர். 'ஷரியா' சட்டங்களுக்குப் புறம்பாக ஒரு முஸ்லிம் நடந்துகொண்டால், இவருடன் கூட உள்ள ஏனைய முஸ்லிம் சமூகத்தால் நினைவூட்டப்படுவதோடு, அவருக்குள் அவமான மனப்பாங்கை உண்டக்கி, ஷரியா சட்டம் எப்படி எதிர்பார்க்கிறதோ அதற்கு உடன்பாடான காரியத்தில் வலுக்கட்டாயமாக இணங்க வைத்துச் செயலாற்றவும் வைக்கிறார்கள். இஸ்லாத்திலேயே ஒன்றிப்போன ஈரான், சவூதி அரேபியா போன்ற நாடுகளில் ஷரியாவிலுள்ள ஒவ்வொரு சட்டமும் ஒவ்வொரு முஸ்லிமாலும் நன்கு அனுசரிக்கப்படுகிறதா இல்லையா என மற்ற முஸ்லிம்களாலும் இஸ்லாமியப் போலீஸாலும் கண்காணிக்கப்படுகிறது. 2002இல், ஒரு சவூதி பள்ளிக்கூடம் பற்றி எரியும்போது, அங்குள்ள மனச்சாட்சியுள்ள மனித நேயமுள்ள பொது மக்கள் அம்மாணவிகளைக் காப்பாற்ற ஓடோடி வந்தனர். இம்முயற்சிகளை மேற்கொள்ளும் போது, சவூதி இஸ்லாமியப் போலீஸ் மாணவியரை காப்பாற்ற முயற்சி ஏதும் எடுக்காததோடு, காப்பாற்ற வந்த அம்மக்களையும் அடித்துத் தடுத்து நிறுத்தி விட்டார்கள். காரணமென்னவென்றால், இம்மாணவிகள் தங்கள் தலை முடியையும் கழுத்தையும் மறைக்கச் சுற்றாடை அணியவில்லையாம் (ஹிஜாப் - Hijab). இக்கட்டான சமயத்தில் இஸ்லாமிய ஷரியா சட்டம் கண்டிப்பாக அமல்படுத்தப்பட்டதால், அப்பள்ளியில் குறைந்த பட்சம் பதினைந்து மாணவியர் முற்றிலும் எரிந்து சாம்பலாயினர். தீயில் மாணவியர் எரிந்துகொண்டிருக்கும் போது உயிருக்கே ஆபத்தான நிலையில் அம்மாணவியர் உயிரைக் காப்பாற்றுவதைக் காட்டிலும் இஸ்லாமிய 'ஷரியா' நிர்ப்பந்திக்கும் உடைக்கான கழுத்து சுற்றாடை ஒழுங்குமுறையே சவுதி அரேபிய இஸ்லாமியப் போலீசுக்கு மிக முக்கியமாகிப் போனது. இது நடந்து முடிந்த உண்மைக் கொடுமை![329]

10. இப்பிரிவின் தலைவருக்கும் அல்லது இக்குழுவிற்கும் சீடர்கள் அடிமை போன்ற நிலையில் இருக்கவேண்டி வருவதால், இப்பிரிவிலுள்ள யாவரும் தங்கள்

[329] http://news.bbc.co.uk/1/hi/world/middle_east/1874471.stm

குடும்பம், நண்பர்கள் ஆகியவர்களுடன் தங்கள் தொடர்புகளை முற்றிலும் வேரறுத்துக் கொள்ள வேண்டும். இன்னும் ஒரு படி மேலாக, தங்களுடைய சொந்த குறிக்கோள்கள், செயல்முறைகள் ஆகியவைகள் எதுவானாலும் அவைகளை அடியோடு மறந்துவிட வேண்டும். இப்பிரிவின் எல்லா விஷயங்களிலும் அதி தீவிரமாகத் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும். இதில் கொஞ்சமும் தவறு ஏற்படலாகாது.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: மேற்கூறிய காரணங்களால் முஸ்லிமாகத் தங்களை மாற்றிக் கொண்டவுடன் முந்தைய தொடர்புகளான, தாய் தந்தை, உறவினர் நண்பர்கள் ஆகியவர்களோடு தொடர்பை முழுதும் வேரறுத்துக் கொள்ளவேண்டும். ஏனெனில் அவர்கள் முஸ்லிம்களல்ல. முஸ்லிமல்லாத பெற்றோர்களிடமிருந்து தங்கள் குழந்தைகள் முஸ்லிமாக மாறியவுடன் எப்படிச் சிறிதும் நன்றியோ பாசமோ மரியாதையோ இன்றித் தலைகீழாய் மாறிவிட்டனர் எனச் சித்தரித்து எனக்கு இதுவரை கணக்கில்லாத எத்தனையோ மனமுருக்கும் உண்மை நிகழ்ச்சிக் கடிதங்கள் தொடர்ந்து வந்த வண்ணம் உள்ளன. சில சமயங்களில் முஸ்லிமாக மாறியவர்கள் தங்கள் உறவினரைத் தொலைபேசியில் உரையாடினால் அல்லது நேரில் வந்து பேசிவிட்டால், இப்பேச்சு வார்த்தையில் உயர்ந்த பட்சமாகத் தன் உறவினர்களையும் ‘முஸ்லிமாக மாறிவிடு’ எனும் ‘தாவா’வாகத் தான் (da’wa = invitation to join Islam) இருக்கும். இந்த அபூர்வ நிகழ்ச்சிகள் மிக சம்பிரதாயமாகவும் பெயரளவிலும் மட்டுமே இருக்கும். இதில் பாசமிருக்காது. இவ்வாறு என்றாவது புதிதாக மாறிய முஸ்லிம்கள் நேரில் வந்துவிட நேர்ந்தால் ஏதோ புது மனிதர்களென நடந்துகொள்வார்கள். வந்தவர்களுக்குக் கொஞ்சமேனும் எதிர்ப்பு ஏற்பட்டால், உடனே இடத்தைவிட்டு விருட்டென சென்று விடுவார்கள். தாம் மிக நேசித்த ஒருவர் முஸ்லிமாக மாறியவர்கள் பின் இனி தங்களுடையவர் அல்ல எனும் எண்ணத்தில் இவர்களைக் காணாது இவர்கள் பெற்றோர் உறவினர் பலர் மனமுடைந்து பெருந்துக்கத்திற்கு ஆளாகிவிடுகின்றனர். இனி பெற்றோர்கள் என்னதான் செய்ய முடியும்? முஸ்லிமாக மாறியவர் உடல் முன்னர் போலக் காணப்பட்டலும், இவர்கள் மனத்தை முஸ்லிம் இயக்கம் பயமுறுத்திப் பறித்துக்கொண்டு விட்டதே!

11. இப்பிரிவு எப்போதுமே புதிய அங்கத்தினர்களைக் கொண்டு வருவதிலேயே குறியாய் இருப்பார்கள்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: முஸ்லிம்கள் எப்போதுமே புது அங்கத்தினர்களுக்கு வலை வீசிக் கொண்டே இருப்பார்கள். முஸ்லிம்களின் மிக முக்கியக் குறிக்கோள் இஸ்லாத்தை உலகெங்கும் பரப்புவது ஆகும். இவர்களுக்கு இதே கருத்து எப்போதுமே மனதை ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கும். இதற்காக புதிதாக முஸ்லிமாக மாறியவர்கள் தங்கள் இஸ்லாமிய நம்பிக்கையை நிரூபிக்கத் தங்கள் குடும்பத்தினரையும் நண்பர்களையும் தான் முதலில் அழைப்பார்கள். இங்குதான் இஸ்லாத்தின் மத போதனை-உண்மை நிறம் வெளிப்படும். இதற்காகப் பொய் வெள்ளமாகப் பெருகும். முதலில் இவர்கள் இஸ்லாத்தில் வெறுப்பூட்டுகிறவைகளையும் தீயொழுக்கப் பகுதிகளை வெளியிடாமல் அனேக நன்மைகள் தங்களுகளுக்குண்டாகுமென இல்லாத, வீணான இஸ்லாமியப் பெருமையைப் பற்றிப் பிரும்மாண்டப் பொய்களைக் கூறி புகழ்வார்கள். இவைகளைத் தங்கள் பெற்றோரிடமே வெட்கமில்லாமல் ஏமாற்றிப் பொய் சொல்வார்கள்.

12. இக்குழுவினர் எப்போதும் வேறு சிந்தனைகளுக்கு இடமளிக்காமல் அதிக செல்வத்தை உண்டாக்கவே வெவ்வேறு உத்திகளை உபயோகிப்பார்கள்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: முதலில் 'ஜிஹாது'க்குத் தொகை திரட்டுவதில் முஸ்லிம்களுக்கு முதலாவதான கருத்து ஈடுபாடு இருக்கும். அந்நாட்களில் முகம்மதுவின் ஜிஹாத் செலவுக்காக நிதியை உண்டாக்க திடீர் தாக்குதல் நடத்திக் கொள்ளையடிப்பதால் வேண்டிய மட்டும் கிடைத்தது. ஆரம்பத்தில் அநாவசியப் போர் எனவோ திடீர்த் தாக்குதல் எனவோ அதுவரை அரேபிய மக்களுக்குத் தெரியாது இருந்தது. போர் என்றால் மிக பயந்தனர். இதை நிரந்தரமாக்க 'சகத்' எனும் இஸ்லாத்துக் கட்டாய தானம் உருவாக்கி இதை கட்டாய இஸ்லாத்து ஐம்பெரும் தூணெனக் கொள்கையாக்கப்பட்டது (Five Pillars of Islam - கலீமா, சலாத், ரோசா, '**சகத்**', ஹஜ் எனும் இஸ்லாத்து ஐம்பெரும் தூண்கள்). அக்காலத்தில் முகம்மது தன் முஸ்லிம்களுக்காகக் குரானில் இஸ்லாமியத் தொகைகளை வற்புறுத்தித் திரட்ட தாமே **இக்குரான் வசனத்தை** உண்டாக்கினார். **(9:103)** "(நபியே!) அவர்களுடைய செல்வத்திலிருந்து தர்மத்திற்கானதை எடுத்துக் கொண்டு அதனால் அவர்களை உள்ளும் புறமும் தூய்மையாக்குவீராக. இன்னும் அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்வீராக. நிச்சயமாக உம்முடைய பிரார்த்தனை அவர்களுக்கு (சாந்தியும்), ஆறுதலும் அளிக்கும்; அல்லாஹ் (யாவற்றையும்) செவியுறுவோனகவும், அறிபவனாகவும் இருக்கின்றான்."

13. இக்குழுவின் அங்கத்தினர்கள் தங்கள் பொன்னான நேரத்தை அதிகப்படியான அளவிற்குக் குழு நடவடிக்கைகளின் காரியங்களுக்காக நேராகவோ மறைமுகமாகவோ ஒதுக்கவேண்டுமென இயக்கம் எதிர்பார்க்கிறது.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: முஸ்லிம்கள் குறித்த காலத்தில் ஐந்து முறை தொழுகைக்காக மசூதிக்குச் செல்ல வேண்டுமெனவும் அங்கு சொற்பொழிவு மேடையிலிருந்து முல்லாக்கள் ஆற்றும் இஸ்லாமிய இயக்கப் பேருரைகளைக் கட்டாயம் கேட்க வேண்டுமெனவும் கட்டாயப்படுத்தப்படுவார்கள். அடுத்து, இஸ்லாமிய உடை, உணவு என அனேக விதத்தில் முல்லாக்கள் போன்று முஸ்லிம்களையும் பின் பற்ற வைத்து விடுகிறது. முஸ்லிம்கள் எவ்வாறு தங்கள் சிந்தனைகளைச் செய்ய வேண்டும் என இஸ்லாமியமே சொல்கிறது. இச்சொற்பொழிவுகளில், முஸ்லிமல்லாதவர்களை எப்படி வெறுத்து அழிக்க வேண்டுமெனவும் அடிதடி, கொலை, கொள்ளை, ஜிஹாதுக்கான நிதி வசூல், என்றும்தான் போதனைகள் இருக்கும். முஸ்லிம்களுக்கு இஸ்லாத்தை விட்டால் வேறு கதியில்லை எனவும் வைத்துவிடும்.

14. இக்குழுவின் அங்கத்தினர்கள் தங்கள் குழுச் சீடர்களுடன் அல்லாமல் வேறெவொருவருடனும் சமூக உறவு வைத்துக் கொள்ளக் கூடாது.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: காஃபிர்களுடன் சமூக உறவை தவிர்த்தொதுக்க வேண்டுமென முஸ்லிம்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. குரானும் இஸ்லாத்தை நம்பாதவர்களுடன் உறவு வைத்துக் கொள்ளக் கூடாதெனத் தடை செய்கிறது. காபிர்களை அருவருப்பளிக்கும் குப்பை கூளம் போன்றவர்கள், தூய்மையற்றவர்கள் அதாவது (நாசீஸ்) கற்பொழுக்கமற்றவர்கள் (முஸ்லிம்கள் மாத்திரம் மிகக் கற்புள்ளவர்களாம்), எனக் கூறி முஸ்லிம்கள் தங்கள் கடுமையைக் காட்டவும் முடிகிறது. குரானில் **(9.28)** "ஈமான் கொண்டவர்களே! நிச்சயமாக இணை வைத்து வணங்குவோர் அசுத்தமானவர்களே. ஆதலால், அவர்களின் இவ்வாண்டிற்குப் பின்னர் சங்கை மிகுந்த இப் பள்ளியை (கஃபத்துல்லாஹ்வை) அவர்கள் நெருங்கக் கூடாது..... அல்லாஹ் நாடினால் - அவன் அதி சீக்கிரம் அவன் தன் அருளால் உங்களைச் செல்வந்தர்களாக்கி விடுவான்.....". **(9:123)** "நம்பிக்கை கொண்டவர்களே! உங்களை அடுத்திருக்கும் (தொல்லை விளைவிக்கும்) காஃபிர்களுடன் போர் புரியுங்கள்; உங்களிடம் கடுமையை அவர்கள் காணட்டும்........

” (8.55) “நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் உயிரினங்களில் மிகவும் கெட்டவர்கள், நிராகரிப்பவர்கள் தாம்.....”.

மேற்கூறியவைகளில் எங்காகிலும் ஆன்மீகச் சொற்கள் உண்டா என கவனிக்கவும்! ஒரு இஸ்லாமிய இணையம் இவ்வாறு எழுதியுள்ளது:

அல்லாவுக்காக அவர் எதிர்பார்க்கும்படி சிலரிடம் அன்புடன் பழகிச் சிலரிடம் தங்கள் வெறுப்புணர்ச்சியைக் காட்ட வேண்டும் என்பதில்தான் இஸ்லாத்தில் நம்பிக்கை / பற்றுறுதி (faith= Kalema), எனத் தனித்தனியாக கூறப்பட்டுள்ளது. (**al wala wal bara**). இதுதான் இஸ்லாத்தில் **தாவ்ஹிது**க்கு அடுத்து, மிக முக்கியமான நம்பிக்கை (Tawheed = Oneness of God= i.e. Allah).

(3: 28) -“முஃமின்கள் (தங்களைப் போன்ற) முஃமின்களையன்றி காஃபிர்களைத் தம் உற்ற துணைவர்களாக எடுத்துக்கொள்ள வேண்டாம்;. அவர்களிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அன்றி (உங்களில்) எவரேனும் அப்படிச் செய்தால் (அவருக்கு) அல்லாஹ்விடத்தில் எவ்விஷயத்திலும் சம்பந்தம் இல்லை. இன்னும், அல்லாஹ் தன்னைப் பற்றி உங்களை எச்சரிக்கின்றான்; மேலும், அல்லாஹ்விடமே (நீங்கள்) மீள வேண்டியதிருக்கிறது.[330]

(இதன் பொருள்: “கடவுளான அல்லா, என்னிடம்தான் நீங்கள் திரும்பவும் வர வேண்டும். நான் சொல்லியபடி நடக்கவில்லையானால் உங்களுக்குக் கொடுமையான தண்டனையை அளித்திடுவேன் ஜாக்கிரதை” எனும் அச்சுறுத்தல்!!!)

இஸ்லாமிய இயக்கக் கொள்கைளின் சொற்சுருக்கம் என்பதுதான் *al* wala wal bara. இஸ்லாமிய நம்பிக்கைக்கு உள்மையப் பகுதியாக இதுதான் உருவங் கொடுக்கிறது. இதுதான் கொஞ்சமும் மறைக்காமல், உள்ளது உள்ளபடி, கலப்படமில்லாத வெறுப்பைக் கொப்பளிக்கும்படியாக உள்ளது. முஸ்லிமாக இருந்தால் அவர் எக்கணமும் முஸ்லிமல்லாதவர்களை வெறுத்தொதுக்க வேண்டும் என்றும் மேலும் அவர்களிடம் மிகக் கடுமையாக நடந்துகொள்ள வேண்டும் என்றும் கண்டிருக்கிறது. “முன் கவனமாக முஸ்லிமல்லாதவர் களிடமிருந்து முஸ்லிமான உங்களைக் காத்துக்கொள்ள வேண்டுமானால்” எனும் சொற்களுக்கு உண்மைப் பொருள், இஸ்லாத்துக்கு ஆதாயமாக எப்போதுமே முஸ்லிமல்லாதவர்களை ஏமாற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்பதுதான். மற்றொரு சொல், “**அல்லாஹ்விடமே (நீங்கள்) மீள வேண்டியதிருக்கிறது**”; இதன் பொருள்: குரானில் உள்ளபடி செய்யாவிட்டால் அல்லா பெருங்கேடுகளான நரக வாழ்க்கையைக் கொடுத்துத் துன்பப்படுத்தி விடுவார் எனும் முன்னெச்சரிக்கை கொடுக்கப்படுகிறது!

15. குழுவின் மீது மிக விசுவாசமுள்ள அங்கத்தினர்கள் யாவரும் எப்போதும் பயந்து நடுங்கி நினைவில் கொள்வது, இவர்களுக்கு இக்குழுவை விட்டால் வாழ்வாதாரமாக வேறொன்றும் கிடையாது. ஏனெனில், இவர்கள் இக்குழுவை விட்டோடிவிட்டால் பழிவாங்கும் நடவடிக்கை மிகத் தீவிரமாக தங்கள் மீது இக்குழும மேலாண்மை நிச்சயமாக நிகழ்த்திவிடும் எனும் மனக்கிலி இவர்களுக்கு எப்போதுமிருக்கும்.

**இஸ்லாத்தோடு பொருந்தற்குரிய தகுதி ஒப்பீடு**: இஸ்லாத்தை விட்டுவிடுவதெனும் எண்ணத்தை உண்மை முஸ்லிம்களுக்குள் நினைத்துக் கூடப் பார்க்க இயலாது. இதைத் தங்கள் புத்தியில் சற்றேனும் ஏற்றுக்கொள்ளவும் மாட்டார்கள். சமீபகாலமாகப் பல லட்சக்கணக்கில் எத்தனையோ முஸ்லிம்கள் இஸ்லாத்தை விட்டுவிட்டனர். அப்படி இஸ்லாத்தை விட்டு வெளியில்

[330] http://quranicverse99.tripod.com/islamicways/id15.html. This article can be found in many other sites.

சுதந்திரமாகத் தாங்கள் எப்படி மன நிறைவுடன் வாழ்கிறோம் எனவும். அவர்கள் மேற்கொண்ட வழிகள் என்னென்ன எனவும், ஏன் விட்டோமெனக் காரணங்களையும் விவரமாக அப்படியே தங்கள் அனுபவ வாயிலாக எழுத்து வடிவில் அவர்கள் காட்டினால் பலருக்கு நன்மையுண்டாகும். உதாரணமாக:
:"Apostates of Islam"- http://www.faithfreedom.org/category/articles/apostates-of-islam/.

பற்றுறுதியுள்ள முஸ்லிம்கள் விடாப்பிடியாக இஸ்லாத்திலேயே விழுந்து கிடப்பார்கள். இவர்கள் கூறும் மற்றொரு கூற்று, இவ்வாறாக இஸ்லாத்தை விட்டவர்கள் கூறியவைகளனைத்தும் புனைத்து கூறப்பட்டுள்ளது (பொய் கூறி) எனவும் மேலும் இக்கதையெல்லாம் முஸ்லிம்களின் நம்பிக்கைக்குக் குந்தகம் விளைவிக்கச் செய்யும் ஏற்பாடு எனவும் முஸ்லிமல்லாதவர்கள் மீது பழியைச் சுமத்தி விடுவார்கள். ஆகவே இதுவே தீவிரவாத முஸ்லிம்களுக்கு முஸ்லிமல்லாதவர்கள் மீது திடீர்த் தாக்குதல் போன்ற தீய செய்கைகளில் ஈடுபட ஓர் வாய்ப்பாகிறது. தினமும் எனக்கு மின்னஞ்சலில் தீவிர முஸ்லிம்களிடமிருந்து அச்சுறுத்தும் எச்சரிக்கை வந்த வண்ணம் உள்ளன. இம்மாதிரி தீவிர முஸ்லிமகளுக்கெதிராக எழுதும் எனக்கு மறுமையில் நரகத் 'தீ'யிலிட்டு சித்திரவதைதான் நடக்கக் காத்திருக்கிறது என அதில் மையச் செய்தியாக இருக்கும். இஸ்லாமிய வலையில் இன்னும் சிக்கிக் கொண்டிருக்கும் இம்முஸ்லிம்களுக்கு ஒரு பக்கத்தில் நரகப் பயமும் மற்றொரு பக்கத்தில் தம்மையும் தம்மைச் சேர்ந்தவர்களையும் சக முஸ்லிம்கள் பழிவாங்கி (கொன்று) விடுவார்களோ எனும் இரண்டு பக்கக் கிடுக்குப் பிடியின் நடுவில் "இருதலைக் கொள்ளி"யென தத்தளிக்கிறார்கள். இந்த மனக்கிலி-குடைச்சல் முஸ்லிம்கள் தங்களுக்குத் தாங்களே ஏற்படுத்திக்கொண்டது. இஸ்லாத்தில் ஆன்மீகத்தைப் பற்றியோ அல்லது தெளிவுபெற்ற மன அமைதி நிலையை அடைவது எப்படி என்பது பற்றியோ சொல்லிக் கொடுப்பதில்லை. மாறாக ஆன்மீகச் செய்தி என்பதே இஸ்லாத்தில் இரண்டாம் பட்சம்; அப்படிக் கூறியிருந்தால் எல்லாமே 'தக்கியா' என்று ஏமாற்றக் கூறியவைகள்தான். அதிலும் மதீனா வசனங்கள் யாவுமே வன்முறையை வற்புறுத்தித் தூண்டிவிடுபவைகளே. உலகுக்கு உளத் தூய்மை என்பதே வேறு, ஆனால் இஸ்லாத்தில் இயக்கப் பற்றென்பதே 'முகம்மதுவை எல்லா விதத்திலும் முன்மாதிரியாகக் கொண்டு அவர் மாதிரியே ஆகிவிடல்' என்பதுதான். முகம்மது மாதிரி இந்நாட்களிலும் ஆக முயன்றால் பொதுமக்களே தெருவில் அம்மணமாக கடைத்தெருவில் நிறுத்தித் தோலுரித்து விடுவார்கள். இதில் ஐயமில்லை. தற்போது இஸ்லாமியச் சடங்குகளான தினம் ஐந்து முறைத் தொழுகைகள் எனச் செய்து ஓசைப்படமல் பிறந்த பொன்நாட்டுக்கும் அதன் சூதுவாதற்ற மக்களுக்கும் துரோக நடவடிக்கைகளிலும், சுற்றி வளைத்து நேர்மையற்ற வழிகளிலும் ஈடுபடவைத்து இஸ்லாமிய உலகை (Dar-ul-Islam) நிறுவ முயற்சி செய்கிறார்கள். இதனால்தான் முஸ்லிம்களைப் பற்றி பொதுமக்கள் மனத்தில் ஒரு வெறுப்புணர்ச்சி தன்னிச்சையாக ஏற்படுத்தி விடுகிறது. இஸ்லாத்தை எல்லாவற்றைக் காட்டிலும் வேறுபடுத்திக் காட்டும் இயல்புடன் எடுத்துரைக்க வேண்டுமானால், அது ஒரு வெறிஈடுபாடு தான் (Islam is a cult); மதமெனக் கூறுவதற்கு அது முற்றிலும் லாயக்கற்றது. இக்கூற்றை எவ்வழியாலும் மறைக்கவோ மாற்றவோ முடியாது.

**வெறி ஈடுபாடுள்ள சில பிரபல தற்காதலர்கள்**

முகம்மதுவுடைய தனித் தன்மை வாய்ந்த இயல்புகளைக் குறித்து இன்னும் பல நிபுணர்களுக்கு மிகப் புரியாத புதிராகவே உள்ளது. பலருக்கு

முகம்மதுவுடைய சாதனைகளில் நம்பிக்கை இல்லாவிட்டாலும், அவர்களே ஒப்புக்கொண்ட விஷயம், அக்கால அரேபியர் நெஞ்சுக்குள் இவரது செயல்பாணி ஆழப்பொறிக்கப்பட்டுள்ளது, என அவர் தன் சீடர்களுக்கு ஊக்கமூட்டும் திறன் படைத்திருந்தார் என்பதில் ஐயமில்லை. முகம்மதுவைச் சுற்றி இருந்தவர்களை மந்திர மாயாஜாலத்தில் கட்டுண்டது போல அவர்கள் மனத்தை மயக்கித் தன் வாக்குசாலத்தால் அவர்களுக்கு உற்சாகமூட்டி முகம்மதுவுக்கு வேண்டாதவரைப் போட்டுத் தள்ளத் தூண்டும் அளவுக்கு அவரால் செய்ய முடிந்தது. அச்சீடர்களைத் தங்கள் உயிரைத் தியாகம் செய்யத் தூண்டி விடவும் அவரால் வசீகரிக்க முடிந்தது. அக்காலப் படிப்பறிவில்லா அரேபியப் போக்கிரிக் கும்பலே **முகம்மதுவின் முதல் சீடர்கள்**. அவர்களை எல்லா வழிகளாலும் முகம்மதுவால் '**குயவன் கையில் கிடைத்த எளிதில் நெகிழ்வுள்ள பிசையும் களிமண்ணெனக்**' கையாள முடிந்தது. ஆனால் இக்காலத்திலும் மெத்த படித்த பலரும் இன்னும் இஸ்லாத்தில் நம்பிக்கை கொண்டுள்ளனரே! கேட்டால் பரம்பரை பரம்பரையாக இவ்வியக்கத்தை பின்பற்றுகிறோமெனக் கூறுவர். அந்நாட்களில் உறுதிப்பாட்டுடன் குறுகிய காலத்திற்குள் மிக உயர்ந்த நிலையை அடைவதற்குக் குறி வைத்துக் கொள்ளவும் எப்போதுமே தன்னைச் சேர்ந்தவர்களுக்கு மிகக் கவர்ச்சியூட்டி ஆட்கொள்ளவும் எல்லாவற்றிற்கும் மேலாக மிக சக்திமானகவும் ஆகவும் **எப்படி** முடிந்தது எனப் பலர் வியக்கிறார்கள். முகம்மதுவுடைய வெற்றிக்கு எது காரணமாக அமைந்தது? இதில்தான் உலக சரித்திரத்தில் பல தற்காதலர்களுடைய (Narcissist) பரம ரகசியம் அடங்கியுள்ளது. தற்காதலே இவர்களை இவ்வளவு தூரம் ஓய்ச்சல் ஒழிவின்றித் தொடர்ச்சியாக தூண்டிவிட்டுள்ளது. உலக சரித்திரத்தில் கடவுள் தூதர்கள் எனச் சொல்பவர்களுக்குக் குறைவில்லை. அதே போன்று இத்தூதரிடம் உள்ள பக்தியை வெளிக்காட்டுவது தலைவருக்கு வேண்டாதவர்களைப் போட்டுத் தள்ளுவதில்தான் (கொல்வதில்தான்) உள்ளது என நம்பும் சீடர்களுக்கும் குறைவில்லை. பிறர் தன்னை மதிக்க வேண்டும், மட்டில்லா மரியாதையைக் காட்ட வேண்டும், அதனால் தாம் மிக சக்திமானாக ஆக வேண்டுமெனும் தற்காதல் எண்ணமே இவர்களை இவ்வளவு தூரம் உந்த வைக்கிறது. தற்காதலர் பிறரை இச்சகம் பேசி வஞ்சகம் செய்யும் மிகத் தேர்ந்த **கலைஞர்**!

தற்காதலருக்கு மற்றவர்கள் தன்னைப் போற்றிப் புகழ்ந்து கொண்டிருக்க வேண்டும் எனும் விருப்பார்வம் மிகுதியாக உள்ளது. இதில் இவர் வீண் பிடிவாதமுள்ளவர், தன் செல்வாக்கைப் பயன்படுத்திக் காரியத்தை சாதித்துக் கொள்ளும் திறன் படைத்தவர், சர்வாதிகாரம் பெற மிக உறுதிப்பாடுள்ளவர். தனக்கு ஏதாகிலும் சுயநல லாபம் கிடைக்குமானால் முன்னாள் எதிரிகளையும் இந்நாள் நண்பராக மாற்ற அவர்கள் காலில் விழக் கூடத் தயங்க மாட்டார்.

இவர்களுக்கு 'அடிப்படைக் கொள்கை என்பதே, எந்தக் கொள்கையிலும் பற்றில்லாமல் இருப்பது' "**எந்த நிரந்தரக் கொள்கையும் இல்லாதிருப்பதேதான் முக்கியக் கொள்கை**" என நடைமுறையில் உள்ளவர்கள். இவைகளைத் தவிர இவர்கள் சாதுர்யமானவர், மிகக் கபடம் நிறைந்தவர், (hypocrite), அதே சமயம் தன் காரியத்தை சாதித்துக் கொள்ளச் சமயோசித சிந்தனை உள்ளவர். இவைதான் தற்காதல் தலைவரின் வெற்றி மந்திரங்கள். உலகில் சில தற்காதலுள்ள மனநிலை திரிந்த தலைவர்களின் பட்டியல்: நெப்போலியன் போனபார்ட், ஹிட்லர், ஸ்டாலின், முஸ்ஸோலினி, போல் போட், மா-சே-துங், சத்தாம் ஹுஸ்ஸைன், இடி அமீன், ஜிம் ஜோன்ஸ், டேவிட் கொரேஷ், ஷாகோ அசஹாரா, சார்லஸ் மான்சன், போன்றோர்.

தற்காதலர் உணர்ச்சியால் மனம் குலைந்தவர். தன் சக்தியைப் பற்றி பிறர் அடிக்கடிச் சொல்லி அதை உறுதிப்படுத்திக் கொள்ள பேராசை மிகுந்தவர். இதை அடைவதற்கு எதையும் செய்யத் துணிந்தவர். தன் சொந்த மனைவி மக்களை அல்லது தன்னை நம்பும் தோழர்களைச் சுயநலத்திற்காக தியாகம் செய்யத் (கொலை செய்யத்) துணிந்தவர். பிறர் நம்பும்படி கயிறு திரித்துப் பொய் கூறுவதில் மிக வல்லுனர். இவரைச் சேர்ந்தவர்களுக்குத் துணிவை உண்டாக்கி அதனால் தாம் மிகக் கட்டுறுதியுடன் இருப்பதாகக் காட்டிக்கொள்பவர். இவருக்குள் இருக்கும் பயங்களையும் பாதுகாப்பின்மையையும் மறைத்துக்கொள்ள முகமூடியாக ஒரு செயற்கைத் தோரணையை அமைத்துக் கொள்பவர். அவர் பிறரைப் பற்றிக் கவலையும் அன்புள்ளமும் கொண்டவரெனக் காட்டிக் கொண்டு, இவர்களையே பகடைகளாக உபயோகித்து, வேண்டாதபோது உதறித் தள்ளவும் தெரிந்தவர், துணிந்தவர். இத்தற்காதலருக்குத் தன் தொண்டர்களுடைய வாழ்வு என்பது தூசு போன்று வேண்டாத போது அவசியமில்லாதது. தேவையில்லாத போது எச்சமயத்திலும் குப்பைத் தொட்டியில் தூக்கி எறிந்தோ அல்லது தொந்திரவானால் ஈவிரக்கமின்றி போட்டுத் தள்ளிவிடவோ முடியும். மேற்கூறிய குண இயல்புகளில் எதெது கலைஞர் முகம்மதுவுக்குப் பொருந்துமென ஒப்பிட்டுப் பார்க்கவும். இவ்வாறு ஒப்பீடு செய்யும்போது படிப்பவர்களுக்கே ஏன் முஸ்லிம்கள் இஸ்லாத்தில் இவ்வளவு கண்மூடிய முழு ஈடுபாடு கொண்டுள்ளனர், இவர்கள் ஒழுகலாறுகள் ஏன் இவ்வாறு உள்ளன என்று நன்கு தெளிவாகப் புலப்பட்டு விடும். கீழே வெறிஈடுபாடுள்ள சில பிரபல தற்காதலர் தலைவர்களைப் பற்றி சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

**ஜிம் ஜோன்ஸ்**

ஜிம் ஜோன்ஸ், என்பவன், சாதரண, கண்ணியமான மக்களை நம்ப வைத்து, தானொரு கடவுள் தூதன் எனப் பறை சாற்றிக் கொண்டான். இதில் சமுதாயப் பொதுவுடமைக் கோட்பாடுகளையும் சேர்த்துக் கொண்டான். தன்னை நம்பிய மக்களைத் தங்கள் குடும்பத்தை உதறித் தள்ளிவிட்டு வரச் செய்து ஜிம் ஜோன்ஸையே பின் தொடர்ந்து 'கயானா'விலுள்ள "காட்டுப்பகுதி"க்கு அழைத்துச் சென்றான். இவன் 'கயானா' அரசாங்கத்தைத் தன் வசீகரப் பேச்சால் ஏமாற்றி அவர்களிடமிருந்தே 300 ஏக்கர் நிலத்தை இலவசமாகப் பேற்றுக்கொண்டான். மேலும் அந்தப் பகுதியைச் சுற்றித் தகர்க்க முடியாத அல்லது தப்பித்து செல்ல இயலாத சுற்றுச் சுவரையும் எழுப்பிக்கொண்டான். அவனுடைய சீடர்களின் மனைவிமார்களிடம் உடலுறவு வைத்துக் கொள்ளத் தானே தகுதி படைத்தவன் எனத் தன் சீடர்களையே நம்ப வைத்தான். பின்னர் சீடர்களின் மனைவிகளும் இவனிடம் உடலுறவு கொண்டு கருவுற்றுக் குழந்தைகளையும் பெற்றுக்கொண்டனர். விழிப்புணர்வுடன் தனக்காக எதையும் செய்யக்கூடிய சீடர்கள் சிலரைத் தேர்ந்தெடுத்து எப்போதும் அவர்களைத் துப்பாக்கிகளைச் சுமந்து செல்லவும், மற்ற சீடர்களில் யாராவது ஜிம் ஜோன்ஸுக்கு எதிராகப் பேனினாலோ நடந்து கொண்டாலோ தப்பி ஓட முயற்சித்தாலோ, உடன் அச்சீடர்களை அங்கேயே சுட்டுக் கொல்லவும் உத்தரவிட்டிருந்தான். இவனுடைய இயக்கத்தில் இருந்த சீடர்களைக் கண்மூடித்தனமான பற்றினால் கிறங்க வைத்தான். ஜிம் ஜேம்ஸை நேரில் கண்டு அவனைப் பேட்டி காண வந்த் அந்நாட்டு செனேடர், அவருடன் வந்த குழுவினர், அங்கு நடக்கும் அநியாயங்களைச் சற்றும் எதிர்பாராமல் அறிந்து கொண்டனர். உண்மையில் என்னென்ன அக்கிரமங்கள் அங்கு நடக்கின்றன என அறிந்து அங்கிருந்து தப்பி ஓட அவர்கள் முயற்சிக்கும்போது வந்த முக்கிய 'செனேடரை'யும்

மற்ற சிலரையும் கொஞ்சமும் யோசிக்காமல் சீடர்கள் சுட்டுக் கொன்றனர். ஜிம் ஜோன்ஸ் மீது அரசாங்கத்தால் நிச்சயம் நடவடிக்கை எடுக்கப்படும் எனத் தீர்மானித்து ஜிம் ஜோன்ஸ் ஒட்டு மொத்தமாகத் தன் சீடர்களைக் கொஞ்சமும் எதிர்ப்பில்லாமல், **சைனைட் எனும் உயிர்கொல்லி திரவபானத்தை** (cyanide potion) ஒரு கிண்ணத்தில் நிரப்பிக் குடிக்க வைத்துத் தற்கொலை செய்து கொள்ள வைத்தான். மொத்தமாகத் தொள்ளாயிரத்துப் பதினோரு (911) சீடர்களும் மனப்பூர்வமாய் அவன் விருப்பப்படியே நச்சுத் திரவ பானத்தை அருந்தி ஒருவரை ஒருவர் கட்டியணைத்துக் கொண்டு இறந்தனர். இதில் ஓர் பொதுநிலை மீறிய அம்சம் என்னவென்றால், அச்சீடர்கள் தங்கள் சொந்தக் குழந்தைகளுக்கும் தங்கள் கைகளாலேயே நச்சுத் திரவ பானத்தை ஊட்டிவிட்டுப் பெற்றோர்களைக் கொண்டே குழந்தைகளைக் கொலை புரிய வைத்தான். இதைப் பற்றி இன்னும் விவரமாக அடுத்த அத்தியாயத்தில் விளக்குவோம்.

### டேவிட் கோரேஷ்

டெக்ஸாஸ் மாநிலத்தின் வாகோ எனும் புறநகரத்தில் உண்மைப் பெயரான 'வெர்னான்' என்பவன், (டேவிட் கோரேஷ் என்பது இவன் புதிதாகப் புனைந்துகொண்ட பெயர்) சுற்றுச்சுவருடன் கூடிய பெரிய மாளிகையில் தன்னைப் பின்பற்றுவோர்களை ஒருங்கிணைத்தான். அவர்களைத் தானொரு கடவுளின் மைந்தன் என நம்பவும் வைத்தான். இவனுடைய முதல் அறிக்கை கலிபோர்னியாவிலுள்ள Seventh Day Adventists எனும் சர்ச்சுக்குள் தெரிவிக்கப்பட்டது. அவ்வறிக்கையில், தனக்கு ஏழு கொம்புகளுடன் ஏழு கண்கள் உள்ளன என்றும் தன் பெயர் கடவுளின் மைந்தன் (Son of God) என்றும் கூறி "கடவுளைக் காண இங்குள்ள ஒவ்வொருவரும் தயார் செய்து கொள்ளுங்கள்" எனக் கண்டிருந்தது. இந்த அறிக்கையையும் சிலர் உண்மையென நம்பினர். மார்க் ப்ரியோல்(ட்) (Marc Breault) என்ற டேவிடின் முன்னாள் சீடன் இவ்வாறு எழுதினான்: டேவிட் என்னிடம் கூறியது: "அனேக பெண்கள் தங்களிடம் உடலுறவு கொள்ளும்படி என்னை மிக வற்புறுத்திக் கெஞ்சினர். இதில் மிகக் குறிப்பாகச் சொல்ல வேண்டியது என்னவென்றால் எல்லோருமே கன்னி கழியாத இளம் பெண்கள் எனக் கூறி இருக்கிறான்". அந்நாட்களில் முகம்மதுவுக்கு அல்லா எனும் அக்கடவுள் என்பவரே ஒரு விபசாரத் தரகராக உதவினாரோ அவ்வாறே டேவிடும் கடவுள் பெயரைச் சொல்லிச் சொல்லிக் கணக்கற்ற இளம் பெண்களைக் கற்பழித்தான். ஆரம்பத்தில் மதப் பிரசாரகராக ஆரம்பித்து, தானொரு கடவுளின் தூதர் எனக் கூறி அக்கடவுளின் மைந்தனுக்கு தந்தையான கடவுள் தன் மைந்தனின் சிற்றின்ப வேட்கைக்கைகளுக்கு வேண்டியவைகளையும் இது வரை கவனித்துக் கொண்டார் இனியும் கவனித்துக் கொள்வார் என அறிவித்தான். இவன் கூறுவது: "உண்மையான கணவன்மார்கள் என எண்ணிக் கொண்டவர்கள் கடவுளைக் கேட்காமல் (அதாவது தன்னைக் கேட்காமல் ?) தேவையற்று மணம் செய்துகொண்டு விட்டனர். கணவர்களிடம், "நீங்கள் மணந்து கொண்டதாக நினைத்துக் கொண்ட பெண்களை நான்தான் முதன்முதலில் மணந்திருக்க வேண்டும். தற்போது அவர்களை என்னிடம் சேர்த்துக்கொண்டு விட்டேன். இது என்னுரிமை. உங்கள் அனுமதியைக் கேட்க வேண்டியதில்லை" எனத் திறமையாக வாதாடினான். மணமான பெண்களின் கணவர்களிடம் இதுவரை இன்புற்றிருந்தது தவறு என உண்மையாகவே சீடர்கள் ஏமாறும் அளவிற்குத் தன்னை வளர்த்துக்கொண்டான். மார்க் ப்ரியால்ட் எழுதியபடி, அங்கு கூடியிருந்த எல்லோருமே மிக அதிர்ச்சியடைந்தனர். ஆனால் இக்கூற்றுக்கு எதிராக எவரும்

எவ்வாறும் செயலாற்றவில்லை. இவர்களொருவருக்கொருவர் "ஓ! ஸ்காட், கேட்டாயா! இதுவரை நம் மனைவியரிடம் உடலின்பம் அனுபவித்தது ஒரு மிகையூதியமாம்! (bonus)" என வேடிக்கையாகப் பேசி நக்கலடித்தனர். வேறென்ன முடியும்?

1989லிருந்து டேவிட் மாற்றான் மனைவியர்களிடம் உடலுறவை ஆரம்பித்தான். மேலும் சீடர்களின் மனைவிகளிடம் இவர்களுக்கு மாதவிடாய் கழிந்து கர்ப்பம் தரிக்கும் செழிப்பான நாட்களை முன்னரே தனக்கு அறிவித்து விடும்படி கட்டளையையும் இட்டிருந்தான். இதன்படி அப்பெண்களில் தன்னால் முடிந்த அளவிற்கு அதிகமானவர்களைக் கர்ப்பவதிகளாக்கும் செயலில் இறங்கினான். இவ்வாறு அவன் இருபது குழந்தைகளுக்குத் தந்தையானான். இது வரை கணவர்களாக இருந்தவர்களைப் பார்த்து, உடற் காயத்திற்குப் பிறகு மனக் காயமாக (adding insult to injury), "இனி 'சாலமோன்' (தன்) படுக்கைக்குக் காவல் புரியுங்கள்" எனச் சீண்டினான். **இதில் மற்றொரு கொடுமை என்னவெனில், இக்குழந்தைகளிடமே சற்று வயதானவுடன் முகம்மது போல உடலுறவு கொள்ளவும் ஆரம்பித்தான்.** இதற்காக இக்குழந்தைகளைப் பைபிளை 16மணி நேரம் மனனம் செய்ய எரிச்சலூட்டும் நச்சரிப்பு-ஆணையை வெளியிட்டான். இதில் பாவம்! ஏசு கிறிஸ்துவையும் டேவிட் விட்டுவிடவில்லை. ஒழுங்குமுறை என்ற பெயரில், இக்குழந்தைகளைத் திருத்தத் தன் மடியில் உட்கார வைத்துக்கொள்ளும்போது இவர்களின் உணர்ச்சியூட்டும் பகுதிகளைக் கையாண்டு, இதற்கு இக்குழந்தைகள் மறுத்து அழுது விட்டால், அவர்களைப் பிட்டத்தில் அடித்துத் துன்புறுத்தினான். கடவுளின் மைந்தனைத் திருப்தி செய்யும் விதத்தில் இக்குழந்தைகளுக்குப் பாடம் கற்பிக்கப் பெற்றோருக்கு பிட்டத்தில் இனி அடிக்கக்கூட இடமில்லாமல் கறு நீல நிறத்தில் ரத்தம் சொட்டச்சொட்ட டேவிடே எவ்வளவோ அடிகளை ஏற்கனவே அடித்திருந்தான். பின்னர் இக்குழந்தைகளைச் சின்னஞ் சிறு குடிசைகளில் சிறையிலிட்டு இவர்களை டேவிடின் காவலர்களும் திரும்பத் திரும்ப பலவந்தமாய் வல்லுடலுறவில் ஈடுபடுத்தும் போது, வலி பொறுக்க முடியாது அக்குழந்தைகள் ஓலமிடும் அழுகைக் குரலை கேட்கும் 29 வயதான ஒரு அபலைத் தாயின் வயிறு பற்றி எரியுமே தவிர வேறென்னதான் செய்துவிட முடியும்?[331]

அல்லாவின் தூதர் முகம்மதுவைப் போல டேவிட் கோரேஸும் ஊழ்வழியால் உந்தப்பட்ட ஒரு நாசகாரக் கடவுள் தூதர்தான் (prophet of doom). இவ்விருவர் சீடர்களிடமும் ஆயுதங்கள் எப்போதும் தயாராக இருந்தன. டேவிடின் இடத்தில் போலீஸ் திடீரெனத் தாக்கி, சோதனை செய்தபோது கோரேஷின் ஆட்களும் துப்பாக்கியால் திருப்பிச் சுட்டனர். இதில் நான்கு ATF agents ஜவான்கள் மாண்டனர். சுற்றுச்சுவரைக் கண்ணிவெடியால் தகர்த்து உள்ளே வந்தபோது அங்கிருந்த குடும்பத்தினர், குரேஷின் ஆட்கள் ஆகியோர் சோதனைக்கு வந்த ஜவான்களிடம் சரணடைந்தனர். இதில் இறந்தவர் எண்ணிக்கை தொண்ணூறு. இக்கதையை எவரும் இலேசில் நம்பிவிட மாட்டார்கள். ஆனால் உண்மையாக நடந்தேறியது. இவ்வளவு தூரம் இவ்வளவு பேர்கள் படுமுட்டாள்களாக எப்படித் தங்களையே அனுமதித்துக் கொள்ளமுடியும் என வியக்கிறீர்களா?

ஆல்பர்ட் ஈன்ஸ்டின் (Albert Einstein) இதை வேடிக்கையாகக் கூறிவிடவில்லை. 'எல்லையற்றது இரண்டு - ஒன்று, கடவுளால் படைக்கப்பட்டவை, இரண்டாவதாக, மனிதர்களின் படுமுட்டாள்தனம்.

[331] *Inside the Cult: A Member's Chilling, Exclusive Account of Madness and Depravity in David Koresh's Compound* Breault & King, 1993

கொள்ளாவிட்டால் ஏதோ தெய்வக்குற்றம் புரிந்துவிட்டது போன்ற உணர்வும் அவர்களுக்கு ஏற்படுகிறது. தியாகத்தை விட இக்குற்ற உணர்வே மிகவும் தலைதூக்கித் துன்பகரமாக இருக்கிறது.

## அண்டப்புளுகின் அபார சக்தி

Adolf Hitler தான் 1925-இல் எழுதிய "Mein Kampf" புத்தகத்தில் இவ்வாறு அன்று எழுதியுள்ளான்: "சின்னச்சின்ன பொய்யை நம்புவதைக் காட்டிலும், அபாண்டப் பொய்யைத்தான் முதலில் எந்த நாட்டு மக்களும் உடனுக்குடன் நம்பிவிடுவார்கள். பெரிய பொய்யில்தான் எப்பொதும் ஐயத்திற்கிடமின்றி நம்பிக்கை தரும் தன்மை அடங்கியுள்ளது. ஏனெனில் ஒவ்வொரு நாட்டிலும் பெரும்பான்மையான-மக்கள் சூதுவாதில்லாத சாமானியர்கள்தான். இவர்கள் எப்பொதும் எதிலும் பற்றாக்குறை உடையவர்கள். லஞ்சத்தாலும் வஞ்சகத்தாலும் ஏமாற்றும் நோக்கத்தோடு கூறப்படும் இலவச பசப்புச் சொற்களாலும் சின்னஞ்சிறு தற்கால கொடைகளாலும் இவர்களை எளிதில் திருப்திப்படுத்தித் தம் வசப்படுத்த முடியும். மடையர்களாக்கப்பட்ட இம்மக்கள் பின்னர் சொன்னதைச் செய்வார்கள் என அரசியலில் தலைமை பீடத்திலுள்ளோருக்கு மிக நன்றாகத் தெரியும். மேலும் நெஞ்ச மறிந்தோ அல்லது தன்னிச்சையாகவோ இவர்கள் என்றும் பண்டைக்காலத்துப் பைத்தியங்களாகச் சூதுவாதின்றி உணர்ச்சி வசப்பட்டு என்றும் இருப்பார்கள். இவர்களே ஒரு நாட்டின் பெரும்பான்மை மக்கள் என அரசியல்வாதிகள் இப்பண்பை நன்கறிவார்கள். இதனால் சின்ன பொய்களைக் காட்டிலும் பெரிய பொய்களுக்கு இவர்களைப் பலிகடாக்களாக ஆக்கிவிட எளிதில் சாத்தியமாகிறது. ஏனெனில், இம்மக்களே அவ்வப்போது சின்னச் சின்ன விஷயங்களில், ஆனால் தீங்கற்ற வழிகளில், சின்னச்சின்ன பொய்களைச் சொல்லிப் பழக்கப்பட்டவர்கள். ஆகையால் இவர்களே பெரிய பொய்யைச் சொல்ல அஞ்சுவார்கள். இவர்கள் சிற்றறிவுக்கு ஒரு பிரம்மாண்டமான பொய்யை அவிழ்த்து விட எவனுக்கும் அவ்வளவு துணிவு போதாது என நினைப்பவர்கள். ஏனெனில் இவர்களுக்குப் பெரும் பொய்யைக் கூறத் தெரியாது, முடியாது. மேலும் உண்மையைத் திரித்து மிகப் பெரிய பொய்களைக் கூறி, பின்னர் கண்டறியப் பட்டால், இப்பெரிய பழியைச் சுமக்க நம் தலைவனெவனுக்கும் அவ்வளவு துணிவு கிடையாதெனப் பொதுவாக மக்கள் நினைப்பதுண்டு. இப்படி எதையும் நம்புவது தவறென அவர்களுக்கு எவ்வளவுதான் பற்பல சான்றுகளுடன் எடுத்துரைத்தாலும் அப்படி நாம் சொல்வதை நம்பமாட்டார்கள். பிறவியிலேயே-பொய்-சொல்லும்-கலையில் சிறந்த அரசியலைத் தொழிலாக நடத்தும் **கலைஞர்**களுக்கு இது போன்ற பெரிய பொய்களைப் பற்றி எளிதில் தெரிந்து கொண்டு செயல்பாணியில் சுலபமாக நிச்சயம் நடத்திக் காட்டித் தங்கள் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளவும் முடிகிறது" என்றான்.

இந்நாட்களில் நமக்கிருக்கும் ஹிட்லர் மீதுள்ள வெறுப்பினால் அவன் கூறிய பேருண்மைச் சொற்களை இருட்டடிப்புச் செய்யத் தேவையில்லை. ஹிட்லர் மிக மோசமானவன்தான்! இல்லையெனச் சொல்லவில்லை. ஆனால் அவன் அந்நாட்களில் பொய்களைப பற்றிக் கூறி அவைகளால் அவனுக்குக் கிட்டிய அரசியல் லாபங்களின் உண்மைகளை மெச்சி, அதே சமயத்தில், அவன் நமக்குச் சொல்லிக் கொடுத்த பாடங்களுக்காக அவனுக்குத் தர வேண்டிய பாராட்டை அளிக்க நாம் தவறக் கூடாது! ஏனெனில் அவ்வாறு மீண்டும் அரசியல்வாதிகள் அள்ளி வீசும் பொய்களுக்கு இனியாவது பலிகடாக்களாக வேண்டாம் என அனுபவ அறிவால் அறியலாமே! ஹிட்லர் தோற்றுப் போனது மற்றொரு விளைவு! பெரிய

தத்துவஞானி போன்று ஹிட்லர் அண்டப் பொய்களின் அபார சக்தியைப் பற்றி நமக்கு விவரமாக எடுத்துரைக்கும் போது, அபாண்டப் பொய்யால் எத்தனையோ கோடானுகோடி மக்களை முட்டாள்களாக ஆக்க இயலும் என நிரூபிக்கிறான் அல்லாவா! இந்த பேருண்மையை நமக்கு நிரூபிக்க உதாரணமாக ஹிட்லர் அளவு வேறொவரும் நமக்குக் கிடையாது! மற்றொருவர்: **George Orwell, author of Politics and the English Language**இல், மெச்சத்தக்க கூற்றை இவ்வாறு உரைக்கிறார்: "அரசியல் மொழி என்பது வடிவமைக்கப்பட்ட விதமே, பொய்யைக் கேட்பதற்கு உண்மையாகவும், கொலை செய்வது மிகப் போற்றத் தக்க செயலாகவும் ஆக்கி விட முடிகிறது, இவைகளே தூய தென்றல் போன்ற நல்ல நேர்த்தியான சித்தாந்தங்கள் என்ற வெளிப்பூச்சோடு ஒரு தோற்றத்தை மக்களுக்கு அளிக்க அரசியல்வாதிகளால் மட்டுமே முடிகிறது".[342]

மிகப் பெரிய பொய்கள் யாவுமே பொது நடப்பில் இல்லாத, இயற்கையை மீறிய நூதனக் கவர்ச்சியோடு இருப்பதால் அதைக் கேட்பவர்களுக்கு முதலில் அதிர்ச்சியையும் அச்சத்தையும்தான் ஏற்படுத்தும். பெரும்பான்மையான சராசரி மக்களுக்கு இப்பொய்களைச் சீர்துக்கிப் பார்க்கும் வசதியோ அறிவோ மிகக் குறைவு. இப்பொய்கள் எவ்வளவுக்கெவ்வளவு பிரும்மாண்டமாக உள்ளதோ அவ்வளவு இதைக் கேட்கும் மக்களுக்கு இம்மாதிரி விஷயங்களை இவ்வளவு துணிச்சலுடன் எளிதாக அதிலும் பகிரங்கமாக எப்படிக் கூற இயலும் என்றுதான் முதலில் நினைத்து, இவைகள் நம்பத்தக்க உண்மைகள் எனத் தீர்மானித்துக் கொள்வார்கள்.

மக்கள் மூன்று வித விருப்பத்தேர்வு செய்ய வேண்டிய நிலை வரும். வரிசையாக, 1. இப்பொய்யைச் சொன்னவன் பைத்தியக்காரனாக இருக்க வேண்டும், 2. அவனொரு போலிக் **கலைஞனாக** இருக்கவேண்டும்! [[[அவன் கூறுவதில் கூட உண்மை கூட இருக்கலாமோ என்ற சந்தேக எண்ணம் இக்கருத்து யாருக்காகக் கூறப்பட்டதோ அவர்களுக்கே (தவற்றை உண்மையெனக் கருதத்) தோன்றும். இப்படித்தானே தவறான கருத்துக்கள் எளிதாகப் பரவி நீண்ட நாட்கள் நிலவுகின்றன! ஆனால் உண்மை ஒரு நாள் வெளிப்படும். அந்நாளே இவர்களுக்கு இவ்வுலகில் கடைசி நாளாகும். இது எல்லா போலிகளுக்கும் நடந்து இருக்கிறது]]].

இப்படி உள்ளபோது, ஏதாவதொரு காரணத்திற்காக அதாவது, இயல்பான மரியாதைக்காகவோ இப்பொய்யைச் சொன்னவனின் கவரும் சக்தியாலோ அல்லது பொய் சொல்பவன் மீதுள்ள ஈடுபாடு என்பதாலோ ஒரு தீர்வையும் காணத் தெரியாது சொல்லும் பொய்யை உடனுக்குடன் மறுத்து கூறவும் முடியாது. கடைசியாக, இவன் சொல்லும் பொய் எவ்வளவு பைத்தியக்காரத்தனமாக இருந்தாலும், உடல் பாதுகாப்புக்காக - இவ்வரசியல்வாதிகளின் 'உருட்டைக்கட்டை ரௌடிப்படை' அளிக்கும் அடி உதை கொலைக்குப் பயந்து எப்பொய்யையும் அப்படியே நம்பும்படிம் ஆகிவிடுகிறது.

பெரிய பொய்யால் அவ்வப்போது பகுத்தறிவின் அளவுகோலைக் கூட நம்மை நாமே தக்க பொருள்கூறித் தேற்றிக்கொண்டு (adjust) சரியென அமைத்துக்கொள்ள முடியும். இது, ஒரு கிலோ நிறுக்கும் தராசில் பத்து கிலோ சுமையை வைப்பதற்கொப்பாகும். இம்முயற்சியால் 'அளவைச் சுட்டிக்காட்டும் மானி'யின் முள் தானே உள்ளே உடைந்து அது எப்போதுமே பூஜ்யத்தைக் காட்டும்! பரவாயில்லை!! ஆகையால் எடையை அப்படியே ஏற்றுக்கொள்வதைத் தவிர

[342] Politics and the English Language 1946 http://www.resort.com/~prime8/Orwell/patee.html

வேறொரு வழியில்லை. இப்படித்தான் வேறு வழியின்றிச் சிறிய பொய்களைக் காட்டிலும் பெரிய பொய்யே எப்போதும் நம்பப்படுகிறது!

இனி முகம்மதுவின் பொய்களைப் பற்றி சற்று கவனிப்போம். முகம்மது 'மீரஜ்' பயணம் எனும் சுவர்க்கத்திற்கு 'புராஃக்' எனும் பறக்கும் குதிரையில் ஏழாவது சுவர்க்கம் வரை போய் 'அல்லா'வையே நேரில் கண்டு வந்த கதையைக் கேட்ட அபூ பக்கர் நம்ப முடியாமல் முதலில் மிக்க அதிர்ச்சியடைந்தான். அபூ பக்கர், முகம்மதுவுக்கு ஆரம்ப காலத்திலிருந்து உற்ற தோழன், சகோதரன், சீடன், எக்காலத்திலும் முகம்மதுவிடம் உள்ள ஈடுபாட்டில் கொஞ்சமும் நிலை மாறாதவன் என நிரூபித்தவன்; முகம்மதுவுக்குச் சொந்த மாமனாரும் கூட. தெருவில் பொம்மையுடன் விளையாடிக் கொண்டிருந்த அபூபக்கரின் ஆறு வயது பெண் ஆயிஷாவுக்கும் 54 வயதான முகம்மதுவுக்கும் சுவர்கத்திலேயே அல்லாவே மணத்தை நிச்சயம் செய்துவிட்டாரெனும் மிகப் பிரம்மாண்ட புளுகை முகம்மது மிக எளிதாக இட்டுக்கட்டிக் கூறியவுடன், இதைக் கேட்ட அபூ பக்கர், இக்கதையே மிகவும் முட்டாள்தனமாகவும், ஏறுமாறாகவும் உள்ளதென மனத்துக்குள் அடக்க முடியாத கோபத்துடன் பொறுமினான். அபூ பக்கர் இரண்டில் ஒன்று என விருப்பத்தேர்வு செய்தாக வேண்டிய நிர்பந்தம் உண்டானது. தன்னை எவ்வளவுதான் அவமதித்தாலும், முகம்மதுவுக்காகத் தன் சொத்து சுகம் அனைத்தையும் துறந்து, இவருடனே இது வரை ஈடுபாடு கொண்டு இருந்தது போன்று, இனியும் முகம்மது எந்தெந்த பொய்யைச் சொன்னாலும் அதை மிகவும் சிலாகித்து அவரையே அல்லாவின் தூதரென ஒப்புக் கொள்ள வேண்டும். முகம்மதுடனேயே அதே உறவுடன் வாழ்ந்து தொலைய வேண்டும். அல்லது முகம்மது ஓர் பித்துப் பிடித்த மோசக்காரன் எனத் தீர்வு செய்து அவனை விட்டொழிய வேண்டும். இவ்விரண்டை விட மூன்றாவது வழி ஒன்றும் கிடையாது. அபூ பக்கருக்கு முடிவாக முதல் விருப்பத் தேர்வைத் தன் தேகப் பாதுகாப்புக்காகவே தேர்ந்தெடுக்க வேண்டியதாயிற்று. இல்லையெனில் முகம்மதுவால் ஏற்பாடு செய்யப்பட்ட கொலை அபூ பக்கர் மீதே முகம்மது நடத்திக் காட்டுவார்! பாலியல் உணர்ச்சி மேலிடும்போது இஸ்லாத்து சகோதரனாவது! மாமனாராவது? வாழ்வா சாவா? எது வசதி? முடிவாக வாழ்வையே தேர்ந்தெடுத்தாக வேண்டும்!

இப்னு இஷாக் தன் முன்னறியும் திறத்துடன் முகம்மதுவின் வரலாற்றில் இவ்வாறு எழுதினார்: "'மீரஜ்' எனும் பயணத்தைப் பற்றிப் பிறருக்குத் தெரிவிக்கும்போது இதெல்லாம் முகம்மதுவின் சுத்தக் கட்டுக்கதை என நினைந்து பல சீடர்கள் இஸ்லாத்தையும் முகம்மதுவையும் விட்டு ஓடிப் போய்விட்டனர். சிலர் அபூ பக்கரிடம் வந்து, 'நீ இப்போது என்ன சொல்லப்போகிறாய்? சுவர்க்கம் போகும் வழியில், முகம்மது வெகு தூரத்திலுள்ள ஜெருசலேமுக்கு நேற்று இரவு சென்று ஆங்கே ஆப்ரஹாம், மோசஸ், கிறித்துவுக்கு ஞானஸ்நானம் செய்வித்த நபும்சகனான (அலி) ஜான் முதலியோரைக் கண்டதாயும் இவ்வாறு குழுமியுள்ள எல்லோருக்காகவும் சேர்த்து முகம்மது நடத்திய தொழுகைக்கு முகம்மதுவே தலைமை தாங்கியதாகவும், நேற்று இரவே சுவர்க்கத்திலிருந்து மெக்காவுக்குத் திரும்பி வந்ததாகவும் ஒரே அபாண்டப் பொய் புருடாமயமாகக் கதை கதைக்கிறாரே! நம்பவே முடியவில்லையே! தலைவா!!' என்றனர். [343]

மேலும் நேற்று இரவு முழுதும் முகம்மது மசூதியிலேயே தூங்கிக் கிடந்ததாகப் பார்த்த முகம்மதுவை நம்பும் பல முஸ்லிம்கள் அதே அல்லாவின் மீது சத்தியமும் செய்தனர். இவைகள் எல்லாவற்றிற்கும் முற்றுப்புள்ளி வைக்கும்

[343] Sira Ibn Ishaq:P 183

ஒரே பதிலாக அபூபக்கர் ’முகம்மது அவ்வாறு சொன்னது எல்லாமே உண்மையே!. இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது. முகம்மது என்னிடம் சொன்னது ‘சுவர்க்கத்திலுள்ள அல்லாவிடமிருந்து தகவல் தொடர்பு பகலிலோ இரவிலோ பூமியில் உள்ள தன்னிடம் அவ்வப்போது வருகிறது’ எனச் சொல்கிறார். நான் முகம்மதுவை முற்றிலும் நம்புகிறேன். நீங்கள் பயத்தினாலோ அல்லது திகைப்பாலோ புலம்புவதைக் காட்டிலும் முகம்மது அசாதாரணமானவர். அவரை முழுதும் நம்புகிறேன்’ என உரத்த குரலில் எரிச்சலுடன் கத்தி அபூ பக்கர் அறையிலிருந்து பெருங் கோபத்துடன் வெளியேறினான். (இனி இதைப் பற்றி ஒரு சொல்லும் சொல்லக்கூடாதென) இவ்வாதத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தான். மேற்கூறிய ஆணித்தரமான பதிலிலிருந்து, அபூபக்கர் நினைப்பது வேறெவ்வாறாக இருக்க முடியும்?

இம்மாதிரி மௌனத்தைத்தான் தற்காதலர்களான (narcissistic) முகம்மது, ஹிட்லர், முஸ்ஸோலினி, ஸ்டாலின் போன்ற வெறிப்பற்றீடுபாட்டு உலகத் தலைவர்கள் எல்லோரும் தங்கள் வேணவாவைத் தெவிட்டும் நிலை வரை சீடர்கள் அல்லது குடிமக்கள் [சமயவகை சபதத்தாலோ, அல்லது ஒரு சர்வாதிகார நாட்டில் குடியிருக்கும் பொதுமக்கள் தங்கள் பாதுகாப்புக்காகவோ] செய்தாக வேண்டும் என அதிகாரத்துடன் கேட்கிறார்கள். வெறிப்பற்றீடுபாட்டுத் தலைவனைத் துதித்து ஒத்தூதும் குட்டித் தலைவர்களும் இதற்கு ‘ஜே’ போடுகிறார்கள்.

இவ்விஷயத்தில் 1434 வருடங்களுக்கு முன் முகம்மதுவுடன் வாழ்ந்த அபூ பக்கர் கதையும், இக்காலப் பொதுமக்கள் கதையும் கதியும் ஒன்றே ஒன்றுதான். முகம்மதுவின் காலத்தில் சீடன் ஒருவனுக்காவது துணிந்து எதிர்த்து நிற்க முடிந்ததா? ஹிட்லர், ஸ்டானின், முஸ்ஸோலினி கொடிகட்டிப் பறந்தகாலத்தில் இவர்களுக்கெதிராக ஒரு வார்த்தையைக் கூறி உயிருடன் இருக்க முடியுமா? இவர்கள் நிலைமையைப் பற்றிப் புரிந்து கொண்டு சற்று சிந்தியுங்கள்.

**வன்முறையின் உபயோகம்**

தன் பொய்களை நம்புவதோடு மட்டுமின்றி, மனநிலை திரிந்த வெறிப்பற்றீடுபாட்டின் தலைவருமான தற்காதலர், தன் நம்பிக்கையை உறுதி செய்ய வன்முறையை நிலை நாட்டத் தயாராகி விடுகிறார். இது வரை நடந்த சரித்திர நிகழ்ச்சிகளை மேற்கோளாகக் காட்டி இக்கூற்றே அடிக்கடிக் கடைபிடிக்கப்பட்டதென அதற்காகக் கவர்ச்சிகரமாக பொதுக்கூட்டங்களில் உறுதிபட வாதாடுவார்கள். இம்மாதிரி வாதங்களைத் தருக்கத்தில் Argumentum ad baculum எனச் சொல்வார்கள். அதாவது ‘**வலுக்கட்டாயத்தால் பிறரை ஒப்புக்கொள்ள வைத்தல்**’ என்பதாகும்.

**இவ்வச்சுறுத்தல், நேரிடையாகக்கூட இருக்கும்.**

**குரான் வசனம்** 9:05 - (போர் விலக்கப்பட்ட துல்கஃதா, துல்ஹஜ்ஜு, முஹர்ரம், ரஜபு ஆகிய நான்கு) சங்கை மிக்க மாதங்கள் கழிந்து விட்டால் **முஷ்ரிக்குகளைக் கண்ட இடங்களில் வெட்டுங்கள்**, அவர்களைப் பிடியுங்கள்; அவர்களை முற்றுகையிடுங்கள், ஒவ்வொரு பதுங்குமிடத்திலும் அவர்களைக் குறிவைத்து உட்கார்ந்திருங்கள் - ஆனால் அவர்கள் (மனத்திருந்தி தம் பாவங்களிலிருந்து) தவ்பா செய்து மீண்டு, தொழுகையையும் கடைப்பிடித்து (ஏழைவரியாகிய) ஜகாத்தும் ((முறைப்படிக்) கொடுத்து வருவார்களானால் (அவர்களை) அவர்கள் வழியில் விட்டுவிடுங்கள் -[[[...]]].

**மற்றொரு குரான் வசனம்** 8:12 - (நபியே!) உம் இறைவன் மலக்குகளை நோக்கி; "நிச்சயமாக நான் உங்களுடன் இருக்கிறேன்; ஆகவே, நீங்கள் முஃமின்களை

உறுதிப்படுத்துங்கள்; நிராகரிப்போரின் இருதயங்களில் நான் திகிலை உண்டாக்கி விடுவேன்; நீங்கள் அவர்கள் பிடரிகளின் மீது வெட்டுங்கள்; அவர்களுடைய விரல் நுனிகளையும் வெட்டி விடுங்கள்" [[[...]]]

**வன்முறை மறைமுகமாக இருக்கும் சான்றுகள்:**

**குரான் வசனம்: 5:10** - எவர் நிராகரித்து, நம் திருவசனங்களையும் மறுக்கிறார்களோ, அவர்கள் நரகவாசிகள் ஆவார்கள்.

குரான் வசனம் 22:09 - (அவன்) அல்லாஹ்வின் பாதையை விட்டும் மனிதர்களை வழி கெடுப்பதற்காக ஆணவத்தோடு (இவ்வாறு தர்க்கம்) செய்கிறான்; அவனுக்கு இவ்வுலகிலும் இழிவு இருக்கிறது கியாம நாளில் நாம் அவனை எரிநரகின் வேதனையையும் சுவைக்க செய்வோம்.

குரான் வசனம் 04:56 - யார் நம் வேதவசனங்களை நிராகரிக்கிறார்களோ, அவர்களை நாம் நிச்சயமாக நரகத்தில் புகுத்தி விடுவோம்;. அவர்கள் தோல்கள் கருகிவிடும் போதெல்லாம் அவையல்லா (வேறு) தோல்களை, அவர்கள் வேதனையைப் (பூரணமாக) அனுபவிப்பதற்கென, அவர்களுக்கு நாம் மாற்றிக் கொண்டே இருப்போம் - [[[...]]]

இப்பெரிய ‘அச்சுறுத்தல்’களை நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ நாடகபாணியில் அறிவிக்கப்படுவதால் இதற்கொரு மதிப்பும் அச்சமும் அவசரமும் ஒருங்கே உண்டாகிறது. இவ்வச்சுறுத்தலுக்கு மனவுறுதியற்றவர்களால் அக்கறையின்றி அலட்சியமாக இருக்கவும் இயலாது. ஆகையால் அச்சுறுத்தலுக்கு அடிபணிந்தே ஆக வேண்டிவரும்.

**இனி அடுத்த கேள்வி: ஒருவர் கடவுளை மற்றொருவர் நம்பாவிட்டால் அவர்களைக் கொலை செய்யத்தான் வேண்டுமா?**

இம்மாதிரியான குடைச்சல் கேள்விகளுக்குத் தன்னாலே அல்லது எவராலோ தெளிவான பதில் கிடைக்காத சீடர்கள் தீங்கில்லாத ஒரே வழியான அக்கொலைவெறிக் கடவுளையே நம்பி உயிருடன் வாழ்ந்து தொலைவதே சிறந்ததென முடிவுக்கு வந்து விடுவார்கள்.

கீழ்க்கண்ட ’சாஹீஹ் அபூ தாவுதி’ல் ஹத்தீஸ் கதை (Sunnan Abu Dawud - Book 19, Number 2996) இதை நன்கு விளக்குகிறது. இது சுத்த மடத்தனமாகக் காணப்பட்டாலும் இஸ்லாமிய வெறிப்பற்றுக்கு ஒரு உதாரணம்:

“அல்லாவின் தூதர் முகம்மது கூறினார்: ‘உன் சக்திக்குட்பட்டதானால் உடன் எந்த யூதனையும் கொன்றுவிடு’. தனக்கு சமூக வியாபாரத் தொடர்பிருந்தும், இப்னு சுனைனா எனும் யூத வியாபாரியை முஹாயிசா இப்னு மாசூத் எனும் முஸ்லிம் கொன்று தீர்த்தான். முஹாயிசாவின் மூத்த சகோதரனான முஸ்லிமல்லாத ஹுவைய்சா இப்னு மாசூத் தன் இளைய சகோதரனை இதற்காகத் திட்டி அடித்தான்; ‘உன் வயிற்றிலுள்ள இறைச்சி மிகுந்த கொழு கொழுத்த சதையும் செல்வமும், இறந்த ‘யூத சுனைனா’வால்தான் உண்டானது என நீயும் அறிவாய். ஆக நன்றி மறந்த நீதான் கடவுளின் எதிரி’ என்றான். அதற்கு முஸ்லிமான முஹாயிசா மிகக் கோபமடைந்து சொன்னான். “அந்த யூத வியாபாரி ‘இப்னு சுனைனாவை’க் கொலை செய்யச் சொன்ன முகம்மது மறுபடியும் முஸ்லிமல்லாத உன்னையும் (ஹுவைய்சாவையும்) ‘கொல்’ என எனக்கு கட்டளையிட்டால் என் உடன்பிறந்த சகோதரனான உன்னையும் கொல்லத் தயங்க மாட்டேன்’ என கர்ஜித்தான். முஸ்லிமல்லாத ஹுவைய்சா எனும் உன் மூத்த

சகோதரநனைக்கூடக் கொல் எனச் சொல்லும் நிலை மாறாத இயக்கம் மிகச் சிறந்ததாக இருக்க வேண்டுமெனக் கூறி அவனும் முஸ்லிமானான் !!". [344]

இதனால் எல்லோருக்கும் தெரிவது, அளவுக்கு மிஞ்சிய வெறியுணர்ச்சியே ஒரு இயக்கத்தின் மீது ஒருவருக்குள்ள நம்பிக்கைக்குத் தக்க சான்றாகும். ஓரெல்லைக்கு அப்பாற்பட்ட கொடிய வன்முறை எப்போது மிக அதிகமாக உள்ளதோ, அப்போது, அங்கு தான் அத்தொண்டரைப் பற்றி இயக்கத் தலைவருக்கு எளிதில் நம்பிக்கை பிறக்கிறது. பெரும்பாலான மக்கள் மனவுறுதியற்றவர்கள். மரபுவழியில் சிந்தனையில்லாத இடங்களில் பிறிதொன்றையும் ஏற்றுக் கொள்ளாத அசலான பகுத்தறிவோடு சுய சிந்தனையாளர்கள் மிக மிக அபூர்வம். வட கொரியா மக்கள் ஏட்டில் உள்ளவாறே உண்மையான பைத்தியக்கார சர்வாதிகாரி 'கிம் ஜங் II'ஐ (Kim Jung II) இறைவழி வந்தவன் போன்று அவனையே பூசை செய்கிறார்கள். ஏனெனில் இவன் எப்போதும் எங்கெங்கு கருத்து வேறுபாடுள்ளதோ ஆங்கே எவ்வித சகிப்புத்தன்மையுமற்று மிக அதிக வன்முறையை உபயோகிப்பவன். "எங்கெங்கு சர்வாதிகாரம் உள்ளதோ அங்கு உன் வாழ்க்கையே சர்வாதிகாரியின் கையில் உள்ளது என்றாகிவிட்டால், ஆங்கே ஒன்றை வலுக்கட்டாயமாக நம்பவேண்டுமெனப் பொதுச் சட்டமாக இருந்தால், அதை நீ அப்படியே நம்பிச் செய்தும் விடுவாய்".

ஒரு சர்வாதிகார இயக்கத் தலைவன் 'ஷோகோ அசாஹாரா' "சரீன் எனும் விஷ வாயுவை" ஜப்பானில் இருக்கும் சுரங்க மின்சார இருப்புப்பாதையில் செலுத்திவிடத் தன் சீடர் குழுவுக்கு கட்டளையிட்டபோது இச்செய்கையில் அருவருப்பையோ கடும் வெறுப்பையோ அவர்கள் கொஞ்சமும் காட்டவில்லை. இத்தனைக்கும் இவன் சீடர்கள் மெத்தப் படித்த வேதியல் முனைவர்கள் (Doctorates in Chemistry), விஞ்ஞானிகள், மருத்துவர்கள். அவர்கள் தங்கள் படிப்பறிவில்லாத குருவின் மிகச் சிறந்த நுண்ணறிவை முழுதுமாக ஏற்று, இதனால் சிந்திக்கும் திறனையும் மனசாட்சியையும் என்றோ மோன அமைதி நிலையில் பூட்டி வைத்துக் கொண்டு விட்டனர். இம்மாதிரி சந்தர்ப்பத்தில் சீடர்களுக்கு இரண்டிலொன்று விருப்புத்தேர்வு செய்தாக வேண்டும்.

- ஒன்று, தங்கள் குரு ஒரு பைத்தியமெனவும், இது வரை தாங்கள் முட்டாளாக்கப்பட்டோம், மேலும் இந்நாள்வரை அவருக்காகச் செய்த தியாகங்களனைத்தும் விழலுக்கிறைத்த நீர் எனவும் முடிவு செய்து அவரைவிட்டு விலகத் தயாராக வேண்டும்;
- இரண்டு, அடி உதை கொலை ஆகியவைகளுக்குப் பயந்து 'தங்கள் குருவே சகலம்' என அவரைப் போற்றி அவர் மதி நலம் மிகச் சிறந்தென ஒப்புக்கொண்டு அவரை எந்த கேள்வியும் கேட்கக் கூடாது என மற்றொரு முடிவை எடுத்தாக வேண்டும்;

ஆனால் இவர்களோ தங்கள் (சீடர்கள்) எல்லாவற்றையும் 'அசாஹாரா'வுக்கு முன்னரே அர்ப்பணம் செய்தாகிவிட்டது. இதோடு தங்கள் சொந்த பந்தங்களையும் அறுத்துத் துடைத்து, அவர்களிடம் முன்பிருந்த இருந்த ஏதோ கொஞ்ச நஞ்சத் தொடர்புப் பாலங்களையும் உடைத்தெறிந்து வெளியேறி 'அசாஹாரா' ஜோதியில் கலந்தாகி விட்டது.. இனி 'ஷோகோ அசாஹாரா'வைத் தவிர போக்கிடம் அவர்களுக்கு வேறொன்றுமில்லை. இச்சமயத்தில் தலைவரைக் கேள்வி கேட்பதையோ அல்லது அவர் கூறியதில் மறுப்பு தெரிவிப்பதையோ எக்காரணத்தைக் கொண்டும் சகித்துக் கொள்ளமாட்டார். ஆக, 'அசாஹாரா' எதைச்

[344] This story is recorded in by Ibn Ishaq in his Sirat Rasul Allâh as translated by A. Guillaume, The Life of Muhammad, page 369 and also in Sunnan Abu Dawud 19:2996.

சொன்னாலும் அதற்கு வாயைத் திறவாது சொல்வதைச் செய்து இருப்பதுதான் நிம்மதியான சரியான வழி. இதனால் தங்கள் குருவைப் பற்றி எந்த சந்தேகங்களையும் மனத்திலிருந்து முழுதுமாக அகற்றிவிட வேண்டும். தப்பித் தவறி ஏதாகிலும் சொல்லிலோ அல்லது செயலிலோ வெளிவந்தால் அதுவே இவர்களுக்கு ஆபத்தில் விடியும்.

சுரங்க மின்சார இருப்புப்பாதையில் விஷ வாயுவை முன்பின் தெரியாதவர்கள் மீது செலுத்திவிடத் தன் சீடர் குழுவுக்கு அவன் கட்டளையிட்டபோது, இக்குழு வாயைத் திறக்கச் சக்தியின்றி வாளாயிருந்தனர். தலைவரிடம் இத்திட்டத்தைக் கைவிட எவ்வித எதிர்ப்பையும் தெரிவிக்கவில்லை. இதனால் தாங்களும் தலைவரின் திட்டத்தை ஒப்புக்கொண்டதாகிவிட்டது. ஏனெனில், "மௌனம் சம்மதம்" "silence is equivalent to consent, when one has to protest " எனப் பொதுவாகச் சொல்வார்கள். இம்மாதிரி எதிர்ப்பைக் கூற எந்த சீடனுக்கும் இருக்கவேண்டிய முதுகெலும்பு கிடையாதே! அதே சமயம் தங்கள் தலைவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என ஒப்புக் கொள்ளவும் மனத்திண்மையில்லையே! மிக அதிகம் படித்திருந்தும் தங்கள் அறிவுத்திறம் இழந்து இதயத்தில் ஈரமில்லா அரக்கனிடம் கீழ்ப்படிந்து படுமுட்டாள்களாக ஆகிவிடும் இத் தாழ்வு நிலைத் தாமாக விரும்பி ஏற்றுக்கொண்டதுதானே!

டாக்டர் இகௌ ஹயாஷி (Dr Ikuo Hayashi) மிகவும் மதிக்கப்பட்ட, பல வருட அனுபவம் கொண்ட ஒரு பிரபல மருத்துவர். இவர்கூட 'அஸஹாரா'வின் வெறியார்வம் கொண்ட சீடர்களில் ஒருவராக ஆனார்! கொடுமையாக, இவரையும் சேர்த்து மொத்தம் ஐந்து பேர் பொறுக்கி எடுக்கப்பட்டு 'டோக்கியோ' சுரங்க மின்சார இருப்புப்பாதையில் நச்சுவாயுவைச் செலுத்திவிட உபயோகப்படுத்தப் பட்டனர். டாக்டர் ஹயாஷி நன்கு பயிற்சி பெற்ற அனுபவமிக்க மருத்துவர். இவர்கூட தன் மருத்துவப் படிப்புப் பயிற்சி முடிந்தவுடன் மருத்துவர் என அதிகாரபூர்வமாக ஏற்று அறிவிக்கு முன்னர் 'மருத்துவராக எக்கணமும் மற்றவர் வாழ்க்கையை காப்பதாக எடுத்துக் கொள்ளும் 'ஹிப்போக்ராடிக் உறுதிமொழி' (Hippocratic Oath) எனும் மருத்துவ சபதத்தை எடுத்துக்கொண்டவர் தான். என்ன செய்து தொலைவது? அந்நச்சுத் திரவ சிப்பத்தைத் துளையிடப் போவதற்கு சற்று முன், தன் எதிரே உட்கார்ந்திருந்த அழகிய ஜப்பானிய பொம்மை போன்றுள்ள பெண்ணைப் பார்த்து இந்நச்சை செலுத்தத் 'தாம் செய்யப்போவது சரிதானா' எனச் சற்று தயங்கினார். ஒரு கணம் என்ன செய்வதெனத் திகைத்தார். உடன் தன்னை சுதாரித்துக்கொண்டு தன் மனசாட்சியை மௌனமாக்கி, 'அஸஹாரா' எல்லாம் நன்கறிவார், மேலாக அவர் முடிவை மாற்றித் தலைவரையே கேள்வி கேட்கும் ஒழுங்கீனத்தைத் தான் செய்யக் கூடாதெனத் தீர்மானித்தார்.

கண்மூடித்தனமான நம்பிக்கை மரணத்தையும் ஏற்படுத்த வல்லது. 'ஓமர்' முகம்மதுவுடன் போர்களில் செல்லும்போது அவனுக்கு பதினாறு வயதுதான். முகம்மது இஸ்லாத்துக்காக / அல்லாவுக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்வது மகத்தானது என எழுச்சி மிக்க ஏற்றத்தைக் கூறியபோது 'ஓமருக்கு' இது இஸ்லாமியத்தில் வெறிஉணர்ச்சியை உடன் ஊக்குவித்தது. கையில் உண்ண வைத்திருந்த சில பேரீச்சம்பழங்களைத் தூக்கி எறிந்துவிட்டு, "சுவர்க்கபுரிக்கு என்னை லாயக்காக ஆக்க இவைகள் கட்டுப்படுத்த முடியாது" என உரத்துக் கூக்குரலிட்டான். 'இனி அல்லாவை நேருக்கு நேராகச் சந்திக்கும் வரை உண்ணமாட்டேன் உறங்கமாட்டேன்' என தன் பட்டாக்கத்தியை உருவி உடனே எதிரிகள் அணியை நோக்கிப் போரிடப் பாய்ந்தான். சிறிது நேரத்தில் அவனும்

'ஜிஹாதில்' கொல்லப்பட்டான். இத்தியாகத்தால் அவனுக்கு விருப்பமான சுவர்க்கம் கிடைக்குமெனத் தன்னையே ஏமாற்றிக் கொண்டான்.

ஒரு தடவை உன் தலைவனைக் கண்மூடித்தனமாக நம்பிவிட்டால், உன்னால் பெரிதும் நேசிக்கப்படும் தலைவன் பொய் கூறுவாரெனும் எண்ணமோ, அவன் கண்டபடிக் கட்டளையிடும் பைத்திக்காரனெனும் எண்ணமோ என்றும் எழாது. மனநோய் பீடித்த பைத்திக்காரனுக்கு மனச்சாட்சியே கிடையாது. இப்பைத்தியக்காரன் செய்கையால் கோடிக்கணக்கான மக்களுக்குத் துன்பம் தான் உண்டாகும். மேலும் இம்மக்களைச் சேர்ந்த மற்றொரு அதிக எண்ணிக்கையில் உள்ள அவர்கள் உறவினர்களுக்கும் தன் சுயநலத்தால் தீங்கிழைக்கிறோமே என்ற எண்ணமே எழாது. இதனால் தெரிவது, மனநோய் பீடித்த பைத்தியக்கார விபரீத வெறிப்பற்றீடுபாட்டுத் தலைவனின் சீடர்களும் தலைவர் போலவே பைத்தியக்காரத்தனத்தை உள்மனத்தில் ஆழமாகப் பதித்து தலைவரைப் போலவே சீடர்களும் மனநோய் பீடித்த வெறிப்பற்றீடுபாடுள்ள பைத்தியக்காரர்களாக மாறிவிடுகிறார்கள். இவர்களும் மற்ற மக்களைத் தங்கள் கைகளில் சிக்கி அழிக்கப்பட வேண்டிய சிறு பூச்சிகளாகவே காண்கிறார்கள். இவர்களைச் சதுரங்க விளையாட்டில் முன்னணியில் முதல் பலியாக நகர்த்தப்படும் (pawns) காலாட்படை வீரர்களில் ஒருவர் (பகடைகளில் ஒரு சாதா பகடை) எனவே எண்ணுகிறார்கள். இந்த விளையாட்டில் காலாட்படையின் மீது ஒரு படைத்தலைவனான மன்னன் (அதாவது செஸ் விளையாடுபவர்) எந்தப் பற்றுதலை வைக்கிறாரோ அப்பற்றையேதான் தன் படைகளை முதலில் பலியிடத் தங்கள் சுயநல வெற்றி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு அரசனைக் காப்பாற்றத் தன் படைகள் உயிரைப் பற்றிக் கவலைப்படவே மாட்டார்கள். அரசனான தற்காதலருக்கு மந்திரி, மதத் தலைவர்கள் குதிரைப்படை, கோட்டைப்படை போன்ற பகடைகள் உள்பட அனைத்துமே பலியிடப்பட வேண்டிய சாதாரண வெற்றுப் பொருட்கள்தான்.

இவ்வெறிஈடுபாட்டுச் சீடர்களும், தங்கள் தலைவரை இச்சகம் பேசிப் போற்றிப் புகழ்கிறார்கள். இவ்வியக்கத் தலைவனுக்கும் (narcisst) தன்மீது இத்தனை சீடர்கள் அன்பு செலுத்துகிறார்கள் என்ற பெருமிதமென்னும் தவறான கருத்துதான் அவன் மனத்துக்குத் தேவையான தீனியாக (narcisstic supplies) ஆகிறது. தற்காதலன் சீடர்களிடம் கொண்டுள்ள பற்று, அக்கறை என்பது, வெற்று வெளிப்பூச்சுக்கே தவிர இது உண்மையான பற்றோ, அக்கறையோ அல்ல. தற்காதலனால் உலகில் எவரையும் உண்மையில் நேசிக்கவே முடியாது. (அது சீடரானாலும் சரி தன் மனைவி மக்களானாலும் சரி). தற்காதலனுக்கு (தலைவனுக்கு) அவர்கள் உபயோகித்துத் தூக்கி எறியப்பட வேண்டிய வெற்றுப் பொருட்கள் தான்.

முன்னுக்குப் பின் முரணாக, தற்காதலனுடைய உணர்ச்சியின்மையும், மற்றவர்களைத் தனக்காகப் பலிகடாவாக உபயோகப்படுத்துவது சீடர்களின் மற்ற உற்றார் உறவினர்களையும் சேர்த்துத் தன் சுயநலங்களுக்கு பலியிடுவது தற்காதலனுடைய மேதகைமையும் மனவுறுதியும் மேம்பட்ட நிலையையே காட்டுகிறதென சீடர்களும் மெய்சிலிர்த்துப் புகழ்வார்கள். சாதாரண மக்களுக்குத் தற்காதலர் போன்று சாமர்த்தியம் போதாது. இதனால் சாதாரண மக்கள் அதிசயித்து, இயக்கத் தலைவரிடம் மிகச் சிறந்த, மிக அரிதான ஏதோ ஒன்று சக்தி இருப்பதாக எண்ணி வியப்புடன் முடிவு செய்வார்கள். இங்குதான் எவரும் எதிர்பார்க்காத பிறரைச் சிக்க வைக்கும் சதித் திட்டமிருக்கும். இப்பைத்தியக்காரனையே சீடர்கள் தெளிந்த ஆரோக்கியமான மன நிலையுடைவன் என்று நினைந்து மகிழ்வார்கள்.

ஆயத்துல்லா கொமேனிக்குப் (Ayatollah Khomeini) பிறகு ஈரானின் அதிபராக மோண்டாசேரி என்பவர் (Ayatollah Montazeri) தலைமையை ஏற்றுக்கொள்ள இருந்தார்.

ஆனால் மோண்டாசேரி கொமேனியிடம் மிகவும் கருத்து வேற்றுமை கொண்டு தான் எழுதிய வாழ்க்கை வரலாற்றில் இருவருக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டுக்குக் காரணமான செய்தி ஒன்றை அப்பட்டமாக எழுதிவிட்டார். அதாவது கொமேனி ஆட்சிக்குப் பாதகமாகக் கோஷமிட்ட 3000க்கும் அதிகமான இளைஞர்களையும் சிறு வயதுப் பெண்களையும் மொண்டாசேரி எவ்வளவோ எடுத்துரைத்தும் கேளாது, கொமேனிதான் பழிக்குப் பழியாக வேண்டுமென்றே படுகொலை செய்தாரென்ற உண்மையாக நடந்த நிகழ்ச்சியைத் தன் வாழ்க்கை வரலாற்றில் எழுதிவிட்டார். இதனால் மொண்டாசேரியை தனக்கு வாரிசாக ஆக்காமல், கொமேனி அல்லாவிடம் இதைப் பற்றி முறையிட்டுவிட்டு மொண்டாசேரி தன் வேலை எதுவோ அதை மாத்திரம் செய்யட்டுமென, முன் கொடுத்த பதவி ஆணையைத் திரும்பப் பெற்றுக்கொண்டார்.

தற்காதலர் என்ற பைத்தியம், தான் செய்தது கடவுளின் வேலையைத் தான் செய்தேனெனவும், ஆகவே அது தவறாக இருக்க இயலாது எனவும் திருப்திபட்டுக் கொள்வார்கள். இப்பைத்தியத்திடம் தங்கள் முழு நம்பிக்கையை வைத்துவிட்டவர்கள் இவன் மாட்சிமைக்கு முன்னறிகுறியாகப் பல கொலைகளையும் அஞ்சாது செய்து முடிப்பார்கள். தற்காதலர்கள் தாங்களும் திருப்திபட்டுக் கொண்டு பிறரையும் திருப்தி செய்வதில் கை தேர்ந்தவர்கள். ஹிட்லர் பகிரங்கப்படுத்திய செய்தி ஒன்றில், கூறியபடி ”இன்றிலிருந்து நான் கடவுளின் ஆணையுடன் தான் எக்காரியத்தையும் செய்வேன் எனும் உறுதியில் உள்ளேன். இதில்தான் எனக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. அதாவது யூதர்களிடமிருந்து ஜெர்மனியைத் தற்காத்துக் கொள்ளும் வேலையை இறைவன் என் மூலமாகச் செய்து கொள்ளச் சித்தம் கொண்டுள்ளதால் அந்த இறைவனின் வேலையை நான் கட்டாயம் செய்து முடிப்பேன்”, என்றான்[345].

வெளிப்படையான இந்த உறுதியான நம்பிக்கையே ஜெர்மானியர்களை மிகவும் கவர்ந்தது. தவிர ஹிட்லர் பொதுக்கூட்டத்தில் உணர்ச்சியுடன் பேசி அதிசயிக்கத் தக்கவாறு கேட்பவர்களை மிகக் கவர்ந்து அடிக்கடித் தன் குரலை ஏற்றி இறக்கிக் கோபமாகக் கத்துவான். மிக்க செயல்திறம் வாய்ந்த சிறந்த பேச்சாளன். ஆரம்பத்தில் மிக மென்மையாகவும் போகப்போக உணர்ச்சி பொங்கவும் தன் உரக்கக் கத்தித் தன் கோபத்தை உணர்ச்சியூட்டும் மொழியில் ஜெர்மனியின் எதிரிகளின் மீது கொட்டித் தீர்த்து விடுவான். இதனால் அவன் ஜெர்மானியர்களின் தேசப்பற்றைத் தட்டி எழுப்ப முடிந்தது. இவன் கூற்றுப்படி பெரிய அபாண்டப் பொய்யையே உண்மையென மக்கள் நம்புவார்கள். கோடிக்கணக்கில் ஜெர்மனியின் மக்கள் ஹிட்லரை நம்பி மிகவும் நேசித்தார்கள். உண்மையில் இல்லாத எதிரிகள் மீது உணர்ச்சி பீறிட்டு நெருப்புச் சொற்களைக் கக்கும் ஹிட்லரின் ஏமாற்று நாடகப் பேச்சில் மயங்கி, கூட்டத்தில் கூடியிருக்கும் மக்களுக்குக் கண்ணீர் வரும்.

இப்னு சா’த் அன்று முகம்மதுவின் இஸ்லாமிய போதனைகளை மக்களுக்கு எப்படி முழங்கினார் என்பதைப் பற்றி எழுதியது இன்று அது ஹிட்லரைப் பற்றிச் சேர்த்துத்தான் கூறியிருப்பாரோ என்று வியக்கத்தக்க ஒற்றுமையுடன் காணப்படுகிறது. அன்று சா’த் எழுதியது: ‘இஸ்லாமிய போதனை செய்யும்போது முகம்மதுவின் கண்கள் கோபத்தால் ரத்தச் சிவப்பாகி அடிக்கடித் தன் குரலை ஏற்றி இறக்கிக் கோபமாகக் கத்துவார். முகம்மது கூட்டத்தில் பேசும்போது அது ராணுவ படைத்தலைவன் தனது படைவீரர்களை எச்சரிப்பது போன்று இருக்கும். ஒரு கையைத் தூக்கி இரண்டு விரல்களைக் காட்டித் (ஒன்று

[345] Adolf Hitler, Mein Kampf, Ralph Mannheim, ed., New York: Mariner Books, 1999, p. 65.

ஆள்காட்டி விரலையும் மற்றொன்று நடுவிரலையும்) தன் போதனையில் உள்ள கியாம நாள் அதாவது மீளெழு நாள் (Day of resurrection) போன்றதும் மற்றொன்று மிக மோசமான நரகவேதனை போன்றும் நிச்சயமானதாக இருக்கும்' என்பார். [346]

இப்னு சா'த் இன்னும்: 'முகம்மது தம் போதனையின் போது கையில் எப்போதும் ஆளுயரக் கைத்தடியுடன் அடிக்கடி பூமியில் தட்டித்தட்டித் தமது கம்பீரமான ஆதிக்கத்தைக் காட்டி அது தன் கோபத்திற்கு அறிகுறியாகக் காணப்படும்' எனக் கூறுகிறார்.

பொதுக்கூட்டத்தில் பேசும்போது அங்குள்ள எல்லோரையும் தனது வாக்குத் திறத்தால் கவரும் நுண்திறம் மிகுந்து அக் கலையைக் கைவசமாக்க, எல்லோருக்கும் எளிதில் இயலாது. இதில் நம் செயலூக்கத்தை கெடுத்திடும் மிகப்பெரிய சோதனை நமது மனச்சாட்சியாகவே இருக்கும். பெரும்பான்மையாக எல்லோரும் மனசாட்சியை மீறிப் பேச மாட்டார்கள். ஆனால் மனச்சாட்சியே இல்லாத தனிச்சிறப்பு வாய்ந்த சில மாந்தர்களால் தான் இது முடியும். பொதுவாகவே, நாமே நம் கையால் ஒருவரைக் கொன்று போடவோ அல்லது பிறரைக் கொண்டாவது அக்கொலையை செய்து முடிக்கவோ இயலாது. இது போன்ற கொடுமை நிறைந்த குற்றங்களை ஆற்றும் சாமர்த்தியம் நமக்குப் போதாது. ஆனால் பைத்தியக்காரத் தற்காதலன் இக்கொலைக் கைங்கரியத்தில் ஈடுபட என்றுமே தன் மனத்திறத்தில் குறைவுள்ளவனாகவே காணப்பட மாட்டான். அவனுக்குத் தேவைப்பட்டால் தன் நெருங்கிய கீழ்ப்படியும் சீடர்களையும் கபடில்லாத பொதுமக்களையும் கூட ஒரு நொடியில் கொல்லக் கட்டளை இடத் தயங்கமாட்டான். இதுதான் மாற்றமுடியாத இவன் இயல்பு. இது அவன் தற்காதல் விளைவு. சுயநல வெறிக்கு ஓர் எடுத்துக்காட்டாக அவன் அமைவான்.

### அவர் முகம் கடுகடுப்புடன் ஏன் இருந்தது

இஸ்லாமிய சமூகம் எங்கும் எல்லோரையும் தங்களைப் போன்ற மக்களே என்பதாக மனத்தால் ஏற்றுக்கொள்ளும் மனப்பாங்கு கிடையாது; மேலாக இஸ்லாமிய இயக்கத் தலைவருடைய ஆட்சிக்கு உட்பட்டதாயும், பெண்கள் சமூகத்தையே வெறுக்கும் மனப்பாங்குடனும், சர்வாதிகாரச் செயல்பாணிகளில் நாட்டம் கொண்டதாகவும் இருக்கும். இது ஒரு வரம்புக்குள் அடங்காதது. இச்சமூகத்தில் உள்ள எவரும் மேற்கூறியவைகளுக்கு விதிவிலக்கில்லை. இச்சமூகத்தில் குழந்தைப் பருவத்திலிருந்து எக்கச்சக்கக் கட்டுப்பாடும், பிற மதத்தார் உள்ளூர வெறுக்கும் செயல்களில் நேருக்கு நேர் இறங்கிக் கொலை செய்து ரத்தம் சொட்டச் சொட்டப் பார்த்து ரசிப்பதில் பயிற்சியும் அளிப்பார்கள். இதற்கும் மேலாக இவர்கள் குழந்தைப் பருவத்திலிருந்து தகாத முறைகளில் உபயோகப்படுத்தப்பட்டு அநேக இடங்களில் மிக இழிவுபடுத்தப் படுவதுண்டு. இவைகளின் விளைவாக, இவர்கள் வளரும் பருவத்திலிருந்து மனத்தில் பழங்கால உள்மனவடுக்களுடன் தங்களுக்குள் ஒரு வன்மத்தையும் தாழ்வு மனப்பான்மையையும் வளர்த்துக்கொண்டு எப்போதும் கற்பனை எண்ண பெருமிதப் பகட்டுடன் மனநிலை திரிந்த (பைத்தியக்கார) தற்காதல் நோய்க்கு ஏற்ற அறிகுறிகளுடன் காணப்படுவார்கள். இஸ்லாமிய நாடுகள் ஜனநாயக நாடுகளாக ஆக முடியாது ஏனெனில் முஸ்லிம்கள் அந்த நாள் முதல் இந்த நாள் வரை 'பொதுமக்களை' அதாவது "demos" (i.e.common people) உளவியல் வகையிலும் உணர்ச்சிகளாலும் சொற்களாலும் செயல்பாணிகளாலும் மிகவும் பழுது உண்டாக்கியுள்ளனர். ஆகையால் பொதுமக்களே இஸ்லாத்தால் முஸ்லிம்

[346] Ibn Sa'd Tabaqat, page 362

சீடர்களைக்கொண்டு பிரதானமான பொதுமக்களையே மதிப்பிழப்புச் செய்துவிட்டதால், "டெமாக்ரசி" அதாவது "ஜனநாயகக் கொள்கைகளே" முஸ்லிம்களுக்கு ஒவ்வாததாகி விட்டது. உடனொத்து இருப்பதற்கு இயலாதவாறு நிச்சயமாக ஜனநாயகத்துடன் வாழவிடாது.

எனது சிறுபிள்ளைப் பருவத்தில் (teens) நான் பாகிஸ்தானில் இருந்த போது எனக்கு ஒரு ஆ்ஃப்கானி நண்பன் இருந்தான். அவனுக்கு மேற்கூறிய குண இயல்புகள் காணப்பட்டன. ஒரு நாள் என்னிடம் 'நான் ஹிட்லர் போல ஆக விரும்புகிறேன்' என்றான். இதைக் கேட்டவுடன் இவனிடம் நான் மிகவும் எரிச்சலுடன் வெறுப்படைந்தேன். இஸ்லாமிய நாடுகளில் ஹிட்லர் ஒரு 'மாவீரன்' என விஷயம் தெரியாது போற்றப்படுபவன். இம்மாதிரி கூறிய அவனிடத்தில் என் மனதில் உள்ளவைகளைக் கொட்டித் தீர்த்து இனி இவனிடம் நண்பனாக இருக்க விரும்பவில்லை என வெளிப்படையாகச் சொல்லி விரட்டியடித்து விட்டேன். ஒரு நல்ல செயலைத்தான் செய்தேனென மனத்துள் திருப்திகொண்டேன். அவனுக்கோ என் நட்பை விட்டுவிட விருப்பமில்லை போலிருக்கிறது. அடுத்த நாள் அவன் வந்து தன்னை மன்னித்துப் பழையபடி நண்பனாக ஏற்றுக்கொள்ள வேண்டினான். இப்பைத்தியக்காரத்தனத்தை "தற்காதலுக்கு" ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். மேலும் இதையும் கூறினான். "நேற்றைய இரவில் முகம்மது என் கனவில் வந்து 'நீயும் ஏன் ஆன்மீகத்தில் ஹிட்லராக ஆகக் கூடாது?' என்று என்னைக் கடிந்து கொண்டார். இப்படித்தான் 'பைத்தியக்கார தற்காதலர்' எல்லோரும் நினைப்பார்கள். தான் கூறியது முட்டாள்தனமானது என ஒப்புக்கொள்ளாமல், இம்மாதிரி கேலிக்கூத்தாகப் புதுப்புது சூழ்ச்சிகளைப் புனைந்து உருவாக்கி எல்லோரையும் மடையர்களாக ஆக்குவதில் அவர்கள் எத்தர்கள்.

முகம்மது தாமே எழுதிக்கொண்ட குரானில் சுரா 80இல் -'அவர் கடுகடுத்தார், மேலும் ((முகத்தைத்) திருப்பிக் கொண்டார்' (Abasa (He Frowned) என்றே உள்ளது. இது இக்குரானை எழுதிய ஆசிரியரின் ((முகம்மதுவின்) ஒரே வகையான பைத்தியக்கார மனப்பாங்கை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது.

முகம்மதுவின் ஆரம்பகாலத்தில் இவர் சீடர்கள் எல்லோருமே சமூகத்தில் எந்த ஏற்றமும் இல்லாத அடிமைகள் அல்லது பெற்றோர்களை எதிர்த்து எவருக்கும் பணியாத வாலிப முறுக்குடன் இருக்கும் பருவ இளசுகள். இதனால்தான் முகம்மதுவின் திட்டங்களான கொள்ளை, தீடீர் தாக்குதல், காரணமில்லாக் கொலை ஆகியவை இவர்களை மிகவும் கவர்ந்தன. தாம் கூறுவது மிக முக்கியத்துவம் வாய்ந்த போதனைகள் என நம்பி, மக்கள் அக்கறையுடன் கவரப்பட வேண்டுமானால், சமூகத்தில் மிக முக்கியத்துவம் வாய்ந்த சிறந்த செல்வாக்குள்ள பெரும் புள்ளி மக்கள் தன் இயக்கத்தில் சேர்ந்து கொண்டால்தான் முடியுமென முகம்மது அறிந்துகொண்டார். அப்படி மதமாற்றுக்காக ஏற்பாடு செய்யப்பட்டுள்ள ஒரு கூட்டத்தில் மெக்காவிலுள்ள சமூகத்தில் உயர்ந்த நிலையிலிருக்கும் பெருந்தனக்காரர்களுடன் சேர்ந்து உட்கார்ந்திருக்கையில், இஸ்லாமியத்தில் முன்னரே சேர்ந்த ஒரு குருட்டு முஸ்லிம் ஒரு கேள்வியுடன் முகம்மதுவை அணுகினான். அப்போது தான் கௌரவம் மிக்க மனிதர்கள் மத்தியில் உட்கார்ந்திருக்கும்போது ஒரு ஏழைக் குருட்டு முஸ்லிம் தன்னை அணுகியதை முகம்மது இடைமறித்ததாக நினைந்து முகம்மது மிகவும் முகம் கடுகடுத்தார். கூட்டதிற்கு வந்திருந்த பெரிய மனிதர்களும் முகம்மதுவின் முகம் கடுகடுத்ததைக் கண்டுவிட்டனர். அவர்களும் பொது மக்களும் ஒன்றாக முகம்மதுவின் போலி வேடத்தை நேரில் பார்த்து அவரை மிக மோசமாக விமரிசனம் செய்தனர். பெரும் செல்வந்தர்களைப் பார்த்து முகம் இளித்தும் ஏழைகளைக் கண்டு முகம்

கடுகடுத்ததும் இருப்பதை எப்படி அல்லாவின் தூதர் செய்யலாம் என வெளிப்படையாகக் கூறினர். இப்போதுதான் இச்சிறிய சம்பவம் தம் உள்ளார்ந்த உண்மைப் பண்பைக் ஊஊறிய முழங்கிவிட்டதென முகம்மதுவுக்கு உறைத்தது. இதனால் முகம்மது எப்படியாவது இக்குழப்பமான சூழ்நிலையைச் சமாளிக்கத் தன் போலிப் பகட்டு மனப்பான்மையை அல்லாகூட பொது மக்களுடன் சேர்ந்து அவர்கள் அபிப்பிராயத்தை பிரதிபலிப்பதாக ஒரு குரான் வசனத்தையும் உடனுக்குடன் பிதுக்கிவிட்டார். இதில் பெருந்தனக்கார்களைத் தன்வசப்படுத்தும் போது ஏழைகளைப் புறக்கணிப்பதைத் தவறென அல்லாகூட முகம்மதுவைக் கடிந்துரைத்தாரெனக் குரான் வசனத்தை எழுதிக்கொண்டார். பிறகு குரான் எதற்காக இருக்கிறது! இம்மாதிரி காலியிடத்தை முழுவதும் இடம் நிரப்பத்தான் அல்லா எனும் இஸ்லாமியக் கடவுளை நியமித்து முகம்மதுவின் அக்குளில் அடைத்து வைத்துள்ளாரே! சொன்ன வேலையைச் சொல்லும் போது சொன்னபடி நிறைவேற்ற நியமிக்கப்பட்டுள்ள அல்லா என்றென்றும் முகம்மதுவுக்குத் தொண்டனாயிற்றே!

இப்போது சொல்லுங்கள்; முகம்மது அல்லா என இருவருக்குள் எவர் எசமானர், எவன் தொண்டன்? முகம்மதுவே எசமானர், அல்லாதான் தொண்டனெனத் தெரிகிறது. தமிழ்க்குரானில் முஸ்லிம்கள் அல்லாவைக் கூட 'ஒருமை'யில் (ஏகவசனத்தில்) விளிப்பார்கள், ஆனால் முகம்மதுவை மரியாதையுடன் அல்லாவின் தூதரெனவே விளிப்பது வழக்கம். தமிழ்க் குரானில் கவனித்து எங்கும் படித்துக்கொள்ளவும். உடன் தெரிந்துவிடும்.

**குரான் 80:1லிருந்து 15 வரை** -

"அவர் கடுகடுத்தார், மேலும் (முகத்தைத்) திருப்பிக் கொண்டார்.
அவரிடம் அந்த அந்தகர் வந்தபோது,(நபியே! உம்மிடம் வந்த அவர்) அவர்
தூய்மையாகி விடக்கூடும் என்பதை நீர் அறிவீரா? அல்லது அவர் (உம்
உபதேசத்தை) நினைவுபடுத்திக் கொள்வதன் மூலம், (உம்முடைய) உபதேசம்
அவருக்குப் பலனளித்திருக்கலாம். [[[...]]] ஆயினும் (இஸ்லாத்தையேற்று) அவன்
தூய்மையடையாமல் போனால், உம் மீது (அதனால் குற்றம்) இல்லை. ஆனால்,
எவர் உம்மிடம் விரைந்து வந்தாரோ, அல்லாஹ்வுக்கு அஞ்சியவராக-அவரை
விட்டும் பராமுகமாய் இருக்கின்றீர். அவ்வாறல்ல! ஏனெனில் (இத்திருக் குர்ஆன்
நினைவூட்டும்) நல்லுபதேசமாகும். எனவே, எவர் விரும்புகிறாரோ அவர் அதை
நினைவு கொள்வார். (அது) சங்கையாக்கப்பட்ட ஏடுகளில் இருக்கிறது. [[[...]]]

செல்வந்தர்களுக்கு ஆதரவாகவும் ஏழைகளை விலக்கி ஒதுக்கவும் செய்யும் முகம்மதுவின் செயல்பாணியைக் கண்டித்து அல்லா கூறிய முகம்மதுவைக் கடிந்துரை வசனங்களைக் கண் துடைப்பு வேலையாக எழுதிக்கொண்டு விட்டார். இத்துடன் தம் குற்றத்தை ஒப்புக்கொள்ளாமல் தப்பித்துக் கொண்டதாக முடிவு கட்டினார். இதிலுள்ள வசனங்கள் யாவுமே தற்காதலால் விளைந்தவை. ஆனால் முஸ்லிம்கள் இவ்வசனக்களை இவ்வாறு பொருள் விளக்கிக் கொள்வதில்லை. இது தன் குற்றத்தைத் தானே ஒப்புக்கொண்ட வாய்மையுள்ளவரென்றே காட்டுகிறது என்றுதான் அழுத்தந்திருத்தமாகக் கூறுவர். இது அவர்கள் நேர்மையின்மையைத்தான் காட்டுகிறது. முகம்மது ஒரு மனநோய் பீடிக்கப்பட்ட தற்காதலர். அவரால் வேறெவ்விதமாக இருக்க இயலும்? முகம்மதுவுக்கு அவ்வப்போது உண்டாகும் இடரை நிவாரணம் செய்யக் குரான் முழுதுமே இவ்வாறு வசனங்களை அவ்வப்போது இட்டுக்கட்டி, அல்லா வாயிலிருந்து வந்ததாகவும், அதைக் காப்ரியேல் எனும் இராயபாரி கொண்டு வந்ததாகவும் முகம்மது அவ்வப்போது சொல்லச் சொல்ல இப்னு சாரா எனும்

எழுத்தன் எழுதி வைத்ததுதானே! அந்த இப்னு சாரா நீண்ட நாட்கள் முகம்மதுவிடம் நகலெடுப்பவனாகத் தொண்டு புரிந்த பின்னர் (transcriber), முகம்மது செய்யும் தில்லு முல்லுகளைக் கண்டு பயந்து கடைசி கட்டத்தில் சொல்லிக் கொள்ளாமல் மெக்காவுக்கே ஓடிவிட்டான். அவனைக் கொல்ல முகம்மது எவ்வளவோ முயன்றும் கொலை செய்ய இயலாது, "ஓத்மான்" செய்த உரிய நேர உதவியால் தப்பித்தும் கொண்டான். (இப்னு இஷாக் சிராத், p 550)

**பின் எதற்காக முகம்மதுவை எல்லோரும் புகழ்ந்தனர்?**

முஸ்லிம்களை எப்போதும் அச்சத்தால் திடுக்கிட வைக்கும் ஒரு கேள்வியும் அதற்கான நம் பதிலும் இங்கே உள்ளது: வெளிப்படையாக இவ்வளவு துன்மார்க்கத்தை நினைந்து கூறிக் காட்டுவது உண்மையாக இருந்தால் முகம்மதுவை சில மக்கள் விடாப்பிடியாக, அவர் இறந்து வெகு நாட்களாயினும், ஒருவரும் அவதூறாகப் பேசாமல் ஏன் புகழ்கிறார்கள்?

இக்கேள்விக்குப் பதிலிதோ: ஒரு வெறிப்பற்றீடுபாடுள்ள சமூகத்தில், மனம் திறந்து பேசுவது நிச்சயமாகப் பாதுகாப்பு இல்லாதது. குறைந்த பட்சமாக அச்சமூகப் புறக்கணிப்பில் முடியும் அல்லது இன்னும் மோசமான விளைவுகளுக்கும் ஆளாகலாம். இதில் மக்களுக்குச் 'செம்மறி ஆட்டு மந்தை மனப்பாங்கு'தான் இருக்கிறது. இதைச் **"சாய்ந்தால் சாயும் செம்மறி ஆட்டுக் கூட்டம்"** எனச் சொல்வதுண்டு. ஏனென்றால், ஒருவர் ஒரு காரியத்தில் இறங்கினால் அதையே எல்லோரும் பின்பற்றுவர். இக்குணநலம் வெறிப்பற்றீடுபாடு கொண்ட சமூகத்தில் கட்டாயம் இருக்க வேண்டும். வாயைத் திறக்கக் கூடாது என்பதை ஒப்புக் கொள்ளும் சமூகத்தில் 'கத்தியைத் தீட்டு! மூளையைத் தீட்டாதே!!' என இயக்கத் தலைவர் ஆணையிட்டுவிட்டால் (மூளையால்) சிந்திப்பதையே விட்டு விடத் தயங்க மாட்டார்கள். இதனால் இது வெறிப்பற்றீடுபாடு இயக்க சீடர்களுடைய கழுத்து கழட்டப்படாமல் பத்திரமாக இருக்க உதவும். விமர்சகர்கள் மௌனிகளாக ஆக்கப்பட்டால், இச்சகம் பேசுவோருக்கும், தலைவரின் கால் செருப்பைக் கூட தன் முகத்தைத் துடைத்துக்கொள்ளும் கைக்குட்டையால் தன்னிச்சையாகப் பளப்பளப்பாக்கும் ஈனர்களுக்குக் கொண்டாட்டம்தான். முகமன் கூறுவோர் இயக்கத் தலைவருக்குப் புகழுரைகளாகக் கூறி, இல்லாத குணங்களையும் வானளாவப் புகழ்வார்கள். இராக் முழுதுமே சர்வாதிகாரி சத்தாம் ஹுஸ்ஸைனை மக்கள் இன்று வெறுத்தாலும் இவன் பதவியிலிருந்து இறக்கப்படுவதற்கு முன்னர் உலகிலுள்ள மக்கள் யாவரும் கேட்டது அவனைப் பற்றிக் கூறப்பட்ட புகழுரைகளே! தற்காதலர்களும் இவ்வகையைச் சேர்ந்தவர்கள்தான். இத்தற்காதலர்கள் யதார்த்தமான உலகிலிருந்து விலகிக் கொண்டு, பிறரை ஏமாற்ற விரிக்கப்பட்ட அதே வலையில் தாங்களே சிக்கிக் கொண்டு தவிப்பார்கள். எல்லா தற்காதலர் தலைவர்களுக்கும் இதே கதிதான் நேர்ந்துள்ளது. (சத்தாம் ஹுஸ்ஸைன் உள்பட)

முகம்மதுவின் விஷயம் வேறு. தலைவலியுடன் இப்போது இன்னும் திருகு வலியுமானது. முகம்மதுவால் ஆரம்பிக்கப்பட்ட வன்முறை ஆதிக்கம் அவர் இறந்தவுடன் முடியவில்லை. முகம்மது அக்காலத்தில் எப்போதும் கூறிய அதே பொய் மூட்டைகளை நம்பிய முரட்டு முஸ்லிம்கள் முகம்மது இறந்த பின்னரும் அதே வன்முறைகளையும் அதை விட அண்டபகிரண்டப் பெரிய பொய்களை அந்தந்த காலத்திற்குத் தக்கவாறு கூறி விமரிசனம் செய்வோரை மௌனிகளாக ஆக்கும் அதே தொடர்கதையையும் இக்காலம் வரை தொடர்ந்து வந்துள்ளனர். முகம்மது இறந்த பின்னர், பிற்கால முஸ்லிம் தலைமுறையினரும் தங்கள் நீத்தார் கட்டிக் காத்த அதே பொய்களையும், தொடர் கொலைகளையும் வன்முறைச்

செயல்பாணிகளையும் கடைப்பிடிக்கத் தலைப்பட்டு இயக்கத் தலைவருக்குப் புகழாரம் சூட்டி மகிழ்கின்றனர். அதே பேய்க்குணம் இன்றும் தொடர்கிறது. மனித சக்திக்கு மீறிய புதுப்புது அற்புத நிகழ்ச்சிகளை கடவுளின் படைப்புச் செயல்கள் போல முகம்மதுவின் பெயரில் இன்றும் கற்பித்துக் கூறப்படுகிறது. இருப்பினும் இவைகளை நம்பும் கூட்டமும் உள்ளதே! முகம்மதுவே தன்னால் எந்த அற்புதமும் செய்ய இயலாது என தானாகவே ஒப்புக்கொண்டாலும் கற்பித்துக் கூறும் இக்கூட்டமே முகம்மது போன்ற கொடியோனைப் புனிதனாக ஆக்கி விடுகிறதல்லவா! [347]

**(குரான் 17: 90 & 93)**

(17:90 - [[[... ]]]; "நீர் எங்களுக்காகப் பூமியிலிருந்து ஒரு நீர் ஊற்றைப் பீறிட்டு வரும்படி செய்யும் வரையில், உம் மீது நாங்கள்நம்பிக்கை கொள்ள மாட்டோம்.

17:93: "அல்லது ஒரு தங்க மாளிகை உமக்கு இருந்தாலன்றி (உம் மீது நம்பிக்கை கொள்ளோம்) [[[.....]]]

முகம்மது இறந்தது தெரிந்து பின் வரும் தலைமுறைகள் முகம்மது நினைத்தது கூறியது செய்தது ஒவ்வொன்றையும் எந்தக் கேள்வியுமின்றி, அப்படியே நம்ப ஆரம்பித்தனர். இவ்வாறு ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைகளுக்குப் பொய்கள் எடுத்து செல்லப்பட்டன. இதைத் தவிர அந்தந்த தலைமுறையில் இருந்த முகமன் கூறும் கழிசடைகள் அவர்கள் பங்குக்கு ஏதேதோ (வேண்டாதவைகளையும்) மனத்திற்குப் பட்டவைகளை இன்னும் ஜோடித்து இதை எழுத்து வடிவில் வார்த்து வைத்தனர். ஹிட்லர் கூறுவது போல, பெரும் பொய்கள் எளிதில் நம்பப்பட்டன.

மதீனாக் காலத்தில் முகம்மதுவின் ஒழுகலாறு எவ்வாறிருந்ததோ அவ்வாறே 1400 வருடங்களுக்கு அப்பாலும் இக்கால முஸ்லிம்கள் தங்கள் கற்பனை உலகத்தை விட்டு பூமிக்கு இறங்காமல், இன்னமும் அதே செயல்பாணிகளைக் கடைபிடிக்கிறார்கள். இதில் நெஞ்சில் உரம் கொண்ட நவீனகால முஸ்லிம்கள் கேள்வி கேட்கத் துணிந்தால் விரைவில் நிரந்தரமாக மௌனிகளாக்கப்படுகிறார்கள். இதன் நடுவில் முகம்மதுவின் ஒழுக்கங்களைப் புகழும் முஸ்லிம்களில் இச்சகம் பேசுவோர் கௌரவிக்கப்படுகிறார்கள். இம்மாதிரி கொடூரமான அடக்குமுறை அமல் நெருக்கடிச் சூழ்நிலையில் இச்சகம் பேசுவோரையும் நெஞ்சிற் கரவுடையோரையும் (hypocrite) மீறி உண்மைகள் எவ்வாறு தலைதூக்க முடியும்? இது போன்ற நிகழ்ச்சிகளை இன்றும் நாட்டு அரசியலிலும் காண்கிறோமே! முகம்மது தம்மை விமர்சனம் செய்வோரைத் திட்டமிட்டுக் கொலை செய்தது பற்றி அநேக கதைகள் உண்டு. அதில் ஒன்றாக, 'முகம்மதுவின் தலைமை அடியாள், 'ஓமர்' ஒரு தடவை முகம்மதுவுக்கெதிரில், தன் கத்தியை வாளுறையிலிருந்து உருவி 'இக்கூட்டத்தில் என் தலைவன் முகம்மது கூறியதற்கு எதிராகப் பேசும் நெஞ்சுரம் எவனுக்கு உள்ளது' என மாபெரும் சண்டியனென உரக்கக் கத்தினானாம்! இதற்கு முகம்மதுவும் தன் தலையை ஆட்டி இச்சகம் பேசும் ஓமரின் வாய்வீச்சை அங்கீகரித்தாராம்! முகம்மது இவ்வாறு தம்மைப் புகழ்வோரை ஊக்குவித்து, தம்மை இகழ்வோரைக் கண்டித்துக் கொலை செய்வதை வழக்கமாக்கி வாழ்ந்தார். இம்மாதிரி சூழ்நிலையில் உண்மைதான் முதல் பலியாகும்.

இதற்கு உதாரணமாக இங்கு ஒரு உண்மை நிகழ்ச்சியைக் கூற வேண்டும். சில வருடங்களுக்கு முன், சேவை மனப்பான்மையுள்ள கண்-அறுவை சிகிச்சை

[347] The unbelievers repeatedly asked Muhammad to perform a miracle so they could believe (Quran 17: 90) and Muhammad kept telling them "Glory to my Lord! Am I aught but a man- a messenger?" (Quran 17: 93)

நிபுணர்கள் குழு ஒன்று, வட கொரியா நாட்டில் ‘கண்புரை’ நோயால் (cataract) பாதிக்கப்பட்ட ஏழை மக்களுக்கு உதவி செய்ய அங்கு வந்து பல அறுவை சிகிச்சைகளை வெற்றிகரமாகச் செய்து முடித்தனர். இவர்கள் உதவியால் கண்படல நோயால் பாதிக்கப்பட்ட அநேக முதியோரும், மற்ற கண் நோயுடன் இருந்த இளைஞர்களும் இலவச சிகிச்சை பெற்றனர். அவர்கள் நன்கு கண்பார்வை பெற்றதும் டாக்டர்களுக்கு நன்றி தெரிவிக்காமல், நேராக மிகப் பெரிய உருவப்படங்களின் முன் நின்று நெடுஞ்சாண்கிடையாகத் தரையில் வீழ்ந்து வீழ்ந்து வணங்கினர். அந்த படம் வட கொரிய நாட்டுச் சர்வாதிகாரி ‘கிம்’ அவன் தந்தை ‘பெரிய ‘கிம்’ ஆகியோரின் உருவப்படம்தான். முகம்மதுவை எப்படி அல்லாவின் தூதரென ஏற்றுக்கொள்கிறார்களோ அவ்வாறே, வட கொரிய மக்கள் ‘கிம்’மை வணங்கினர். இதுவும் மட்டு மீறிய வெறிப்பற்றீடுபாடு தானே! இங்கேயும் உண்மைதான் முதல் பலியாகும்.

முகம்மது தன் செல்வாக்கை அதிகமாக்கி வெற்றியடைந்ததன் காரணம், அக்கால அரேபியர் பெருமளவில் படிப்பறிவில்லா ஞானசூனியங்களாகவும் குருட்டு நம்பிக்கை கொண்டவர்களாயும், மேலாக எல்லையில்லா தன்னினப்பற்றுடனும் இருந்தனர். ஆக, இனப்பற்று, மூடபக்தி, செருக்கு, திமிர், ஆடம்பரப்பற்று, முட்டாள்தனம், தற்பெருமை, அதிகமான புணரும் இச்சை, பொறாமை, தம்மைத் தவிர மற்றவர்களை ஏளனம் செய்வது, இன்னும் இதில் விட்டுப் போன எல்லா கேடு கெட்ட மனப்பாங்குடனும் ஒரு பெரும்படையைத் திரட்டி இஸ்லாத்தை அரேபிய நாட்டில் ஆட்சி செலுத்தி அதை ஆங்கே நிரந்தரப்படுத்தினார். இதே மற்ற இயக்கங்களுடன் வேறுபடுத்திக் காட்டும் இச்சீலமற்ற தனியியல்புகளே இஸ்லாத்தில் அன்றும் இன்றும் மிக முக்கிய மூலப் பொருளெனவும் தரக்குறியீடெனவும் கருதப்படுகிறது. இத் தனியியல்புகளைத்தான் பிறர் மீது திணித்து நாடு பிடிக்கும் செயல்பாணிகளில் உலக முழுதும் இஸ்லாமிய மயமாக்க (DARU'L-ISLAM = Land of Islam) முஸ்லிம்கள் துடிக்கிறார்கள். இக்குண இயல்புகள் தங்கள் ஆதிக்கத்திற்கு உட்பட்ட மற்ற நாடுகளின் மீது திணிக்கப்படுகிறது. அடிப்படையாக இத்தனியியல்பு எங்கெங்குள்ளதோ அங்கெல்லாம் இவ்வியல்பே பொது நிலையாக ஆக்கி, அதற்கு, புனிதம் எனும் ‘சாயம்’ பூசி இத்தனிக் குற்றவியலுக்கு உடந்தையாக இஸ்லாமிய சட்டமான ‘ஷரியா’ செல்லக்கூடியதாகியும் விடுவார்கள்.

**(ஆறாவது அத்தியாயம் முடிவுற்றது)**

---0---

# அத்தியாயம் - ஏழு (7)
# தெளிந்த அறிவுள்ளோரும் பித்துப்பிடித்தவனைப் பின்பற்றும்போது?
## (When sane people follow insane people)

----0----

[[[மொழிபெயர்ப்பாளர் ஆரம்ப விளக்கவுரை: டாக்டர் அலி சினாவின் (Dr. Ali Sina) கருத்து: 'தாங்கள் முஸ்லிம்கள் என்ற நினைப்பு வரும் வரை, எல்லா முஸ்லிம்களும் அமைதியை நாடி, நட்புடன் பழகுபவர்களே' என எழுதினார்]]].

முஸ்லிம்கள் யாவரும் பார்ப்பதற்கு எப்போதும் சாதாரணமானவர்களாகக் காணப்படுவார்கள். மற்றவர்களைப் போல முஸ்லிம்களும் பற்பல நிறுவனங்களில் வேலை செய்து அதனால் வரும் வருமானத்தால் தங்கள் குடும்பங்களைக் காப்பாற்றுகிறார்கள். இவர்களில் பலர் நிறுவனங்களில் வேலை செய்தும் நம்முடன் கூடி ஒரே தொழிலகத் தோழர்களாகவும் நம் மேலதிகாரிகளாகவும் அண்டை வீட்டுக்காரர்களாகவும் மேலும் நம் நாட்டுக் குடிமகன்களாகவும் இருப்பார்கள். இவர்களில் பலர் நம்முடன் மிக நட்புடனும் நமக்குள்ள அதே ஆசாபாசங்களுடனும் அநேக மனக்கனவுகளுடனும் எதிர்பார்ப்புகளோடும் அச்சங்களுடனும், நம்மைப் போலவே ஒருவராகத்தான் தோன்றுவார்கள். இருப்பினும், அவர்களுக்குள் இருண்ட பகுதிகள் அநேகம் உண்டு. தாங்கள் இஸ்லாத்து இயக்கத்தைச் சேர்ந்த முஸ்லிம்கள் என மனத்தில் அவர்களுக்குத் தோன்றும் வரைதான் சாதாரண மக்களாகக் காணப்படுவார்கள். அப்படித் தோன்றியவுடன் மனத்திலும் செய்கையிலும் ஒரு விபரீத மாற்றம் தெரிந்துவிடும். இஸ்லாத்தால் புனிதமென அங்கீகாரம் அளிக்கப்பட்ட 'தக்கியா' வல்லுனர்களானாலும் இவர்கள் நடவடிக்கைகளை வருவதுரைக்க இயலாது.

இஸ்லாத்தினால் உண்டான உள்ளாற்றலால் முஸ்லிம்கள் தங்கள் உருவ இயல்புகளை வேண்டும்போது மாற்றிக்கொண்டு ஒரு சமயத்தில் Dr. Jekyll என்ற உருவிலும் அவரே கணப்பொழுதில் Mr. Hyde என மற்றொரு உருவத்திலும் தம் சிந்தனை சொல் செயல் ஆகியவைகளை மாற்றி அமைத்துக் கொள்வார்கள். இதைப் "பிளவுண்ட ஆளுமை" (split personality) எனக் கூறலாம். இஸ்லாத்தில் மட்டு மீறிய உணர்ச்சியுடன் வெறிஈடுபாடு எனும்போது, வரம்பு கடந்த விருப்பார்வம், காரணமில்லா உள்ளார்வம், கட்டுப்பாடில்லா அதிகப்படியான கருத்துப்பாங்கு ஆகியன போன்றவை இம்முஸ்லிம்களின் எல்லாவித விவாதங்களிலும் தன்னிச்சையாக வெறிபற்றீடுபாட்டுக்கு ஏற்றவாறே மாறிவிடும். அதில் தங்கள் இஸ்லாம்தான் எல்லாவற்றையும் விட மிக முக்கியமானது-சிறந்தது என்ற எண்ணம் எப்போதுமே தலைதூக்கி இருக்கும். இஸ்லாத்தைத் தவிர வேறெந்த அமைப்பிலும் கொலை, கொள்ளை, தீவிர வன்முறைச் செயலர்களைச் சகித்துக் கொள்ளும் அல்லது ஊக்கமூட்டும் ஒரு இயக்கம் இல்லவே இல்லை எனலாம். சாதாரணமாக பகுத்தறிவையும் மீறி வெறுக்கத்தக்க மிருகத்தன செய்கைகளான கொலை குண்டுவெடிப்பு, பொது சொத்துகள் நாசம் என்ற எல்லாக் கெட்ட செய்கைகளிலும் இவ்வளவு வெறியார்வத்தோடு ஈடுபட இஸ்லாம் போன்ற மற்றொரு இயக்கம் உலகில் இருக்க முடியுமா?

ஆறாவது அத்தியாயத்தில் இஸ்லாத்தின் வெறிப்பற்றீடுபாடு பற்றி மிக விவரமாக கொடுக்கப்பட்டது. இந்த ஏழாவது அத்தியாயத்தில், இன்னும் அதிகமான தகவல்களுடன், ஜிம் ஜோன்ஸின் (Jim Jones) 'மக்கள் கோவில்' (People's Temple) என்ற வெறிப்பறீடுபாட்டு அமைப்புடன் இஸ்லாத்தை ஒப்பீடு செய்வோம். ஜிம் ஜோன்ஸின் 'மக்கள் கோவில்' இஸ்லாத்தின் மற்றொரு பதிவுதான். ஆனால் இது சமீப காலத்தியது. இஸ்லாம் 1400 வருடங்களுக்கு முற்பட்டது. வித்தியாசம் அவ்வளவே! மக்கள் கோவில் மிக அண்மையில் (1978) தங்கள் 'வெறிப்பறீடுபாட்டு'ச் செயல்பாடுகளாலேயே முற்றிலும் அழிந்து போனது. அழிந்து போவதற்குரிய முக்கிய காரணம்தான் என்ன எனக் கூறுபடுத்தி ஆராய்வோம். முதலில் இது 20ஆம் நூற்றாண்டில் உருவானது. இந்நாட்களில் இது அக்கால (1400 ஆண்டுகளுக்கு முன்னர்) அரபு நாட்டு முஸ்லிம்கள் போன்று கண்மூடித்தனமாக முகம்மதுவைப் பின்பற்றும் காட்டுமிராண்டி மிருகக் கும்பலல்ல. ஆனால், இவ்விரண்டிற்கும் கருத்துப்படிவம் (concept) ஒன்றே! மக்கள் கோவில் சிறு வட்டத்திலிருந்தது. ஆகையால் மக்களால் சடுதியில் அழிக்க முடிந்தது. அடிப்படையில் சாதா அமைப்புகளின் இயல்புகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டக் கூடியவாறு எல்லா வெறிப்பறீடுபாடுகளும் (cults) ஒரே இயல்புகளைக் கொண்டவைகளாகவே இருக்கும். உலகிலுள்ள எந்த வெறிப்பற்றீடுபாடுகளுடன் இஸ்லாமையும் ஒப்பீடு செய்தாலும் ஒரே வகையில்தான் இருக்கும். மற்ற எல்லா வெறிப்பற்றீடுபாடுகளுடைய அழிவும் ஒன்றாகவே இதுவரை இருந்திருக்கிறது. ஒரு காலகட்டத்தில் மக்கள் விழிப்புற்று இம்மாதிரி இயக்கங்களை அழிப்பதில் தீவிரமாகச் செயலாற்றுகிறார்கள்.

இப்போது இங்கு மக்கள் கோவில் எனும் இயக்கத்துடன் இஸ்லாத்தை ஒப்பிட்டுப் பார்ப்போம். மக்கள் கோவில் சீடர்களை செயலாற்றத் தூண்டியவன் 'ஜிம் ஜோன்ஸ்'. இவன் திட்டப்படித் தன் சீடர்களையே தங்கள் குழந்தைகளுக்குத் தங்கள் கைகளால் நச்சுத் திரவத்தை குடிக்க வைத்து, மற்றொரு பகுதியைச் சீடர்களே (குழந்தைகளின் பெற்றோர்களையே) அருந்தும்படி செய்து எல்லோரையும் ஒட்டுமொத்தமாகச் சாகடித்தான். இவர்கள் பிணங்கள் ஒருவரோடொருவர் கட்டி அணைத்துக் கொண்டு கிடந்த காட்சி மிக பரிதாபமானது. இதில் 911 பேர் இறந்தனர். இக்கொடுமை எவ்வாறு ஏன் நிகழ்ந்தது? இங்கே இஸ்லாத்துடன் இருக்கும் ஒத்திசைவை, மக்கள் கோவில் துன்பியல் அவலத்தை, விவரித்துக் கூறுவோம்.

வெறிப்பற்றீடுபாட்டில் 'மூளைச் சலவை' செய்யப்பட்டோரை அதிலிருந்து விடுவிப்பது பெரும்பாலும் இயலாத செயல். இதற்கு ஒரே மாற்று மருந்து உண்மையை உறைக்கும்படி நெற்றியடி கொடுத்தால்தான் முடியும். இவ்விஷயங்களில் 'பொய்' 'பித்தலாட்டம்' என்பவை கலவையின் மிக முக்கிய ஆக்கக்கூறு. இதுதான் 'மூளை சலவை' செய்ய வெறிப்பற்றீடுபாடுகளுக்குப் பயனுள்ளதாயிருந்தது. **மூளைச் சலவை செய்யப்பட்டோரை அதிலிருந்து விடுவித்து நல்லறிவு எனும் புதையல் சுரங்கத்தைத் திறக்கும் திறவுகோல் (சாவி) 'உண்மை' எனும் ஒரே சாவிதான். இங்கே மாற்று / போலிச் சாவி கிடையாது.**

இந்தியானா எனும் இடத்தில் 1945இல் சில சீடர்களோடு ஜிம் ஜோன்ஸ் என்பவனால் 'மக்கள் கோவில்' என ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பத்தில் மேற் பூச்சுக்காக இதன் கொள்கை கவர்ச்சியாக இவன் கூறிக்கொண்டது **'கடமை-பொருளாதார சமத்துவம்-ஒருமைப்பாடு'** எனும் உயர்ந்த தத்துவங்கள்தான். இப்படி இங்கே எழுதியவுடன் (**கடமை-கண்ணியம்-கட்டுப்பாடு** என) வேறொரு தமிழ் நாட்டு கழகம் உங்கள் நினைவுக்கு வந்தால் இந்நூலை மொழிபெயர்த்தவர் என்ன செய்யமுடியும்? (இம்மாதிரியான விளம்பரக் கவர்ச்சி வாசகங்கள்:

‘**சர்க்கரை என காகிதத்தில் எழுதி, அதை நக்கினால் இனிக்குமா**’?) இக்குழு வறியோருக்கு வேலை பெற்றுத் தரும் இயக்கம் என விளம்பரப்படுத்திக் கொண்டது. இவன் பேசும்போது கேட்பவர்களைக் கவர்ந்து விடுவான். இவன் அணுகுமுறைகூட கேட்போரை மிகவும் தூண்டி இசையச் செய்துவிடும். இதனால் இவன் இயக்கம் எதிர்பார்த்ததற்கு மேலாக எளிதில் வளர்ந்தது. பின்னர் கூட்டு வழிபாடுகள் ஏற்பாடு செய்யப்பட்டன; இவனுடைய தலைமைச் செயலகமும் ‘சான் பி∴ரான்சிஸ்கோ’வில் புதிதாக நிர்மாணிக்கப்பட்டது.

**முழுமையான கீழ்ப்படிதல்**

ஜோன்ஸ் அவனுடைய சீடர்களுக்கு மிகப் பிரியமானவனான். அவனைச் சீடர்களும் ‘தந்தை’யென எண்ணி செல்லமாக ‘டாட்’ (Dad) எனவும் கூப்பிடத் தொடங்கினர். அவனே தங்களை உயர்நிலைக்கு அழைத்துச் செல்லப் போகிறான் எனத் தப்புக் கணக்குப்போட்டு போகப்போக அவனுக்கே கடவுளின் தூதர் எனத் தகுதியையும் அருகதையின்றி கொடுத்தனர். நாளாக நாளாக அவனுக்குச் சீடர்களிடத்தில் செல்வாக்கு வளர்ந்தது. இதனால் சீடர்களிடமிருந்து மென்மேலும் கீழ்ப்படிதலையும் அவன் விரும்பிய வண்ணம் தங்கள் விசுவாசத்தையும் அவர்கள் காண்பிக்க அதிகாரத்துடன் எதிர்பார்த்தான். சீடர்களும் சற்றும் சளைக்காது அவன் விரும்பிய வண்ணம் அவனைத் திருப்தி செய்வதில் மட்டுமே மிக்க ஈடுபாடு கொண்டனர். நிகழப்போகும் அணுகுண்டு வெடிப்பில் உலகமே அழியப்போகிறது. இதிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள ஜிம் ஜோன்ஸ் மூலமாகத்தான் முடியுமென அவன் கூறியதை அப்படியே அவர்கள் முழுதும் நம்பினர். வெறிப்பற்றீடுபாடுகளில் எங்கும் ஒரு பொது கருப்பொருள் - **‘இறுதித் தீர்ப்பு நாள்’** எனும் அச்சுறுத்தல்தான் (Doomsday threat) இருக்கும். இதைத்தான் ‘ஜிம் ஜோன்ஸ்’ தன் சீடர்களைத் திறமையாகக் அடக்கியாள உபயோகிக்கும் ‘பயம் எனும் கருவி’யாக்கிக் கொண்டான். (fear is the key).

Neal Osherow என்பவர் ‘மக்கள் கோவிலை’ப் பற்றி ஆழ்ந்து ஆராய்ந்து ஒரு மிகப் பெரிய கட்டுரையை எழுதினார். (An Analysis of Jonestown: Making Sense of the Nonsensical). இதில் பொதுவாகவே வெறிப்பற்றீடுபாடுகளின் ‘அமைப்பியல்’ பற்றியும் கூறுபடுத்தி விளக்கியுள்ளார். Neal Osherow எழுதியபடி: “அனேகமாக ஜிம் ஜோன்ஸின் ஆவேசப் பேச்சில் வசை மாரியாக இனவேறுபாட்டால் உலகில் உண்டாகும் கொடுமைகளைப் பற்றியும், முதலாளிகள் தொழிலாளிகளுக்குச் செய்யும் கொடுமைகளைப் பற்றியும் மிக உறுதியாக இருக்கும். மேலும் ‘மக்கள் கோவில்” மேல் கடுமையான அவதூறு கிளப்பி விடுபவர்கள், முக்கியமாக இதிலிருந்து வெளியேறியவர்கள் செய்யும் பழித்துரைப் பிரச்சாரத்துக்குத் தக்க பதிலடியாக ஒரே திட்டுமயமாகவே இருக்கும்”. [348]

இம்மாதிரி ஆவேசப் பேச்சு, வசைமாரி, முக்கியமாக இஸ்லாத்திலிருந்து விலகி வெளியேறியவர்களின் மீது திட்டு ஆகியவை யாவுமே இஸ்லாத்திலும் இருப்பவைதான். ஆரம்பத்தில் முகம்மது ‘எச்சரிக்கை’ மட்டுமே விடுத்து அல்லாவின் மீது அஞ்சுமாறும், **கியாம நாளை** (Day of Judgment) நினைவில் கொள்ளுமாறும் கூறிவந்தார். இதற்காக மெக்காவிலிருக்கும் ‘பல கடவுள்கள் மீது நம்பிக்கை வைத்திருப்பவர்’களை (polytheists) ஒரே கடவுளை நம்பும்படி போதித்தார்.

---

[348]Osherow, Neal. “Making Sense of the Nonsensical: An Analysis of Jonestown.”In *Readings about the Social Animal*, 7th edition, ed. Elliot Aronson.New York: W. H. Freeman. Available online. [URL=http://www.academicarmageddon.co.uk/library/OSHER.htm] All Osherow’s quotes in this chapter are taken from this source.

**(குரான் 42:7)** இதனால் இவர்கள் முன்னோர்களான அப்பன் பாட்டன் முப்பாட்டன் என யாவரும் பின் சந்ததியினருக்கு வேண்டிய வழிகாட்டாது இருந்ததற்காக அவர்களுக்கும் சேர்த்து முகம்மது திட்டுகளைத் தவறாமல் முழங்கினார். **(குரான் 32:3 & 36:6)** முகம்மதுவின் செல்வாக்கு மிகுந்ததும், பேராசையும் ஆணவமும் அத்தோடு ஒரே காலத்தில் மிகுந்தது. இதற்குப்பிறகு முகம்மதுவின் சொல்வண்ணம் அதிகாரம் ஆணவம் மிகுந்துதான் எவ்வுரையிலும் கேட்க முடிந்தது. இதை ஒரு சாக்குப்போக்காக வைத்துக்கொண்டு இளம் சந்ததியினர்களை நோக்கியே பேருரையாற்றி, தங்கள் உற்றார் உறவினர் வீடு பந்தம் முதலியவைகளைத் துறந்து சரியான வழிகாட்டும் தன்னிடமே வந்து சேர்ந்து விட புத்திமதி கூறினார். தாம் சொல்லியபடி நடக்காவிட்டால் அல்லாவால் மிகக் கொடூரமாக தண்டிக்கப் படுவார்கள் எனவும், அதனால் தன்னையே தலைவனாக ஏற்றுக்கொள்ள வேண்டும் எனவும் அச்சுறுத்தலோடு உரை நிகழ்த்தினார். முகம்மதுவின் ஆரம்ப ஆவேசப் பேச்சு அனைத்துமே 'பல கடவுளை நம்புபவர்கள்' மீதுதான் இருந்தது. போகப்போக வசைமாரிகள் அனைத்துமே இஸ்லாத்தின் எதிரிகளான குறை கூறுபவர்கள், மிக முக்கியமாக இஸ்லாத்தை விட்டோடியவர்களை நோக்கியே இருக்குமாறு தன் கவனத்தை ஒருமுகப்படுத்தினார்.

ஜிம் ஜோன்ஸும் தன் சீடர்களை கயானாவுக்கு இட்டுச்சென்றான். இதனால் சீடர்களின் கொஞ்ச நஞ்ச வெளிஉலகத் தொடர்பும் அடியோடு ஒழிந்தது. வெளி உலக பாதிப்பும் முழுதும் அழிந்தது. ஆங்கே தன் சீடர்களுக்கு மூளைச் சலவை செய்யவும் தன் கருத்தை தீவிரமாக புகட்டவும் அவர்களை கிடுக்கிப்பிடியில் வைத்துக்கொள்ளவும் அவனால் முடிந்தது.

இதே காரணங்களால், முகம்மது தன் சீடர்களை மெக்காவிலிருந்து மதீனாவுக்குக் குடிபுக புத்திமதி கூறித் தன் சீடர்களை அவர்கள் உற்றார் உறவினர்களிடமிருந்து பிரித்து மூளைச் சலவை செய்யவும் இஸ்லாத்தில் தம் கருத்தைப் புகட்டவும் அதே கிடுக்கிப்பிடியில் வைத்துக்கொள்ளவும் முடிந்தது.

**குரான்** 8:72 – நிச்சயமாக எவர் ஈமான் கொண்டு, தம் ஊரை விட்டு வெளியேறி, தம்செல்வங்களையும், உயிர்களையும் அல்லாஹ்வின் பாதையில் தியாகம் செய்தார்களோ, அவர்களும் எவர் இத்தகையோருக்குப் புகலிடம் கொடுத்து உதவியும் செய்தார்களோ அவர்களும்; ஒருவருக்கொருவர் உற்ற நண்பர்கள் ஆவார்கள் - [[[...]]] - ஆனால் உங்களிடம் உடன்படிக்கை செய்து கொண்டிருக்கும் ஒரு சமூகத்திற்கு விரோதமாக (அவர்களுக்கு உதவி செய்வது) கூடாது [[[....]]].

இவ்வசனத்தில் முஸ்லிம்கள் முகம்மது சொல்படி மதீனாவுக்குக் குடிபுகாத ஏனைய முஸ்லிம்களுக்குப் புகலிடம் தரக்கூட்டாது எனத் திட்டவட்டமாகக் கூறப்பட்டுள்ளது. இதில் கடைசி வரிகளில் 'அல்லா மெக்காவை விட்டு வராத சீடர்களுக்கு அல்லா எச்சரிக்கை கொடுப்பதாகவும் இவர்கள் செய்கைகளை அல்லா உற்று நோக்கி உள்எண்ணங்களையும் நன்கு கண்காணிக்கிறார் என்றும் எச்சரிக்கை உள்ளது.

முகம்மதுவின் அல்லாவும் 'ஜியார்ஜ் ஆர்வெல்' (George Orwell) எழுதிய கற்பனைக் கதையான Nineteen Eighty-Four (1984) எனும் புத்தகத்திலுள்ள கண்ணால் காணமுடியாத 'ஓசியானா" சர்வாதிகாரியான "பெரியண்ணனும்" (Big Brother) மர்மமான முறையில் அதே தோற்ற சாயலில் ஒத்திருகிறது. 'ஆர்வெல்' கதையிலுள்ள மக்கள் சமூகம் முழுதுமே தவறு ஏதேனும் செய்பவர்களைக் குறித்துக் கடுமையான முறையில் காணொளித் திரையால் நாள் முழுதும் (24x7 என) மேற்பார்வை செய்யப்பட்டார்கள். அங்குள்ள மக்களுக்கு அடிக்கடிப் "பெரியண்ணன்" 'எல்லோரையும் தன் கண் பார்வையில் பார்த்துக்கொண்டுதான்

இருக்கிறான்' (Big Brother is watching you) என்ற தகவல் மூலைக்கு மூலை விளம்பர முறையில் நாடு முழுதும் தெருவெங்கும் ஓயாமல் ஓதப்பட்டது. இதன் நோக்கமே மக்களை உடையும் மாக்கல் போல எளிதாக உடையும்படி ஆக்கித் தன் வசப்படுத்தவேதான். இதைத்தான் முஸ்லிம்களுக்கு இஸ்லாம் அன்றிலிருந்து இன்றுவரை எல்லாவகையிலும் செய்கிறது.

ஜியார்ஜ் ஆர்வெல் புனைக் கதையில் 'பெரியண்ணன்' என்பவன் உண்மையில் இருந்தானா இல்லையா? என்பது இங்குப் பிரச்சனையல்ல. பெரியண்ணன் உருவம் அரசாங்கத் தலைவரே உருவாக்கியதா? அல்லது உண்டாக்க முடியுமா? என்பதுதான் பிரச்சனை. ஆனால் இக்கதையில் வரும் **"ஓ'ப்ரைன்"** (**முகம்மது போன்றவன்**) எனும் சித்தரவதை செய்வதில் நிபுணன் கூறுவது இதுதான். பெரியண்ணன் 'சாவதில்லை என்றும் நிரந்தரமானவன்' (அல்லா போல) என்றும் அவன் உறுதியாகக் கூறுகிறான். இதனால் இதன் உட்பொருளைப் பற்றி நாமறிவது: "பெரியண்ணனே" இந்த நாட்டிலுள்ள ஒரே கட்சியின் உருவகம். மக்களில் ஒருவரும் இவனைப் பார்த்ததில்லை. ஆனால் இவன் முகம் ஒரே விதமாக விளம்பரச் சுவரொட்டிகளில் பட்டி தொட்டிகளிலும் காணலாம். இவன் குரலை எல்லா தொ(ல்)லைக்காட்சித் திரைகளிலும் பார்க்கலாம்-கேட்கலாம். இப்பெரியண்னன் எனும் மாறுவேடத்தோடுதான் அரசாங்கக் கட்சி தன்னை உலகுக்கு காட்டிக் கொண்டது.

இப்பெரியண்ணனின் செயற்கரிய செயல், தன்னைப் பற்றி உலகின் கவனத்தை ஒருமுகப்படுத்தத் தான் அன்பின் மாற்றுருவம் எனவும், அதே சமயம் பயத்தையும் ஒருங்கே உண்டாக்கவல்ல ராட்சச குணம் படைத்த படு பயங்கரமானவன் எனவும், எல்லோருடைய மரியாதைக்கும் அருகதையானவன் எனவும் அரசாங்கத்தால் விளம்பரப்படுத்தப்படுவது ஆகும். ஆக இக்குணநலங்களை உணர்ச்சிபூர்வமாக அனுபவிக்க அந்தந்தத் தனிமனிதர்களால் தான் முடியும் எனவும், மாற்றுக் கட்சியாலல்ல எனவும் ஆணித்தரமாகக் கூறப்பட்டது 'ஓசியானா' நாட்டின் விசுவாசமான உண்மைக் குடிமக்கள் பெரியண்ணனைக் கண்டு பயப்பட வேண்டாம். பெரியண்ணனின் உண்மையான நல்ல மனதை அறிந்தவர்களுக்கு, இவனை மிகவும் நேசிக்கவும் மரியாதை செலுத்தவும்தான் முடியும் என அரசாங்கக் கட்சியே கூறிக்கொண்டது. இப்பெரியண்ணனே உலகிலுள்ள எல்லாக் கொடுமையான பாபங்களிலிருந்தும் தம் மக்களுக்குத் தகுந்த பாதுகாப்பளிக்க வல்லவன் என மக்கள் உணரவேண்டுமெனவும் இவ்வரசாங்கமே விரும்பிற்று. ஆக இவைகளெல்லாம் "ஓசியானா" நாட்டு அரசாங்க நிர்வாகத்தின் கோட்பாடு, விளக்க அமைப்பின் (propaganda system) 'தத்துவ' விளம்பரம்.[349]

இம்மாதிரியே முஸ்லிம்களும் அ ல்லாவைப் பற்றிப் புரிந்து கொள்கிறார்கள். அல்லாவும் காண்பதற்கரியவர்; ஆனால் எங்கும் எதிலும் எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவர்; அவரே அன்பு காட்டத் தகுதி படைத்தவர்; அதே சமயம் இஸ்லாமியரல்லாதவர்களால் பயப்படத்தக்கவர்; முஸ்லிமல்லாதவர்களை ஒரு நொடியில் அழித்திடுவாரென 1434 வருடங்களாகக் கூறிக்கூறிக் காதுப்பறை கிழிகிறது. அவரே எல்லா மக்களின் ஒவ்வொரு அசைவையும் கண்காணிப்பவர்; இதனால் அவர் மக்கள் எண்ணங்களின் தலைவன்; இஸ்லாமிய எதிரிகளைப் பழி வாங்குவதில் ஈடு இணையற்றவன் எனவும், அவர்களுக்கெதிராக சதி செய்வதில் நிபுணன் எனவும்; அல்லா எல்லாம் அறிந்தவன்; மிக்க பொறுமையாளன்; அல்லா அனைத்துப் பொருள்களையும் கண்காணிப்பவன்; பாவிகளின் (கா ஃபிர்) கூட்டத்தை அல்லா நேர்வழியில் செலுத்த மாட்டான்; கா ஃபிர்களுடைய இரகசியங்களை

[349] Wikipedia.com

அல்லா அறிகிறான்; கா∴பிர்களுடைய செய்கைகளை அல்லா பயனில்லாதவையாக ஆக்கிவிடுவான்; அல்லா யாவற்றையும் நன்கறிந்தோனும் உணர்ந்தோனுமாவான்; அல்லா நீங்கள் செட்பவற்றை நன்கு கவனித்துக் கொண்டிருக்கிறான் எனப் பெரியண்ணன் கூறியவண்ணமே தெரிவிக்கிறது. அல்லாவே நாம் ஒவ்வொரு நாளும் செய்யும் எல்லாச் செய்கைகளையும் தம் குறிப்பேட்டில் பதிவு செய்து, அதைக்கொண்டே மனிதர்களுக்குத் தகுந்த தண்டனையோ அல்லது வெகுமதிகளையோ நாம் இறந்தவுடன் கியாம நாளில் நமக்களிப்பவரெனக் குரான், ஹத்தீசுகள், சிராத் முதலிய ஷரியா சட்டதிட்டங்கள் உ(கு)ரைக்கின்றன. (அல்லா எல்லாம் வல்ல ஒரு கடவுளாயிற்றே! இவருக்கு ஞாபகசக்தியே (super memory computer brain) கிடையாதா? உலகிலுள்ள எல்லா மானிடப் பிறவியின் பெயரில் நடந்த புண்ணிய பாபக் கணக்கை தேதிவாரியாகத் தனித்தனியே பக்கம் பக்கமாக விலாவாரியாக எழுதி வைப்பவர் எனத் தெரிகிறது!!) இது எவ்வளவு தூரம் உண்மை எனச் சீர்தூக்கிப் பார்த்தால் இவைகள் யாவும் 'கவைக்குதவாத பகட்டுச் சிகினாத் தாள்' என உண்மையாகப் பாகுபடுத்தி அறியும் புத்தியுடையோருக்குத் தெரியும். ஆனால் இதெல்லாம் முஸ்லிம்களின் மூளையின் சக்திக்கு அப்பாற்பட்டதாயிற்றே!

**மதத்திற்காக இறப்பது தான் மத நம்பிக்கைக்கேற்ற சிறந்த சான்று!**

Osherow தொடர்கிறார்: "1978இல் மக்கள் கோவிலால் பாதிக்கப்பட்ட அங்கத்தினர்களின் உற்றார் உறவினர் மிக்க துயருற்று, எல்லோருமாகக் கூடிப்பேசி Leo Ryan எனும் செனேட் உறுப்பினரை அணுகி, இவ்வெறிப்பற்றீடுபாடு இயக்கத்தைப் பற்றிய உண்மையை அறியும் நோக்குடன் விசாரணை நடத்தக் கேட்டுக்கொண்டனர். மக்கள் கோவிலைப் பற்றிப் புலன் விசாரணை செய்ய செனேட் உறுப்பினரும் ஒப்புக்கொண்டார். இதற்காக அவரும் மற்ற பத்திரிக்கை நிருபர்களுமாகச் சேர்ந்து அங்குள்ள அங்கத்தினர்களைப் பேட்டி காண ஆகாய விமானத்தில் மக்கள் கோவிலுக்கு வந்து சேர்ந்தனர். சீடர்களில் பெரும்பான்மையினர் ஜிம் ஜோன்ஸைப் புகழ்ந்து இக்கோவிலில் வசிப்பது தங்களுக்கு நிம்மதியாக இருக்கிறதெனவும் அங்கேயே சாகும்வரை நிரந்தரமாகத் தங்கி விடத் தீர்மானித்து விட்டதாகவும் முகத்தை அசட்டுதனமாக (பாசாங்குச் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு) நடித்தார்கள். இவைகளால் திருப்தியடைந்த குழு அவ்விடத்தை விட்டுப் புறப்படுவதற்குச் சற்று முன்னர் இரு குடும்பத்தினர் செனேடருடன் அவர் வந்த விமானத்தில் தப்பி அவருடனேயே வந்துவிடுவதாக ரகசியச் செய்தி அனுப்பினர். இதற்கு ஒப்புதலும் செனேடரால் உத்திரவாதமளிக்கப் பட்டது. கடைசி நிமிடத்தில் செனேட்டர், பத்திரிக்கைக் குழுவினர், இரு தப்பியோடும் குடும்பத்தார் எல்லோரும் விமானத்தில் ஏறும்போது ஜிம் ஜோன்ஸ் காவலர்கள் விஷயம் தெரிந்து விமானத்தைச் சுற்றிப் பதுங்கி இருந்து ஒட்டுமொத்தமாகத் துப்பாக்கிச்சூடு நடத்தித் தாக்கினார். இதில் செனேட்டர் Leo Ryan உள்பட மற்ற ஐந்துபேர் சுட்டுக் கொல்லப்பட்டனர் ஆனால் தப்பி ஓடிவிட முயற்சி செய்த இரு குடும்பத்தினருடன் விமானம் மக்கள் கோவில் எல்லையைத் தாண்டி பத்திரமாகப் பறந்து சென்றுவிட்டது. இது ஒரு கிலியூட்டும் சம்பவமாக வெகு இடங்களில் உடனேயே வெளியிடப்பட்டு மிக தீவிரமாக விவாதிக்கப்பட்டது. இதற்கான நேரடி நடவடிக்கைகளை அரசாங்கமும் உடனடியாக எடுக்கத் தீர்மானித்து விட்டது. இதையறிந்த ஜிம் ஜோன்ஸ் தன் மக்கள் கோவில் சீடர்களை ஒன்றாகத் திரட்டி நாட்டு ராணுவம் மக்கள் கோவிலுக்குள் வருவதற்கு சரியான சில வினாடிகளுக்கு முன் நச்சு சேர்த்த பானத்தைக் குடித்துவிட்டு "மதிப்புடன்

இறக்குமாறு" (die with dignity) குடிக்கச் செய்தான். இதில் 911 சீடர்கள் ஒரே நேரத்தில் ஒட்டுமொத்தமாக ஜிம் ஜோன்ஸால் கொல்லப்பட்டனர்.

சாகுமுன் நடந்த கடைசி சடங்கின் போது அங்கு பதிவு செய்யப்பட்ட ஒலி நாடாவும் ராணுவ திடீர்த் தாக்குதலில் கைப்பற்றப்பட்டது. இதனால் தெரிய வந்தது அங்குள்ள சிலரைத் தவிர எல்லோரும் தாங்களும் நச்சு பானத்தைக் குடித்தும் தங்கள் குழந்தைகளுக்கும் புகட்டி இறந்தனர். ஒளி நாடாவில் இருந்த அத்தனை விவரமும் கீழே தொடராகக் கொடுக்கப்பட்டுள்ளது. இங்கே கொடுக்கப்பட்ட விவரத்தில் அவர்களுக்குள் எழுந்த பேச்சும் சில கண்டனக் குரல்களும் கேட்டன. இம்மாதிரி சில நிகழ்ச்சிகளை தவிர, மற்றவர்கள் இறப்பதற்குத் தயாரென கூச்சலிட்டனர்.

**ஜிம் ஜோன்ஸ்:** என்னால் முடிந்த வரை உங்களுக்கு ஒரு நல்ல வாழ்க்கையை அமைத்துக் கொடுக்க இதுவரை முயற்சி செய்துள்ளேன் என உங்களுக்கே தெரியும். (நக்கல் சிரிப்பு ஒலி; ஓலங்கள்) எவ்வளவு செய்தாலும் ஒரு சிலர் பொய்யுரையை நம்பி, நாம் நிம்மதியாக நம் வாழ்க்கையை சீராக நடத்த இயலாதவாறு செய்து விட்டனர். நம்மை நிம்மதியாக வாழ விடாவிட்டாலும் இனி நிம்மதியாக சாகவாவது விடட்டும் (கைதட்டல்). நமக்குக் கொடூரமாக துரோகம் இழைக்கப்பட்டுள்ளது. இன்னும் சில நொடிகளில் தப்பி ஓடிய நம் சீடர்களில் ஒருவர் தப்பிச் சென்ற விமான ஓட்டுனரைச் சுட்டுக் கொல்லப் போகிறார். அதற்கு அவரிடம் வேண்டிய ஆயுதம் கொடுக்கப்பட்டது. இது எனக்குத் தெரியும். இதற்கு நான் திட்டமிடவில்லை. ஆனால் இது நடக்கப் போகிறதென நான் நன்கறிவேன்.

(உண்மையில் ஜிம் ஜோன்ஸ் சொன்னபடி ஒன்றுமே நடக்கவில்லை. எல்லோரும் மிக பத்திரமாக போய்ச் சேர்ந்தனர். அங்குள்ளவர்களை நம்பச் செய்யவே (பொய்) இவ்வாறு சொல்லப்பட்டது).

பழைய கிரேக்க மரபுப்படி நாமனைவரும் இந்த தர்மசங்கடமான உலகத்தை விட்டுத் தாண்டி விடுவோம். ஏனெனில் நாம் அவர்கள் நினைப்பது போன்று தற்கொலை செய்யப் போவதில்லை. இப்போது நாம் செய்யப்போவது ஒரு புரட்சி / தியாகம். இந்த நடவடிக்கையிலிருந்து நாம் திரும்பிச் செல்லப் போவதில்லை.

**ஒரு பெண்**: ஆமாம். நாம் இன்னும் வாழ வேண்டும். இதை நான் நன்கறிவேன். எனக்கு நம்பிக்கை இன்னும் இருக்கிறது.

**ஜிம்**: நன்று!. நாமெல்லோரும் ஒரு நாள் இறந்துதானே ஆகவேண்டும்.

**சீடர்கள்**: அதுவே சரி. அதுவே சரி. அதுவே உண்மை.

**ஜிம்:** இங்கிருந்து விமானத்தில் சென்றவர்கள் செய்தது நம் வாழ்க்கையை நாசமாக்கப்போகிறது. நான் என்றும் சாவைக் கண்டு அஞ்சவில்லை. இப்போது இப்படி வாழ்ந்தால்தான் அது ஒரு சாபக்கேடு. இம்மாதிரி வாழ்வது நம் தகுதிக்கு உகந்ததல்ல.

**ஒரு பெண்**: ஆனால் எனக்குச் சாக பயமாக இருக்கிறது.

**ஜிம்**: நீயா அப்படி சொல்கிறாய். இருக்கவே முடியாது.

**மற்றொரு பெண்**: இங்கு சாவதற்கென தங்கிவிட்ட பலர்தான், தப்பிச் சென்ற சிலர் வாழ்வதற்கு வழி செய்துள்ளோம். இங்கு தப்பித்துப் போகாத இச்சிறு குழந்தைகள் தான் வாழ்ந்திருக்க வேண்டும். இவர்கள் நம்முடன் சாகக் கூடாது. இப்போது நாம்தான் இவர்கள் வாழ என்ன செய்து விட முடியும். எல்லாமே போச்சு.... எல்லாமே போச்சு... எல்லாமே போச்சு...

**ஜிம்:** இங்கிருக்கும் சிறு குழந்தைகள் வாழ்வதைவிட இவர்கள் இனி பெறப்போவதில்தான் இன்னும் சிறப்பு மிகுந்துள்ளது. இவர்களுக்கு தப்பிச் சென்றவர்களை விட இன்னும் நிம்மதி கிடைக்கப் போகிறது. நாம் இவ்வுலகத்தை விட்டு விட்டு அவர்களுக்கு நாம் எடுத்துக்கொண்ட பிரமாண வாக்குமூலத்திற்கு அசைக்க முடியாத சான்றை ருசுப் படுத்துவோம். (கைதட்டல்)

**ஒருவன்**: எல்லாமே முடிந்து விட்டது; சகோதரி; இந்நாளை நாம் இனிது முடித்து வைப்போம் ( கைதட்டல்)

**மற்றொருவன்**: இப்போது கூறுங்கள். எங்கள் உயிர் உங்களுக்கு வேண்டுமா! எடுத்துக்கொள்ளுங்கள். நாங்கள் உயிர் தியாகம் செய்யத் தயார். (சிரிப்பும் கைதட்டலும்) [Baltimore Sun, 1979]

அங்கிருக்கும் குழந்தைகளின் அழுகைச் சத்த அமளியில் ஒளி நாடா ஓடிக்கொண்டிருந்தது. இவர்கள் அருகில் சென்று ஜிம் ஜோன்ஸ் அவர்களைத் தற்கொலை செய்து கொள்ள வற்புறுத்திக் கூறிக் கொண்டிருந்தான். சடுதியில் முடிக்கத் தூண்டிக் கொண்டிருந்தான்.

**ஜிம்:** இது ஒரு நல்ல மருந்துதான். மிகச் சுலபமானது. இதை உட்கொண்டவுடன் இழுப்பு வராது. சாவதற்கு அஞ்சாதீர்கள். இதோ நம்மை விட்டோடியவர்கள் நம் வாழ்க்கையை சித்திரவதை செய்யத் தான் நம்மைவிட்டுச் சென்றிருக்கிறர்கள்.

**ஓர் பெண்**: இனி கவலைப்படுவதால் பிரயோசனமில்லை. நீங்களும் அமைதியாக இருந்து குழந்தைகளையும் அமைதிப் படுத்துங்கள். குழந்தைகள் வலியினால் அழவில்லை. இக்கிண்ணத்தில் உள்ளது குழந்தைகளுக்குக் கொஞ்சம் கசப்பாக இருக்கும். ஒரே ஒரு உறிஞ்சுதான். பிறகு எல்லாம் அமைதி. எங்கும் அமைதி.

**மற்றொரு பெண்**: அழுவதற்கொன்றுமில்லை. இதுதான் உண்மையான மகிழ்ச்சி தரும். இது நம்மை மகிழ்வூட்டும் (கைதட்டல், சிரிப்பு)

**ஜிம்**: தயவு செய்து மேல் நடக்க வேண்டியதை கவனியுங்கள். இது ஒரு தற்கொலையல்ல. இது புரட்சிகரமானது. இத்தற்கொலை நம்மை நாமே அழித்துக் கொள்வதற்கில்லை. (இடையில் சீடர்கள் ஒரே குரலில் “தந்தையே” என கூப்பிடும் குரல்கள். ஓலங்கள். கைதட்டல்கள்)

**ஒருவன்**: நம் தந்தை நம்மை இவ்வளவு தூரம் அழைத்து வந்திருக்கிறார். அவருக்கே என் ‘ஜே” எனும் வாக்கு உரித்தாகுக!! எல்லோரும் “ஓ”ப் போடுங்கள்.

**ஜிம்:** இறக்கும் போது கூட நாம் நம் சுய கௌரவத்தோடு இறக்க வேண்டும். சீக்கிரம்! சீக்கிரம்!! துரிதப் படுத்துங்கள். உங்கள் கூக்குரலை நிறுத்துங்கள். இப்புவியில் இருக்கும் வாழ்வைக் காட்டிலும் சாவே சாலச் சிறந்தது. இனி வரப்போவதைப் பற்றி நீங்கள் அறிவீர்களானால், நீங்கள் இவ்விரவை இப்படி சுகமாகக் கழித்ததற்கு மகிழ்ச்சி அடைவீர்கள்.

**ஒரு பெண்**: உங்கள் எல்லோருடனும் இங்கு ஒன்று சேர்ந்து ஒரு புரட்சிகரமான போராட்டத்தில் பங்கு கொண்டதற்கு நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். சமூக நல திட்டங்களுக்கும் பொதுவுடமைக் கொள்கைகளுக்கும் எனது உயிரைத் தருவதற்கு மிகவும் மகிழ்ச்சி. நம் தந்தைக்கு நாம் கடைசி நன்றியை செலுத்துவோம்.

**ஜிம்:** எங்கள் உயிரை எடுத்துக்கொள்ளுங்கள். நாங்கள் தற்கொலை செய்து கொள்ள வில்லை. மாறாக இது ஒரு புரட்சி. மனிதத் தன்மையில்லா இவ்வுலகின் கொடுமைகளிலிருந்து நாங்கள் விடுதலையடைகிறோம்.[350]

இவ்வொலி நாடாவை வெளியிட்டபின் உலகெங்கும் எல்லோரும் திடுக்கிட்டனர்.

[350] Newsweek, 1978, 1979

**வெறிப்பற்றீடுபாட்டின் குறிப்பிடத்தக்க இயல்புகள்:**

மூளையில்லாமல் எல்லா கட்டளைகளுக்கும் கீழ்ப்படிதல் இவைகள்தான் முழு ஈடுபாட்டுடன் இருப்பதுதான் மூடபக்தி என்பதாகும். இதுதான் இஸ்லாத்தில் இருக்கிறது. வேறெந்த மதத்திலும் இம்மாதிரிச் சீடர்களை இழிவான நடைப்பிணமாகத் தாழ்த்திவிட முடியாது. இஸ்லாத்தில் மட்டுமீறிய உணர்ச்சி ஆர்வம் இருந்தால் போதாது, இஸ்லாத்துக் கலாச்சாரத்தில் வெறிப்பற்றீடுபாடு கொண்டு இருத்தல் வேண்டும். இஸ்லாம் என்றால் இதில் சேர்ந்த ஒருவர் தன்னை இஸ்லாத்தில் முழுமையாக ஒப்படைத்துக் கொள்ளவேண்டும். இது வேறு வகையான 'தக்கியா' (புனித ஏமாற்றல்), பொருள் விளக்கமாக முஸ்லிம்கள் கூறுவது போலல்ல. இஸ்லாத்துக்கு மாத்திரமே முஸ்லிம்கள் தங்களை ஒப்படைத்துக் கொள்ளுதல் என உண்மை இஸ்லாமியப் பொருள். இத்'தக்கியா'வை (இஸ்லாத்தால் அனுமதிக்கப்பட்ட மிகப் புனிதமான ஏமாற்றுதல்) முஸ்லிமல்லாதவர்களிடம் காட்டி அவர்களை ஏமாற்ற வேண்டுமே தவிர அத்'தக்கியா'வை முஸ்லிம்களிடமும் இஸ்லாத்திடமும் எக்காலத்திலும் காட்டக் கூடாது. இதை முடிந்து வைத்துக் கொள்ளுங்கள். நம்பும் முஸ்லிம்கள் தங்கள் சொந்த கருத்து, உறுதிப்பாடு, நோக்கம் ஆகியவைகளைத் துறந்து, தங்கள் எல்லாவற்றையும், குடும்பம், தங்கள் வாழ்க்கை அனைத்தையும் அல்லாவுக்கும் (முகம்மதுவுக்கும்) அர்ப்பணம் செய்திட வேண்டும். வேறொன்றுக்கும் இல்லை. இதுதான் இஸ்லாத்துக்கும், அல்லாவுக்கும் முகம்மதுவுக்கும் முஸ்லிம்கள் தங்கள் பக்தியைக் காட்ட ஒரே வழி- அதாவது தங்கள் இன்னுயிரையும் தியாகம் செய்து 'ஷாஹீத்' ஆகிக் காட்டுவதில்தான் இருக்கிறது.

இன்னொரு குரான் வசனத்தில் முகம்மது யூதர்களைத் தங்கள் மத விசுவாசத்தைக் காட்டச் சாவை விரும்பி ஏற்றுக்கொள்ள முடியுமா என சவால் விடுகிறார்.

**யூதர்கள் முஸ்லிம்கள் போல் மடையர்களல்ல.**

குரான் வசனம் 62:6 -- மேற்கூறியது போன்ற கருத்துள்ள மற்றொரு குரான்

உண்மைக்கு மாறாகப் பொருள் கொண்டு திரித்துக் கூறும் புத்தியுள்ள ஜிம் ஜோன்ஸுக்கும் முகம்மதுவுக்கும் ஒருவருடைய ஈடுபாட்டை நிரூபிக்க ஒரே வழி "இறந்து" காட்டிக் கொள்வதுதான் (ultimate test of devotion is dying for the cause). பாலஸ்தீனத் தொலைக்காட்சிகளில் பல முஸ்லிம் தாய்மார்கள் இஸ்லாத்துக்காகத் தற்கொலையைப் புகழ்ந்து கூறி, அதில் சில தாய்மார்கள் தங்கள் குழந்தைகள் மகிழ்ச்சியுடன் உயிர்த் தியாகம் செய்தது பற்றி மிகப் பெருமையாகத் தெரிவிக்கிறார்கள் என்பதைப் பார்க்கலாம். உயிர் தியாக உணர்ச்சியை சிறு பிராயத்திலிருந்து மனத்தில் ஆழப் பதிய வைக்க எவ்வளவு பிரயாசையை மேற்கொள்கிறார்கள் எனவும் பார்த்துக் கொள்ளலாம். இதுதான் வெறிப்பற்றீடுபாட்டின் மனப்பாங்கு.

**தண்டனையும் வற்புறுத்தலும்**

Osherow முன் சொன்னவைகளைவிட இப்போது இன்னும் விவரமாகத் தெரிவிக்கிறார். "குண்டுகள் திணித்து நிரப்பிய சுழல் துப்பாக்கியை (revolver) ஒருவன் நெற்றிப்பொட்டில் அழுத்தி, அவனை நீங்கள் என்ன செய்யச் சொன்னாலும் உடன் செய்துவிட ஒப்புக்கொள்வான்.

இம்மாதிரியே மக்கள் கோவிலில் உள்ளோர், கடும் தண்டனையான மிருகத்தனமான அடி உதை ஆகியவைகளோடு எல்லோர் எதிரிலும் சிறு தவறுக்குக்கூட மிகக் கடுமையான தண்டனை எனப் பல்வேறு மரண பயத்தில்

எப்போதுமே வாழ்ந்து தொலைய வேண்டி இருந்தது. ஜிம் ஜோன்ஸ் அவனுக்கே தோன்றிய ஒழுங்கு முறையை சீடர்கள் அனுசரிக்கவும் தன்னிடம் மிகப் பற்றீடுபாடு கொள்ளவும் அதிகாரத்துடன் கேட்டுக் கீழ்ப்படிய வைத்தான். இவைகளை மீறினால் மிகக் கடுமையான தண்டனைகளைக் கொடுத்துத் தன் சீடர்களைக் கொடுமைப் படுத்தினான். இவை தவிர தனக்கு எதிர்ப்பு வராமலிருக்க வேண்டிய எந்த நடவடிக்கையையும் தவறாது செய்தும் வந்தான்".

முஸ்லிம்களும் மிகக் கடுமையான தண்டனைக்கு உள்ளாக வேண்டும் என்ற பயத்தில் என்றுமே வாழந்தாக வேண்டும். இஸ்லாத்தைப் போற்றும் முஸ்லிம்களிடமிருந்து எனக்கு ஆயிரக்கணக்கில் மின்னஞ்சல்கள் அன்றாடம் வந்த வண்ணமே உள்ளன. அதில் எல்லாவற்றிலும் உள்ள பொதுக்கருத்து இஸ்லாத்தை நான் மிகக் கடுமையாக விமர்சனம் செய்வதால் எனக்கு நரகம்தான் கிடைக்குமெனச் சபிக்கும் வார்த்தைகள்தான் அதிகமாக இருக்கும்.

இதில் நான் எழுதியவைகளைத் தக்க காரணங்களுடன், சான்றுகளைக் கொண்டு மறுத்து, என் வாதம் தவறென நிரூபித்து எழுத இன்னும் எவனும் இஸ்லாத்தில் பிறக்கவில்லை போலத் தெரிகிறது. என் வாதத்தை மறுத்து அது தக்க சான்றுகளுடன் நிரூபிக்கப்பட்டும் விட்டால் நானே $50,000 (ஐம்பதாயிரம்) டாலரை அவன் கூறும் வங்கிக் கணக்கில் செலுத்துவதாக உறுதிமொழியைச் சுமார் 10 வருடங்களுக்கு மேல் ஒரு நிரந்தர அறிக்கையாக என் இணைய வலையில் வெளியிட்டு இருந்தாலும் இதில் உரிமை கொண்டாட இன்று வரை எவனும் முன் வரவில்லை. ஆனால் எனக்கு நரக சாபங்கள் மாத்திரம் கணக்கில்லாமல் கிடைக்கின்றன. முஸ்லிம்கள் எனக்கு எதிர்ச் சவாலையோ அல்லது பதிலையோ தரவில்லை; என் தர்க்கத்தைத் தவறெனக் கூறவும் முடியவில்லை. ஆனால் எனக்கு நரகம்தான் எனக் கண்டிப்பாக பயமுறுத்துகிறார்கள். ஏனெனில் முஸ்லிம்கள் எப்போதுமே உண்மையைக் கண்டு அஞ்சுவார்கள்.

குரானில் நரகத்தைப் பற்றி (hell) 200 தடவைகளுக்கு மேலாகவும்; கியாம நாளைப் பற்றி (Day of Judgment) 163 தடவைகளும்; மீளெழு நாளைப் பற்றி (Resurrection) 117 தடவைகளும்; ஜிஹாதைப் பற்றி (Jihad) 176 தடவைகளும்; வசனங்கள் உள்ளன. நரகத்தைப் பற்றி முஸ்லிம்கள் எப்போதும் ஒரே பெருங்கூச்சல் செய்வார்கள். இதைக் கேள்வி கேட்க எந்த நாதியும் கிடையாது. உளஇயல்பு சார்ந்தவைகளால் மிரட்டி அடக்க மட்டுமின்றி உடலாலும் உண்மையாக மரண பயத்தால் பயமுறுத்தி ஆக எல்லாவிதக் கொடிய தண்டனைகளும் இஸ்லாத்துக்கு மிக இன்றியமையாதது. இஸ்லாமிய மத்ரசாக்களிலும் (மதபோதனைப் பள்ளிகளிலும்) உண்மையில் சங்கிலியால் பிணைத்து, குச்சியால் அடித்து, இவைகளெல்லாம் மிக அற்ப காரணங்களுக்காகவும் அளிக்கப்படுகிறது.

இம்மாதிரி தண்டனைகள் குழந்தைகளுக்கு மட்டுமின்றி, வயது வந்தோருக்கும் கசையடி போன்றவைகளால் எல்லோருக்கும் முன் வெளிப்படையாகக் கொடுக்கப்படுகிறது. இவைகளைத் தவிர அவமானத்தைப் பெற வேண்டியதற்கு மேல் செய்து, அனேக தடவை முடமாக்கி அல்லது இஸ்லாமிய சட்டத்தை மீறியதற்காகக் கல்லாலேயே அடித்துக் கொன்று, இன்னும் சில அற்பமான காரணங்களுக்காக - மது (புவியில் மட்டுமே) அருந்துவது, ரம்ஜான் மாதத்தில் பகலில் உண்பது, பெண்கள் தலை முடியைக் காண்பிப்பது என்பனவற்றுக்கும் - கொடுந்தண்டனை வழங்கப் படுகிறது.

'ஷரியா' எவ்வித சுதந்திரத்தையும் வழங்க மறுக்கிறது. ஷரியாவின்படி இஸ்லாத்தை விமர்சனம் செய்வோர் அனைவரும், இஸ்லாதிலுள்ள மூட நம்பிக்கைகளை ஏற்க மறுப்போர், இஸ்லாத்தைவிட்டுப் போனவர்கள் ஆகியோர்

கட்டாயமாகக் கொல்லப்பட வேண்டும். இதற்கு இணையாகக் குரான் வசனங்களை **இங்கே 5 : 101-102**இல் காணலாம்:

5:101 - "ஈமான் கொண்டவர்களே! சில விஷயங்களைப் பற்றி (அவசியமில்லாமல்) கேட்டுக் கொண்டிராதீர்கள்; 5:102 - "உங்களுக்கு முன்னிருந்தோரில் ஒரு கூட்டத்தார் (இவ்வாறு தான் அவர்களுடைய நபிமார்களிடம்) கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். பின்னர் அவர்கள் அவற்றை (நிறைவேற்றாமல்) நிராகரிப்பவர்களாகி விட்டார்கள்."

அல்-புகாரியும் இவர் ஹத்தீசுகளில் முகம்மது கூறுவதுபோல, **"அல்லா இஸ்லாத்தைப்பற்றி அனேக கேள்விகளைக் கேட்கக்கூடாதெனக் கூறியிருக்கிறார்"** என்கிறார். (Bukhari V. 3, B.41, N 591and V.2, B.24, N. 555) [351]

மடமை ஒன்றால்தான் இஸ்லாம் எனும் போலி நம்பிக்கையை அழியாமல் இன்றும் அடைகாக்க முடிகிறது. மேலும் இதன் குருட்டு நம்பிக்கையைப் பயம் ஒன்றால்தான் கீழ்ப்படியச் செய்ய முடியும்.

Osherow எழுதுவது: "'Milgram உளஇயல்புத் தொடர்புள்ள ஆய்வில் செய்த பரிசோதனைகளின்படி, அதிலுள்ளோரை அடக்கியாள ஒரு அதிகாரத்தின் சக்தியை பயத்தால் மட்டுமே வெளிப்படையாகத் தூண்டி அதன்படி கீழ்ப்படிதலைப் பெறுவது நல்ல முறையல்ல'[352].

இதே Milgramமின் பரிசோதனைகளில் அதிக விகிதத்தில் இதில் பங்கெடுத்துக்கொண்டவர்கள் மீது மிகக் கடுமையான மின் அதிர்ச்சிகளைக் கொடுத்தபோதும் வியக்கும்படியாக செயல்புரிவதற்குரிய எல்லாக் கட்டளைகளுக்கும் கூறியபடியே நடந்து முடித்துக் கொடுத்தனர்.

## கருத்து வேறுபாட்டைப் புறக்கணித்தல்

Osherow கூற்றுப்படி, முழுமையான கீழ்ப்படிதல் எங்கெங்கு உள்ளதோ அங்கங்கு பலருக்குக் கொள்கையில் உடன்பாடில்லை எனத் தெரியும். அனேக ஆய்வுகளின்படி கொள்கைப் பற்றுகொண்டு மிகச்சிலர் இருப்பதால்தான் பெரும்பான்மையான பற்றில்லாத ஆதரவாளர்களையும் இது மிகவும் பாதிக்கிறது.[353]

இதனால்தான் கீழ்ப்படியாதவர்களுக்குத் தண்டனை அதிகம். கீழ்ப்படிவோற்கு தண்டனை எனும் பிரச்சனையே கிடையாது. இப்படித் கட்டாயமாகத் தேவையில்லாக் கீழ்படிதலைக் கண்ட 'புதிதாக சேர்ந்தவர்'கள் மிகவும் திடுக்கிட்டார்கள். அஃதே போல Asch என்பவர் நிரூபித்துக் காண்பித்தபடி, இக்குழுப் பரிசோதனையில் கொள்கை மறுப்பாளர் ஒருவரைச் சேர்த்தும் விட்டால் (இவர் சொல்வதும் தவறாக இருப்பினும்) பெரும்பான்மையான பரிசோதனைக்கு உட்பட்டவர்கள் இதனால் பாதிக்கப்பட்டு இதுவரை தங்கள் ஒப்புதலைத் தெரிவித்து இருந்தாலும் தற்போது மாற்றிக்கொண்டு விட்டனர். [354]

முகம்மதுவோ ஜிம் ஜோன்சோ தங்களிடமிருந்து எந்த மாறுபட்ட கருத்தையும் சகித்துக் கொண்டதில்லை. தங்களிடம் முழுமையான விசுவாசம் கொண்டிருக்க வேண்டுமெனவும் தங்களைக் கேள்வி கேட்பதோ தங்கள் செயல்பாணியைப் பற்றி விமர்சனம் செய்வதென்பதோ நினைத்துக்கூடப் பார்க்கக் கூடாது என்பதில் கண்டிப்பாக இருந்தனர். முகம்மது தனக்கெதிராகச்

---

[351]Bukhari *V. 3, B.41, N 591and V.2, B.24, N. 555:*

[352] Milgram, S. Behavioural study of obedience. *Journal of Abnormal and Social Psychology,* 1963, 67, 371-378.

[353] Milgram S. Liberating effects of group pressure. *Journal of personality and Social Psychology,* 1965, 1, 127-134.

[354] Asch, S. Opinions and social pressure. *Scientific American,* 1955, 193.

சண்டையிட்டவர்களையும் மன்னித்தார்; காரணம் இவர்கள் இஸ்லாத்தில் மறுபடியும் சேர்ந்து தன் தலைமையை ஒப்புக்கொண்டதுதான். மெக்காவைத் தாம் ஜெயித்த பிறகு முகம்மதுவை முன்னர் எதிர்த்த உறவினன் அபூ சொஃபியான் முஸ்லிமான பின்னர், அவனையே மெக்காவில் தன் பிரதிநிதியாக நியமித்தார். ஆனால் எவரெவர்கள் தன்னையும் தன் கொள்கையையும் தம்மிசைவு பெறாமல் தப்பிவிட்டுச் சென்றார்களோ அவர்களை எக்காலத்திலும் மன்னிததில்லை. இதைத்தவிர கணக்கிலா பேர்கள் முகம்மதுவின் கட்டளைப்படி கொல்லப்பட்டனர், ஏனெனில், இவர்கள் தன்னிடம் கருத்துவேற்றுமை கொண்டோ அல்லது முகம்மதுவை பரிகாசம் செய்தனராம்.

மக்கள் கோவிலில் மிகப் பெரிய பதவியிலிருந்த (ஜீனி மில்ஸ்) கோவிலை விட்டுப் போனவர் எழுதினார்: "இக்கோவிலில் எழுத்தில் இல்லாத ஒரு சட்டமாக, ஆனால் அங்குள்ள ஒவ்வொருவராலும் வழக்கமாக அறிந்து கொண்டபடி மிக முக்கியமாக, அவன் தந்தையையோ, அவன் மனைவியையோ அல்லது அவன் குழந்தைகளையோ எவரும் விமரிசனமோ பரிகாசமோ செய்யக்கூடாது"355.

இதே கட்டுப்பாட்டை முகம்மதுவும் வழக்கமாக்கி இருந்தார். முகம்மதுவின் குடும்பத்தையோ அல்லது அவர் கூட்டாளிகளையோ எவரும் விமரிசனமோ பரிகாசமோ செய்யக்கூடாது. ஒரு தடவை பாகிஸ்தானில், கல்லூரிப் பேராசிரியர், டாக்டர் யூனிஸ் ஷேக் என்பவர், முகமம்துவின் பெற்றோர் முஸ்லிம்களல்ல என்ற மறுக்க இயலாத உண்மையை யதார்த்தமாகக் கூறிவிட்டார். முகம்மதுவின் சிறு பிராயத்திலேயே அவர் தாயையும் தந்தையையும் இழந்த உண்மை உலகமறிந்ததே. இதில் முகம்மதுவின் தந்தை அப்துல்லா முகம்மது பிறப்பதற்கு முன்னரே இறந்து விட்டார். முகம்மதுவின் தாய் தந்தையர் உயிருடன் இருந்த வரை 'இஸ்லாம்' எனும் ஒரு 'வெறிப்பற்றீடுபாடு இயக்கமே' ஜனிக்கவில்லை. இதில் தவறென என்ன இருக்கிறது! இவையெல்லாமே மெய்ம்மையாக நடந்த நிகழ்ச்சிகள்தானே! இருப்பினும் இவருடைய மாணவர்கள் அல்லாவின் தூதர் முகம்மதுவை இவர் அவமானப்படுத்தி விட்டாரென முல்லாக்களிடம் போட்டுக்கொடுத்தனர். ((முறையிட்டனர்). இவருக்கு ஷரியா நீதிமன்றம், தெய்வ நிந்தனையென (blasphemy) மரணதண்டனையை விதித்தது. வெகு நாட்கள் சிறையிலிருந்து உலக அபிப்பிராயம் மூலம் முல்லாக்களின் ஷரியா நீதிமன்றத் தீர்ப்புக்கெதிராக கண்டனக் குரலெழுந்ததால் இவர் விடுதலை செய்யப்பட்டார்.

ஆனால், இதன் நேர்விளைவு மாசற்ற மற்றொருவர் மீது வீழ்ந்தது: 'பழி ஓரிடம், பாவம் ஓரிடம்' என்றபடி பாகிஸ்தான் பேராசிரியர், டாக்டர் யூனிஸ் ஷேக் அவர்கள் கூறிய பழியெனும் உண்மை சூடான் பத்திரிக்கை ஆசிரியர் மீது பாபத்தின் விளைவாக விழ்ந்தது. செப்டம்பர் 2006இல், 'முகம்மது தாஹா முகம்மது அஹ்மத்' எனும் அரசியல் சார்பற்றத் தினசரிப் பத்திரிக்கை தலைமை சூடான் ஆசிரியர், அல்-விஃபாக் என்பவர் தீவிர முஸ்லிம்களால் கடத்தப்பட்டார். நீதிமன்றத் தீர்ப்பின்படி, இவர் தொண்டையை "ஹலால்" முறையில் துடிக்கத் துடிக்க அறுத்துவிடத் தீர்ப்பு வழங்கி அவ்வாறே நிறைவேற்றிக் காட்டினர். இவர் செய்த குற்றம் தெய்வ நிந்தனையாம். காரணம்: முகம்மதுவின் பெற்றோர் முஸ்லிம்களல்ல என்று முன்னரே வெளிடிட்டிருந்த கட்டுரைக்கு அப்பத்திரிக்கையிலிருந்து நகலெடுத்து, அத்தோடு அதற்குத் தன் பத்திரிக்கையில் இக்கட்டுரைக்கு எதிராக ஆவேசமிக்க-தீவிர-அவசர-உக்கிரமான-மறுப்பு தெரிவித்து அதாவது '**தெய்வ நிந்தனை**' (blasphemy) **சட்டங்களுக்கு ஆதரவு** தெரிவித்துதான்

[355] Mills, J. *Six years with God.* New York: A & W Publishers, 1979.

வெளியிட்டிருந்தார். நடந்த நிகழ்ச்சியைக் கூறி இஸ்லாத்துக்கு ஆதரவாக மறுப்பு தெரிவித்தற்கே சித்திரவதை செய்யப்பட்டு இவர் குரல்வளை மெல்ல மெல்ல 'ஹலால்' முறையில் அறுக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். இவர் செய்த ஒரே குற்றம் மரண தண்டனைத் தீர்ப்பை நகலெடுத்துத் தன் பத்திரிக்கையில் பிரசுரம் செய்த்துதான். இதனால் வழக்கின் இஸ்லாத்தின் உண்மையாக உள்ள சிறு விளக்கங்கள் உலகுக்குத் தெரிந்து விட்டதாம். [356] இதுவும் முகம்மதுவுக்கெதிரான விளம்பரம் ஆகியதால் இஸ்லாத்து சட்டப்படி குற்றமாம்!!!)

இக்கருத்தை முதலில் கூறிய மூல பாகிஸ்தான் ஆசிரியர் மன்னிக்கப்பட்டார், ஆனால் இதைத் தன் பத்திரிக்கையில் வெளியிட்டு அக்கருத்துக்கு அழுத்தந்திருத்தமாக மறுப்பு தெரிவித்து முஸ்லிம்களின் மூட நம்பிக்கைக்கு அதரவு அளித்த நிரபராதியான 'அப்பாவி' பத்திரிக்கை ஆசிரியர் கொல்லப் பட்டிருக்கிறார்!! இதைவிட ஓர் முட்டாள்தனமான கொலைவெறித் தீர்ப்பு உலகில் உண்டா? ஆனால் இஸ்லாத்தில் மட்டுமே உண்டு!

இன்னுமொரு கொடுமை! முஸ்லிமல்லாத நாட்டிலும் முகம்மதுவைப் பற்றியோ அல்லது அவர் தோழர்களைப் பற்றியோ கேலி செய்துவிட்டால் இவர்களும் தேடிக் கொல்லப்படுகிறார்கள். டென்மார்க் திரைப்படத் தயாரிப்பாளர் / இயக்குனர், Theo Van Gogh என்பவர் மார்பில் கத்திக்குத்தால் இறந்தார். காரணம்: இவரும் 'அயான் ஹிசி அலி' (Ayan Hisi Ali - இவரொரு பெண்) என்பவரும் இருவருமாகச் சேர்ந்து 'முஸ்லிம் பெண்கள்' நிலைமையைப் பற்றித் திரைப்படம் ஒன்றைத் தயாரித்தனர்.

ஜூலை 1991இல், Ettore Caprioli எனும் இத்தாலியர், - 'சல்மான் ரஷ்டி' (Salman Rushdie) எழுதிய ஆங்கிலப் புத்தகமான "ஷைத்தானின் வசனங்கள்" (The Satanic Verses) என்னும் நூலை இத்தாலிய மொழியில் மொழிபெர்ப்பு செய்தார். மொழிபெயர்ப்பு வெளிவந்தவுடன் Ettore Caprioli முஸ்லிம்களால் மிக மோசமாகத் தாக்கப்பட்டு உடல் முழுதும் ஊனமாக்கப்பட்டார். Hitoshi Igarishi எனும் இஸ்லாமிய கலாச்சார ஆர்வலர், இலக்கியப் பேராசிரியர், இதே புத்தகத்தை ஜப்பானிய மொழியில் மொழிபெயர்த்தார். இவரும் டோக்கியோவில் திட்டமிட்டுக் கொலை செய்யப்பட்டார். இப்புத்தகத்தை William Nygaard நார்வே மொழியில் மொழிபெயர்த்தார். இவரும் கத்திக் குத்துக்கு இரையானார்.

[[[மொழிபெயர்ப்பாளர் பின்னூட்டம்: மேற்கூறியவைகளைப் படித்த பின்னர், நீங்கள் இத்தமிழ் மொழிபெயர்ப்பைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள் என எனக்குப் புரிகிறது. இஸ்லாத்து உண்மைகளைத் தமிழில் எழுத எந்த நாதியும் இல்லை! நான் எனது கடமையைத்தான் செய்கிறேன். நான் எந்த சலசலப்புக்கும் அஞ்சவில்லை. தமிழுலகில் இம்மொழிபெயர்ப்பைப் படித்து ஒருசில முஸ்லிம்கள் இஸ்லாத்தை விட்டால் அதுவே எனக்குக் கிடைத்த மாபெரும் வெகுமதியாகும். அதுதான் என் நோக்கமும்கூட]]].

Deborah Blakey என்பவர் மக்கள் கோவில் எனும் வெறிப்பறீடுபாட்டு இயக்கத்தில் வெகு நாட்களாக இருந்ததுவிட்டு இதிலிருந்து விலகிக்கொண்டார். இவர் கூறிய வாக்குமூலம்: "ஜிம் ஜோன்ஸ் செயல்பாணிக்கு ஒப்பாதவர்கள் 'இனத்துரோகம்' புரிந்ததாகக் கருதப்படுவார்கள். இங்கு நடப்பவை எனக்குப் பொறுக்க முடியாது இருந்தாலும், இதனால் என் அபிப்பிராயத்தைக் கூறி, ஜிம் ஜோன்ஸ் மற்ற இயக்க அங்ககத்தினர்கள் ஆகியோர்களின் கோபத்தின் விளைவுகளை எதிர்கொள்ள அஞ்சினேன்"என்றார். 357

---

[356] http://www.news24.com/News24/Africa/News/0,,2-11-1447_2034654,00.html
[357] Blakey, D. Affidavit: San Francisco. June 15, 1978.

**முரண்பாடுகள்**

மக்கள் கோவிலில் இருந்த சீடர்களும் தங்கள் தலைவன் ஜிம் ஜோன்ஸின் கொள்கைகளில் நினைப்பு, சொல், செயல் ஆகியவைகளில் ஒன்றுக்கொன்று முரண்பாட்டுடன் இருப்பதாக உணர்ந்தது போல, ஆரம்பகால முஸ்லிம்களும் தங்கள் அல்லாவின் தூதர் முகம்மது ஏறுமாறாக நினைக்கிறார், சொல்கிறார் மேலும் சம்பந்தாசம்பந்தமில்லாமல் செயலிலும் காண்பிக்கிறார் என்று உணர்ந்தனர். ஜிம் ஜோன்ஸ் அங்குள்ள சீடர் கூட்டத்திலுள்ள பெண்கள் ஒவ்வொருவருடன் புணர்வதில் தீவிரமாக இருந்தாலும் எவரும் அதைப் பற்றி ஒன்றும் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. அதே போன்று அக்காலத்து அரேபியர்கள் எப்போதும் தங்கள் நல்லொழுக்கத்தில் கண்டிப்பும் பற்றும் இருந்ததால், அவர்களுக்கே முகம்மது சொல்வது செய்வது ஒன்றுக்கொன்று ஒத்திசைவில்லாமல் இருப்பதைக் கண்டு புருவத்தை உயர்த்தித் தங்கள் மனதில் உள்ளதைச் சொல்லாமல் சொன்னார்கள்.

இதற்குச் சான்றாக முகம்மதுவின் கடைசி மனைவி ஆயிஷாகூட, “எந்த மானமுள்ள பெண்ணாவது அல்லாவின் தூதரிடம் வெட்கமின்றித் தன்னைப் ‘புணர்ந்துகொள்’ எனத் தன் ஆடைகளை அவிழ்த்துக் (‘அவ்ராத்’தை-பிறப்புறுப்பை) காட்டிக் கொள்ள முடியுமா”? என வாயை விட்டுக் கூறினார். அப்போது சடுதியில் அல்லாவின் (அதாவது முகம்மதுவிடமிருந்து) குரான் வசனங்கள் பொசுக் பொசுக்கென பிதுக்கிக்கொண்டு வந்து விட்டது.

**குரான் 33:51 & 52** -- இவர்களுக்குப் பின்னால் உம் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்கள் தவிர இதர பெண்கள் உமக்கு ஹலால் ஆகமாட்டார்கள்; இன்னும் இவர்களுடைய இடத்தில் வேறுமனைவியரை மாற்றிக்கொள்வதும்; அவர்களுடைய அழகு உம்மைக் கவர்ந்த போதிலும் சரியே; ஹலால் இல்லை [[[...]]]

உடன் ஆயிஷா முகம்மதுவிடம் ‘நீங்கள் அடிக்கடி வழக்கமாக மிக விரும்பும் புணர்ச்சித் தேவைகளைக்கூட உடனுக்குடன் நேரம் காலம் பார்க்காமல் நிரப்பிக் கொடுக்க அல்லாவே ஓடியாடி வேலை செய்கிறார் போல் இருக்கிறதே’ என கிண்டலாக வயிற்றெரிச்சலுடன் கூறினாள். [358]

ஏதாவதொரு உடலுறவு நிகழ்ச்சி நடப்பதற்கும் முகம்மதுவின் குரான் வசனங்கள் இத்தலைப்பில் இடைவெளியின்றி உடனுக்குடன் அல்லா ‘வஹி’ என வெளிப்படுவதன் (பொய்) ரகசியத்தை ஆயிஷா அறிந்து கொண்டதால் இதை அவள் கூறும் ‘நக்கலாக’க் கூட எடுத்துக்கொள்ளலாம். ஆயிஷாதான் (அபூ பக்கரின் மகள்) முகம்மதுவின் அந்திம காலம் வரை கூடவே இருந்து முகம்மதுவுக்கு வேண்டிய தொண்டுகளைச் செய்தவள். இதிலிருந்தும் மற்றொரு வகையில் குரான் வசனங்கள் யாவும் சுத்தப் பொய் மூட்டைகளெனத் தெரிகிறது.

முகம்மதுவும் எல்லா சமூக நன்நெறிகளையும் மீறித் தம் சொந்த மருமகளையே கட்டாயப்படுத்தி மணந்தார். மனைவியரின் அடிமை அழகி மாரியாவுடன் வேண்டியபோது புணர்ந்தார். தெருவில் பொம்மையுடன் விளையாடிக் கொண்டிருந்த ஆறு வயது ஆயிஷாவை மணந்து அவளிடம் 33 மாதங்கள் கழிந்து உடலுறவு வைத்துக்கொண்டார். இதற்கிடையில் ஒரே போர்வை அடியில் ஆறுவயதான் குழந்தை ஆயிஷாவைக் கட்டிப் பிடித்து அன்பாக ஆயிஷாவின் அவ்வுறுப்பைத் தடவித் தடவி இன்பமெய்தினார். இப்படிச் செய்யக் காரணம்? சாஹீஹ் அல்-புகாரி ஹத்தீஸ் குறிப்பு கீழே உள்ளது!!

---

[358] Sahih Al-Bukhari, Volume 6, Book 60,Number 311

ஆயிஷா கூறுகிறார்: "எனது சக்களத்திகள் உம் சல்மாவின் வீட்டில் ஒன்று கூடி, முகம்மது என்னுடன் (ஆயிஷாவுடன்) உடலுறவு கொள்ள வரும் நாட்களில் மட்டும் அதிகமாக பரிசுப்பொருட்களை ஏன் அனுப்ப வேண்டும்? என்றும் அம்மாதிரிப் பரிசுகளைத் தாங்களும் விரும்புவதாக சர்ச்சை செய்தனர். ஆக, உம் சல்மாதான் அல்லாவின் தூதரிடம் சொல்லித் தம்முடன் உடலுறவுக்கென வகுக்கப்பட்ட நாட்களிலும் பரிசுப்பொருட்களை அனுப்ப ஏற்பாடு செய்யலாமே! என ஆலோசனை கூறினர். இதன்படி உம் சல்மா இரு தடவை முகம்மதுவிடம் சொன்னதை அவரே புறக்கணித்தார். மூன்றாம் முறையாக சொல்லும் போது முகம்மது சொன்னாராம், 'உங்கள் எல்லோருடன் புணரும்போது அல்லாவின் வசனம் எனக்கு வருவதில்லை'. ஆனால், 'ஆறு (6)' வயதுக் குழந்தை ஆயிஷாவுடன் அதிதீவிர உணர்ச்சியுடன் கம்பளிக்கடியில் ஆயிஷாவின் பிறப்புறுப்பைத் தொட்டவுடன் அல்லாவிடமிருந்து மிக முக்கிய குரான் வசனங்கள் உடனுக்குடன் வெளிப்படுகின்றது என்று கூறினாராம்!" [359]. [[[ஆயிஷா எனும் 6 வயதுப் பெண்குழந்தையின் பிறப்புறுப்பைத் தீண்டும் மகிமையே மகிமை. அதைத் தொட்டவுடன் முகம்மதுவுக்குக் குரான் பீறிட்டு வெளிப்படுமாம். Bukhari Volume 5, Book 57, Number 119:]]].

இப்னு இஷா:க் சிராத்தில் உள்ளபடி: முகம்மது உச்சகட்ட அதிகாரத்துடன் ஆட்சிபுரியும் போது ஒரு பெண்குழந்தை Ummu'l-Fadl தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தது. இன்னும் கொஞ்சம் சில வருடங்களுக்குப் பின் இவளை எனக்கு மணம் செய்விக்க வேண்டும்' என அக்குழந்தையின் பெற்றோரிடம் கூறிவிட்டார்.[360] மற்றொரு தத்தித் தத்தி நடையிடும் பெண் குழந்தையின் (the child's name was Um Habiba) பெற்றோரிடம் அவள் வளர்ந்த பின்னர் அவளைத் தனக்கே மணம் முடித்திட வேண்டுமென முன்கூட்டியே இக்குழந்தையின் தந்தை அப்பாஸிடம் முன்பதிவு செய்துகொண்டார்.[361]

அக்குழந்தைகளின் நல்ல நேரம், இதைச் சொன்ன சில நாட்களிலேயே முகம்மது மரித்து விட்டார்! ஆகா! முகம்மதுவின் புணரும் வெறியை மட்டும் (இயலுமோ அல்லது இயலாதோ) அவரால் இறக்கும் வரை அடக்கிக்கொள்ள முடியவில்லை! அல்லது இவைகளைத் தம் உரிமையென நிலை நாட்டச் சொன்னதாகவும் ஆகிறது. இதையெல்லாம் கூட இஸ்லாத்து ஷரியாவில் உள்ளது!!

இன்னொன்று, முகம்மதுவின் ஆரம்பகால சீடர்களான முஸ்லிம்களும், முகம்மது கடவுள் அல்லாவின் தூதரானால் இவர் செய்கைகள் கடவுள்தனமில்லாது மிருகத்தனமாக ஏன் இருக்கிறதென சந்தேகப்பட ஆரம்பித்தனர். இதனால் முகம்மதுவின் சீடர்கள் அனைவருமே மனச்சாட்சியின்றி இருந்தனர் எனத் தீர்ப்புக் கூறுவது தவறாகும். அப்படி மனச்சாட்சி இருந்தும் ஏன் வாளா இருக்க வேண்டும்? ஏனெனில் இவைகளைப் பற்றி கேள்வி எழுப்பினால் கேள்வி கேட்பவர் எவரானாலும் அவரை முஸ்லிம் சமூகத்திலிருந்து விலக்கி வைத்து அல்லாவை நிந்தித்ததாக மறு பேச்சின்றிக் சிரச்சேதம் செய்து விடுவார்கள். இப்படியே இழித்து கூறுபவர் யாவரும் ஒவ்வொருவராக எவ்வித மன உளைவுமில்லாமல் இருக்க மௌனிகளாக்கப்படுவார்கள்.

ஒரு தடவை மெக்காவிலிருந்து மதீனா குடி புகுந்தவர்களும் அங்கேயே இருக்கும் உள்ளூரார்களும் ஒன்றாகச் சேர்ந்து திடீர் தாக்குதலில் கொள்ளையடிக்கச் சென்றபோது இருசாராருக்கும் இடையே சண்டை மூண்டது. இதைக் கண்ட

[359] Bukhari Volume 5, Book 57, Number 119:
[360] Ibn Ishaq: Suhayli, 2.79 p. 311
[361] Musnad Ahmad, Number 25636

மதீனாவைச் சேர்ந்த அப்துல்லா இப்னு உப்பாய் என்பவன் மிகக் கோபம் கொண்டான். இவனே முகம்மதுவை எதிர்த்து நின்று பானு நாதிர் யுத்தத்தில் அங்கிருக்கும் மக்களை முகம்மது செய்ய இருந்த படுகொலைகளைத் தடுத்து நிறுத்தினான் - 'மெக்காவிலிருந்து நம் தயையால் குடி புகுந்தவர்கள் இங்கு உள்ளூர்க்காரர்களான நம்மிடமே நம் முன்னுரிமையையா மறுத்துரைக்கின்றனர்? ஒண்ட வந்த பிடாரிகளான குஃரைஷ் போக்கிரிகள் தங்கள் ஜனத்தொகையை பெருக்கிக்கொண்டு ஊரிலுள்ள நம்மிடமேயே நம் நாட்டில் சண்டையிடுகின்றரா? என அப்துல்லா இப்னு உப்பாய் கூறினான். இது மட்டும் உறுதி. நாமெல்லோரும் மதீனா திரும்பிய பின்னர், வலுவுள்ளவர்கள் வலு இல்லாதவர்களை நாட்டைவிட்டு விரட்டத்தான் போகிறார்கள் (என நினைந்து, தன் மக்களிடம் சென்று), உங்கள் பெருந்தன்மையின் விளைவைப் பார்த்தீர்களா? உங்கள் கையாலேயே உங்கள் தலையில் கொள்ளி வைத்துக் கொண்டீர்கள். நீங்கள் தானே மெக்காவிலிருந்து வந்த சமூக விரோதிகளுக்கு உங்கள் நாட்டைப் பிடித்துக் கொள்ள உதவினீர்கள். இதில் அன்சாரி குழுவும் ஒன்று. (இதைப்பற்றிய விவரம் இப்புத்தகத்தில் காணலாம்). நீங்கள் அவர்களை இவ்வாறு அனுமதிக்காது அன்றே தடுத்திருருந்தால் அவர்கள் எங்கோ எப்படியோ ஒழிந்து போயிருப்பார்கள்'. என்றான். இத் தகவல் முகம்மதுவுக்கும் எட்டியது. வழக்கம் போல தம்மைப் பற்றிய உண்மையை பிறர் எடுத்துக் கூற என்றுமே விரும்பாத முகம்மது உப்பாயைக் கொன்றுவிடத் தீர்மானித்தார். இதைக் கேள்விப்பட்ட முஸ்லிமாக சமீபத்தில் மாற்றிக் கொண்ட உப்பாயின் மகன் முகம்மதுவிடம் சென்று, "நீங்கள் உப்பாயின் உரையைக் கேட்டு அவரை, அதாவது என் தந்தையைக் கொல்லத் திட்டமிட்டு இருக்கிறீர்கள் என கேள்விப்பட்டேன். நீங்கள் இதை நிறைவேற்றித்தான் ஆகவேண்டுமென்றால், எனக்கு ஆணையிடுங்கள், அவர் தலையை வெட்டி உங்கள் காலடியில் போடுகிறேன். உப்பாயின் மகன் தன் சொந்த தந்தையைக்கூடக் கொல்லும் அளவுக்கு மிகுந்த இஸ்லாமியக் கடமைப் பற்றுள்ளவன் என்பதை எல்லா அல்-கஸ்ராஜ் இனமும் தெரிந்து கொள்ளட்டும். என் தந்தை உப்பாயை வேறு யாரைக் கொண்டாகிலும் கொன்று விட்டால், எனக்கு இப்படிக் கொன்றவன் மீது நானே அவனைக் கொல்லும் வரை என் நெஞ்சில் வன்மம் (கைரா-Honour Killing) நீடித்திருக்கும். இதனால் ஒரு முஸ்லிமல்லாதவர் கொலைக்காக முஸ்லிமாகிய நான் மற்றொரு முஸ்லிமைக் கொன்றுவிட்டால் நான்தானே நரகத்துக்குப் போகவேண்டி வரும். எனக்கு அந்த நரகம் வேண்டாம். ஆகவே என் தந்தையைக் கொல்லும் நல்வாய்ப்பை எனக்கே அருளுங்கள்." என்றான்[362].

அப்துல்லா இப்னு உப்பாய் எனும் மூத்தவரிடம் மதீனா மக்களுக்கு ஆழ்ந்த மதிப்பும் உண்மையான மரியாதையும் இருந்தது. ஆனால், தற்போது இது ஒரு நெருக்கடியான நிலைமை. தனயனைக் கொண்டே ஒரு தந்தையைக் கொல்வதால் உண்டாகும் பின் தொடர் நிகழ்ச்சிகள் எப்போதும் ஒருவருக்கும் மகிழ்ச்சி தராது. முகம்மது இவ்வாறு எண்ண ஆரம்பித்தார். ஒருவேளை இதுவே தன் தந்தையைக் காக்க ஒரு திட்டமிட்ட தந்திரமாக இருக்குமோ? எது எப்படி இருப்பினும், முகம்மது தன் கோரச் சாவுத் தீர்ப்பையே உறுதியாக அளித்து இதில் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார். இஸ்லாத்தில் நம்பிக்கை இப்படித்தான் இருக்கவேண்டுமென்று இக்கொலையையே உதாரணமாக இஸ்லாமிய வரலாற்று வல்லுனர்கள் அடிக்கடி மேற்கோள் காட்டுவதுண்டு. மகன் தந்தையைக் கூட இஸ்லாத்துக்காகக் கொன்றான் என்றால், அது ஒரு உன்னதத் தியாகமென முஸ்லிம்கள் இன்றும் கருதுகிறார்கள். இதற்கு இன்னும் சில உதாரணங்கள்

[362] Ibn Ishaq. Sira

உண்டு. இந்தியாவில் மொகலாய அரசியலில் இதற்குச் சான்றுண்டு. இம்மாதிரியே முகம்மது தன்னை வளர்த்துக்கொள்ளப் பிறரை உபயோகிப்பதை வழக்கமாகக் கொண்டார். முகம்மதுவே தங்கள் நெருங்கிய உறவினர் (பெற்றோர், சகோதர சகோதரி முதலியோர்) மீது வேவு பார்த்து முஸ்லிம்களைத் தன்னாதிக்கதில் எப்போதும் வைத்துக்கொள்ள கையாண்ட உத்தியிது. இதனால் முஸ்லிம்களுக்குள் இருக்கும் எந்த சிறு மறுப்புரைகளையும் முளையிலேயே கிள்ளி எறிந்து விடுவது வழக்கம்.

தந்தை உப்பாயின் உன்னத சமுதாயப் படிநிலையை நினைவில் கொண்டு அதற்கு தகுந்தாற்போல அவர் இறந்த போது மகன் உப்பாய் முகம்மதுவிடம் தந்தை நினைவாக அவர் கல்லறையில் வந்து தொழ வேண்டி நின்றான். இதற்கு முகம்மது இசைந்தும், ஓமர் கடுமையாக ஆட்சேபித்தான். முகம்மதுவின் தாய் இறந்த போதும் கூட முகம்மது அவர் நினைவாகக் கல்லறையில் தொழ விரும்பவில்லை என ஓமர் ஞாபகப்படுத்தினான். இதற்கு முகம்மதுவின் பதில், “அல்லா எனக்கு இதில் விருப்பத் தேர்வை அளித்துள்ளார். இவர்களை அல்லா மன்னிக்க வேண்டுமா அல்லது இல்லையா எனத் தீர்மானிக்கும் பொறுப்பை எனக்களித்துள்ளார். எழுபது முறை இறந்தவர்களுக்காக அல்லாவிடம் தொழுதால் (மூத்த உப்பாய்க்காக) அல்லா எல்லா பழைய பாவங்களிலிருந்து மன்னித்து விடுவார். ஆனால் நான் அந்த 70 எனும் எண்ணிக்கைக்கு அதிகமாகவே தொழ இருக்கிறேன்” என்றார்.

**குரான் 9:80** -“ஏனென்றால் இவர்கள் அல்லாஹ்வையும், அவன் தூதரையும் நிராகரித்தார்கள் -இத்தகைய பாவிகளின் கூட்டத்தை அல்லாஹ் நேர்வழியில் செலுத்த மாட்டான்”.-- முகம்மது மூத்த உப்பாயை மிக வெறுத்தார். சொந்த நலனைக் கருதி மற்றவரிடம் நல்லெண்ணம் திடீரென முகம்மதுவுக்கு எப்போதும் உதயமானதில்லை. இப்போது மூத்த உப்பாய்க்காக 70க்கும் அதிகமாக தொழுகையை நிகழ்த்தி அல்லாவின் தீர்ப்பையும் முகம்மது மாற்றி அமைக்கப் போகிறாராம். இதை முகம்மது உண்மையில் மனதாரச் செய்வாரா? இவரால் செய்யத்தான் முடியுமா? இந்த தாராளத்தை முகம்மதுவின் சொந்த தாய்க்காக அவள் கல்லறைக்குச் சென்றும் ஏன் அப்போது ஆங்கே செய்ய மனம் வரவில்லை? முகம்மதுவின் படித்தரம் எதிலும் இரட்டை நிலை இருந்தது.

கீழ் வரும் ஒரு ஹத்தீசில், முகம்மதுவுடன் கருத்து வேற்றுமை கொண்டோர் கேள்வி கேட்டதற்குத் தன் கோபத்தை எப்படிக் காண்பித்தாரென ஒரு உதாரணம். இது அல்-புகாரி Sahih Bukhari Vol 4, Book 56, No.807: இல் உள்ளது. இந்நிகழ்ச்சி ‘ஹுனைன்’ கொள்ளைத் தாக்குதலில் குவித்துக் கொண்ட செல்வத்தை மெக்கா சீடர்களுடன் பிரித்துக்கொள்ளும் போது அவர்கள் மனதைக் குளிரவைப்பதற்கும் போட்டி மனப்பான்மையை இன்னும் வளர்க்கும் வகையிலும் முகம்மது பங்கீடு செய்தார். இச்செல்வத்தில் பங்கு மெக்கா ((முஸ்லிம்) சீடர்களுக்கு மட்டுமே பகிர்ந்து கொடுத்துவிட்டு கூடவே வந்த அரேபிய முஸ்லிமாகாத மற்றோருக்குக் கொடுக்கவில்லை. கூட வந்த அரேபிய முஸ்லிமல்லாத மற்றோரும் முகம்மதுக்கு வேண்டிய உதவியைச் செய்துள்ளனர். இதனால் வருத்தமுற்ற மற்றோர் “அல்லாவின் தூதரே! எங்களுக்கும் நியாயம் வழங்குங்கள்” எனக் கேட்டனர். உடன் முகம்மது “நான் நியாயம் வழங்காவிட்டால், அது தவறு” எனச் சொல்லி முடிப்பதற்குள் ஓமர், “எல்லோருக்கும் பகிர்ந்து கொடுத்துவிட்டால், மிஞ்சியதில் எனக்கு என்ன கிடைக்கப் போகிறது” என்றான். முதலில் இப்படித்

தங்களிடம் முறையிட்டவனின் தலைகளைச் சீவி விட எனக்கு உத்தரவிடுங்கள் என கூறினான்.[363]

இப்படித் தங்களுக்கும் பங்கு கேட்டவன் பானு தமீம். இவன் முஸ்லிமாக மாறிக் கொள்ளவில்லை. ஆனால் கொள்ளையடிக்கும் போது முகம்மதுவுக்கு ஏராளமாக உதவி செய்து அவர் கொடுக்கும் பங்கைப் பெற்றுக் கொள்ளத்தான் முகம்மதுவின் குழுவுடன் சேர்ந்தான். தனக்கு உதவி என ஒருவரும் இல்லாதிருக்கும் போது அப்போது மாத்திரம் மற்றவர்கள் உதவி முகம்மதுவுக்குத் தேவைப்பட்டது. இப்போது வசதி வந்தவுடன் பழையவைகளை முகம்மது முற்றிலும் மறந்துவிடுவது வழக்கம். அவ்வழக்கத்தையொட்டி முகம்மதுவுக்கு ஏராளமாகச் செல்வம் குவிந்தவுடன் தற்போது பழைய உறுதிமொழிகளைக் கடைபிடிக்கத் தேவையில்லை என்னும் முடிவுக்கு வந்தார். இந்தச் செயல்முறை முகம்மதுவின் ஒழுகலாற்றிலும் குணவியல்புபடியும் புதிதல்ல. இப்பங்கு மறுப்பு ஒன்றே அங்குள்ளோர்களுக்கு நல்ல பாடமாக அமைந்திருக்கும் எனத் தீர்மானித்து அவர்களுக்கு ஒன்றுமே பங்களிக்கவில்லை. இதனால் எல்லோரும் அறிந்து கொள்ள வேண்டியது அங்கிருப்பவர்களுக்கு மட்டுமல்ல, இஸ்லாத்தின் ஒட்டுமொத்த இயல்பாகவும் அமைந்து விட்டது. அதாவது **முதல் பாடம்** வேண்டும்போது காலில் விழுவார்கள். காரியம் முடிந்த சமயங்களில் சொன்ன சொல்லையும் மறந்துவிடுவார்கள். இது இஸ்லாமியம். **இரண்டாவது பாடம்,** ஒருவரும் முகம்மது செய்த எதைப் பற்றியும் கேள்வி கேட்கக்கூடாது. அப்படிக் கேட்டுவிட்டால் முகம்மதுவின் கோபத்தைக் கிளறுவதாகும்; **மூன்றாவது பாடம்** இஸ்லாத்துக்கும் முகம்மதுவுக்கும் இச்சகம் கூறுவதில் ஒன்றே, முஸ்லிம்களுடைய ஒப்புதல் கிடைக்கும். மற்றவைகளாலல்ல. அதாவது இஸ்லாத்தில் 'ஆமாஞ்சாமி'களுக்குத்தான் வரவேற்பதிகம்.

இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால், இஸ்லாத்துடன் இடதுசாரிகளும் ஒன்று சேர்ந்து உலக மக்களை மிகவும் வருத்துகின்றனர். இவைகளால் மேலை நாடுகளுக்கும் அல்லது உலக நாடுகளுக்கும் ஏதாவது பாடமுண்டா எனக் கேட்டால், "உண்டு" என்றுதான் என் பதிலிருக்கும். இருவருக்கும் தங்கள் கட்சிகளை 'உலக மயமாக்குதல்' என்றுதான் நோக்கம் உள்ளது. இஸ்லாமும் உலகளாவிய அரசியல் சார்ந்த கட்சிதானே! இதில் என்ன சந்தேகம்!! ஆக இஸ்லாம் இடதுசாரிகள் இரண்டுமே ஒரே மாதிரியான அரசியலைச் சார்ந்ததுதான். ஆனால் இவர்கள் நினைப்பது எல்லாமே நடைமுறைக்கு ஒவ்வாத அரசியல் திட்டங்கள். **உதாரணங்கள்: ஈரானில் இடதுசாரிகள் 1979இல் இஸ்லாத்துடன் ஒன்று சேர்ந்து அதிகாரத்தைக் கைப்பற்ற உதவி செய்தனர். பின்னர் முஸ்லிம்கள் ஆட்சி முழுதும் கைப்பற்றிய நிலையில், முதல் நடவடிக்கையாக தூக்கில் தொங்கவிடப்பட்டவர்கள் இடதுசாரி அரசியல் கட்சிகளைச் சேர்ந்த கம்யூனிஸ்ட்கள்தான். இதுவும் மற்றொரு கொசுறு பாடம்.**

**முகம்மதுவின் அல்லது இஸ்லாத்தின் செயல்முறை வழிவகை (modus operandi) என்பதே, "காரியம் ஆகும் வரை காலைப்பிடிப்பது; காரியம் முடிந்த பின் கூட்டு சேர்ந்தவர்கள் கழுத்தை முதலில் நெறித்துக் கொல்வது என்பதில் தான்" இஸ்லாமிய உட்கருத்தே உள்ளது.**

Osherow தொடர்கிறார்: ஜிம் ஜோன்ஸின் விளம்பரப்படுத்தப்பட்ட எல்லாக் குறிக்கோள்களுக்கும் அவன் செய்முறைகளுக்கும் மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசத்துடன் இருந்ததால், மக்கள் கோவிலில் சூழ்நிலை மிகவும் மோசமானது. இதனால் மக்கள் கோவிலில் இருந்த அங்கத்தினர்கள் இவைகளை

[363] Sahih Bukhari Volume 4, Book 56, Number 807

மனதில் வைத்திருந்தால் மிக துக்கமாகவும் வெளியில் சொன்னால் இன்னும் வெட்கக்கேடு எனவும் அதன் விளைவுகள் தங்களையே பாதிக்குமெனவும் பித்துப் பிடித்தவர்கள் போன்று வாயைத் திறவாமல் கிடந்தனர். மேலும் அநேக அங்கத்தினர் ஜிம் ஜோன்ஸுக்கு பயந்து அவன் தங்களுக்கு சொல்லொண்ணாத் துயரங்களை அளித்திடுவான் எனத் தெரிந்து அவனுக்கெதிராகக் குரலை எழுப்பாமல் இருந்தனர்; யார்யார் அவனுக்கு மறுப்பு தெரிவித்தார்களோ அவர்களுக்கு தண்டனை வாங்கித் தருவதில் சக-சீடர்களே மிகத் தீவிரமாக இருந்தனர். இதைத்தான் ஜிம் ஜோன்ஸும் எதிர்பார்த்தான். ஜோன்ஸைக் கேள்வி கேட்கவே முடியாத சூழ்நிலை அவனால் திட்டமிட்டு உருவாக்கப்பட்டது. கோள் மூட்டுபவர்களுக்கும் அது சக்தி மிகுந்த ஆயுதமாகவும் அதனால் இவர்களுக்கு ஆதாயமாகவும் ஆனது. இம்மாதிரி பிறருடைய ரகசியங்களை வெளிப்படுத்த ஒவ்வொருவருடைய உறவினர்களும் ஊக்கப்படுத்தப்பட்டார்கள்.

இஃதேபோன்று முகம்மதுவும் மற்ற சீடர் முஸ்லிம்களைப் பற்றி கோள் மூட்டுபவர்களை மிகவும் ஊக்குவித்தார். Osherow கூறுவது “இச்செயல்பாணி வேறுபாடுகளைக் களைந்தது மட்டுமல்லாமல், முஸ்லிம்களுக்குள் ஒற்றுமையையும் வளர விடாமல் முகம்மதுவுக்குச் சாதகமான சூழ்நிலையும் இவ்வாறே உருவாக்க உதவியது. இதன் மற்றொரு விளைவு குடும்பத்துக்குள் ஒருவருக்கொருவருடன் இருக்க வேண்டிய விசுவாசத்தையும் களைய முடிந்தது”. இதனால் மொத்தமாக முகம்மதுவுக்கே மிக லாபகரமான சூழ்நிலை உருவாக்க உதவியது. இஸ்லாத்தில் முஸ்லிம்களுக்குள் ஒற்றுமை இல்லாமல் வெளிப்பூச்சுக்காக இஸ்லாமிய சகோதரத்துவமென ‘தக்கியா’ செய்து விளம்பரப் படுத்தப்பட்டது.

முஸ்லிம்களும் ஒருவர் மேல் ஒருவர் வேவு பார்ப்பதால் அதாவது இஸ்லாத்தின் / முகம்மதுவின் வழியிலிருந்து மாறி (**Amr bil ma’roof** - injunction to do right) கெட்ட வழியில் முகம்மதுவுக்குத் தீங்கிழைத்தால் (**Nahi min al munkar** - forbiddance of wrong) அவ்வப்போது கண்டிக்கப்பட்டுத் தண்டனையையும் அடைந்தனர். ஜியார்ஜ் ஆர்வெல், 1984 கதையில் “பெரியண்ணன்” என ஒருவன் மட்டும்தான் இருந்தான். ஆனால், இஸ்லாத்திலோ முஸ்லிம்கள் ஒவ்வொருவரும் “பெரியண்ணன்” போன்று காணப்படுகின்றனர்.

ஈரானில் இஸ்லாமியப் புரட்சிக்குப் பின்னர், ஒவ்வொருவரின் பெற்றோரின் குழந்தைகளைக் கொண்டே தம் பெற்றோர்களைப் பற்றி இஸ்லாத்துக்கு ஒப்பில்லாத நடவடிக்கைகளை வேவு பார்த்து அதை இஸ்லாமிய மேலாண்மையினரிடம் புகார் அளிக்க ஊக்குவிக்கப்பட்டனர். இதனால் அநேக பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் செய்த புகார்களின்படி தூக்கிலிடப்பட்டனர். இப்புகார் செய்தவர்களுக்கு இஸ்லாமிய மேலாண்மை அதிகாரிகள் பல வெகுமதி சலுகைகளையும் உடனுக்குடன் அளித்து மற்ற முஸ்லிம்களின் குழந்தைகளையும் அவ்வாறே ஊக்குவித்தனர்.

இம்மாதிரி ஒரு முஸ்லிம் குடும்பத்தினர் மற்ற முஸ்லிம் குடும்பத்தில் உள்ளவர்களுக்கெதிராக அல்லது அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் யாராவது செய்யும் இஸ்லாத்துக்கு ஒப்பில்லாத நடவடிக்கைகளைக் காட்டிக்கொடுத்தால் அவர்களை இன்னும் ஊக்குவிக்கப் பரிசுகள் வழங்கப்பட்டன. இதைத்தான் ஏகாதிபத்திய **பிரிட்டிஷ் இந்திய காலனி அரசாட்சி**யில் முகம்மதுவின் செயல்பாணிகளை நகலெடுத்து ஆங்காங்கே இஸ்லாத்து செயல்பாணியிலேயே செயலாற்றினர். இதனால் **அந்தந்த நாடுகளைத் தங்கள் கட்டைவிரலுக்கடியில் வைத்துக்கொள்ள முடிந்தது. இதெற்கெல்லாம் உபயம்: இஸ்லாம். எங்கெங்கு**

**தகாத முறைகள் செயலாற்றப்படுகின்றவோ, அதன் மூல முதல் பாடம் இஸ்லாத்தில் கட்டாயம் இருக்கும். இதில் ஏதும் சந்தேகத்திற்கிடமில்லை.**

Osherow கூறுவது: "ஜோன்ஸ் எப்போதும் தன் மக்கள் கோவிலில் சகோதரத்துவம் நீங்காது நடப்பிலிருக்க வேண்டுமென நிர்பந்தித்த காரணமே, 'தந்தை'யான தன்னிடம் மட்டும்தான் மிகப் பற்று கொண்டு இருக்கவேண்டும் என்றுதான். ஆனால் அத்தந்தை சமூக நடப்புக்கு ஒவ்வாத எந்த நடவடிக்கையைச் செய்தாலும் அதைத் தட்டிக் கேள்வி கேட்டுத் தொந்திரவு செய்யக்கூடாது.

இஸ்லாத்திலும் அதே சகோதரத்துவம் இருக்க வேண்டும் ஆனால் உண்மையில் இருக்க வேண்டிய விசுவாசம் முகம்மதுவுக்கே உரித்தானது!. இதை முகம்மது சாதுர்யமாகச் சொல்லும்போது, "அல்லாவுடன் அல்லாவின் தூதர் முகம்மதுடன்" என அடிக்கடிச் சொல்லிச் சொல்லி முஸ்லிம்களுக்கு நிரந்தரமாக புந்தியில் இருத்தி வைப்பது வழக்கம். இஸ்லாத்தை விட்டு விலகிய அடுத்த நொடியிலிருந்து அதே "சகோதரனின்" தொண்டையைக் கீறிக் குதறத் (ஹலால் முறையில்) தயங்கமாட்டார்கள். அதாவது இஸ்லாத்தில் இருக்கும் வரைதான் இஸ்லாமிய சகோதரத்துவம். இஸ்லாத்தில் இல்லாத முன்னாள் முஸ்லிம்கள் உடனேயே எதிரியாகிவிடுவார்கள். இவர்கள் கொல்லப்பட வேண்டியவர்கள் எனவும் தீர்மானிக்கப்படும். முன்னாள் முஸ்லிம்களுக்கு இஸ்லாத்தின் சகோதரத்துவம் செல்லுபடியாகாது.

ஜிம் ஜோன்சுக்கும் முகம்மதுவுக்கும் உள்ள ஒற்றுமை மிகவும் அதிர்ச்சியளிக்கிறது. இயல்பாக உளநோயோடு கூடிய தற்காதலர்களுக்கு மட்டுமே இத்தகைய மனப்பாங்கு உரித்தானது. மற்றெவருக்கும் இல்லாத வேறுபடுத்திக் காட்டும் இயல்புகளோடு சர்வாதிகாரத் தலைவனுள்ள கட்சி அரசியலில், அது இஸ்லாமானாலும் சரி, நாசிகளானாலும் சரி, அல்லது கம்யூனிசமானாலும் சரி, வெறிப்பறீடுபாடோடு ஜார்ஜ் ஆர்வெல் தனது '1984' எனும் நூலில் விவரித்தது போலவே எல்லா சர்வாதிகாரத்திலும் கட்டாயம் இருக்கும். இருந்தாக வேண்டும். மூலாதாரமான இஸ்லாத்து முறைகளையும் உலகில் உள்ள மற்ற எல்லா சர்வாதிகாரப் போக்குகளையும் மனதில் வைத்துத்தான் 'ஜியார்ஜ் ஆர்வெல் "1984' எனும் புனை கதையை உருவாகினார்.

## குடும்பத் தொடர்புகளை ஏன் முற்றிலும் அறுத்தெறிய வேண்டும்.

ஜிம் ஜோன்ஸ் தனக்குள் இவ்வாறு நம்பிக்கை கொண்டிருந்தான்: "குடும்ப முறை என்பதே வாழ்க்கை இயக்க நெறிக்கு எதிர்மறையாகும். இது ஒருவருடைய புனித இறைத் தொண்டுக்குத் தன்னை அர்ப்பணம் செய்யும் நோக்கத்திற்கு இது தடையாக உள்ளது" என்றான்.[364]

இதில் ஜிம் ஜோன்ஸின் நிமித்தமும் இஸ்லாத்தின் உள்நோக்கமும் ஒன்றாகவே உள்ளது; 'மக்கள் கோவிலிலும் இஸ்லாத்திலும்' நோக்கம் இறையல்லவே. இக்கொலைவெறி தன்னாதிக்க வெறிக்கு மட்டுமே!

ஆக, மக்கள் கோவிலில் சீடனுக்கு ஏதாவது தண்டனை விதிக்கப்பட்டால் இந்த சடங்கை நேரில் காண்பதற்கு முன் அணியில் கட்டாயமாக வீற்றிருக்க வேண்டியது இவன் குடும்பத்தார்தான். ஏனெனில், இவர்கள்தான் கோவிலுக்கெதிராக ஆரம்பத்திலிருந்து மிக சக்திமிக்க விமர்சகர்களாகக் கருதப் படுகிறார்கள். நேரில் இத்தண்டனை நிகழ்ச்சியைப் பார்த்தாலாவது இனி மக்கள் கோவிலைப் பற்றி எந்த

[364] Mills, J. *Six years with God.* New York: A & W Publishers, 1979.

விமரிசனமும் எவரும் செய்யக்கூடாது என அறிந்து கொள்ள இது ஒரு பாடமாகும்[365].

முகம்மதுவும் இதே போன்று குடும்பத் தொடர்களை வெட்டி ஒதுக்கி விட்டால்தான் அல்லாவின் மீது, அதாவது முகம்மதுவின் மீது, எல்லா கடப்பாடும் உள்ளவர்களாகத் திடமாக இருக்க முடியும். இதில் எந்த சீடனின் பெற்றோராயினும் குறுக்கிட்டுத் தடுக்க முயன்றால் குரான் வசனப்படி முஸ்லிம் சீடர்களான பிள்ளைகள் பெற்றோர்களுக்குக் கீழ்ப்படியத் தேவையில்லை. அப்பெற்றோர்களையே கொன்றுவிடலாம். சொந்தக் குழந்தைகள் தங்கள் பெற்றோர்களைக் கொலை செய்ததாக இஸ்லாத்தில் முகம்மது காலத்திலிருந்து ஆதாரங்கள் ஏராளமாக உள்ளன. **குரான் வசனமும்: 29:8 –"தன் தாய் தந்தையருக்கு நன்மை செய்யும்படியாக நாம் மனிதனுக்கு வஸிய்யத்து செய்திருக்கிறோம்; எனினும், (மனிதனே!) உனக்கு அறிவு இல்லாத ஒன்றை எனக்கு இணையாக்கும்படி அவ்விருவரும் உன்னை வற்புறுத்தினால், நீ அவ்விருவருக்கும் கீழ் படிய வேண்டாம்; என்னிடமே உங்கள் அனைவரின் மீளுதலும் இருக்கிறது. நீங்கள் செய்து கொண்டிருந்தவை பற்றி அப்போது நான் உங்களுக்கு அறிவிப்பேன்.".**

'வஸிய்யத்' என்றால் 'சாசனம்'-'விருப்ப ஆணவம்' என்று பொருள் (will/testament). முகம்மதுவின் மகள் 'ஜைனாப்' அவள் கணவன் 'அபுல்' இவர்களுக்கிருந்த காதல் கதையை மீண்டும் (இரண்டாவது அத்தியாயத்திலுள்ளது) இங்கு நினைவு கூரவும். இதில் முகம்மது தன் மகளை 'அபுல்'ஐ விட்டகலுமாறு கூறினார். ஏனெனில் 'அபுல்' அந்நேரம் வரை தன்னை முஸ்லிமாக மாற்றிக் கொள்ளவில்லை. இஸ்லாத்திலிருக்கும்போது அவள் இஸ்லாத்தில் நம்பிக்கை யில்லாதவனை மணந்ததில் முகம்மதுவுக்கு விருப்பமில்லை. இதன் உள்நோக்கமே, இஸ்லாத்தில் நம்பாத ஆணுக்குப் பெண்ணாசையைக் கிளப்பி நிர்ப்பந்தமாக இஸ்லாத்துக்கு மாற்றி மாட்டிவிடத்தான். **இஸ்லாத்தில் 'கற்பு' என்றால் என்ன எனக் கேட்டால் 'ஒரு கிலோ' 'என்ன விலை' எனும் பதில் தான் வரும். இஸ்லாத்தில் பெண்வெறுப்பு** (misogyny) **மிக உண்டு. ஆனால் பெண்களின் பிறப்புறுப்பில் மட்டும்** (awrah(t)) **விருப்பவெறி மிக அதிகம்.** பெண்ணின்-சுகம் அறிந்த பிறகு அவள் முஸ்லிமாக இருந்தால் என்ன? வேறெவளாக இருந்தால் என்ன? ஒரு வெறி ஏற்படலாமல்லவா? இஸ்லாத்துப் பெண்ணின் (முஸ்லிமாவின்) "Awarat"ஐ (பிறப்புறுப்பை) ஆரம்பத்தில் அனுபவிக்க வைத்து, அவளைக் கொண்டே முஸ்லிமல்லாத ஒருவனை இஸ்லாத்தில் இணைக்கும் (மாட்டிவிடும்) வழக்கமும் உண்டு. இஸ்லாமிய வெறிப்பற்றீடுபாட்டில் ஒருவர் சேர்ந்த பின்னர் தங்கள் மூளையை உபயோகிக்க வேண்டியதில்லை. எவ்வளவுக் கெவ்வளவு ஒரு வெறிப்பற்றீடுபாடு அனுசரிக்க மிகக் கடினமாக உள்ளதோ வெறிப்பற்றீடுபாடு கொண்டோருக்கு அதுவே போகப்போக மிகக் கவர்ச்சியாக மாறிவிடுகிறது. இதற்குச் சான்றாக இப்னு சா'த் ஒரு கதையை நமக்கு விவரமாகச் சொல்கிறார். மெக்காவில் மு'சாப் இப்னு உமைர் எனும் இளைஞன் செல்வமிக்க செல்வாக்குள்ள தன் பெற்றோருடன் வாழ்ந்து வந்தான். குழந்தைப் பருவம் முதல் இவனை மிகச் செல்லமாக விதவிதமான உடுப்புகளை அணிவித்து, மிக அருமையான வாசனைத் திரவியங்கள் தடவி, மிக விலை மதிப்புள்ள உடுப்புகள் காலுறைகள் போன்றவைகளால் அலங்கரித்துப் பெற்றோர்கள் மகிழ்ச்சியடைவார்கள். போதாத காலமாக, இவனே முஸ்லிம் ரௌடிக்கும்பலுடன் ஏற்பட்ட சகவாச தோஷத்தால் இஸ்லாத்தின் ஆரம்ப காலத்திலிருந்தே சேர்ந்து விட்டான். இத்தகவலைத் தன்

[365] Cahill, T. In the valley of the shadow of death. *Rolling Stone*. January 25, 1979.

தாய் ‘குன்னா’வுக்குக் கூடச் சொல்லாமல் ரகசியமாக வைத்திருந்தான். ஏனெனில் இவள் தன் மகனை உயிரினும் மேலாக மிக நேசித்தாள். இச்செய்தியைக் கேட்டால் அவள் மிகவும் நொந்து போவாளென மகனுக்குத் தெரியும். ஒரு நாள் தாயே தன் மகன் இஸ்லாத்தில் சேர்ந்து விட்டானெனக் கேட்டு மகன் மீது மிகவும் சீற்றங்கொண்டாள். இஸ்லாத்தில் முழு ஈடுபாடு செலுத்த முடியாதவாறும் அதைவிட்டு விலகுமாறும் எவ்வளவு தடைகளை உண்டாக்க முடியுமோ அதைச் செய்தும் பார்த்தாள். முகம்மதுவுக்கு இச்செய்தி தெரிந்த பின், முகம்மதுவின் ஆணைப்படி, அபிசீனியா செல்லும் கும்பலில் (கோஷ்டியில்) இவனும் பிரத்யேகமாகச் சேர்க்கப்பட்டான். அவன் அங்கு சென்று சிலகாலம் கழித்து மெக்காவுக்குத் திரும்பி வந்தவுடன், தாய் குன்னா எவ்வளவோ இஸ்லாத்துக்கெதிராக எடுத்துரைத்துப் பார்த்தாள். அழுது கெஞ்சிப் பார்த்த்தாள், மகனுக்கு மாதச் செலவுக்குக் கொடுக்கும் பணத்தையும் நிறுத்திப் பார்த்தாள். இதெலாம் செவிட்டுக் காதில் விழுந்த சொற்களாகவே அமைந்தது. இப்போது மு’சாத் இன்னும் தீவிரமாக இஸ்லாத்தில் வெறிப்பற்றீடுபாடு கொண்டான். கையில் காசின்றிக் கிழிந்த உடையுடன் இருப்பினும் இவன் இஸ்லாத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டுவிட்டான். முகம்மது இவனையே மதீனாவுக்கு இஸ்லாமியப் போதகனாக அனுப்பினார். இவன் சுமார் 70 பேரை வெற்றிகரமாக இஸ்லாத்தில் சீடர்களாக்கினான். இவனும் இவனைச் சேர்ந்த 70 பேரும் முகம்மதுவை ‘அஃக்பா’வில் சந்தித்துத் தங்கள் ஆதரவுக்கு வாக்குறுதி அளித்தனர்.

மு’சாத் மெக்கா திரும்பியவுடன் தன் தாயைச் சந்திக்கச் செல்லவில்லை. இச்செய்தி கேட்டு அன்னை குன்னா மிக மனமுடைந்தாள். இவனுக்குக் கடைசியாக ஓர் செய்தியை அனுப்பினாள். அதில் அவள் குறிப்பிட்டது ‘தாய்க்குக்கூட நன்றி மறந்து இருக்க முடியுமா?’ எனக் கேட்டிருந்தாள். ‘மெக்காவுக்குத் திரும்பி வந்தவுடன் அன்னையைக் கூட சந்திக்க ஏன் வரவில்லை?’ அவன் அவளுக்குச் சொன்ன தகவல், ‘அல்லாவின் தூதர் முகம்மதுவை சந்திப்பதற்கு முன் வேறெந்த இடத்திற்கும் போக மாட்டேன்’ எனத் தான் உறுதியுடன் இருப்பதாகக் கூறியிருந்தான். பின்னர், அவனே அவன் நிபந்தனைகள் பூர்த்தியானவுடன் தாயைச் சந்திக்க வந்தபோது தன் மகனைத் தன்னுடன் தங்கிவிட எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தாள். கடைசியில் தாய்க்கு அவனொரு எச்சரிக்கை செய்தான். அதன்படி, “அன்னயே! இவ்வளவுக்குப் பின்னரும் என்னை நீ இவ்வாறு வற்புறுத்தினால் முகமம்துவின் போதனைப்படி உன்னைக் கொல்வதைத் தவிர வேறொரு வழியும் கிடையாது” என்றான். ‘அப்படியானால் நீ செல்லலாம்’ எனக் கடுந்துயருடன் அழுது கொண்டே மகனுக்குப் பிரியா விடையளித்தாள். போகுமுன் தாய்க்கு மகன் கூறிய அறிவுரை “எனக்கு என் அன்பு அன்னை தேவை. அன்னையே! இப்போதாவது இக்’கலீமா’வைச் சொல்; (**‘கலீமா’** என்பது இஸ்லாதிலும், அல்லாவிடமும் முகம்மதுவிடமும் உள்ள முழு நம்பிக்கை – La-ilaha-iLLaLLah- Muhammadur-Rasulullah - Bismillah ir-Rahman ir-Rahim “லா இல்லாஹா, இல்லல்லா முகம்மதுர் ரஸூலல்லா - பிஸ்மில்லா-இர் ரஹ்மானீர் ரஹீம்”) ‘அல்லாவைத் தவிர வேறொரு கடவுளில்லை, முகம்மதுவே அல்லாவின் தூதரென நான் நம்புகிறேன்’ என என்னிடமே சொல்” இதனால் நீயும் முஸ்லிமாக இஸ்லாத்தில் சேர்ந்துவிடலாம் என அவளையே மாற்றிவிடப் பார்த்தான். மகனிடத்தில் தாய்க்குள்ள பாசம் கடைசியில் அவள் மகனின் சுயநலத்திட்டத்துக்கு, இஸ்லாமின் பயங்கர உள்நோக்கத்திற்கு உடன்பட வைத்தது. தனையனே ஒரு தாயை இஸ்லாத்தில் சேர்த்தான். ‘இதுவும் அல்லாவின் மின்னும் சுடரொளி’ எனக் கூறி மகிழ்ந்து, பின்னர் அவன் மதீனாவுக்குத் திரும்பினான். இதன் பின்னர்,

முகம்மதுவின் கட்டளைப்படி, அவருடன் எல்லா தீடீர்த் தாக்குதல்களிலும் கொள்ளையடிப்பதிலும் கூட்டு சேர்ந்தான். இவனே 'உஹூத்' போரில் கொல்லப்பட்டான். தாய் 'குன்னா'வும் இப்போரில் தன் மகன் இறப்பதை நேரில் கண்டு துடிதுடித்துப் போனாள்.[366]

மூளையில்லாத செயலில் ஈடுபட்ட மு'சாபின் இக்கதையை, முஸ்லிம்கள் தங்களுக்கு இருக்க வேண்டிய இஸ்லாமிய வெறிப்பற்றீடுபாடு குறித்து பீற்றிக் கொள்வார்கள். முஸ்லிம்கள் "'முசாத்'ஐ மனித இனத்திலேயே மிகச் சிறந்த பெருமைக்குரியவனென"ப் புகழ்பாடுவார்கள். இவன் கதை மூளைச் சலவைக்கும், அதனால் உண்டான மட்டு மீறிய வெறி உணர்ச்சிக்கும் இதனால் மனதுடைந்த ஒரு தாயின் ஒரு சோகக் கதையெனவும் உண்மையில் உலகுக்கு எப்படிப் புரியும்? இவ்வெறிஈடுபாட்டில் உள்ளோர் தங்கள் உற்றார் உறவினருக்கு எவ்வளவு கடுந்துயரளிக்கிறார்கள் என உணர முடியாத இஸ்லாமிய ஜடங்கள். உயிருள்ள போதும் உயிரில்லா நடைபிணங்களாக உலகில் உலவும் "zombie"கள். இதனால், முடிவில் நாமெல்லோரும் அறிவது இஸ்லாத்தில் சேர்ந்து விட்டால் அதிலுள்ள ஒவ்வொருவரும் குடும்பத் தொடர்பை முற்றிலும் அறுத்துக் கொள்ள வேண்டும். இஸ்லாத்தில் உள்ளபடி, தேர்ந்தெடுத்த இப்பாதையில் குறுக்கிட்ட தாய் தந்தையர் மற்ற உறவினர் எவரையும் முஸ்லிமாக ஆன பிறகோ அல்லது அவர்களும் இஸ்லாத்தில் சேராவிட்டாலோ பெற்றோர்களையும் கொலை செய்யத் தனையர்கள் தயங்க மாட்டார்கள். இக்கொலையால் தங்கள் இஸ்லாமியப் பற்றை அதாவது இதனால் 'அல்லா'-'முகம்மது'வின் மீது இருக்கும் அதீதப் பற்றைப் பறைசாற்றிக் கொள்வார்கள். முகம்மதுவே ஒரு ஹத்தீஸில் கூறியபடி, "மனித இனத்திலுள்ளோர் தங்கள் தாய் தந்தை குழந்தைகளிடம் இருக்கும் அன்பைவிட என் மீது அன்பைக் காட்டினால், இதனால் எனக்குக் கிடைக்கும் திருப்திக்கு இணையாக வேறொன்றுமே எனக்குக் கிடையாது" எனக் கூறிக்கொள்வதில் முகம்மதுக்கு என்றுமே மிக்க மகிழ்ச்சியுண்டாகும்.[367]

இதனால்தான் முஸ்லிம்கள் எவரேனும் முகம்மதுவையும் இஸ்லாத்தையும் எவ்விதத்திலாவது விமர்சனம் செய்தால் அதைப் பொறுக்க மாட்டாது விமர்சனம் செய்தவர்களையும், இதற்காக இவ்விமர்சனத்தில் சம்பந்தப்படாத உலகின் மறு கோடியிலுள்ளோரையும் எவ்விதப் பாகுபாடுமின்றி கொலை செய்வதில் முனைப்பாக ஈடுபடுகிறார்கள். இதற்குக் காரணம் கூறத் தேவையில்லை.

இக்கருத்தில் வரும் பல துயறுற்ற தாய்மார்களின் கடிதங்கள் தங்களுக்குத் தன் குழந்தைகளால் ஏற்படும் துயரைக் கொட்டி எழுதும்போது, நான் பதிலெழுதும் போது இக்கதையைக் குறிப்பிடுவதை என் வழக்கமாகக் கொண்டிருக்கிறேன். வெறிப்பற்றீடுபாடு மிக பயங்கரமானது, ஆபத்தானது. உயிரை உறிஞ்சிக் குடிக்கும் 'ரத்த அட்டைப் பூச்சிகள்' நிறைந்த இஸ்லாமியத்தில் ஒரு தடவை விழுந்துவிட்டால் இதில் மூழ்கி இறப்பதைத் தவிர வேறு வழியில்லை. இவர்களை உலகிலுள்ள எந்த சக்தியாலும் காப்பாற்ற இயலாது.

கீழ்க்காணும் அறிவுரைகளைப் பெற்றோர்கள் கவனித்தால் நல்லது.

1. உங்கள் குழந்தைகளுக்கு வெறிப்பற்றீடுபாட்டால் உண்டாகும் கெட்ட விளைவுகளைப் பற்றி முறையாகச் சிறு பிராயத்திலிருந்தே சொல்லிக் கொடுங்கள்; 2. இதைச் சிறுபிராயத்திலிருந்தே ஆரம்பித்துவிடுங்கள், ஏனெனில் இப்பருவத்தில் தான் இக்குழந்தைகள் இஸ்லாமியத்தில் வீழ்வதுண்டு; 3. இதற்கு அறிவொழுக்கப்

[366] Ibn Sa'd, Tabaqat V. III p. 100-102

[367] Sahih Bukhari Volume 1 Number 14

பயிற்சி ஒன்றுதான் மிகச் சிறந்த காப்புறுதி; 4. இதில் பள்ளி ஆசிரியர்களோ அரசியல்வாதிகளோ அல்லது தகவல் துறைகளோ உங்களுக்குதவுவார்களெனப் பகற்கனவு காணாது, உங்கள் குழந்தைகளுக்கு இதிலுள்ள கஷ்ட நஷ்டங்களை, இடர்களை உடனுக்குடன் தினமும் ஆவலூட்டும் வகையில் கற்றுக் கொடுங்கள். மேற்கூறியவாறு, அரசியல்வாதிகள், தகவல் துறையினர்கள் ஆகியோர் தங்கள் சுயநலத்திற்குத் தக்கவாறு இக்குழந்தைகளைப் பயன்படுத்தித் தங்கள் வலையில் வீழ வைப்பார்கள்; 5. உங்கள் குழந்தைகளின் வருங்காலத்தைக் காப்பது தான் உங்கள் தலையாய கடமை. முஸ்லிம்கள் உங்கள் இளம் குழந்தைகளைத் தங்களுக்கு இரையாக்கிக் கொள்ள மிகச் சுறுசுறுப்பாக ஈடுபடுவார்கள்; 6. உங்கள் குழந்தைகளுக்கு இது போன்று மற்றவர்களையே உண்டு வாழும் மிருகங்களைப் பற்றி முன்னரேயே படித்துப் படித்துக் கற்றுக்கொடுங்கள்; 7. இப்பேற்பட்டவர்கள் பசுத்தோல் போற்றிக் கொண்ட ஓநாய்களென, மனிதர்கள் வாழும் நாடுகளில் முஸ்லிம்கள் ஓயாமல் உலவுகிறார்களெனச் சொல்லிக் கொடுங்கள்; 8. உங்கள் குழந்தைகளின் மிகச் சிறந்த நெருங்கிய நண்பனே உங்கள் குழந்தைகளை வேட்டையாட வந்திருப்பான்; 9. இவர்கள் பார்ப்பதற்கும் பழகுவதற்கும் மிகவும் கபடற்றுதான் காட்டிக்கொள்வார்கள். ஆனால் இவர்கள் செயல்பாணியே தீராத தொற்று நோயை உண்டாக்க வல்லது. இதையும் உணர்ந்து செயலாற்றுங்கள்.
இவைகளை அனுபவபூர்வமாக அறிந்து கொண்ட பற்பல பெற்றோர்கள் அவ்வப்போது மற்றோருக்கு எடுத்துரைப்பது நல்லது.

### கருத்து வேறுபாடுகளுக்குத் தடையுத்தரவு

Osherow கேட்பது: “மக்கள் கோவில் இவ்வளவு மோசமென அங்குள்ளவர்களுக்குத் தெரிந்திருந்தாலும் ஏன் அக்கோவிலைவிட்டு அவர்கள் விலகவில்லை? காரணம், இக்கோவிலுக்குள் புகுந்துவிட்டால், வெளியேறும் எண்ணத்தை அறவே அமல்படுத்த முடியாது. ஏனெனில் தங்கள் சொந்தபந்தங்களை விட்டொழித்துவிட்டு இங்கு சேர்ந்தாகிவிட்டது. கோவிலை விட்டு வெளியேறும் எண்ணம் அக்கோவிலுள்ள மற்றவர்களுக்குத் தெரிந்து விட்டால் அங்கு இன்னும் மிக மோசமான நிலை ஏற்பட்டுவிடும். அங்குள்ள சீடர்களே இப்படி உள்ளவர்களைப் பயமுறுத்தி, அதைரியப்படுத்தி முற்றிலும் வெறுத்து இவர்களுடன் பேசுவதையும் நிறுத்தி விடுவார்கள். வெளியிலும் போக முடியாது; கையிலும் காசில்லை. எல்லாவற்றையும் ஜிம் ஜோன்ஸிடம் தாரை வார்த்தாகி விட்டது. ஆக வெளியில் போகவும் வக்கில்லை. ஒருவருக் கொருவருடன் மனம் விட்டுப் பேசவும் முடியாது. நான்கு புறமும் ஒற்றர்கள். காவல் கெடுபிடியும் மிக அதிகம். அப்படி முயற்சித்தால் கட்டாயம் துப்பாக்கிச் சூட்டால் சாவுதான். உள்ளே இருந்தாலும் மனத்தில் எக்கணமும் சித்திரவதைதான். ஜிம் ஜோன்ஸுக்கு இரட்டை லாபம். 13 வயது முதல் 19 வயதுள்ள ஓடியவர்களால்தான் கோவிலுக்கு மிகக் கஷ்டம் உண்டானது எனக் குற்றம் சாட்ட ஒரு சந்தர்ப்பமும் கிடைக்கும். இரண்டாவதாக, தன்னிஷ்டப்படிச் சீடர்களை வாயைத் திறந்து விமர்சனம் செய்யாமல் தடையுத்தரவால் எப்படியும் ஆட்டி வைக்கவும் முடியும். ஜோன்ஸுக்குக் கோவிலை விட்டுப் போனவர்களிடம் தாங்கொண்ணா வெறுப்பினால் அவர்கள் பெற்றோர்கள் முன்னிலையில் அவர்களைக் கண்டபடி ஏசுவான். எச்சமயத்திலும் கோவிலை விட்டுப் போனவர்களால் தங்கள் மீது குண்டு வீச்சு செய்யப்படலாமென உள்ளூர எப்போதும் திக்திகெனக் கலக்கம்தான் இருப்பவர்களுக்கு மிஞ்சும்.[368]

[368] Winfrey, C. Why 900 died in Guyana. *New York Times Magazine,* February 25, 1979.

இஸ்லாத்தைவிட்டுப் போனவர்கள் மீது முஸ்லிம்களும் இதே மனப்பன்மையுடன் காழ்ப்புணர்ச்சி கொள்வது எப்போதும் உண்டு. இஸ்லாத்தை விட்டோடியவர்களைத் தவிரச் சுயமாக சிந்தித்து அதை வெளிப்படையாகக் கூறுபவர்களையும், ஏனைய விமர்சகர்களையும் வெறுத்து, அவர்களை அச்சுறுத்திப் பின்னர் கொன்று விடுவார்கள். இஸ்லாத்தை விட்டோடியவர்களைப் பிடித்து அவர்கள் மீது தெய்வ நிந்தனை செய்து விட்ட மகாபாபிகளாகக் குற்றம் சாட்டப்பட்டு, அடுத்து கொடூரமான சித்திரவதையும் செய்து, வெகு நாட்களுக்குப் பிறகு உடலுறுப்புகளைத் துண்டு துண்டாக 'ஹலால்' முறையில் மெல்ல மெல்ல அறுத்து எறிவதும் உண்டு. சித்திரவதை நடக்கும் போதே இறந்து விட்டால் அவர்கள் பாக்கியவான்கள் எனச் சொல்லலாம். மனிதர்களால் இதை சகித்துக்கொள்ள முடியாது, படிப்பதற்கே இவ்வளவு கோரமென்றால், நேரில் பார்ப்பற்கு இன்னும் கோரமாக இருக்கும்.

ஒரு முஸ்லிம் கீழ்க்கூறிய மறுமொழியை எனது இணையவலையில் என் கவனத்திற்காவே கூறியிருந்தார்: "ஏ! அலி சினா!! எனது வாழ்நாளில் ஒரு தடவையாவது உன்னைச் சந்தித்தால் அப்போது உன்னைக் கொல்லாமல் விட மாட்டேன், கொல்வேன், கொல்வேன் என சத்தியமாகக் கூறுகிறேன்"! மேற்கூறிய முஸ்லிமுக்கு ஆங்கிலத்தில் எழுதத் தெரியாதென்பதல்ல. தங்களுக்கு ஒவ்வாத சமாச்சாரங்களை எவராவது கூறிவிட்டால், எல்லா முஸ்லிம்களுக்கும் வழக்கம் போல ஏற்படும் மனக்கொதிப்பு ஏற்பட்டு, ரத்தம் மூளைக்குள் அதிகமாகச் சென்று அடக்க முடியாமல் கோபத்தில் ஆழ்த்திவிடும். முஸ்லிமல்லாதவர்கள் முஸ்லிம்களைக் கூட இவ்வளவு கீழ்த்தரமாகக் கூறமாட்டார்கள். மற்றவர்களைத் திட்டும் விஷயத்தில் முஸ்லிம்களிடம் யூதர்கள் கட்டாயம் தோற்பார்கள்.

Osherow கூறுவது: "மக்கள் கோவில் தொடர்பை அறுத்துக்கொள்ளத் துணிந்து செயலாற்றுவது ஆபத்தானது. தப்பி ஓடிவிடுவது எனபதும் அவ்வளவு எளிதல்ல. எதிர்ப்பது இன்னும் பேராபத்தில் முடியலாம். அதுவும் நம் சக்திக்கு அப்பாற்பட்டது. மற்ற எந்த மாற்றுத் திட்டமோ அல்லது விருப்பத் தேர்வோ கிடையாது. இதற்கெல்லாம் ஒரே வழி, ஜோன்ஸின் ஒழுங்குமுறையை ஒப்புக்கொண்டு விடுவதொன்றுதான் செயல் முறைக்கு விவேகமானதாகும். சீடர்களுடைய இக்குறைபாட்டை (**helplessness**) அறிந்தவன்தான் ஜிம் ஜோன்ஸ்".

இஸ்லாத்திலும் வரப்போகும் நன்மைகள், நிவாரணங்கள் கட்டாயம் கிடைக்குமென நிச்சயமில்லை. ஆனால் இஸ்லாத்தை விட்டு விலகும் விஷயத்தில் முகம்மது மிகத் தெளிவாகக் கூறுகிறார். 'இஸ்லாத்தை விட்டு விலகுவதென்பது எக்காரணத்தைக் கொண்டும் ஒப்புக்கொள்ள முடியாதது, கண்டிக்கத்தக்கது, தண்டிக்கத்தக்கது எனக் கூறுகிறார். இதை **குரான் சுரா 47: ஆயாத் 23முதல் 28வரை** இதை இவ்வாறு கூறுகிறார்.

23 "இத்தகையோரைத்தாம் அல்லாஹ் சபித்து, இவர்களைச் செவிடாக்கி இவர்கள் பார்வைகளையும் குருடாக்கி விட்டான். - 24: மேலும் அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது அவர்கள் இருதயங்கள் (இருக்கின்றனவே) அவற்றின் மீது பூட்டுப் போடப்பட்டு விட்டனவா? - 25. நிச்சயமாக, எவர்கள் நேர்வழி இன்னதென்று அவர்களுக்குத் தெளிவான பின், தம் முதுகுகளைத் திருப்பிக் கொண்டு போகிறார்களோ, (அவ்வாறு போவதை) ஷைத்தான் அழகாக்கி, (அவர்களுடைய தவறான எண்ணங்களையும்) அவர்களுக்குப் பெருக்கி விட்டான். - 26 இது ஏனெனில் அவர்கள் எதை அல்லாஹ் இறக்கிவைக்கிறானோ, அதை வெறுப்பவர்களிடம், "நாங்கள் சில காரியங்களில் உங்களையே பின்பற்றி நடப்போம்" என்று கூறியதனாலேயாம். ஆனால், அல்லாஹ் அவர்களுடைய இரகசியங்களை

அறிகிறான். - 27. ஆகவே, அவர்களுடைய முகங்களிலும், அவர்களுடைய முதுகுகளிலும் அடித்து (உயிர்களைக் கைப்பற்றும்) மலக்குகள் அவர்களை மரணமடையச் செய்யும் போது (அவர்கள் நிலைமை) எப்படியிருக்கும், - 28. இது ஏனெனில் நிச்சயமாக இவர்கள் அல்லஹ்வுக்குக் கோபமூட்டுவதையே பின்பற்றி, அவனுடைய திருப்தியை வெறுத்தமைதான்; ஆகவே அவர்களுடைய செய்கைகளை அவன் பயனில்லாதவையாக ஆக்கி விட்டான்.

மேற்கூறிய வசனங்களில் இஸ்லாத்தில் நம்பிக்கையிழந்து விலகியவர்களுக்குத் தெய்வ நிந்தனையென அல்லாவின் தண்டனையை இவ்வுலகத்திலேயே அனுபவிக்க நேரிடுமென முகம்மது உறுதியாகக் கூறுகிறார். இதே போதனையை அல்-புகாரி தன் ஹத்தீசில் (Sahih Bukhari Volume 9, Book 83, Number 17) இவ்வாறு கூறுகிறார்: எப்போது ஒரு முஸ்லிம் அல்லாவிடம், அல்லாவின் தூதர் முகம்மதுவின் மீது நம்பிக்கை, தொழுகை செய்வதை உறுதியாக ஒரு முறை கூறிவிட்டு, அதன்பின் கீழே குறிப்பிட்டுள்ள மூன்று ஒழுங்கீன நிகழ்ச்சிகளில் ஈடுபட்டாலும் அம்முஸ்லிமின் ரத்தம் பூமியில் (கொலை) சிந்தப்படும்.

1. இஸ்லாத்தில் 'குஃயுசா' (Qisa) என்றால் ஒரு முஸ்லிம் கொலையுண்டதற்குப் பழிக்குப்பழியாக (ஈடாக) அக்கொலை செய்தவனையோ, அவனுடைய உற்றார் உறவினரையோ கொலை செய்யலாம். இஸ்லாத்தில் பழிக்குப்பழியாக உயிருக்கு உயிர், கண்ணுக்குக் கண் பறித்தல் என்பது சர்வ சாதாரணம். 2. ஷரியா சட்டத்திற்குட்படாத - அதாவது மணமான பின்னரும் தகாத முறையில் பெண்களுடன் உடலுறவு கொண்டால்; 3. இஸ்லாத்தை விட்டு வேறொரு மதத்தில் சேர்ந்து கொண்டால்; [369]

இன்னுமொரு ஹத்தீசில் அல்-புகாரி: (Sahih Bukhari Volume 9, Book 84, Number 57) இஸ்லாத்தை விட்டு வேறொரு மதத்திற்குச் சென்ற சில முஸ்லிம்களை 'அலி' என்பவரிடம் கொண்டு வந்தனர். அவர்களை 'அலி' தீக்கிரையாகினான். இந்த கொடுஞ் சம்பவம் நிகழ்ந்த பின் அங்கு இப்னு அப்பாஸ் வந்தான். 'இத்தண்டனை மிக மென்மையானது (soft). இவ்வாறு செய்வதைக் காட்டிலும், கத்தியால் குத்திக் குத்தித் துடிக்கத் துடிக்க 'ஹலால்' முறையில் சித்திரவதை செய்து கொலை செய்திருக்க வேண்டும். ஏனெனில் அதுதான் மிகப் பொருத்தமான (appropriate) தண்டனை' என்றான். இஸ்லாத்தை விட்டு மதம் மாற்றிக் கொண்டால் அதற்குத் தகுந்த தண்டனை 'கொலை' தான் என முடிவாகக் கூறுகிறார்.[370]

## நயந்து பேசி நம்ப வைப்பதின் சக்தி

ஜிம் ஜோன்ஸிடம் மக்களைக் கவரவைக்கும் சக்தி எது? இதை நாம் முழுதும் நன்கு கூறுபடுத்தி ஆய்ந்து, அதில் கண்ட உண்மைகளைக் கொண்டே இஸ்லாத்தில் புதிதாகச் சேர்பவர்களோடு ஒப்பீடு செய்துப் பார்த்தால், அதன்படி இவைகளில் கூறப்பட்டவையெல்லாம் புதியவர்களைக் கவருவதற்கே சொல்லப் பட்டது என முடிவுக்கு வந்து விடுவோம்.

Osherow: கீழ்க்கூறிய இவ்விரண்டிற்கும் ஜிம் ஜோன்ஸை பாராட்ட வேண்டும்:

1. சொல் நயமிக்கப் பேச்சால் பிறரைக் கவரும் சக்தி; 2. மனத்தால் எளிதில் மாறும் இயல்பை கொண்டவர்களைத் தனக்குச் சாதகமாகப் பேசித் தன் கூர்மதியால் செல்வாக்கைப் பயன்படுத்தியோ அல்லது திறமையாகக் கையாண்டோ கவர்ந்து விடுதல்;

---

[369] Sahih Bukhari Volume 9, Book 83, Number 17
[370] Sahih Bukhari Volume 9, Book 84, Number 57

இதன்படி ஜிம் ஜோன்ஸ் தனது செற்பொழிவைக் கேட்கபவர்களுக்குக் கண்டகண்ட வாக்குறுதிகளை (கழக) அரசியல்வாதிகள் போன்று அள்ளி வீசுவான்; மேலும் தான் நினைத்தை மற்றவரிடம் திறம்பட அறிமுகம் செய்து பின் நம்பவும் வைத்து விடுவான்; கேட்பவர் உள்ளத்தைத் தன் பேச்சுக் கவர்ச்சியால் கவர்ந்து, அவர்கள் கற்பனைகளை ஏறுமாறாக அளவுக்கு மீறிச் சிறகடித்துப் பறக்க வைத்து, அவர்களைத் தலையாட்டி பொம்மைகளாக்கி, எப்படி வேண்டுமானாலும் களிமண்ணை பிசைந்து ஓருருவாக்கும் குயவன் போலப் பிறரைத் தன் வசமாக்கி விடுவான்.

சிசீரோ கூறியது போல: **“ஒருவருடைய பேச்சுத் திறமையால், உலகில் எவராலும் நம்ப முடியாதவைகளைக் கூட ஒப்புக்கொள்ளச் செய்வதென்பது முடியாததல்ல. மிக எளிதும் கூட”**.

முகம்மதுவும் பேச்சாற்றலின் வலிமையை நன்கு உணர்ந்தவர். “நாவன்மை என்பதே ஒரு மாயாஜாலம்” இது அபூ தாவூத் ஹத்தீசில் உள்ளது. (Sunnan Abu Dawud; Book 41, Number 4994).[371]. மேற்கூறியதை அல்-புகாரியும் அதே போன்று தன் ஹத்தீஸில் கூறியுள்ளார். (Sahih BukhariVolume 7, Book 62, Number 76)[372] மற்றோரிடத்தில் முகம்மது இவ்வாறு தற்பெருமையாகப் பேசியுள்ளார், “எனக்கு அலலா பேச்சுவன்மையும் வன்முறைகளால் வெற்றியையும் அளித்துள்ளார்”.[373]

Osherow எழுதுகிறார்:” ஜிம் ஜோன்ஸின் சீடர்களெல்லோரும், அன்றாடத் தேவைகளுக்குப் பிறரை சார்ந்த வறியர்கள், சமூகத்தால் வெறுத்து ஒதுக்கப்பட்டவர்கள், இழிநிலையிலுள்ள சுகாதாரமற்ற சேரிகளில் வாழும் மிக ஏழைகள், கருப்பு நிற நீக்ரோக்கள், வயதானவர்கள் பலர் அதில் பலர் போதை மது போன்ற கெட்ட பழக்கங்களுக்கு அடிமையானவர்கள், சட்டத்தால் தண்டனை அனுபவித்த முன்னாள் குற்றவாளிகள். இவனிடத்தில் ஒரு சீடனும் படித்தவனோ, புத்திசாலியோ, செல்வந்தனோ யாரும் கிடையாது. [374] ஏனெனில், இவர்களைக் கொண்டுதான் வன்முறையால் பிறரை அடக்கி ஆள முடியும். இவர்களைத் தவிர வேறொருவரும் தயங்குவார்கள். இனி, முகம்மதுவின் ஆரம்பகால சீடர்களைப் பற்றி ஒப்பிட்டுப் பார்ப்போம். அவர்களில் பெருமளவு ஏழைகள், குடியுரிமை இழந்த கேட்பாரற்ற அடிமைகள், அல்லது பெற்றோர்களுக்குத் துரோகம் செய்யத் துணிந்தவர்கள். சமூகத்தால் ரௌடிக் கும்பலெனத் தீர்மானிக்கப்பட்ட குடிகார இளைஞர்கள், எதிலும் எவரிடம் பிடிப்பில்லாத பெண்கள் ஆகியோர்தாம் நிரம்பிக் கிடந்தனர். தன் சீடர் கும்பலைக் கூட்டிக்கொள்ள, முதலில் மேற்கூறியவர்களையே முகம்மது அணுகினார். இளைஞர்களைத் தங்கள் பெற்றோர் சொல் கேளாது அவர்களுக்கெதிராகத் தன்னையே பின்பற்றி அவர்களிடமிருந்து தப்பித் தன்னிடம் வரும்படி வற்புறுத்தித்தினார். முகம்மது அவ்வப்போது சமூக சமத்துவத்தையும் முஸ்லிம்களுக்குள் சகோதரத்துவத்தை வளர்த்துக் கொள்ளக் கூறினார். ஆனால் இஸ்லாமிய சகோதரத்துவம் வேறு, உலகத்தோரால் நினைக்கப்படும் சகோதரத்துவம் வேறு. இச்சகோதரத்துவத்தில் முஸ்லிம் அல்லாதவர்களைச் சேர்க்கவேண்டாமெனவும் வலியுறுத்தினார்.

[[[மொழிபெயர்ப்பாளர் பின்னூட்டம் - இதைப்பற்றி ஒரு கட்டுரைக் குறிப்பு (URL) http://bharatkalyan97.blogspot.in/2012/09/dr-ambedkars-views-on-islam-and-indian.html உள்ளது. **அதில் டாக்டர் அம்பேத்கர் பொதுவாக இஸ்லாத்தைப் பற்றியும்**

---

[371] Sunnan Abu Dawud; *Book 41, Number 4994*
[372] Sahih BukhariVolume 7, Book 62, Number 76
[373] Sahih Bukhari Volume 9, Book 87, Number 127
[374] Winfrey, C. Why 900 died in Guyana. *New York Times Magazine,* February 25, 1979.

**அதிலும் குறிப்பாக இந்திய முஸ்லிம்களைப் பற்றியும் மிகவும் மதிப்புக் குறைவாகக் கூறியுள்ளார்**]]].

தன்னிடம் சீடர்களாக வந்து சேர்ந்துவிட்டால், இறந்தபின் பெருமளவில் பரிசுகள் சுவர்க்கத்தில் காத்திருக்கின்றன எனக் கவர்ச்சிகரமாக ஆசை மூட்டினார். அதே சமயத்தில் தம்மை நம்பாத காஃபிர்களுக்கு மிகக் கடுமையான நரகம்தான் தயாராக இருக்குமெனச் சபித்தார். இதில் தனக்கெதிராக உள்ள அவர்களை எதிர்த்து, யாராக இருந்தாலும், அவர்களுக்கெதிராகக் கிளர்ச்சி செய்யுமாறு போதனை செய்து, ஒருவருக்கொருவர் மனவேற்றுமை கொள்ளத் தம் எண்ணம், சொல், செயல் ஆகியவைகளால் வளர்த்தும் வந்தார்.

மூன்று இஸ்லாமிய வரலாற்று ஆசிரியர்கள், தல்பாரி, இப்னு சா'த், இப்னு இஷாஃக் எல்லோரும் ஒருமுகமாக ஒப்புக்கொண்டது: முகம்மது பிதற்றிய இஸ்லாமிய போதனைகளைக் கேட்டு அதனால் வசீகரிக்கப்பட்ட சீடர்கள் மிகச் சிலர் தான்; ஆனால் முகம்மதுவுடன் சேர்ந்து கொண்ட பெரும்பாலானோர் கொள்ளையடிப்பதில் கிடைக்கும் செல்வத்திற்காகவும் சமூகத்தில் பொறாமை பூண்டு, இலவசமாகக் கிடைக்கும் வகைவகையான பெண்களிடம் உடலுறவு கொள்ளவும்தான் முகம்மதுவிடம் அக்காலச் சீடர்களாக ஆனார்கள். சீடர்களின் உள்நோக்கம் எதுவானாலும், இவர்கள்தான் முகம்மதுவுக்கு ஆரம்ப வெற்றியைப் பெற்றுத் தந்தனர். முகம்மதுவுடைய தோழர்கள் எந்த சட்டவிரோதச் செயலிலிலும் துணிவுடன் இறங்கிச் செயல் புரியும் ஆசாமிகள் எவரையும் கொலை புரியத் தயங்காதவர்கள். இன்றிருக்கும் முஸ்லிம்களோ, ஒரு விதத்தில் சொன்னால், மேற்கூறியவர்களை விட வேறானவர்களல்ல. இன்றைய முஸ்லிம்கள் சிலர் (தங்களை மிதவாதிகளென கூறிக்கொண்டு) பயங்கர வன்முறைத் தீவிரவாதிகள்தான், ஆதலால் அபாயமானவர்கள்; உட்பகை கொண்டவர்கள்; பலர் வன்முறைகளின் விளைவுகளை அறிந்திருந்தும் மறுப்புக் கூறாது முஸ்லிம்களுடன் மறைமுகமாக ஒத்துழைக்கும் பெயரளவு மிதவாதிகள். இப்போதும் உலகெங்கும் அரசியல்வாதிகள் (இந்தியாவிலும் தான்) தங்களுக்கெனச் சமூக விரோதக் கூலிப்பட்டாளத்தை (குண்டுக்கட்டையுடன்) (இஸ்லாத்தின் நோக்கு போன்று) அவ்வப்போது பயன்படுத்திக் கொள்கிறார்கள் அல்லவா!

### தாம் மிகச் சிறப்பு வாய்ந்தவனெனத் தாமே கூறிக் கொள்ளுதல்

வெறிப்பற்றீடுபாட்டில் நாட்டம் கொண்ட இயக்கத் தலைவர்கள் தங்களை எப்போதுமே மிக உயர்வாக எண்ணிக் கொண்டு எப்போதும் அதிகாரப் பித்துப் பிடித்து தற்புகழ்ச்சிக் கிறுக்கு ஆளுமை ஆசாமிகளாக இருப்பார்கள். ஜிம் ஜோன்ஸும், முகம்மதுவும் இதற்கு விதிவிலக்கல்ல. இவ்விருவரும் அளவுக்கு மீறிய வீண் பெருமிதம், தற்பெருமை எனும் பலூனை ஊதிப் பெருக்கிக் கொண்டு, தாமெனும் தன்நல வேட்கை நெறியுள்ளவர்கள். ஜிம் ஜோன்ஸின் பலூன் உடைந்தது. இனி. அடுத்து உடையவேண்டிய பலூன் ........... !

தன் இயக்கத்திற்கு ஆள் சேர்க்க ஜோன்ஸ் பற்பல நகரங்களில் பொதுக் கூட்டத்தைக்கூட்டி, அவைகளில் தன்னைப் பற்றியும் தன் இயக்கத்தைப் பற்றியும் மிக உயர்வாகக் கூறி, அங்கங்கே தன் இயக்கத் துண்டுப்பிரசுரத்தை (bit notices) விநியோகித்தான். துண்டுப்பிரசுரத்தில் இவ்வாறு இருந்தது:

"ஜிம் ஜோன்ஸ் - 'மக்கள் கோவில்' இயக்கப் போதகர்-வித்தகர் வியக்கத்தக்கவர்! மனித சக்திக்கு மீறிய நிகழ்ச்சிகளைத் தம் வாழ்க்கையில் நிகழ்த்திக் காட்டியவர்! உங்களுக்குள் ஓர் மலைப்பை உண்டாக்க வல்லவர்; இதுவரை நீங்கள் கண்டிராத ஓர் தனிப்பட்ட வழிமுறையில் உங்களுக்குள்

இருக்கும் மனநோயைக் குணமாக்கும் முக்காலமும் உணர்ந்த மகாஞானி! அவரே சத்தியத்தின் உருவாகத் தன் வாய்மொழி வாயிலாக உங்களுக்கு அளிக்க இன்று நம்மிடையே உரையாற்றுகிறார். வந்து பயனடைவீர்" எனக் கண்டிருந்தது.[375]

முகம்மதுவும் தன்னைப் பற்றித் தற்பெருமையுடன் புகழ்ந்து, குரானில் தானே எழுதிக்கொண்டு, அதை அல்லாவின் வாய்மொழி எனத் திரித்துக் கூறிய வசனங்கள்:

**குரான் 21: 107** -(நபியே!) நாம் உம்மை அகிலத்தாருக்கு எல்லாம் ரஹ்மத்தாக - ஓர் அருட் கொடையாகவேயன்றி அனுப்பவில்லை; **குரான் 68: 04** - மேலும், (நபியே) நிச்சயமாக நீர் மிக உயர்ந்த மகத்தான நற்குணம் உடையவராக இருக்கின்றீர்; **குரான் 33:21** - அல்லாஹ்வின் மீதும், இறுதி நாளின் மீதும் ஆதரவு வைத்து, அல்லாஹ்வை அதிகம் தியானிப்போருக்கு நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரிஉங்களுக்கு இருக்கிறது; **குரான் 81:19** - நிச்சயமாக (இக்குர்ஆன்) மிகவும் கண்ணியமிக்க ஒரு தூதுவர் (ஜிப்ரயீல் மூலம் வந்த) சொல்லாகும்; **குரான் 04:65** - உம் இறைவன் மேல் சத்தியமாக, அவர்கள் தங்களிடையே எழுந்த சச்சரவுகளில் உம்மை நீதிபதியாக, ஏற்றுப் பின்னர் நீர் தீர்ப்பு செய்தது பற்றி எத்தகைய அதிருப்தியையும் தம் மனங்களில் கொள்ளாது (அத்தீர்ப்பை) முற்றிலும் ஏற்றுக்கொள்ளாத வரையில், அவர்கள் நம்பிக்கை கொண்டவர்கள் ஆக மாட்டார்கள்.

**முகம்மதுவின் மாபெரும் குற்ற இயல்புகளுக்கு அல்லா எனும் இஸ்லாத்தின் கடவுளே நற்சான்றிதழ் வழங்கும் கேலிக்கூத்து போன்று வேறு எந்தக் கடவுளிடமும் இருக்க முடியாது.**

கடைசியில் கொடுக்கப்பட்ட குரான் வசனம் முகம்மதுவிடத்தில் முஸ்லிம்களுக்கு இருக்கவேண்டிய ஐயமற்ற கீழ்ப்படிதலையும் அவர் குரானில் கூறியிருப்பதைப் பற்றி மாற்றுக்கருத்து கூறவோ அல்லது விமர்சனமோ செய்யலாகாது என்றும் அவைகளையே ஏற்றுப் போற்றிக் குரானில் உள்ளது உள்ளபடியே தங்கள் அன்றாட நடவடிக்கைகளில் 'ஜே'ப் (ஓ"ப்) போட்டு ஒத்துப்போக வேண்டுமெனவும் தெளிவாக்குகிறது. இக்குரான் வசனங்கள் முகம்மதுவே தன் சுயநல நோக்குடன் தனக்காக எழுதிக்கொண்டது என இன்னுமா புரியவில்லை. எந்த கடவுளானாலும் இவ்வாறு கூற முடியுமா?

Osherow எழுதியது: "கோவிலில் அங்கத்தினர்களாக ஆகிய பின்னர், அவர்கள் நேருக்குநேராகக் கண்கூடாகக் காணக் கிடைத்த நடப்புகளுக்கும் அதற்கெதிராக ஜிம் ஜோன்ஸ் ஆரம்பத்தில் தன்னைப் பற்றி மிக உயர்வாகச் செய்துகொண்ட பிரகடனங்களுக்கும் இடையே உள்ள முரண்பாடுகள் மலைக்கும் மடுவுக்குமாகக் காணப்பட்டன. அவைகளுக்குக் காரணம் சீடர்கள் கற்பித்துக் கொண்டபடி: 'இவைகளுக்குக் காரணம் தாங்கள் ஜிம் ஜோன்ஸை இன்னும் நன்றாகப் புரிந்து கொள்ளாததாலோ அல்லது தங்களுக்குள்ள ஞான சூனியத்தாலோ தான் இக்குறைபாடுகள் உள்ளன. இவைகளைக் களைய இன்னும் இக்கோவிலில் அதிக ஈடுபாடு தேவையென தங்களைத் தேற்றிக்கொண்டனர். ஒரு முன்னாள் சீடர் 'நீவா ஸ்லை' கூறியது போல, இவைகளுக்கு இப்போது ஜிம் ஜோன்சைக் குறை கூறுவதால் என்ன பயன்?" எனத் தங்களையே நொந்து கொண்டனர்.[376]

மக்கள் கோவிலுக்குள்ளேயே ஒரு தனித்தன்மை வாய்ந்த, உண்மையைத் திரித்துக் கூறும் மொழியொன்று புதிதாக வளரத் தொடங்கியது. அதில் ஜிம்

---

[375] Suicide Cult: The Inside Story of the Peoples Temple Sect and the Massacre in Guyana (201P) by Marshall Kilduff and Ron Javers (1978)

[376] Winfrey, C. Why 900 died in Guyana. *New York Times Magazine,* February 25, 1979.

ஜோன்ஸ் கூறிய ‘ஆரம்பக் காரணங்களே’ தங்களுக்கு இருக்கும் தற்கால இடர்களுக்கு அடிப்படை என மனத்துள் கூறிக்கொண்டனர்.[377]

“வெளியில் சொன்னால் வெட்கம், மனத்துள் இருந்தால் துக்கம்”. எல்லாவற்றிகும் முடிவாக, பேச்சாற்றலை மிகச் சாதுர்யமாக உபயோகித்து, வேண்டுமென அங்கத்தினர்களை ஏமாற்றி, சாவு பற்றி ஜோன்ஸின் மொழியையும் கடந்து தங்களை உருமறைத்துக் கொள்ளவும் பழகி விட்டனர். நம்பிக்கை இழந்த இந்தப் பாசாங்கு வாழ்வையே மிக உயர்ந்த துணிகரச் செயலெனவும் ஜிம் ஜோன்ஸின் புரட்சிச் சாவையே வீறார்ந்த புனிதச் செயலெனவும் பொருள் விளக்கத்தை அளித்துத் தங்களைத் தேற்றிக்கொண்டு அவன் கூறியவற்றை இதுவரை நம்பியது போலவே இ(எ)தையும் நம்பினார்கள். இனி வேறு இல்லையே!

மேற்கூறியவையனைத்துடன் ஒன்றுக்கும் குறைவில்லாமல் அநேக முஸ்லிம்கள் அதே எண்ணத்துடன் இன்றும் உள்ளனர். பல முஸ்லிம்கள் தாங்கள் செய்த பிழைகளுக்குத் தாங்களே பொறுப்பென்றும், தற்செயலாக நடந்த நல்லவை யனைத்துக்கும் காரணம் அல்லாவின் அருளெனவும் மனத்துள் இறுதியாகக் கற்பித்துக் கொண்டவர்கள். இனி நம்பத்தானே வேண்டும். வேறு வழியில்லையே! இப்படிச் சொன்னால் கொஞ்சமாவது நிம்மதி கிடைக்கும்! அலட்டிக்கொண்டால் இன்னும் ஆபத்து! சாவைத் தழுவுவதில் கூட ஜோன்ஸின் மக்கள் கோவில் கொள்கைக்கும் இஸ்லாத்தின் கோட்பாட்டுக்கும் உள்ள வியக்கத்தக்க ஒற்றுமையைக் காணலாம்.

இக்குறிப்பு தொன்று தொட்டு இஸ்லாத்தின் வழக்கத்தில் இருந்து வருகிறது. **“உங்களுக்கு வாழ்க்கை எவ்வளவு விரும்பத் தக்கதோ, அதே போன்று முஸ்லிம்களான எங்களுக்குச் சாவில் விருப்பமதிகம்”. இக்குறிப்பை கி.பி 636-இல், முஸ்லிம் படையின் தளபதி காலீத் இப்னு வாலீத் மூலமாக ‘ஆபூ பக்கர் காலிஃப்’, பெர்சிய தளபதி ‘குஸ்ரூ’வுக்கு குஃடைஸ்ஸா போருக்கு முன்னர் அனுப்பி இருந்தான். செப்டம்பர், 11, 2001-இல் நடந்த இரட்டை அடுக்கு மாடி வியாபார மையம் எனும் பெயர் கொண்ட கட்டட குண்டு வெடிப்புத் தொடர்பாக அமெரிக்காவுக்கு எழுதியனுப்பிய கடிதமொன்றில் ‘ஒசாமா பின் லேடன்’ இதே சொற்களுடன்தான் ஆரம்பித்து எழுதினான். ‘குஸ்ரூ’வை மேற்கோள் காட்டி அக்கடிதத்தில்:** “அமெரிக்காவில் உள்ள நீங்கள் எல்லோரும் முஸ்லிம்களாக மாறிவிட வேண்டும். அதில்தான் உங்களுக்குப் பாதுகாப்பு. அது உங்களுக்கு நலமாகவும் இருக்கும். இல்லாவிட்டால் **நீங்கள் எவ்வளவுக்கெவ்வளவு வாழ விரும்புகிறீர்களோ, அதே போன்று சாவில் முஸ்லிம்களுக்கு மிக விருப்பமதிகம்.** சாவைப் பற்றி பயப்படாத முஸ்லிம்கள் படையுடன் உங்கள் காஃபிர் வாழ்க்கையை முற்றிலும் அழிக்க வந்துள்ளேன்” எனக் கண்டிருந்தது. இக்குறிப்பு முஸ்லிம்களின் ஒவ்வொரு இஸ்லாத்து இயக்க போதனையின் ஆரம்பத்திலும் இதே வசனங்கள் ஒத்திசையுடன் ஒப்பிக்கப்படும்; இவ்வசனம் முஸ்லிம்களின் ஒவ்வொரு செய்தித்தாள்களிலும், மத்ரசா பாட புத்தகங்களிலும் கட்டாயம் தெளிவாக கொட்டை எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருக்கும்.

### ரகசிய அறிவைத் தான் அடைந்ததாகக் கூறிக் கொள்ளுதல்

வெறிப்பற்றீடுபாடு இயக்கத் தலைவர்கள் எப்போதும் தங்களைப் பற்றி மிகையாகக் கூறிக் கொள்வதுண்டு. இதற்காகப் பல அற்புதச் செயல்களை எல்லாச் சீடர்கள் முன் செய்து காட்டுவதும் உண்டு. அந்த அற்புதம் என்பது எப்படி

[377] Mills, J. *Six years with God.* New York: A & W Publishers, 1979

நிகழ்த்தப்பட்டது என்பதில்தான் எல்லாப் பிரச்சனையும் மிக நுட்பமான ரகசியமும் அடங்கியுள்ளன. ஜிம் ஜோன்ஸும் அநேக அற்புதங்களை நிகழ்த்தினான்! இவைகளுள் ஒன்றாக, புதிதாக வந்து சேர்ந்தவர்களின் கடந்தகால வாழ்க்கையைப் பற்றிய ரகசியங்களைப் பிட்டுப்பிட்டு வைத்துப்பான். இங்குதான் ரகசிய நுட்பம் ஆரம்பிக்கிறது. இவ்வற்புதத்தைத்தை நிகழ்த்திக் காட்ட நம்பத்தகுந்த சீடர்களை அப்புதுச் சீடனைப் பற்றிய தகவல்களை அறிந்து வர அனுப்பி வேவு பார்த்து விடுவான். அப்புதியவனின் பெட்டி மூட்டை முடிச்சுகளை அவனில்லாத சமயத்தில் 'ஆய்ந்து பார்க்க' ஜிம் ஜோன்ஸி'ன் கைத்தடிகளுக்குக் கட்டளையிடுவான். அதில் கண்டவைகளைக் கொண்டு பிறர் முன்னரோ அல்லது நேரிடையாக அவனிடத்திலோ வெளிப்படையாக சமயோசிதமாகக் கூறி அவர்களை நாணச் செய்வதைத்தான் அற்புதமெனக் கூறிக்கொள்வான்! இவை அனைத்தும் எப்படி ஜிம்முக்குத் தெரியுமென அவையிலுள்ளோர் வியந்து விடுவார்கள். எதிர்பாராத இந்நிகழ்ச்சியால் மிகவும் திகைப்படைந்த அச்சீடனும் மற்ற சீடர்களும் ஜிம் ஜோன்ஸை முற்றிலும் அறிந்த ஞானி எனப் போற்றுவார்கள். இது தான் அற்புதத்தின் லட்சணம்.

முகம்மதுவும் இவ்வாறே செய்தார். தன் ஒற்றர் படையை நான்கு புறமும் அனுப்பித் தனக்கு வேண்டிய தகவல்களைச் சேர்ப்பார். ஒரு சரியான கட்டத்தில் இத்தகவல்களைச் ஒன்று சேர்த்துக் குரான் வசனமாக காபிரியேல் அல்லாவிடமிருந்து தனக்காகப் பிரத்யேகமாகக் கொண்டு வந்ததாக அங்குள்ளோரை ஆச்சரியத்தில் மூழ்க வைப்பார். அல்லா, காப்ரியேல் எனும் இவ்விருவர் யார்? அவர்களுக்கும் முகம்மதுவுக்கும் எப்படி சம்பந்தம்? குரான் எப்படி ஏன் எதற்காக எழுதப்பட்டதென நாம் நன்கறிவோம்.

இரண்டாவது அத்தியாயத்தில் அடிமை மாரியாவுடன் உடலுறவுக்காக முகம்மதுவுக்கிருந்த தனிக்கவர்ச்சியைப் பற்றி விவரமாகக் கூறியிருந்தோம். இந்த உறவு பற்றி முகம்மதுவின் மற்றொரு மனைவி ஹஃப்சாவுக்கு இருந்த சீற்றம், அதன் பின் முகம்மது இனி மரியாவுடன் உறவுகொள்வதில்லை என ஹஃப்சாவுக்குச் செய்து கொடுத்த சத்தியப் பிரமாணம், அதற்குப் பின் முகம்மதுவுக்காக அல்லாவின் குறுக்கீடு என மட்டும் அங்கு தெரிவித்திருந்தோம். இனி இந்நிகழ்ச்சிக்குத் தொடர்புள்ள அல்லாவின் குறுக்கீடு வசனத்தைப் பற்றி இங்கு பார்க்கப் போகிறோம். மாரியா நிகழ்ச்சி பற்றி யாரிடம் சொல்ல வேண்டாமென ஹஃசாவிடம் முகம்மது வேண்டிக் கொண்டார். அதிலும் மிக முக்கியமாக 'ஆயீஷா'விடம் கூறிவிட வேண்டாமென்றார். ஹஃப்சாவுக்கோ இந்த ரகசியத்தைத் தன்னுடன் வைத்துக்கொள்ள முடியவில்லை (பெண்ணல்லவா-நெகிழும் மனது). ஆகவே இந்நிகழ்ச்சி பற்றி 'ஆயிஷா'வுடன் சொல்லி அழுதாள். இதனால் முகம்மது மிகக் கடுஞ் சீற்றமடைந்தார். இந்த ரகசியத்தை ஹஃப்சாதான் ஆயிஷாவுக்கு வெளியிட்டாள் எனக் காண்டுபிடிக்க வெகு நேரமாகவில்லை. ஹஃப்சா தனக்குக் கீழ்ப்படியவில்லை என அறிந்து, அதை மாற்றித் தனக்கு சவுகரியமாக 'அல்லா'தான் நன்கறிந்தோன், உணர்ந்தோனாகையால் அதுவும் இதைப் பற்றி முகம்மதுவுக்கு அவ்வப்போது உதவ ஓடோடி வந்திடுவாரல்லவா!!. தனிச்செய்தி தனக்கு வந்தது எனப் பொய் கூறி, ஒரு வசனத்தையும் விட்டார் அவிழ்த்து! முகம்மதுவுக்கு பெண்களுடன் உடலுறவின்போது ஏற்படும் இடர்களுக்கு உடனுக்குடன் தங்குதடையின்றி எளிதாகச் செய்து முடிக்கக் குரானில் வசனங்கள் தோன்ற ஆரம்பித்து விடும். முகம்மதுவுக்கு வேண்டிய பெண்கள் உடலுறவுபற்றிய விஷயத்தில் அல்லா எல்லாம் அறிந்தவரல்லவா!! அல்லா எனும் கடவுளுக்கு வேறு வேலையில்லையா எனக் கேட்காதீர்கள்! இதைத்தானே குரான் மூலம்

செய்து வைக்கிறார்! குரான் வேறெதற்கு உள்ளது?! தன் கடைசித் தூதருடைய புணர்ச்சித் தேவைகளை (பெண் பிறப்புறுப்புத் = ("அவ்ராத்)" தேவைகளை) உடனுக்குடன் நிறைவேற்றக் காத்திருக்கும் பரத்தமைத் தரகரல்லவா! - (pimp) இச்சொல்லை 'ஆயிஷா'வே (முன்னர்) கூறியுள்ளாள்!

**குரான் வசனம்:** 66:3 -"மேலும், நபி தம் மனைவியர் ஒருவரிடம் ஒரு செய்தியை இரகசியமாக ஆக்கிவைத்த போது அவர் (மற்றொருவருக்கு) அதை அறிவித்ததும், அ(வ்விஷயத்)தை அல்லாஹ் அவருக்கு வெளியாக்கி வைத்தான், அவர் அதில் சிலதை தெரிவித்ததும், சிலதை(த் தெரிவிக்காது) புறக்கணித்தும் இருந்தார், (இவ்வாறு) அவர் அதைத் தெரிவித்த போது "உங்களுக்கு இதைத் தெரிவித்தவர் யார்?" என்று அப்பெண் கேட்டார். அதற்கு அவர் "(யாவற்றையும்) நன்கறிந்தோனும் உணர்ந்தோனும் (ஆகிய அல்லாஹ்) என்குத் தெரிவித்தான்" என்று (பதில்) கூறினார்."

அல்லாவுக்கும் இடைத்தரகர் தொழில் தவிர வேறு வேலையில்லை எனத் தெரிகிறது. முகம்மது எங்கு யாருடன் உடலுறவு கொண்டார் என மேற்பார்வை ஆளுமை செய்யத்தான் நேரமிருக்கும் போலத் தெரிகிறது. இதனால் உடனுக்குடன் முகம்மதுவின் நலனை மனதிற்கொண்டு குரான் வசனைத்தை வெளியிட்டு அவரொரு 'அல்லாவின் கடைசித் தூதரெ'னும் பதவியை வலுப்படுத்த வேண்டுமே!! இத்தனை நாட்கள் காத்திருந்து தன் ஹஃப்சா ரகசியம் வெளிப்பட்டதை அறிந்து அல்லாவும் அதாவது முகம்மதுவே தானே எழுதிக்கொண்ட குரான் வசனமென இன்னும் கூடத் புலப்படவில்லையா?

இதெல்லாமே ஒரே கேலிக்கூத்தாகவே நமக்குக் காணப்படுகிறது. இதில் முகம்மது எந்தப் பெண்ணை விரும்பினாலும் அவளை முகம்மதுவுக்குக் கூட்டிக்கொடுக்கும் 'விபசாரத் தரகராகவும்' (pimp) 'வம்பளப்பில்' (gossiper) ஆர்வம் கொண்டவர் எனவும், கோள் மூட்டித் தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்கும் அற்ப குணமுள்ளவரெனவும் (instigator), 'ஆயிஷா' அபூ பக்கரின் ஆறு (6) வயதுக் குழந்தையை மணம் முடித்து வைப்பதும், அடுத்து முகம்மதுவின் சொந்த வளர்ப்பு மகன் 'சைய்த்'தின் மனைவி' சைனாப்'ஐ முகம்மதுவுக்கு மணம் முடித்து வைப்பதும் ஆகிய எல்லாவற்றையும் அல்லாதான் முன் நின்று நடத்தியது போன்ற குரான் வசனத்தால் மூலம் நமக்கு நிரூபிக்கிறார்! முகம்மது கூறியபடி இப்படி தொகுக்கப்பட்ட அத்தனை குரான் வசனங்களும் மிக அற்புதமாம், தெய்வீக நிகழ்ச்சிகளாம் (miracles). இதற்கப்புறமும் இம்முட்டாள்தனமான நிகழ்ச்சிகளைப் பற்றி இன்னும் விவரமாக எழுதி நம் நேரத்தை வீணடிக்கத் தேவையில்லை. ஒன்று மட்டும் மிகத் தெளிவாகிறது. இக்குரானும் ஓர் அற்புதமென முகம்மதுவே கூறி மகிழ்ந்து போகிறார். (**இதை Sahih Bukhari ஹதீஸில் Volume 9, Book 92, Number 379 காணலாம்**) முகம்மதுவின் இஸ்லாம் போன்றுதான் எல்லா வெறிப்பற்றீடுபாடு இயக்கத் தலைவர்களும் செய்வார்கள். மேலும் இவர்கள் இதனால் சீடர்களைத் தங்கள் விருப்பப்படி இழுத்த இழுப்புக்கு உட்படவைக்கும் சூத்திரதாரர்கள்..

## முகம்மதுவும்-ஜிம் ஜோன்சஸும் தாங்கள் அமைத்து வைத்த தந்திரத்தால் சீடர்களை ஏமாற்றுதல்

இவ்விபரீத வெறிப்பற்றீடுபாட்டுச் சீடர்களும், தங்கள் தலைவர் புரியும் முறைகேடான தன்நலக் காரியங்களிலும் தகிடுதத்தத் திட்டங்களிலும் மனப்பூர்வமாக ஈடுபடுத்திக் கொண்டு உற்ற உடந்தையாக இருப்பதுதான் மிக விபரீதமாக உள்ளது. ஜிம் ஜோன்ஸின் 'வெறிப்பற்றீடுபாடு மக்கள் கோவிலை'ச் சேர்ந்த Jeanne Mills எனும் ஒரு சீடர் தன் தலைவன் உணவு ஏற்பாட்டு விஷயத்தில்

நிகழ்த்திய அற்புதத்தைப் பற்றி விவரமாக எழுதினாள். இங்கு குறிப்பிடும் நிகழ்ச்சி ஒரு ஞாயிற்றுக்கிழமையில் நடந்தது. அன்று நடந்த தொழுகைக்காக எதிர்பாராமல் வருகை தந்திருந்த விருந்தாளிகளுக்கும் சேர்த்து, வேண்டிய அளவிற்கு, உணவு தயாரிக்கப் போதிய நேரம் இல்லை ஒரே மாதிரியான வறுத்த கோழி உணவும் கைவசம் இல்லை. இருக்கும் உணவை வைத்துக் கொண்டு இன்னும் ஐம்பது விருந்தாளிகளுக்கு உணவளிக்க இயலாதெனக் கணக்கிடப்பட்டது. இவ்வளவு பெரிய கூட்டத்தை ஒரே சமயத்தில் ஜோன்ஸ் எதிர்பார்க்கவில்லை. அப்போது ஜிம் திடீரென அறிவித்தான்: பைபிளில் உள்ள கதையில், ஜீசஸ் உணவுப் பற்றாக்குறையை நீக்கத் தன் ஆசீர்வாதத்தால் உண்டாக்கியது போன்று, (ஏசு கிறித்து 'ஐந்து அப்பங்களை கொண்டு ஐயாயிரம் பேருக்கு விருந்தளித்தார்'என பைபிளில் உள்ளது!) ஜிம் ஜோன்ஸும் அம்மாதிரியே எல்லோருக்கும் வேண்டிய உணவு கிடைக்க ஆசீர்வதித்தான்.

இதை நிரூபிப்பது போலச் சில நிமிடங்களில், எல்லோருக்கும் அதிர்ச்சியுண்டாக்குவதாக, அங்கிருந்த சமையலறையிலிருந்து Eva Pugh என்பவள் புடை சூழ, மிகப்பெரிய தட்டில் சுடச்சுட கமகமவென மண-மணக்கும் வறுக்கப்பட்ட கோழிகள் சமையறையிலிருந்து தொடர்ந்து வந்த வண்ணம் கூட்டத்திலுள்ள விருந்தினருக்கு பரிமாறப்பட்டது. உடன் அங்கிருந்த மகிழ்ச்சி ஆரவாரத்தில் கைதட்டி வரவேற்றனர். கொண்டு வந்து பரிமாறிய உணவும் மிக ருசியாக இருந்தது. இம்மாதிரி இதுவரை ருசித்துச் சாப்பிட்டதில்லை என எல்லோரும் ஒருமுகமாக ஒப்புக்கொண்டனர். இதன் பின்னணியில் இருந்த தந்திரம் (trickery) இதுதான். அன்று கூட்டத்திற்கு வந்திருந்தவர்களுள் கடைசி வரிசையில் இருந்த Chuck Beikman சொன்னது: 'இந்த ஏற்பட்டுக்குச் சற்று முன்பாக, தான் வரும் வழியில் Eva Pugh தன் காரை எடுத்துக் கொண்டு துரிதமாகப் பக்கத்திலிருக்கும் Kentucky Fried Chicken stand (popularly known as 'KFC') எனும் கடையில் கண்டதாகக்' கூறி, இதற்கு நன்றி ஆசீர்வாதங்களெல்லாம் 'Colonel Sanders' எனும் 'KFC' நிறுவனருக்கே சாரும்' என நக்கல்-தமாஷாகச் சொன்னான். பின் வரிசையில் நின்று கொண்டிருந்தோர் தங்களுக்குள் இருத்தி வைக்க முடியாமல், திடீரெனக் 'கொல்'லென வெடிச் சிரிப்பால் உண்டான சிரிப்பலை ஓயச் சிறிது நேரமாயிற்று. நக்கல் கலந்த இச்சிரிப்பை, 'பாம்புச் செவி'யுள்ள ஜிம் ஜோன்ஸ் கேட்ட சிறிது நேரத்திற்குப் பிறகு "இந்த வறுத்த கோழி பரிமாறுதலைக் குறித்துத் தாறுமாறாகத் பரிகாசம் செய்த Chuck Beikman தற்போது வாந்திபேதியில் துடித்துக் கொண்டிருக்கிறான்; இவ்வேதனையை அனுபவிப்பதற்குப் பதிலாக தான் இறந்திருந்தாலும் தேவலையெனச் சொல்லிக் கதறுகிறான்." என வக்ரமாகச் சிரித்தான். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு, நக்கல் தமாஷ் செய்த Chuck Beikman முகம் வெளிறி, நடக்க முடியாமல் இரு காவலர்கள் அவனைத் தூக்கிப் பிடித்து ஜிம்மின் முன் கொண்டு நிறுத்தினர். ஜிம் அவனைப் பார்த்து ஏளனமாக, 'அப்போது என்னமோ சிரித்தாயே! இப்போது அழு என ('இந்தி திரைப்படம் 'ஷோலே'-'கப்பர் சிங்' வசனம் போன்று); ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?' எனத் திமிருடன் 'Chuck Beikman'ஐக் கேள்வி கேட்டான். அதற்கு அவன், "நான் சொன்னது தவறு. என்னை மன்னித்து விடுங்கள்" என்றான். Chuck Beikmanப் பார்த்த மற்ற சீடர்கள், 'இனி ஜிம் ஜோன்ஸைப் ப்ற்றித் தவறாக எச்சொல்லையும் கூற மாட்டோம்' என உறுதி பூண்டனர்: 'Chuck Beikman' கூறிய ஏளனப் பின்னூட்டத்தைக் கேட்ட ஜிம், உடனுக்குடன் Chuck Beikmanக்குக் கொடுத்த 'உணவில் வாந்திபேதிக்கான நச்சு மருந்தைக் கலந்து கொடுக்க 'Eva Pugh'க்கு சைகை செய்தான்' எனப் பின்னர் எனக்குத் தெரிந்தது. [378]

[378] Mills, J. *Six years with God.* New York: A & W Publishers, 1979

இங்கு நாம் கவனிக்க வேண்டியது: ‘Chuck Beikman’க்கு நச்சு மருந்தைக் கலந்து கொடுக்க ‘Eva Pugh’ எனும் சீடர் உதவி தேவைப்பட்டது. நமது கேள்வி - இங்கு” ‘Eva Pugh’ என்பவள் சீடராக இருப்பினும், தெரிந்தே இம்மாதிரி மோசடியில் ‘ஜிம்’முடன் கூட்டாகத் தன் சரிநிகரான சீடருக்கே இப்படித் துரோகம் செய்ய வேண்டிய அவசியம் என்ன? ஏனென்றால், இவ்விபரீத வெறிப்பற்றீடுபாட்டுச் சீடர்களும், தங்கள் தலைவர் புரியும் முறைகேடான தன்நல ‘அற்புதங்களிலும்’ ஆதாயங்களிலும் தில்லுமுல்லுத் தகிடுதத்தத் திட்டங்களிலும் மனப்பூர்வமாக ஈடுபட்டுக் கொண்டு உற்ற உடந்தையாக இருப்பதுதான். அப்படிச் சீடர்கள் ஒத்துழைப்பு இல்லையெனில், இவ்வாறாக ‘அற்புதம் எனப் பெயரிட’ எந்த நிகழ்ச்சியும் நடைபெற்று இருக்க முடியாது. முகம்மதுவுக்கும் இம்மாதிரி வக்ர உதாரணங்களை அற்புதங்களெனப் பெயர் வைத்துக் கூறலாம். அல்-புகாரி ஹத்தீஸில் (**Sahih Bukhari Volume 1, Book 4, Number 170**) இவ்வாறு எழுதப்பட்டுள்ளது. அசர் (Asr - evening) தொழுகையை ஆரம்பிக்கு முன் கை-கால்களைச் சுத்தம் செய்யத் தண்ணீரைத் தேடினர். கிடைக்கவில்லை. பின்னர் எப்படியோ ஒரு பானையில் தண்ணீர் முகம்மது முன் வைக்கப்பட்டது. அதில் அவர் கை பட்டவுடன் அதிலிருந்து தண்ணீர் பீறிட்டு வந்தது. இதைக் கொண்டு அங்கிருந்தோர் யாவரும் மேனி அலம்பும் சடங்கைச் செய்தோம். இது முகம்மது செய்த அற்புதங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.[379] மற்றொரு ஹத்தீசில் ஒரெ ரொட்டித் துண்டைப் பன்மடங்காக ஆக்கி விருந்து படைத்ததாக ஒரு கதையும் உண்டு;[380]. மற்றொரு ஹத்தீசில் ஒரு கடினமான கற்பாறையை மண்வெட்டி கொண்டு கொத்தியவுடன் அது மிருதுவான மண்ணாக மாறியது;[381] மற்றொரு ஹத்தீசில், நான்கு அல்லது ஐந்துபேருக்கு மட்டுமே இருந்த குறைந்த உணவை ஒரு முழு ராணுவ சேனைக்கே அளித்து அனைவரும் வயிறார உண்டு ஏப்பமிட்டுக் களித்தனராம்! [382]. இது எப்படி!!

இவைகளைத் தவிர இன்னும் அனேக அற்புதங்களை முகம்மது செய்து காட்டியதாகச் சொல்வார்கள். இவைகள் எவரும் பார்த்திராத அற்புதங்களாம்!. இதில் ஒன்று ஆவிகள் / பிசாசுகள் நிறைந்த உலகில் ஒரு இரவு முழுதும் கழித்து அவர்களை முஸ்லிமிகளாக்கினாராம்![383]

இதில் வியப்பொன்றுமில்லையே! ஏனெனில், இன்றுகூட அதன் சுவடுகளை முஸ்லிம்கள் உருவில் காண்கிறோமே! அத்தியாயம் இரண்டில் கூறிய ஒரு விசித்திரக் கவர்ச்சியுள்ள கதையை இங்கு நினைவுபடுத்த விரும்புகிறோம். அதில் முகம்மது ஒரு ஷைத்தானுடன் கடும் மற்போரிட்டு அதனை வென்று, அங்குள்ள தூணில் கட்டிப்போட்டு சீடர்களுக்குக் காட்ட நினைத்த (ஆனால் காட்டாது விட்ட) கட்டுக்கதை! இந்தப் பிரபல கதை ‘மீரஜ்’ எனும் அற்புத-தெய்வீகச் செயலென சுவர்க்கப் பயண விவரப் பத்தியில் உள்ளது.

இப்னு சா’த் ஒரு கதையைத் தன் பங்குக்காகச் சேர்த்துள்ளார். இது அபூ ரஃபீ எனும் முஸ்லிமைப் பற்றியது. முகம்மது ஒரு நாள் இவன் வீட்டிற்கு வருகை தந்தார். முகம்மதுவுக்காக ஒரு முழு ஆட்டையே வெட்டிச் சமைத்திருந்தான். பாவம்! முகமம்துவுக்குப் பிடித்த தோள்பட்டையை முதலில் பரிமாறினான். முகம்மது மற்றொரு தோள்பட்டைத் துண்டைக் கேட்டார். இதையும் சாப்பிட்டு முடித்த பிறகு மறுபடியும் இன்னுமொன்று கேட்டார். முகம்மதுவோ சாப்பாட்டில்

---

379 Sahih Bukhari Volume 1, Book 4, Number 170
380 Sahih Bukhari Volume 5, Book 59, Number 428
381 Sahih Bukhari Volume 5, Book 59, Number 427
382 Sahih Bukhari, Volume 7, Book 65, Number 293
383 Shih Muslim Book 026, Number 5559

பெருந்தீனியர். அபூ ரஃபீ அவரிடம், ”ஒரு ஆட்டுக்கு இரு தோள்பட்டைகள் தானே இருக்கின்றன. மற்றொன்றுக்கு எங்கு இப்போது போவேன்!” என்றான். அதற்கு முகம்மது, “நீ என்னை இக்கேள்வி கேட்காதிருந்தால், சமைத்த ஆட்டுத் தோள்பட்டைகள் ஏராளமாக உன் பாத்திரத்தில் அற்புதமாக நிறைந்திருக்கும்” எனப் பதிலளித்தார்.[384]

இவ்வாறு விந்தையிலும் விந்தையான நம்பமுடியாத (கட்டுக்) கதைகளை முஸ்லிம்கள் தமது உரிமையாகக் கொண்டாடினாலும், அவைகளை நம்பாத சிலர், ‘அல்லாவின் தூதர்’ முகம்மதுவை மறுபடியும் ஏதாவதொரு அற்புதத்தைத் தங்கள் முன் செய்து காட்டுவதற்கு அடிக்கடிக் கேட்டனர். அதற்கு ஒவ்வொரு தடவையும் அவர் மறுத்து வந்தார். மற்ற கடவுள் தூதர்கள் அற்புதங்களை நிகழ்த்தக் கடவுளின் அருள் இருந்தது. அவ்வாறு நிகழ்த்தினார்கள். ஆனால் முகம்மதுவோ தான் இயற்றிய ‘குரான்’ ஒன்றையே அல்லா தன்னைக் கொண்டு உருவாக்கி அல்லாவே தன் இறைச்செய்தியாகத் தன்னிடம் மட்டுமே வெளிப்படுத்தினார், ஆகவே இதுதான் மிக அற்புதம் எனத் தற்பெருமை கொண்டார்.[385] ‘குரானையே ஒரு பொய்க் களஞ்சியம் என்பது குரானைப் பற்றி முற்றிலும் அறிந்த பல முஸ்லிமல்லாதோரின் மெய்மையான அபிப்பிராயம்!

இதற்கான காரணம்: ஒரு நம்பிக்கையில் உறுதியுடன் நம்புபவர்கள் அதில் கூறப்பட்ட பொய்களையும் சேர்த்து எல்லாவற்றையும் உண்மையென நம்பிவிடுவார்கள். ஒரு இயக்கத்தில் அதீதமான நம்பிக்கை கொண்டவர்கள், தங்கள் இயக்க நம்பிக்கைக்கு அதிக ஆதரவு தரப் பொய்-மோசடிகளை முழுமனத்துடன் ஏற்பார்கள். இவர்களுக்குத் தங்கள் நம்பிக்கைக்குகந்த இயக்கத்தின் வளர்ச்சிதான் மிக முக்கியம். ஆக இக்குறிக்கோளை அடைய எதை வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருப்பார்கள். இதையே ஒரு தினப்பழக்கமாக மேற்கொண்டு அதைத் தங்கள் செயல்முறையாக அனுசரிப்பார்கள்.

‘ஒரு சாரார் தங்கள் தீர்மானப்படி ஒரு குறிப்பிட்ட திட்டம் வெற்றியுடன் நிறைவு பெற வேண்டுமெனக் கருதிவிட்டால் அதை எட்டிப்பிடிக்க நியாயமற்ற வழிகளானாலும் அவைகள் யாவுமே இவர்களுக்கு நியாய வழிகள்தான்’ (end justifies the means). மிகப் பிரபல பிஃரென்ச் நாட்டு அறிஞர், சிறந்த கணக்கியல் வல்லுனர் ‘பாஸ்கால்” என்பவர் எழுதியது: “ஒரு மதத்தின் மீது உறுதியான நம்பிக்கை கொண்டவர்கள் அம்மத மேம்பாட்டுக்காகப் பற்பலத் தீங்குகளை மிகத் துணிவுடனும் மகிழ்ச்சியுடனும் செய்வது போல வேறெந்த இடங்களிலும் செய்வதில்லை”. இக்கூற்றுக்கு ஏற்ற சான்றுகளை சரித்திரத்திலிருந்து அள்ளித் தர முடியும். ஒரே மதத்தின் பெயரால் இழைக்கப்பட்ட வன்முறை தீச்செயல்கள் கொடுமைகள்தான் இதுவரை உலகில் நடந்த மற்ற எல்லாப் பேரழிவுகளைக் காட்டிலும் மிக அதிகமாக உள்ளது. இதை இன்னும் அழுத்தமாகக் கூறவேண்டுமானால், ‘மோசமான மதத்தில் உள்ள நம்பிக்கை மனிதனைக் குருடாக்குகிறது, வரம்பற்ற மத நம்பிக்கைகள் மனிதனை மேன்மேலும் முழுதுமாகக் குருடனாக்கிவிடுகிறது’ என்றார். ஆனால், இஸ்லாத்தின் அதிகாரத்தை எதிர்த்துப் பேச எவருக்கும் தேவையோ தகுதியோ கிடையாது என ‘இமாம் கஸ்ஸாலி’யின் அபிப்பிராயம். [386]

[384] Tabaqat, Volume 1, Page 375
[385] Sahih Bukhari Volume 9, Book 92, Number 379
[386] Abu Hamid Muhammad al-Ghazzâlî (1058-1111) known as Algazel is one of the most celebrated scholars in the history of Islamic thought. Born in Iran, he was an Islamic theologian, philosopher, and mystic. He contributed significantly to the development of a systematic view of Sufism and its integration and acceptance in mainstream Islam.

அடுத்தது, 'தக்கியா' (Taqquiah) என்றால் இஸ்லாத்தால் அனுமதிக்கப்பட்ட புனித ஏமாற்றல் - அதாவது எதிரிகளை ஏமாற்றி, நடித்து அவனுடன் சேர்ந்து அவனையே அழித்திட (Joining the enemy and ultimately destroying him from within) இஸ்லாத்தில் இருக்கும் அசௌகரியமான உண்மைகளை மறைத்துப் பொய்களால் வேண்டிய மட்டும் நிரப்பி அல்லாவின் / முகம்மதுவின் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடியுமானால், அக்குறிக்கோளை அடைய எவரிடத்திலும் எக்கணமும் எக்காரணத்துக்காவது பொய் கூறுவது இஸ்லாத்தால் புனிதமென போற்றப்பட்டும். (Most authoritative book for all references on **Islamic Trilogy** quoted-'**The Reliance of the Traveler**', translated by Nuh Ha Mim Keller, section r8.2, page 745) [387]

முகம்மதுவே ஒரு தடவை எதிரிகளை ஏமாற்றத் தன்னையே திட்டமிட்டுத் திட்ட அனுமதித்துத் தம் காரியத்தை சாதித்துக் கொண்ட பல நிகழ்ச்சிகளில் ஒன்றான நிகழ்ச்சி, பானு நாதிர் இனத்தலைவன் இப்னு காஃப் அஷ்ஷராபை'க் கொன்ற சான்றுடன் முதல் அத்தியாயக் கடைசியில் கொடுக்கப் பட்டுள்ளது. ஆக, இஸ்லாத்தின் இரு கண்களாகக் கருதப்படும் முக்கியக் கொள்கைகள்: ஒன்று 'ஜிஹாத்'(தக்க காரணமின்றி நிரபராதிகள், நிராயுதபாணிகள் ஆகியோர் மீது திடீர்க் கொள்ளை அடிப்பதைப் புனிதப் போரெனக் கூறிக்கொள்ளுதல்). மற்றொன்று: 'தக்கியா' (புனிதப் பொய்கள்). இவைகளைத்தான் நாசிகளும், கம்யூனிஸ்ட்டுகளும், உலகெங்கும் உள்ள எல்லா வன்முறை இயக்கங்களும் இஸ்லாத்தையே பின்பற்றிச் செய்தன. முடிவில் என்ன ஆயிற்று என உலகமக்கள் யாவரும் அறிவர்!

Kasindorf ஜிம் ஜோன்ஸைப் பற்றி எழுதும் போது, "இவன் மிகச் சாதுரியமாக தன் 'மக்கள் கோவில்' அமைப்பைப் பற்றிப் புதிதாகச் சேர வந்துள்ளோரிடம் நல்ல அபிப்பிராயத்தை ஏற்படுத்தத் தன் திறமையால் அவர்களைக் கவர்ந்து கையாளுவது வழக்கம். இதனால் 'ஜிம்'மைப் பற்றி வெளி உலகக் கருத்து நன்கு தோற்றுவிக்கப்பட்டது. தன் சீடர்கள் பலருக்கு ஏற்கனவே இருந்த அரசியல் செல்வாக்கைத் தனக்கு ஆதரவாகப் பயன்படுத்த அச்சீடர்களைக் கொண்டே தகவல்துறை முக்கியஸ்தர்களுக்கும் அரசியல்வாதிகளுக்கும் தன் கோவில் அமைப்பைப் பற்றி ஆதரவாகக் கூறியும்; இவர்களை எதிர்த்தவர்களை மோசமாகத் திட்டி விமர்சித்து அவர்களுடைய குறைபாடுகளை வெளியிடப் போவதாக மிரட்டியும் தங்கள் கடிதங்களில் எழுதுவது வழக்கம்.[388]

டேனிஷ் நாட்டுப் பத்திரிக்கை Jyllands-Posten முகம்மதுவின் சில கேலிச்சித்திரங்களை வெளியிட்டபோதும் சரி, 15வது போப் பெனிடிக்ட் பெசன்டைன் சக்ரவர்த்தி முன்னொரு காலத்தில் கூறியதை மறுபடியும் குறிக்கோளாகக் காட்டிய போதும் சரி. அதில் "ஏதாவது புதிதாக நல்லவைகளை முகம்மது எப்போதாவது சொந்தமாகச் சொன்னது / செய்தது உண்டா?" எனக் கேள்வி கேட்டவுடன், உலக முழுதிலும் அமைதியைக் குலைத்து எழுந்த கலகத்தில் எதிலும் நிரபராதிகளான, எதிலும் சம்பந்தமில்லாதவர்களைக் கொன்று குவித்த அக்கிரமத்தை உலகத்தால் மறக்கமுடியுமா? இதற்கெல்லாம் காரணம் கொலைவெறி படைத்த இஸ்லாமல்லவா?[389]

## வெளி ஆட்களிடம் அவநம்பிக்கையும், தாமே செய்த குற்றங்களுக்குக்கூட பொறுப்பை ஏற்காது இருத்தலும்

---

387 Ahmad Ibn Naqib al-Misri, *The Reliance of the Traveler*, translated by Nuh Ha Mim Keller , Amana publications, 1997, section r8.2, page 745

388 Kasindorf, J. Jim Jones: The seduction of San Francisco. New West, December 18, 1978.

389 Speech of Pope Benedict XVI in münchen, altötting and regensburg (september 9-14, 2006)

Osherow எழுதும் போது: "தன் செய்கைகளுக்கெதிராக எந்த மாறுபட்ட கருத்துக்களையும் ஏற்காத ஜோன்ஸ், அவைகளைக் கூறிய பேர்களைத் தன் விரோதிகளென அவனே தீர்ப்பளித்து, அவர்கள் தான் தன் மீது அநாவசியமாக பழி கூறி தன்னை இழிவுபடுத்துவதாக அவர்கள் மீதே பழி சுமத்தினான். இவர்கள் வெளியிட்ட ஆதாரங்களனைத்தும் நம்பத் தகுந்ததல்ல எனத் தன் சீடர்களிடம் நைச்சியமாகப் பேசி நம்ப வைப்பதும் அவ்ன் வழக்கம். இவ்வழக்கம் முஸ்லிம்களுக்கும் பொருந்தும். ஏனெனில், தங்களை எதிர்ப்போரை முதலில் 'யூதர்கள்' எனவோ அல்லது யூதர்கள் கூலிப்படை எனவோ முத்திரை குத்தி விடுவார்கள். யூதராகப் பிறப்பதும் தொடர்ந்து இருப்பதும் குற்றமில்லையே! ஆனால் இதை இப்படிக் கூறக் காரணம் யூதர்களை அவமானப்படுத்தவே அன்றி, வேறொன்றுக்குமல்ல. எவராவது இஸ்லாத்தை உள்ளது உள்ளபடி விமரிசனம் செய்துவிட்டால், அவர்களைத் தங்கள் தருக்கவாதத்தால் வெல்ல முடியாமல், அவர்களிடம் 'அறிவுக்குகுகந்தபடி யதார்த்தங்களுடன் வாதாடமுடியாமல் சொந்த சலுகைகளை உபயோகப்படுத்தி'த் தங்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பு வழங்குமாறு கேட்டுக் கொள்வார்கள் (ad hominem).

முஸ்லிம்கள் உலகெங்கும் நிகழ்த்திய கொடுஞ்செயலுக்குப் பிறகும் போப் சொற்பொழிவில் கூறியதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் விதத்தில் இஸ்லாமியக் கருத்துக் குழு ஒன்று 'போப் கூறியதனைத்தும் தவறென நிரூபிப்பதற்குப் புது விளக்கமேதும் கூறாது அரைத்த மாவெனச் (same old way) சுவையற்ற 'பழைய விபரீத பாணி'யில் இதுவரை எல்லோருக்கும் விடுத்த அதே விளக்கங்களை அனுப்பிப் 'போப்' அவர்களுக்கு எதிர்ப்புரை எழுதினார்கள். இதற்குப் பதிலா கிடைக்கும்? சாக்கடையில் யாராவது கல்லை விட்டெறிவார்களா? அப்படி எறிந்தவர் மீதல்லவா சாக்கடை நீர் சிதறும்! சாக்கடை நாறும்போது நாறுகிறதெனக் கூறுவது தவறா? அதற்குச் சான்று தேவையா? சாக்கடை நீராலும் நாற்றத்தாலும் எழும் சுற்றுப்புற வியாதிகள் எல்லோருக்கும் இன்னும் பரவாமல் தடுத்துக் கொள்வது தவறல்லவே!

Osherow எழுதுவது: 'ஜேம்ஸ் டவுனில்' மக்கள் கோவிலில் அரங்கேற்றப்படும் அனர்த்த நிகழ்ச்சிகளுக்கெதிராகச் சீடர்கள் மனதில் ஆழ்ந்து கவனிக்கும்படியான உண்மைகள் எப்போதாவது எழுதப்பட்டு, அவைகள் யாவும் கோவில் சீடர்களுக்கும் எட்டும்படியும் நடந்து விட்டால், அவைகள் யாவும் 'வீண்' ஐயப்பாடென இகழ்ச்சியாகக் கூறி மறுத்து விடுவார்கள். இவை ஏன் இப்படி உண்டானது என உண்மை நிகழ்ச்சிகளுடன் ஒப்பிட்டு ஆராயாமல், அங்குள்ளோர் தங்களுக்குள் இருக்கும் குறைபாடுகளெனவும், அல்லது இயக்க நம்பிக்கையில் இருக்கவேண்டிய உண்மை நம்பிக்கைக் குறைவுகளுக்கு அறிகுறியே எனவும் பொருள் விளக்கமளித்துக் கொள்வார்கள்.

இதற்கிணையாக முஸ்லிம்கள் தாங்கள் ஒரு நாட்டிலிருந்து புதிய நாட்டில் குடிபுகுந்த பிறகு, தாங்கள் விட்டு வந்த நாடு மிக அலங்கோலமாக இருப்பதற்குக்கு உண்மைக் காரணம் ஏதும் கூறாமல், 'உண்மை இஸ்லாத்தை' எப்படி அனுசரிக்க வேண்டுமோ அவ்வாறு அனுசரிக்காமல் விட்டதே மிக முக்கிய காரணமென நொண்டிச் சமாதனம் கூறிவிடுவார்கள். ஆனால் இவ்வலங்கள் யாவுமே இஸ்லாத்தை அனுசரிப்பதால் மட்டுமே விளைந்ததென்ற உண்மையை ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

இப்போது இப்புத்தகத்தை எழுதிய 'அலி சினா'வாகிய நான் சொல்லழுத்தத்துடன் கூறுவது: 'என் புத்தகத்திற்கெதிராக முஸ்லிம்கள் எதிர்ப்புரை

எழுதாமல், இதற்குப் பதிலும் அளிக்காமல், இஸ்லாத்தை விட்டு விலகியவர்கள் பட்டியல்தான் நாளுக்கு நாள் நீண்டு போய்க்கொண்டேதான் இருக்கிறது! இனி இஸ்லாத்தைக் காப்பாற்ற முகம்மது எனும் அல்லாவாவோ அல்லது அல்லாவெனும் முகம்மதுவானாலும் முடியாது! உலகுக்கு உண்மை தெரிந்துவிட்டது!! வரும் 2030 வருடம் நினைவில் இருக்கட்டும்!!

## அளவற்ற முழு ஈடுபாடு

ஜிம் ஜோன்ஸ் ஆணவத்துடன் தனக்கு வேண்டிய முழு ஆதிக்கத்தையும் கட்டுப்பாட்டையும் அக் கோவில் சூழ்நிலையில் உண்டாக்கி வைத்திருந்தான். Osherow கூறுவது: “ஜேம்ஸ்டவுனில் காணப்பட்ட கீழ்ப்படிதலையும் ஜிம் ஜோன்ஸ் சீடர்களை அடக்கி வைக்கும் சக்தியையும் கூறுபடுத்தி ஆயும்போது, அவர்கள் ஏன் அவ்வாறு அங்கே பெட்டிப் பாம்புகளாக அடங்கி இருந்தனர் என என்னால் யூகிக்க முடிகிறது. எப்போது ‘மக்கள் கோவிலில்’ குடி புகுந்தார்களோ, ஜிம் ஜோன்ஸிடம் முன்பை விட இன்னும் அடங்கிப் போவதைத் தவிர சீடர்களுக்கு வேறொரு வழியுமில்லாது போயிற்று. அங்கு ஜோன்ஸிசின் ஆதிக்கம் மிக உக்கிரமாகக் காணப்பட்டது. ஏனெனில், 24 மணி நேரமும் சுற்றுச்சுவரில் அனேகக் காவலர்களுடன் கூடி இருந்தது. மீறித் தப்பி ஓட முயன்றாலும் முடியாதபடி அக்குடியிருப்பைச் சூழ்ந்து அடர்த்தியான காடுகள் சூழ்ந்திருந்தது. மேலாக அவர்கள் கையிலிருந்த சீடர்கள் கையொப்பமிட்ட வெற்றுக்காகித ஆவணங்களும், வெளிநாட்டுக்குப் பயண இசைவுப் புத்தகமும் (passport), ஆரம்பத்திலேயே பறிமுதல் செய்யப்பட்டு ‘ஜிம்’மிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன; ஆரம்ப நாட்களில் ஜோன்ஸின் வற்புறுத்தலால் தங்களைப் பற்றித் தாங்களே கையொப்பமிட்டு ஒப்புக்கொண்ட உண்மையில்லாத குற்றக்-குறையேற்புகளும் சீடர்களை எப்போதும் பயமுறுத்திக் கொண்டிருந்தன. அடுத்து அங்கே உணவும் கீழ்த்தரமாக இருந்தது, வேலை பளுவோ மிக அதிகம், தூக்கமின்மையும் அடிக்கடி அவர்களை அச்சுறுத்தும் ஜேம்சின் வசைமாரியும் அவர்களை முற்றிலும் கையாலாகாத கோபத்திலும் கீழ்ப்படிதலிலும் கொண்டு போய் நிறுத்தி இருந்தன. இவைகளே போகப்போக சீடர்களுக்குப் பழக்கமாகிப் போனது”.

வெறிப்பற்றீடுபாடுகள் முழுவதிலும் உடலாலும் உள்ளத்தாலும் சீடர்களை அடக்கி வைப்பது என்பது மிகவும் கட்டாயம். அப்படிச் செய்யாவிட்டால் உலகில் வெறிப்பற்றீடுபாடு ஒன்று கூட இருக்க முடியாது. முகம்மதுவும் இஸ்லாத்திலிருந்து ஓடிப்போன சீடர்களை வெறுத்தார். முகம்மதுவின் நடப்பு முறைக்கும் ஜிம் ஜோன்ஸின் நடப்பு முறைக்கும் வேறுபாடு இதுதான். ஜேம்ஸிடம் உடல் அடக்கி ஒடுக்கி வைப்பதுதான் அதிகம், ஆனால் முகம்மதுவிடம் உடலாலும் உள்ளத்தாலும் சீடர்கள் அடக்கி வைக்கப்பட்டனர். உள்ளத்தால் அச்சுறுத்துவது உடலால் அச்சுறுத்துவதைக் காட்டிலும் மிகக் கொடிது; சகித்துக்கொள்ள முடியாதது. இஸ்லாத்தில் உள்ளத்தை அச்சுறுத்தி வைப்பதால், முஸ்லிம்கள் தன்னிச்சையாகவே இஸ்லாத்தில் இன்னும் ஈடுபாடு அதிகமாக இருப்பதாக (குறைந்த பட்சம்) காட்டிக்கொள்ள வேண்டியதாக ஆகிறது. இதனால், முஸ்லிம்கள் இஸ்லாத்தில் தொடர்ந்து இஸ்லாமிய அடிமைகளாக இருப்பதற்கு மனப்பூர்வமாகத் தங்கள் இயல்பில் இடமளித்து விடுகிறார்கள்.

Osherow எழுதுகிறார்: “கோவிலில் சேருவதற்கான சடங்குகள் முடிந்து சிறிது நாட்களிலேயே சீடர்களிடமுள்ள கொஞ்ச நஞ்ச எதிர்ப்பும் அல்லது அங்கிருந்து தப்பி ஓடும் எண்ணமும் முடியாதென ஆகிவிடும். எப்படியானாலும், ஜிம் ஜோன்சை விட்டு ஓடிவிடவே சில சீடர்கள் உள்ளத்தால் அதிகம்

விரும்பினாலும், பெரும்பான்மையோர் அவனையே முற்றிலும் நம்பித் தொலைந்து தொடரவும் நேர்ந்தது. ஒரு பெண்ணின் கையில் இவ்வாறு பச்சை குத்தி இருந்தது: "ஜிம் ஜோன்ஸே உலகிலுள்ளோரைக் காட்டிலும் எனக்கு மிகச் சிறந்தவர்".[390]

ஜேம்ஸ்டவுனில் கூட்டுச் சாவும் சீடர்களுக்குத் தவிர்க்க இயலாது போயிற்று. மேலும் அச்சாவில் அவர்கள் அழகைக் கண்டார்களாம்! ஜிம் ஜோன்ஸின் சீடர்களில் ஒருவனான மக்கள் கோவிலின் வக்கீலான 'சார்லஸ் காரி', இறக்கும் தருவாயில் கூறியது: "இது மிகச் சிறந்த நேரம்! நாமெல்லோரும் சேர்ந்தே இறந்து போவோம்" என்றானாம்![391]

இச்சீடர்களில் ஒருவன் பல் மருத்துவரிடம் அச்சமயத்தில் போய்விட்டதால் சாகும் சடங்கில் கலந்து கொள்ள முடியவில்லை. 'அச்சமயத்தில் நான் மட்டும் அங்கிருந்தால் நான்தான் சாகும் வரிசையில் முன்னே நின்றிருப்பேன். மேலும் அந்த நச்சு திரவத்தை உட்கொள்வதை ஒரு கௌரவமாகக் கருதி இருப்பேன். எனக்கு அதிருஷ்டமில்லை. சாவும் சடங்கை நான் தவற விட்டுவிட்டேனே' என 'ஓ'வெனக் கதறி ஒப்பாரி வைத்தானாம். [392]. இது இன்னொரு ரகம். சாவைத் தவிர்த்துவிட்டானல்லவா? இதுதானே ஒரு பாதுகாப்பு வழி. சாதாரண மக்களைக் கூட இம்மாதிரி உச்சநிலைத் தீவிர நடவடிக்கையில் எது ஈடுபட வைக்கிறது? மகா கீழ்த்தரமான மனிதனையும் 'இறையின் அம்சம்' உள்ளவனாக ஒப்புக்கொள்ளத் தீர்மானித்துவிட்ட எவனும், பின்னர் அம்மனிதனைத் தங்கள் மனத்தில் இருத்தி வைத்து, சாதாரண மக்களே அக்கொடியோனின் பைத்தியக்கார மூளையையும் தங்களுக்குள் சேர்த்துக் கொண்டு, அவனுக்கு ஒத்துழைக்கத் தன்னிச்சையுடன் பலிகடாவாக இருக்க இயல்பாகத் தீர்மானித்து விடுகின்றனர். பரஸ்பர நன்மையின் பொருட்டு இவ்வித கொடுவெறித் துன்ப விழைக்காம இணைச்சார்பில் (sadomasochistic co-dependency) பலிகடாவே பலிகடாவாக ஆகிவிடத் தன்னிச்சையாக விரும்பிக் கொள்கிறது. இம்மாதிரி வெறிப்பற்றீடுபாட்டில் ஈடுபாடுள்ளோர் யாவரும் தங்கள் தீவிர ஈடுபாட்டை, நிரூபிக்கும் விதத்தில் தங்களைத் தாங்களே தவறாக பயன்படுத்திக்கொள்ள எந்த கடுந்துன்பத்தையும் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளவும் தயாராகி விடுகின்றனர்.

முகம்மதுவின் ஆரம்பகாலச் சீடர்கள் கெட்ட வழிகளில் ஈடுபாடு கொண்ட பணக்காரக் குடும்ப இளைஞர்கள். இவர்களும் மசூதியில் சவுகரியமில்லாத படுக்கையில் எல்லோருடன் உறங்கினர். முகம்மது திடீர்த் தாக்குதலில் கொள்ளையடித்துச் செல்வந்தராக ஆவதற்கு முன், அனேக தடவை இவ்விளைஞர்கள் உணவின்றி உறங்கியதும் உண்டு. அப்போது இவர்கள் தங்களுக்குள் போட்டி போட்டுக் கொண்டுத் தங்கள் தலைவர் முகம்மதுவைச் சந்தோஷப்படுத்துவதில் மிக்க துடியாக இருந்தனர். இந்த ஹத்தீசில்: "ஒருதடவை முகம்மது மேனி அலம்பும் சடங்குக்காகத் தண்ணீர் கொண்டு வந்து அலம்பிக் கொண்டார். மீதித் தண்ணீரை விட்டுச்சென்றார். அங்கிருந்தோர் எல்லொரும் அத அல்லாவின் ஆசியெனத் தங்கள் உடலில் பூசிக்கொண்டனர்".[393] முகம்மதுவும் இம்மாதிரி செய்கைகளை மிக உற்சாகப்படுத்தினார். 'இன்னொரு தடவை ஒரு சீடன் தனக்குக் கண்ணில் மிக்க வலியிருக்கிறதென முகமம்துவிடம் வந்தான். அவனுக்குத் தன் வாய் உமிழ் நீரை அவன் கையில் துப்பி வந்தவன் கண்ணில்

[390] Cahill T. In the valley of the shadow of death. *Rolling Stone*. January 25, 1979.இ
[391] Lifton, R. J. Appeal of the death trip. *New York Times Magazine*, January 7, 1979.
[392] Gallagher, N. Jonestown: The survivors' story. *New York Times Magazine,* November 18, 1979.
[393] BukhariVolume 1, Book 4, Number 187

இட்டு, அல்லாவின் அருளை வேண்டினார். உடன் கண் வலி என வந்தவன் வலியே இல்லை எனக் கூறிச் சென்றுவிட்டானாம்’ .[394]

ஆனால் முகம்மதுவுக்கே இருந்த எண்ணிலடங்காத வியாதிகளைக் குணப்படுத்திக்கொள்ள அவராலேயே முடியவில்லையே! பாவம்!! அவருக்கு நடந்தால் வலி, திரும்பினால் வலி, கண்பார்வையும் சரி கிடையாது, உடலுறவும் கொள்ள இயலாது, ஆனால் அவர் உமிழ் நீருக்கு அத்தனை மகிமை என முஸ்லிம்கள்தான் கூறுகிறார்கள்!!! இதை ஆங்கிலத்தில் **‘placebo effect’** எனக் கூறுவார்கள். இம்மாதிரி இடை நிகழ்ச்சிகளை அதிகப்படியாகச் சொன்னால், நம் தமிழ்ப் பேச்சுவழக்கில் (**Colloquial**) **“காக்காய் உட்கார்ந்ததும் பனம்பழம் கீழே வீழ்ந்தது”** என்றே கூறலாம். இம்மாதிரியே **சில ஈரானியர்கள், ஆயத்துல்லா குமைனியின் கல்லறையில் தொழுததில் தங்களுக்கு வியாதி குணமடைந்ததாகக் கூடச் சொல்கிறார்கள்**!!

**தனித்த நிலை**

Osherow இதைப் பற்றி விவரிக்கும்போது: “தனித்த நிலை” அல்லது ‘தன்னிடம் எவரும் தலையிடக்கூடாதெனக் கொள்கை’ எப்போதுமே மனதை உருக்கும்; அதிலும் ஜேம்ஸ்டவுனில் இருந்த கொடுமை மிக அதிகம். இதைத் தங்கள் வாழ்நாள் முடிவுவரை சீடர்கள் ஜிம் ஜோன்சையே நம்பி அதனால் உலகத் தொடர்பற்று அநாதைகளாக மடிந்தனர். இவர்களுக்கு இந்த தனித்த நிலை இல்லாதிருந்தால் 911 பேர்களில் குறைந்தது பெரும்பான்மையினரைக் காப்பாற்றி இருக்க முடியும். ‘இது எங்கும் ஏற்படலாம்’ என்ற ஒரு சமூகப் பிரச்சனையாதலால், ‘ஏன் இப்படி ஆனது?’ என நாம் இதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். ஜிம் ஜோன்சின் அறிக்கைகள் முன்னுக்குப் பின் முரணாக இருப்பினும், அவர்கள் அவன் மீது வைத்த நம்பிக்கையைத் தங்கள் சொந்த விஷயமாகவே, ‘பிறர் அதில் தலையிடத் தேவையில்லை’ என, ஏன் எதற்காக அவன் தலைமையை அங்கீகரித்தனர்?

முகம்மதுவால் எந்த அற்புதச் செயல்களையும் காட்ட முடியவில்லை. இல்லாத ஒன்றைப் பெரிதாக ஆக்கி, அந்த பலூனை ஊதிப் பெரிதாக்கிய பெருமைக்கு வெறிப்பற்றீடுபாடு கொண்ட ஹத்தீஸ் ஆசிரியர்களும் ஏனைய முஸ்லிம்கள்தான் முக்கிய காரணம். முகம்மது ஏதாவது உண்மையான அற்புதச் செயல் ஆற்ற முடியுமா என எதிர்பார்த்த மெக்கா மக்களுக்கு, முகம்மது அளித்த ஒரே பதில்: தனக்கோ அல்லது எந்த அல்லாவின் தூதர் எனச் சொல்லப்பட்ட எவருக்குமே அற்புதங்கள் நிகழ்த்தத் தகுந்த சக்தி கிடையாது. **ஆகையால் தானெழுதிய குரானே ஓர் பேரற்புதமெனப் பதிலளித்தார் எனப் பார்த்தோம்.**

[[[மொழிபெயர்ப்பாளர் பின்னூட்டம்: இந்த ஹத்தீஸ் :**Sahih Bukhari Volume 9, Book 92, Number 379**,**M. Muhsin Khan** என்பவரால் இஸ்லாத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஆங்கில ஹத்தீசின் மொழி பெயர்ப்பின் சுருக்கம்:

“அல்லாவின் கிருபையால் அவர் தூதராக பணியில் அமர்த்தப்பட்ட பல தூதருக்குள் எந்த தூதருக்கும் அற்புதங்களை நிகழத்தும் திறன் அளிக்கப்படவில்லை. ஏனெனில் இவைகள் மக்களுக்குப் பாதுகாப்பும், நம்பிக்கையும் அளிக்கிறது. ஆகவே முகம்மதுவாகிய எனக்கு மட்டும்தான் அல்லாவின் தெய்வீக அகத் தூண்டுதலால் பிரத்தியேகமாக குரான் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. ஆக இக்காரணங்களால் கியாம நாளில் மற்ற தூதர்களைப் பின்பற்றும் சீடர்களைக் காட்டிலும் எனது சீடர்களான

[394]Bukhari Volume 4, Book 52, Number 253

இஸ்லாத்து முஸ்லிம்கள் அதிக எண்ணிக்கையில் இருக்கப் போகின்றனர்'' என தன்னைத் தானே முகம்மது மெச்சிக் கொள்கிறார்.

Downloaded from: http://www.cmje.org/religious-texts/hadith/bukhari/-**092**sbt.php ]]] in English and translated into Tamil.

குரானே ஏதேதோ சப்பைக்கட்டு கட்டி எதை எதையோ சொந்தக் கற்பனையில் புனைந்து முகம்மதுவால் உருவாக்கப்பட்டாலும், அது பரிசோதனைக்குட்படும் போது ஒவ்வொரு வசன வாதமும் தூள்தூளாகி விடுகிறது. முகம்மதுவின் முன்னுணர்வு மிக வளர்ச்சியுறாதது; முகம்மதுவே இதை ஒரு அற்புதம் எனச் சொல்லி விட்டால் அது அற்புதமாகிவிடுமா! மேலும் அவருக்கு ஆன்மீக அனுபவமே எந்நாளிலும் கிடையாது. இது அவரே எழுதிய குரானின் வசனங்களிலிருந்து தெளிவாகிறது. எங்கேயும் ஒரே முரண்பாடாகக் காணலாம். இக்குரானையும் படித்து அதை நம்பும் முஸ்லிம்களும் அதில் கூறியபடி தங்கள் வாழ்க்கையைக்கூடத் தியாகம் செய்யும் அளவிற்கு எப்படித் துணிகிறார்கள்!

இதற்கு Osherow ஒரு விளக்கம் அறித்துள்ளார். "ஜிம் ஜோன்சின் சீடர்கள் ஜேம்ஸ்டவுனில் வெளித் தொடர்பற்றுப் பிரித்து வைக்கப்பட்டதால், அவர்களுக்கு வேறுவிதமாகச் சிந்திக்க எவ்வித செயல் நோக்கமும் இல்லாது போயிற்று; ஏற்க மறுத்தலோ அல்லது தப்பி ஓடிவிடுவதோ என்பது எண்ணிப் பார்பதற்குக் கூட இயலாதது. இம்மாதிரி சந்தர்ப்பங்களில் ஒவ்வொருவருக்குள்ளும் இருந்த சிக்கலான சூழ்நிலையில் ஒரு புது செயல் நோக்கமே உருவாகும். இச்சமயத்தில் இக்கட்டு நிலையிலுள்ளோர் இம்மாதிரி நடைமுறைக்குகந்த ஐயத்திற்கிடமற்ற வழியில் சிந்திக்கத் தலைப்படுவார்கள். உதாரணமாக, உளவியல் சார்ந்த சமூக ஆராய்ச்சியில் அறிந்தது: சில குழந்தைகளுக்குப் பிடிக்காத ஒரே 'பாகற்காய் கறி'யை (bitter gourd) ஒவ்வொரு நாளும் சமைத்தளித்தால், இதே காய்கறியைப் போகப்போக வேறு வழியின்றி சுவைக்கொவ்வாது என்ற எண்ணத்தைக் கைவிட்டுவிட்டு விரும்பிச் சாப்பிடவும் ஆரம்பிப்பார்கள்.[395] மற்றொரு உதாரணம்: ஆண் படிக்காதவன்; பெண் மெத்தப் படித்தவள்: இதில் பெண்ணுக்குப் பிடிக்காத கணவன்-மனைவி உறவு உண்டாகிவிட்டால், இனி அவ்வொருவனுடன்தான் வாழ வேண்டி வரும் எனும் சூழ்நிலையும் உருவாக்கினால், மெத்தப் படித்த அதே பெண் அப்படிக்காதவனிடம் இருக்கும் இயல்புகளால் ஈர்க்கப்பட்டு அவனே தன் மனத்துக்குகந்த மணாளன் என அவனையே ஏற்றுக்கொள்வாள்.[396]

வெளி உலகத் தொடர்பு அறவே உண்டாகாதபடி அதற்கேற்ற தடையரண்களை வெறிப்பற்றீடுபாட்டுத் தலைவர்கள் கட்டாயம் செய்து விடுவார்கள். ஜிம் ஜோன்ஸும் கயானா நாட்டுக் காட்டில் 'ஜேம்ஸ்டவுன்' எனும் புதுக்குடியிருப்பை நிறுவி அதற்குத் தன் பெயரையே சூட்டினான்.

முகம்மதுவும் யூத பூமி 'யாத்ரிப்' எனும் இடத்தைத் தேர்ந்தெடுத்து அதில் தாமும் தம் சீடர்களுடன் ஒண்டிப் பிழைக்க வந்தனர். பிறகு "ஒண்டவந்த பிடாரிகள்" ஊரில் இருப்போரை விரட்டியடித்து விட்டு, அதில் தம் உரிமையைக் கொண்டாடினர். உட்காயத்திற்குப் பின் உடற்காயமாக யாத்ரிபுக்கு முகம்மது தம் பெயரையே மதீனா என (Medinat ul-Nabi (Prophet's town) என வைத்துக் கொண்டார். இதுவும் எல்லாவிதத்திலும் ஜேம்ஸ் டவுனையே ஒத்திருந்தது. அங்கே முகம்மதுவின் சர்வாதிகாரமும் நடந்தது. மதீனாவில் எவராவது முகம்மதுவின் அதிகாரத்திற்குப் புறம்பாகச் செயல்பட்டால், அவமானப்படுத்தப்பட்டோ

---

[395] Brehm, J. Increasing cognitive dissonance by a *fait-accompli*. *Journal of Abnormal and Social Psychology*, 1959, 58, 379-382.

[396] Darley, J. and Bersceild, E. Increased liking as a result of the anticipation of personal contact. *Human Relations*, 1967, 20, 29-40.

தண்டனைக்கு ஆட்பட்டோ அல்லது நொடியில் கொலையும் நடந்தேறிவிடும். 'மிதனத்-உல்-நபி' அதாவது மதீனாவிலும் ஜேம்ஸ் டவுனில் நடந்தவாறே நடந்தேறியது. முகம்மதுவின் ஒவ்வொரு சொல்லும் அப்படியே நிறைவேற்றப்பட்டது. ஒரு தடவை ஜேம்ஸ்டவுனில் நுழைந்தால் அதைவிட்டு வெளியேற இயலாது. இஸ்லாத்தில் நுழைந்தால் அதிலிருந்து வெளியேறுவது நடைமுறையில் முடியாது.

இப்னு அபி சாரா (Ibn Abi Sarh) என்பவன் முகம்மது தன் 'வஹி'க்களை (குரான் வசனங்களை) சிறிது நாட்களுக்குப் பிறகு அவனிடத்தில் சொல்லச்சொல்ல அதைக் குரான் வடிவில் வார்த்தவன் (எழுத்தர்). அவன் அக்கால அளவுகோல்படி மெத்தப் படித்தவன். முகம்மதுவோ சற்றும் படிக்காதவர். பலதடவை முகம்மது சொல்லும் போது அவைகளைக் கூறுபடுத்தி மாற்றுச் சொற்களைப் புகுத்திப் படித்து காட்டுவது உண்டு. முகம்மதுவும் அக்கருத்துக்களை அப்படியே ஏற்பது வழக்கம். குரானை எழுதும் போது, முகம்மது எப்படி எந்தந்த விதத்தில் எங்கெங்கு அபாண்டப்பொய்களை அடுக்கடுக்காக இட்டுக்கட்டிக் கூறுகிறார் என ஆதியோடு அந்தமாக இப்னு அபி சாராவுக்கு அத்துப்படியாகத் தெரியும். இவனுக்கோ நாளுக்கு நாள் தான் செய்யும் ஏமாற்றுத் தொழில் அவனுக்கே கொஞ்சமும் பிடிக்கவில்லை. தக்க தருணத்தில் முகம்மதுவை விட்டு கழன்று ஓடிவிட முடிவு செய்து அவ்வாறே ஒருநாள் அவனைக் காணவில்லை. இப்னு அபி சாரா தப்பி ஓடிவிட்டான் என அறிந்து கொள்ள முகம்மதுவுக்கு வெகு நேரம் ஆகவில்லை. இவன் மெக்காவுக்கே ஓடிவிட்டான் எனவும் தெரிந்தது. அவன் வெளியிலிருந்தால் தன் குரான் எழுதப்பட்ட 'குட்டு' (ரகசியம்) வெளிப்பட்டுவிடுமென அறிந்து அவனை எத்தனையோ விதத்தில் நயந்து மயக்கிப் பேச ஆட்களை அனுப்பிப்பார்த்தார். அவனுக்கு மன்னிப்பு தக்க வெகுமதி ஆகியவைகளை அளிப்பதாகவும் ஊக்க ஆர்வமளித்து உறுதியளித்தார். அவனுக்கா முகம்மதுவின் இயல்பு தெரியாது? அவனா முகம்மதுவிடம் திரும்பி வருவான்? அப்படி வந்தாலும் உடன் கொலை செய்யப்படுவது திண்ணம். மெக்காவை முகம்மது வென்ற பின்னர், அவனுக்களித்த மன்னிப்பை மறந்து இப்னு அபி சாராவின் கழுத்தைச் சீவி விட முகம்மது கட்டளையிட்டார். அச்சமயத்தில் அவனைக் காத்தது 'ஓத்மன்' எனும் கிழவர் முகம்மதுவை அணுகி, 'இப்னு அபி சாரா' முகம்மதுவின் வளர்ச்சிக்குத் துணை புரிந்து, அவரால் பேணி வளர்க்கப்பட்டவன். ஆகையால் அவனைக் கொல்வது தகாது என முகம்மதுவுடன் வாதாடி, அவரும் ஒன்றும் பேசாது, அந்த தண்டனையை அப்போதைக்காவது நிறுத்தினார். இப்னு அபி சாராவைக் கொல்ல முகம்மது செய்த சமிஞையை தன் தோழர்களுக்குச் சரியாக 'பெரியவர் ஓத்மன்' எதிரில் புரிய வைக்க முடியவில்லை. பின்னர் ஓத்மன் சாராவுடன் முகம்மதுவை விட்டு வெகுதூரம் வெளியேற்றிய பிறகு இப்னு அபி சாராவைக் கொல்ல முடியாததற்கு எல்லொருமாகச் சேர்ந்து மிகவும் வருந்தினர். (Sirat p.550)

'ஓத்மன்' எதிரில் அப்படி முகம்மது நடித்ததற்கும், பின்னர், இப்னு அபி சாராவைத் தப்பிக்க விட்டு வருந்துவதற்கும் உள்ள 'போலி நடிப்பு' எப்படி இருக்கிறது! அதுதான் முகம்மதுவின் பிரத்யேக இஸ்லாத்து குண நலன்! இப்னு இஷாக், தன் (Sirat, p. 550) சிராத்தில், இந்நிகழ்சியைப் பற்றி நன்கு தெளிவாக விவரிக்கிறார். இவர் எழுதியதெல்லாம் இஸ்லாமிய 'ஷரியா'வைச் சேர்ந்ததே! இதை முஸ்லிம்கள் வெளியிடுவதில்லையே! ஏன்? இந்நிகழ்ச்சிக்கு இதைத் தவிர ஆதாரமே எங்கும் காணக் கிடைக்காது: "இப்னு அபி சாராவை முகம்மது கொல்லக் கூறியக் காரணம், இப்னு அபி சாரா ஒரு முஸ்லிமாக இருந்து இஸ்லாத்தை விட்டு தன் 'குரைஷ்' இனத்துடன் சேர்ந்துகொள்ள மெக்காவுக்கு ஓடிவிட்டவன்.

ஆகையால் இவன் கொல்லத் தக்கவன். அவனை 'ஓத்மன்' உரிய நேரத்தில் இப்னு சாராவுக்காகப் பரிந்து பேசி அத்தண்டனையைத் ரத்து செய்ய வைத்து அவனைக் காப்பாற்றியும் விட்டார். [397]

மதீனாவில் அப்போதைய சூழ்நிலை மிகவும் கவலைக்கிடமாக இருந்தது. இஸ்லாம், ஜிஹாத் என்பவைகளே இப்போது முஸ்லிம்களின் குறிக்கோளானது. முன் இருந்த மக்களுக்குக் கிடைத்த அந்தரங்கம் தனித்தன்மை, தனி வாழ்க்கை என்பது கொஞ்சமும் காணப்படவில்லை. மக்கள் கூட்டமே ஒரு பெரிய கும்பலாக ஐந்து தடவை தொழுகைக்காக மசூதி செல்ல நேர்ந்துவிட்டது. மதீனா மக்கள் முகம்மதுவின் கட்டளைகளால் முற்றிலும் தலைகீழாக மாறிவிட்டனர். அவர்களுக்கும் வேலையில்லை. இதனால் எல்லோருமே கொள்ளயடித்து, கிடைத்த பலிக்கடாக்களைக் கொன்று, அவர்களிடம் இருந்த செல்வம், பெண்கள் ஆகியவைகளைத் தனதாக்கிக் கொண்டிருந்தனர்.

முகம்மது எவ்வாறு மக்களை அச்சுறுத்தித் தனக்குப் பணிய வைத்தார் என ஒரு ஹத்தீசில் கூறப்பட்டுள்ளது: "தொழுகைக்கு வராத மக்களைப் பழிதீர்க்கும் வகையில் நான் தொழுகையை ஆரம்பித்து வைத்து, அதற்கு மற்றொருவரை தலைமை தாங்க வைத்தேன். உடன் சிலரைக் கூட்டிக்கொண்டு எரிக்கும் சுள்ளிக்கட்டைகளால் தொழுகைக்கு வராதவர் வீடுகளுக்குக் கொள்ளிவைத்து அங்கிருப்போரையும் சேர்த்து நெருப்புக்கிரையாக ஆக்க இருந்தேன்"[398]. இதனால் தொழுகைக்கு வராதவர் வீடுகளைக் கொளுத்திவிடவே முகம்மது துணிந்தார் என ஆகிறது. முகம்மது ஒரு பைத்தியக்காரன் என இச்சமயத்தில் இங்கு வந்து தீர்ப்பு சொல்ல ஒரு உளநூல் ஆய்வாளர் மூலம்தான் நாம் தெரிந்து கொள்ள அவசியம் ஏற்படுமா? அவ்வளவு கெட்ட நோக்கத்தோடுதான் எந்தக் காரியத்தையும் முகம்மது அணுகினார். இவ்வளவு கொடுமைகளைச் சீடர்களுக்கு வேண்டுமென்றே தெரிந்து தான் செய்து வந்தார். இப்படி இருந்தும் முகம்மதுவின் சீடர்கள் இவரை இச்செயல்களிலிருந்து தெரிந்தே தடுக்கவில்லை அல்லது தடுக்க முடியவில்லையே! ஏன்!! இச்செயல்பாணியால் இப்னு அபி சாரா முகம்மதுவை விட்டு நல்லகாலமாக நழுவி வெளியேறவில்லையா! ஏன் பெரும்பாலானவர்கள் இப்னு சாரா போன்று வெளியேறவில்லை. அவனுக்குப் தப்பிக்க செல்லப்போகுமிடம் தெரியும். மேலாக இப்னு சாராவை தப்பிக்க வைக்க ஒரு கிழவர், ஓதமன் என்பவரும் இருந்தார். ஏனெனில், இச்செயலைப் புரிந்துகொள்ள இஸ்லாத்துச் சீடர்களுக்குத் தெரியாமலில்லை, இதை மனப்பூர்வமாக எவரும் ஏற்று ஒப்ப மாட்டர்கள். ஆனால், முகம்மதுவின் கொடுஞ்செயலின் எண்ணங்களால் நேரிடக்கூடிய நேரிடையான விளைவாக்க அட்டூழியங்களைச் சகித்துக் கொள்ள எவராலும் முடியுமா? இதனால் தாங்களே தன்னிச்சையாக வெளியில் கூறுவதென்பது முற்றிலும் இயலாதது. இதைப் பற்றி மறைமுகமாக மறுத்துக் கூறினாலும் கூறியவர்களே ஈவிரக்கமின்றிக் கொலை செய்யப்படுவார்கள். உயிருக்கே ஆபத்தென்றால் எந்த சராசரி மனிதன்தான் அச்செய்லைச் செய்யத் துணிவான்? இஸ்லாத்தில் சராசரி முஸ்லிம்களே மிக அதிகம். எல்லோரும் இப்னு சாரா போன்ற துணிச்சல் பேர்வழிகளா? இந்த விஷயத்தில் இப்னு சாரா அபூர்வமான அதிருஷ்டம் வாய்ந்தவன் என்றுதான் சொல்லவேண்டும். இப்னு சாராவுக்கு அன்றிருந்த வசதி கூட இந்நாட்களில் முஸ்லிம்களுக்குக் கிடையாது. வேறு போக்கிடம் எங்கே? அங்கேயும் கொலைவெறி பொதுமேடையில் அரங்கேரும்.

---

[397] Sirat, p. 550

[398] Muslim Book 4, Number 1370; and Bukhari Volume 1, Book 11, Number 626

ஒரு தடவை முகம்மதுவின் ஒரே இன ஒரே இஸ்லாமியக் கொள்கையுடைய ‘சர்ரார்’ (Zarrar) எனும் இடத்தில் (மதீனாவின் மிகச் சமீபத்திலுள்ளது) தன் தோழர்களே தினமும் ஐந்துமுறை குழுமித் தொழும் ஒரு மசூதியைத் தன் கையாலேயே தீயிட்டுத் கொளுத்தினார். இவ்விடத்தில் ஒரு புது மசூதியை முஸ்லிம்கள் கட்டி, அதற்குத் தக்க சடங்குகள் செய்து, ஆசீர்வதித்து ஆரம்பிவைக்க முகம்மதுவைக் கேட்டுக்கொண்டனர். அதற்கு முகம்மதுவும் ஒப்புக்கொண்டு, ‘தாபுக்’ எனும் இடத்தில் திடீர்த் தாக்குதலை நடத்திவிட்டு அங்கு வருவதாக நாள் குறிப்பிட்டிருந்தார். பழிவாங்கும் எண்ணத்தில் இடையில் சில முஸ்லிம் நண்பர்கள் பொறாமையால் முகம்மதுவிடம் இல்லாததையும் பொல்லாததையும் ‘கோள் மூட்டி’னர். அதாவது ‘சர்ரார்’ மசூதியில் முகம்மது கூறிய இஸ்லாமியக் கொள்கையல்லாது வேறொரு பதிப்பில் ஒரு புது இஸ்லாத்தைச் செயல்முறையில் கொண்டுள்ளனர் என வீண் அபவாதத்தை எழுப்பிவிட்டனர். இதைச் சரிவரத் தீர ஆழ்ந்து விசாரிக்காமல் அவர்கள் எல்லலோரும் தொழுது கொண்டிருக்கும் சமயத்தில் தப்பி ஓடிவிட முடியாதவாறு கதவுகளை அடைத்து அம்மசூதியைக் காஃபிர்கள் கட்டியது எனத் தவறாகத் தீர்மனித்துத் தன் கையாலேயே தன் பைத்திய புத்தியால் தீயிலிட்டுத் அனைவரையும் முகம்மது தீக்கிரையாக்கினார். இக்கொடுஞ்செயலை நியாயப்படுத்த, குரானிலும் உடனுக்குடன் **ஒரு வசனம்** 9:107 எழுதிக்கொண்டார்.

இவ்வசனத்தில் உள்ள தமிழ் எழுத்துப் பிழைகளைக்கூடத் திருத்தவில்லை. காரணம், அதை முஸ்லிம்கள் விரும்புவதில்லை, அவர்கள் தினமும் ஒப்பிக்கும் அதே ஆவண மூலத்திலிருந்து அப்படியே இணையத்திலிருந்து தரவிறக்கம் செய்யப்பட்டு இங்கு அளிக்கப்பட்டுள்ளது. வேறென்ன என்ன செய்வது? இதை மாற்றி அமைக்க இயலாமையால் அல்ல; தமிழ் குரானில் இருப்பதைப் படம் பிடித்துக் காட்டவே இப்படி கொடுக்கப்பட்டுள்ளது.

**குரான்-** 9:107 -- “இன்னும் (இஸ்லாம் மார்க்கத்திற்குத்) தீங்கிழைக்கவும், கு∴ப்ருக்கு (நிராகரிப்புக்கு) உதவி செய்யவும், மு∴மின்களிடையே பிளவு உண்டு பன்னவும், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் விரோதமாய்ப் போர் புரிந்தவர்களுக்கு புகலிடமாகவும் ஆக்க ஒரு மஸ்ஜிதை முன்னர் நிறுவியவர்கள்; "நாங்கள் நல்லதையேயன்றி (வேறொன்றும்) விரும்பவில்லை" என்று நிச்சயமாகச் சத்தியம் செய்வார்கள் - ஆனால் அவர்கள் நிச்சயமாகப் பொய்யர்கள் என்பதற்கு அல்லாஹ்வே சாட்சியம் கூறுகிறான்”. ஆக, **இவர்கள் கட்டிய மசூதியை ஆரம்பித்து வைக்க ஒப்புக்கொள்ளும் போது அல்லா அப்போது தடுக்கவில்லையா? அல்லா முக்காலமுமறிந்த ஞானியாயிற்றே!**

மதீனாவில் வாழும் மக்களுக்கு வாழ்க்கை நடைமுறைகளெல்லாமே முற்றிலும் மாறிவிட்டது. ‘யாத்ரிப்’ எனும் மதீனாவுக்கு முகம்மது வருவதற்கு முன்னர் அங்குள்ளவர்கள் விவசாயிகளாகவும், கைத்தொழில் வல்லுநர்களாகவும், வியாபாரிகளாகவும் இருந்தனர். பெரும்பாலான நிறுவனங்களில் யூதர்களே எசமானர்கள். இவர்களெல்லோரும் மெத்தப் படித்த தொழில்திறம் நிறைந்தவர்கள், மேலும் செல்வம் கொழித்து வாழ்பவர்கள். ஆனால், அரேபியர்களோ சுத்தச் சோம்பேறிகள், கொலை கொள்ளைகளைத் தவிர எந்த வேலையும் செய்யத் தெரியாதவர்கள்; எந்த வேலையையும் தெரிந்து கொள்ளும் ஆர்வ மில்லாதவர்கள். ஆகையால் எந்தத் தொழிலையும் யூதர்களிடமிருந்து கற்கவும் இல்லை. யூதர்கள் எங்கும் அழிக்கப்பட்ட பிறகு மதீனாவும் (யாத்ரிபும்) மாறிவிட்டது. வாழ எந்தத் தொழிலும் இல்லை. ஆதலால் பொருளாதார நிலை எங்கும் எதிலும் சீர் குலைந்தது. மக்களுக்கு சுலபமாக வாழக் கொள்ளையைத் தவிர ஜீவாதாரம்

வேறொன்றும் கிடையாது. இவர்களில் பலருக்கு முகம்மதுவின் தலைமை ஏற்புடைமை இல்லாது இருப்பினும், அவருடன் கொள்ளையடித்தலில் கிடைத்த பங்கைக்கொண்டு வாழ்ந்தனர். முகம்மதுவையும் இஸ்லாத்தையும் வெறுத்தாலும் முகம்மதுவின் கொள்ளையில் பங்கு கொண்டவர்களில் ஒருவன் ‘அப்துல்லா இப்னு உப்பாய்’ என்பவனும் ஒருவன். தங்களுக்கு விருப்பமில்லாமல் போனாலும், மதீனா முஸ்லிம்கள் வேறுவழியின்றி முகம்மதுவை ஆதரிக்க நேர்ந்துவிட்டது. அரேபிய ஜனத்தொகையில் அதிகபட்சமானவர்கள் படிப்பறிவில்லாத ஏழைகள். அதேசமயத்தில் எதிலும் மூட நம்பிக்கை கொண்டவர்கள். இவர்களுக்குச் சொந்தமாக ஒட்டகங்கள், மேலங்கிகள் இருப்பதே பெரிய செல்வமென நினைப்பவர்கள். இவர்கள் யூதர்களுடைய ஒட்டகங்களைச் செலுத்தும் பணியை கூலிக்காச் செய்பவர்கள். இவர்கள் முதன் முதலில் கொள்ளயடித்ததில் கிடைத்த செல்வத்தையே அல்லாவின் அருட்பிரசாதமெனக் (bounty of Allâh) கொண்டாடியவர்கள். இதைத் தவிர எதிர்பார்க்காமல் இலவசமாக இவர்களுக்கு முகம்மதுவின் அருளால் புணர்வதற்கு அனேக பெண்களும் வேறு கிடைத்துவிட்டதால், தங்கள் வாழ்க்கையில் எல்லாவற்றையும் அடைந்து விட்டதாகத் திருப்திபட்டவர்கள். இவர்களுக்குக் கொள்ளையடிப்பதில் பலவகைப் பெண்களே செல்வத்தைக் காட்டிலும் மிகப் பெரிய செயலூக்கத்தை அளித்தது. ஏனெனில் இவர்களில் பெரும்பான்மையோர் மணமாகாத இளைஞர்கள். யூதர்கள் மதீனாவில் (யாத்ரிபில்) கொலை செய்யப்பட்டனர், மிஞ்சியோர் யாத்ரிபை விட்டுத் துரத்தியடிக்கப்பட்டனர். ஆகவே கொள்ளைகளால் மிகக் குறுகிய காலத்தில் செல்வம் கொழித்த மணமாகாத தனிக்கட்டை இளைஞர்கள் தன்னிச்சையாக வெறிப்பறீடுபாட்டு முகம்மதுவுடன் சேர்ந்துவிட வேண்டியதாயிற்று. உலகத்தில் கடைப்பிடிக்கும் ஒழுக்கமுறைகள் சட்ட திட்டங்கள் இம்முஸ்லிம்களுக்கு ஒவ்வாதது. இதில் முகம்மது எதெதைச் சொல்கிறாரோ அவைகளே சரியான அல்லது கெட்ட சட்டமென ஆயிற்று. அதே 1400 வருடங்களுக்கு முன்னிருந்த பழக்க வழக்கங்கள் யாவுமே சட்டமாகி இதற்கு ‘ஷரியா’எனவும் பெயர் விளங்க ஆரம்பித்தது.

## படிப்படியாக ஈடுபடுதல் (அப்துல் குத்துஸ் டாக்டர் அலி சினாவுக்கு எழுதியதையும் சேர்த்து)

ஒரு தடவை இஸ்லாத்திலோ அல்லது எந்த விபரீத இயக்கங்களிலோ சேர்ந்த பின்னர், ‘நம்புபவர்கள்’--‘தாங்கள் இவ்வியக்கத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் தான்’ ‘அதில் எவருக்கும் எவ்விதத்திலும் சந்தேகம் வேண்டாமென’ நிரூபித்துக் காட்ட வேண்டிய ஆரம்பச் செயல்பாணிகள் ஏராளம். இத்தோடு, அவர்களுக்குள் இருக்கும் மனப் போராட்டம் (தாங்கள் செய்வது சரியா அல்லது தவறா என) வேறு. இருப்பினும் தங்களுக்குப் பிடிக்கிறதோ இல்லையோ அக்காரியங்களைத் தலைவருக்குப் பிடித்த வண்ணமே தங்கள் கடமையெனச் சீடர்கள் செய்து முடிக்க வேண்டும். இதைக் கண்மூடித்தனமாகச் செய்து முடிக்கச் சிந்திக்கத் தெரியாதும், மனசாட்சியென ஒன்று உள்ளது, அதற்குப் பதிலளிக்கத் தேவையின்றி முகம்மது சொல்படி செய்து முடிப்பது முஸ்லிம்களுக்கு மிக எளிதானது. ஏனெனில், அப்படிச் செய்தால்தான் எதையும் (தன்னுயிர், தன்னைச்சேர்ந்தவர்கள் உயிர், தன் சொத்து முதலியன) இழக்கத் தேவை இல்லை. இதற்கு மாறாக சிந்தித்து செயல்பட்டால் நஷ்டங்கள் மிகக் கடுமையானது; கொடுமையானதும் கூட. ஆனால் கொஞ்சமேனும் படித்த பகுத்தறிவாளர்களுக்கு இது மிகவும் கடினமானது. போகப்போகத்தான் எதிலும் அவர்கள் ஈடுபாடு கொள்ள முடியும்.

மக்கள் கோவிலைப் பற்றி எழுதும், Osherow கூறுகிறார்: “சீடர்களுக்குத் தங்கள் ஈடுபாடு ஜேம்ஸ்டவுன் கோவிலுக்குச் சென்ற பின்னர் ஆரம்பிப்பதில்லை. இது அவர்கள் வீட்டில் வசிக்கும் போதே ஒரு விபரீத நாடகமாக ஆரம்பித்து விடுகிறது. தன்னிச்சையாகக் கோவில் கூட்டங்களுக்குத் தவறாது செல்லவேண்டும். வாரத்தில் சில சமயத்தில் கோவில் பணிக்காகத் தங்கள் நேரங்களில் ஒரு பகுதியைக் கட்டாயமாக ஒதுக்கவேண்டும். பழைய சீடர்கள் புதுச் சீடர்களை கோவில் கட்டடத்துக்குள் வந்துவிட நிர்பந்திப்பார்கள். இதுவரைதான் புதுச் சீடர்களின் சுதந்திரம் உள்ளது. கோவில் கட்டடத்துக்குள் ஒரு தடவை நுழைந்து விட்டால், படிப்படியாக கோவில்க் ஆளுமை ஆதிக்கம் ஆரம்பிக்கப்பட்டுவிடும். சில நாட்களுக்குப் பின் ஜிம் ஜோன்ஸின் உண்மைக் கொடுங்கோல் உருவம் புதிய சீடனுக்குப் புரிய ஆரம்பிக்கும். போகப் போக இப்புதுச் சீடன் கோவில் விவகாரத்தில் வேறு வழியின்றிப் பழைய சீடர்களைப் போலவே பகுத்தறிவால் யதர்த்தங்களுடன் ஒப்பிட்டுக் கீழ்ப்படிந்து போவதே நடைமுறைக்குகந்தது எனத் தன் நடத்தையைக் கூட நியாயப்படுத்த நேரிடும். அவ்வளவுதான். (ஆட்டம் க்ளோஸ்!) அதாவது புதுச்சீடனும் பழைய சீடர்கள்போல, ‘செக்குமாடு என சுழன்று சுழன்று ஒரே வட்டத்தில் சுற்றுவதுபோல’, செல்தட வரிப்பள்ளத்தில் விழுந்து விட்டார்கள் எனப் பொருளாகும். முன்நாள் முஸ்லிம்கள் கூட மேற்கூறிய அனுபவதையே தாங்களும் அனுபவித்ததாகச் சொல்கிறார்கள். இஸ்லாத்தில் ஈடுபாடு அதிகரிக்கும் போது அம்முஸ்லிமிடத்தில் அநேக எதிர்பார்ப்புகளும் அதிகரிக்கும். முதன்முதலில் முஸ்லிமாகிவிட்ட மாதர்கள் (முஸ்லிமாக்கள்) தங்கள் தலையை முக்காடு போட்டு மூடிக்கொள்ளக் கட்டாயம் ஏதுமில்லை எனக் கூறி, ஆனால் அப்படி மூடிக்கொள்ளும் போது அவர்களுக்கே ஏற்படும் நன்மைகள் என்னென்ன எனவும், அதன் சிறப்புகளைப் பற்றியும் பழைய முஸ்லிமாக்கள் பரிந்துரைப்பார்கள். பெரும்பான்மை முஸ்லிமாக்களும் அவ்வாறே தலை முக்காட்டை போட்டுக் கொண்டிருப்பதைக் காட்டிப் பின் நாளாக நாளாக முக்காட்டையே நிர்ப்பந்திப்பார்கள். இது முஸ்லிமாக்களுக்கு மாத்திரம்தான். இனி பொது முஸ்லிம்களுக்குக் கீழே விதிமுறைகளை வகுத்துக் கூறப்பட்டுள்ளது.

பின்னர் முஸ்லிம்கள் எப்படி உடை உடுத்தவேண்டும். மேலுதடு மீசையைச் சுத்தமாக மழித்துக் குறைந்தது கைப்பிடியளவு தாடியோடு தலை மொட்டையடித்துக் கொள்வதற்காகக் கட்டாயப்படுத்தப்படும். பின்னர் தினம் தொழுகைகள், ஜும்மா, ஹலால் உணவு (ஆடு மாடு, ஒட்டகங்களின் கழுத்தைச் சிறுகச்சிறுக வெட்டி அம்மிருகம் துடிக்கத் துடிக்க வைத்து அவைகள் மாமிசத்தைத்தான் ஹலால் (தகுந்த) உணவு என முஸ்லிம்கள் கூறுவர். ஒரே போடுபோட்டுக் கொன்றுவிட்டால் அது ஹராம் (தவறு) உணவு எனவும் இது முஸ்லிம்களுக்கு விதிக்கப்படவில்லை எனவும் பாகுபடுத்துவர்).

[[[பின்னூட்டம்: இஸ்லாத்தில் ‘ஹலால்’ முறையில் கொல்லும் வீடியோக்கள்

உதாரணம்: **Camel;** 1. http://www.youtube.com/watch?feature=player_embedded&v=Az2xbVYS44U

உதாரணம்: **Cow;** 2. http://www.youtube.com/watch?v=h_bZzxep87c ]]].

அடுத்து ரம்சான் மாதம் பகல் பட்டினி கிடக்கவும், இருக்கும் சொத்திலிருந்து குறைந்து 2% விழுக்காடு **‘சகத்’** (zakat) இஸ்லாமிய இயக்க மேம்பாட்டுக்கான (ஜிஹாத் போன்று) சந்தாவும் கேட்பார்கள். கொடுக்காமல் இருக்க முடியுமா? போகப்போக ஜிஹாதின் அவசியத்தைப் பற்றி 1400 வருட சரித்திரத் தொடரை அவிழ்த்து விடுவார்கள். புது முஸ்லிம்களும் தங்கள் இஸ்லாமிய ஆர்வத்தைக் காட்டிக் கொள்ள முல்லா கூறியவைகளை மறந்து போகாமல் இருக்க வியாக்கியானக் குறிப்பெடுத்துக் கொண்டு (notes) தங்களுக்குள்ள ஈடுபாட்டை

முல்லாக்கள் மெச்சக் காண்பிப்பார்கள். புது முஸ்லிம்களே நாளாக நாளாகத் தங்களும் தீவிர முஸ்லிம்களாகி விட்டதை நிரூபிக்கத் தக்க தருணத்தை எதிர்நோக்கிக் காத்திருப்பார்கள். இதனால் புது முஸ்லிம்கள் தங்கள் இஸ்லாத்தில் ஈடுபாடு கொண்டதை ஒரு கத்தோலிக்கப் பழமொழியில் கூறினால்: "வாடிகன் போப்பைக் காட்டிலும் அதி தீவிர இறைப்பற்று மிகுந்தவர்களாக"க் காண்பித்துக் கொள்வார்கள்.

அமெரிக்காவிலுள்ள எல்லா முஸ்லிம்களைக் காட்டிலும் நீக்ரோ/கருப்பு நிற முஸ்லிம்களே மிக ஆபத்தானவர்கள் என "Pew Research Center" எனும் ஆராய்ச்சி மையம் தங்கள் கணக்கெடுப்பில் கூறியுள்ளனர். இக்கணக்கெடுப்பில் அமெரிக்காவில் பிறந்த கருப்பு நிற முஸ்லிம்களில் பதிலளித்தவர்களில் 28% பேர் தற்கொலை வெடிகுண்டு வைப்பதையும், சாதா மக்களைப் பாதிக்கும் மற்ற வன்முறைகளையும் நியாயமானதுதான் என்றும், குறைந்த பட்சத்தில் சில அபூர்வ நிகழ்ச்சிகளும் நியாயமானது தான் எனவும் விடையளித்துள்ளனர். இதற்கு மாறாக வெளிநாட்டில் பிறந்த கருப்பு முஸ்லிம்கள்தான் 9% மட்டுமே இதே கருத்தைக் கொண்டுள்ளனர். Pew கணக்கெடுப்பில் அமெரிக்காவில் வாழும் கருப்பு நிற முஸ்லிம்கள் 11% லில் அல்-குஃதாவுக்கு ஆதரவாகத் தங்கள் அபிப்பிராயத்தைக் கூறியுள்ளனர். இது அமெரிக்காவில் வாழும் மொத்த கருப்பர் (முஸ்லிம்களும், முஸ்லிமல்லாதோருமாகச் சேர்ந்து) பதிலளித்த விழுக்காட்டுக்கு இரண்டு மடங்காக இருக்கிறது.[399]

பொய்க்கருத்து புகட்டுவதென்பது மெல்ல மெல்ல நடந்தேறும். புதிதாக இயக்கத்திற்கு மாறிவிட்டோர் தமக்கு நேர்ந்த வினோத மாற்றங்களைத் தாங்களே உணர்ந்து அதையும் மெச்சித் தன்னிச்சையாக தினசரி வேலையிலும் போகப்போக இவைகளை வழக்கமாக்கி விடுவார்கள். ஒருகாலத்தில் இம்மாதிரி மாற்றுக்கருத்துக்களுக்கு எதிராகப் போர்க்கொடி ஏந்தியவர்கள் தற்போது இவைகளை சர்வ சாதாரணமாகச் செய்யத் துணிவார்கள்.

[[[மொழிபெயர்ப்பாளர் பின்னூட்டம்: கன்னட மொழியைத் தன் தாய்மொழியாகப் பேசும் தந்தை பெரியார் ஏற்படுத்திய தமிழ்நாட்டு திராவிடக் கழகத்தில் மிகப் பற்றீடுபாடு கொண்டிருந்த பிரபல 'பெரியார்தாசன்' என்பவர், முன்னொரு காலத்தில் 'சுயமரியாதை' எனும் பிரத்யேக கழகப் பகுத்தறிவால் "கடவுள் இல்லை, கடவுள் இல்லை, கடவுள் இல்லவே இல்லை என (ஆனால்) பெரியார் சிலைக்கு மாலை அணிவித்தும், கற்பூரம் காட்டிக் கும்பிட்டும் மும்முறை அழுத்தந்திருத்தமாகக் கூவிய இவரே சமீபத்தில் அரேபிய நாட்டுக்குப் பயணம் செய்து (!!?!!) இஸ்லாத்தில் சேர்ந்து தன் பெயரையும் "அப்துல்லா" என முஸ்லிம் பெயர் மாற்றம் செய்து கொண்டு தீவிர "அல்லா"வின் அடிப்பொடியானார். இன்று முஸ்லிமாகிய பின்னர் பிரத்யேகத் தொப்பி அணிந்து எப்போதுமே காணப்படுகிறார். 'பெரியார்தாசன்' இஸ்லாத்து 'அப்துல்லா'வாகத் தன்னை மாற்றிக்கொண்ட காரணம்.....? இது சம்பந்தமான மூன்று youtube வீடியோக்கள் இங்குள்ளன: விருப்பமானால் பார்க்கலாம்: http://www.youtube.com/watch?v=PDsQ61xsmmo ]]].

அமெரிக்காவில் பிறந்த ஒரு வெள்ளைக்கார முன்னாள் முஸ்லிமா (பெண் முஸ்லிம்) அவள் இஸ்லாத்தில் ஊறுவதற்கு முன் எந்த முஸ்லிமாவும் கருப்பு முகமூடி அணிந்திருந்த அங்கியைக் கண்டால் அவர்களைப் பரிகாசம் செய்து பின் அவர்கள் இக்கதிக்கு ஆகிவிட்டார்களே என ஒரு காலத்தில் வருந்துவது வழக்கம்.

---

[399]Poll stunner: These American blacks OK with violent attacks
www.wnd.com/?pageId=339793#ixzz1XoUgd8GE

கருப்பு முகமூடி அணியத் தேவையில்லை என முதல் “தாவா”வில் “தக்கியா”வாகக் கூறப்பட்ட பரிந்துரைகளைக் கேட்டு, இவைகளையும் உண்மையென நம்பி, ஒரு நாள் திடீரென முஸ்லிமாகி விட்டாள். இவளும் எல்லா முஸ்லிமாக்கள் போல நாளாக நாளாக முகத்தில் ஜன்னல் வைத்துத் தைத்த கருப்பு நிறக் கூடார அங்கியை (‘நெகா.்ப்’ - neqab) அணிந்துகொண்டாள். பின்னர் இவளே என்னைத் தாக்கிப் பகைமையுடன் அவதூறாகத் தன் இணையவலையில் எழுதிக் கொண்டிருந்தாள். இவ்விணையத்தில் என் கட்டுரைகளைப் படிக்க வேண்டாம் எனப் பிறருக்குக் கூறிவிட்டு தான் மட்டும் என் கட்டுரைகள் அனைத்தையும் தவறாமல் படித்துவிட்டு, தன் முஸ்லிமாகாத கணவனையும் இஸ்லாத்தில் மாற்ற எத்தனையோ தந்திரங்களைக் கையாண்டாள். சில நாட்களுக்குப் பிறகு இவளே தன் தவறுகளை உணர்ந்து என்னிடம் மன்னிப்புக் கேட்டு இஸ்லாத்தையும் முடிவாகக் கைவிட்டாள்.

இன்னொரு அனுபவமும் எனக்கு உண்டு. கீழ்க் கூறியவைகளை சில முஸ்லிமாக்கள் அவர்களுடைய வைதுரையில் எழுதி எனக்கனுப்புவதும் உண்டு. முகம்மது கூறியபடி- பெண்கள் புத்திசாலித்தனமில்லாதவர்கள்; பொதுவாகவே ஆண்களைவிடத் தாழ்ந்தவர்கள் என இஸ்லாமிய மேற்கோள்கள் இருப்பினும் ‘இஸ்லாம்தான் பெண்களுக்கு இருக்கும் தளைகளை நீக்கி விடுதலையளித்துள்ளது என உறுதியாக நம்பும் முஸ்லிமாக்களும் உலகில் உள்ளனர். நம்பிக்கை கொண்டவரின் உள்ளத்தை மயக்க நம்பிக்கை மருந்தின் செயலுக்கு அதை உட்படுத்தி அறிவாற்றலையும் உணர்விழக்கச் செய்து நிரந்தரமாகத் துயிலூட்டியும் விடுகிறது.

இதில் இன்னொரு ரகம். இஸ்லாத்தில் மாறிய முன்னாள் யூதர்கள் பின்னர் யூதர்களை உடனுக்குடன் வெறுக்க ஆரம்பித்து, தங்கள் பிறந்த பொன்நாட்டையும் மறுந்து யூதர்களுக்கெதிராகவும் சதித்திட்டத்தில் இறங்கி விடுகிறார்கள். இம்மாதிரி எண்ணங்கொள்ளக் கற்பனையாகப் புனையப்பட்ட ‘சூழ்ச்சி’ என மாசுக் கருத்தியல்கள் இவர்கள் உள்ளத்தில் வேரூன்றப்படுகின்றன. இதனால் தன் முஸ்லிமல்லாத பெற்றோரையும், நண்பர்களையும் நம்ப மறுத்து அவர்களையே கொன்றுவிட இஸ்லாம் ஆணையிட்டால் அதற்கும் தயாராக இருக்கிறார்கள். இவர்கள் முடிவாக இஸ்லாத்துக்காக தங்கள் உயிரையும் தியாகம் செய்து ‘ஷாஹீதா’க ஆகிவிடவும் தயாராகிவிடுகின்றனர்.

இன்னொரு ரகம். கனடா நாட்டைச் சேர்ந்த முன்னாள் முஸ்லிம், ‘அப்துல் குத்துஸ்’ என்பவர் தான் இஸ்லாத்தை விட்டொழித்த பிறகு தனது முன்னாள் இஸ்லாமிய அனுபவத்தை எனக்கெழுதி அனுப்பினார். (இந்நாட்களில் இஸ்லாத்துக்கெதிராக அப்துல் குத்துஸ் கட்டுரைகள் FFI-இல் அடிக்கடி வருகின்றன). அதில் உள்ளவை:

**(அப்துல் குத்துஸ் எழுதிய பகுதி மிக்க நீண்டது. **இனி மற்றொரு பகுதி ஆரம்பிக்கும் போது தெரியப்படுத்தப்படும். அதுவரை எல்லாமே ஒரே கட்டுரையில் டாக்டர் அலி சினாவுக்கு எழுதி அனுப்பியது எனக் கொள்ள வேண்டும்)**

“முஸ்லிமல்லாத கா.்பிருக்கு இஸ்லாம் என்பதை ஆரம்பத்திலிருந்தே ஏற்றுக் கொள்ளவே முடியாது. ஆகவே இவர்களையும் இஸ்லாத்தில் இழுத்து எவ்வகையாலும் வெற்றிகரமாகக் கொண்டு சேர்க்க ‘தவா’ எனப் (da’wah = invitation to Islam) பெறுநருக்கு அவரவற்கேற்பவும் சிற்றின்ப வழியாலும் இதற்கென்றே தேர்வு செய்யப்பட்ட சிற்றின்பக் கவர்ச்சியூட்டும் இளவயது முஸ்லிமாக்களைப் படுக்கையறை வரை பழக விட்டு (“to suit the nafs” = carnal self) பின்

முஸ்லிம்களுடன் நட்பு என ஆரம்பித்து வைப்பார்கள். இதைச் செயலாற்ற ஊரிலுள்ள மசூதி இதற்கு உற்ற இடமாகும். ஆங்கே கைகுலுக்கவும் 'தவா' பெறுநர் எதிர்பார்க்கும் ஆரத்தழுவுதலும் முல்லாக்கள் செய்வார்கள். இவர்கள் இஸ்லாத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக ஊசி மருந்து போல மெல்ல மெல்ல புந்தியில் ஏற்றுவார்கள். ஆரம்பத்தில் சுதந்திரத்திற்குத் தடையேதும் கிடையாதெனப் பொய்யுரை கூறிப் பின் போகப்போக சுதந்திரம் ஒவ்வொன்றாகப் பறிக்கப் பட்டுவிடும். இப்புதுமுஸ்லிமே போகப்போக பயங்கர வன்முறை நடவடிக்கைகளில் பற்றீடுபாடுடன் ஈடுபடுத்திக் கொள்ளும் அளவிற்கு முற்றிலும் 'முஜாஹிதீனாக' ஆக்கிவிடுவார்கள்.

'வீட்டிலோ என் தாய் என் முன்னேற்றத்தில் என்றும் திருப்தி அடைந்ததில்லை, என் தகப்பனாரோ என்னைப்பற்றிக் கவலைப்படுவதுமில்லை. வீட்டுச் சூழ்நிலை இப்படி இருக்கையில் ஒரு புகலிடமாகப் போகப்போக முன்னாள் காஃபிர்கள் இஸ்லாத்தில் சேர்ந்து அதிலும் மற்றவர்களைக் காட்டிலும் விஞ்சியவாறு காண்பித்துக் கொள்ள விழைவார்கள்'. ஆங்கே முல்லாக்கள் பார்த்து வைத்த பெண்ணையும் மணம் செய்வித்து அரபு மொழியில் பயிற்சியளித்துக் கற்றுக் கொடுப்பார்கள். செயல்முறையில் இக்காஃபிரையே 'ஜிஹாதில்' பங்கேற்கத் தக்க (mujaahid) பயிற்சியளித்து மெல்ல மெல்ல மனத்தை ஒருமுகமாக்குவார்கள். இதன் மேன்மையையும் சுவர்க்கத்தில் 72 மாதவிடாயற்ற கனவுலகப் பளிங்குக் கன்னிகளுடன் உடலுறவையும் 28 இளம் பாலகர்களுடன் ஓரினச் சேர்க்கை எதிர்பார்ப்புடன் மது குடிக்க ஏற்ற ஆறு வசதிகள், கைக்கெட்டிய தூரத்தில் வேண்டிய பழவகைகள், பிணி மூப்பில்லாத மல மூத்திரமில்லா வாழ்க்கை, எல்லாம் முடிந்தபின் ஒரே ஒரு ஏப்பத்தில் எல்லாமே 'ஹஜம்' (ஜீரணம்) ஆகிவிடும் எனவும் சொல்லிச் சொல்லி வெறியை உண்டாக்கி முன்னாள் காஃபிரையே ஜிஹாதில் பங்கேற்று உயிர்த் தியாகம் செய்யும் அளவிற்குத் தயார் செய்து விடுவார்கள்.

இஸ்லாமில் சேர்ந்து முழு ஈடுபாட்டிற்குப் பின்னர், இவர்கள் இஸ்லாமென்று சொன்ன மாத்திரத்தில் எளிதில் ஏமாற்றப்படும் மனோபாவத்தை அடைந்து விடுவார்கள். அங்குள்ள முஸ்லிம் சமுதாயத்திலுள்ள பல இளைஞர்களை இவ்வாறு ஷாஹீதுகளாக ஆக்கி விட பயிற்சி அளிப்பார்கள். இவர்களுக்கு 'ஒரு மில்லியன் ஜியார்ஜ் புஷ்களைக்' காட்டிலும் 'ஒரு ஒசாமா பின் லேடன்' மிக உயர்வானவன்' என உணவு ஊட்டுவது போல் சொல்லிக் கொடுக்கப்படும் அல்லது வெறி ஏற்றி விடப்படும். ஆயிரமாயிரம் 'டோனி ப்ளேர்'களைக் காட்டிலும் 'ஒரு முஸ்லிமே சிறந்தவன்' என உரு ஏற்றப்படும். இதன் பின்னணியில் **குரான் வசனமான 3:110** கூறப்படும்

"மனிதர்களுக்காக தோற்றுவிக்கப்பட்ட (சமுதாயத்தில்) சிறந்த சமுதாயமாக நீங்கள் இருக்கிறீர்கள்; (ஏனெனில்) நீங்கள் நல்லதைச் செய்ய ஏவுகிறீர்கள்; தீயதை விட்டும் விலக்குகிறீர்கள்;.[[[...]]] எனினும் அவர்களில் பலர் (இறைகட்டளையை மீறும்) பாவிகளாகவே இருக்கின்றனர்."

எங்கெங்கு அல்லாவின் பெயரால் அக்கிரமங்கள் உலகெங்கும் நடைபெறுமோ அவைகளைப் பற்றியோ அல்லது மனித உரிமை அத்துமீறல்களைப் பற்றியோ கவலைப்படாமல், முஸ்லிம் நாடுகளில் அளவுக்கு மீறிய அடிமைத்தனத்தில் விஞ்சும் ஆசாமிகளாக இருப்பினும், இவைகளுக்குச் சப்பைக்கட்டு கட்ட உலக நாடுகளில் முஸ்லிம்களுக்கு ஏற்படும் கற்பனை இன்னல்களை ஊதிப் பெரிதாக்கி உலக ஜனநாயத்தின் சதித்திட்டங்கள் என

'பூச்சாண்டி' காட்டுவார்கள். ஆனால் உலக மக்களுக்கு அசலில் முஸ்லிம்கள் எதெற்கெலாம் சதித்திட்டங்களை நிறைவேற்றத் துணிவார்களெனத் தெரியும்.

மிதவாத முஸ்லிம்கள் தவறாது இஸ்லாமியத் தொழுகைகளையும், 'zinaa' எனும் தவறான புணர்வு, மணமாகாக் கலவி, விபசாரம் ஆகியவைகளில் ஈடுபட்டாலும் (illegal sex; fornication, adultery, etc.), இவர்களுக்கு செப்டம்பர் 11, 2001இல் அமெரிக்காவில் இரு வியாபார கட்டங்களில் நடந்த தற்கொலை விமான வெடிகுண்டுபற்றி ஒரு மனதாக ஏற்புடைமை இருக்க முடியாது. யூதர்களே இக்கொடுமையைச் செய்து முஸ்லிம்கள் மேல் குற்றம் சாட்டுகிறார்கள் எனத் திசை திருப்புவார்கள்.

[[[மொழி பெயர்ப்பாளர் தரும் ஆதாரம்: See URL: Palastenian columnist: 9/11-American & Isareli Plot - http://www.memri.org/report/en/0/0/0/0/0/0/6662.htm - ]]].

யூதர்களே முஸ்லிம்களுக்கு எந்நாட்களிலும் முஸ்லிம்களுக்கு எளிதாகக் கிடைக்கும் 'ஒப்புக்குச் சப்பாணி ஊருக்கு மாங்கொட்டை' என ஒருதலைச்சார்பு பெற்ற பலியாடுகள். இஸ்லாமிய உம்மாக்களில் மிக்க ஈடுபாட்டால், தாடி வளர்த்து, யூதர்கள் மீது வெறுப்பை உமிழ்ந்து, எல்லா நவீனங்களையும் பற்றிப் (modernisation) பழித்துரைத்து ('bid'ah'), இஸ்ரைலை ஒரு நாடாக இருக்க ஒப்பில்லாமல், 1434 வருடங்களுக்கு முன்னிருந்த முகம்மது காலப் பழக்கங்களை வழக்கமாக்க கட்டாயப்படுத்துவதுதான் இஸ்லாமியம்.

ஒவ்வொரு இஸ்லாமியக் கொடுமைகளுக்கும் ஆதாரங்கள் (வீடியோ முதலியன) இருப்பினும், இஸ்லாத்தை சிலாகித்து, ஆனால், அவ்வப்போது கா ஃபிர்கள் எழுப்பும் பல அசௌகரியக் கேள்விகளுக்கு பதிலளிக்க முடியாமல் பேந்தப்பேந்த விழித்துக்கொண்டே, நாடறிந்த இஸ்லாத்துத் திமிருடன், "எந்த குற்றத்தையாவது முஸ்லிம்கள்தான் செய்தனர் என நிரூபிக்க முடியுமா? எனும் கேள்வியை சம்பிரதாயமாகக் கேட்டு வைப்போம்" என முஸ்லிம்கள் பதிலளிப்பார்கள். ஒன்று மட்டும் நிச்சயம்.

**எல்லா முஸ்லிம்களும் பயங்கரவாதிகளல்ல. உண்மைதான். ஆனால் ஐயமற்றுக் கடுந்துயர் அளிக்கும் வகையில் உலகத்தோரால் பயங்கரவாதிகளென நிரூபிக்கப்பட்டவர்கள் எல்லோருமே முஸ்லிம்கள்தானே!"**

எங்காவது அமெரிக்கர்களோ அல்லது யூதர்களோ மாண்டுவிட்டால் முஸ்லிம்களுக்குள் இனந்தெரியாத மகிழ்ச்சியால் குழந்தைகள் முதற்கொண்டு தொண்டு கிழவன் கிழவிகள் வரை தெருவில் ஆடிப்பாடி நாட்டியமாடிக் கொண்டாடுவார்கள். இவ்வெறுப்புணர்ச்சி வெளிப்பாடு ஐந்து வயதான 'ஹிஜாப்'புடன் உள்ள சின்னஞ்சிறு முஸ்லிமாவுக்கே ஏற்பட்டு விடுகிறது. அதாவது சிறுவயதிலிருந்தே இது இவர்களுக்கு உணவுடனும் உணர்வுடனும் யூதர்களை வெறுக்க ஊட்டிக் கற்றுக் கொடுக்கப்படுகிறது. அதிலும் புதிதாக இஸ்லாமுக்குள் நுழைந்த புது முஸ்லிம்களுக்கு 'அடக்குமுறைகளை நடைமுறையில் வழக்கத்தில் அனுசரிக்கும் கிறித்தவ இயக்க போப் ஆட்சி பற்றியும், அநாவசியப் பேச்சுரிமையால் விளையும் தீமைகளைப் ('Democracy is evil') பற்றியும் அவதூறாகப் பேசி, இஸ்லாமியக் கோட்பாடுகளைக் கொண்டு மறுப்பதோ அல்லது கோட்பாடுகளை இஸ்லாத்து நூல்களிலுள்ள வசனங்களையும் சட்டங்களையும் மாற்றி அமைக்க முயல்வதோ அல்லது மாற்றி அமைக்கும் திட்டங்களை ஊக்கப்படுத்துவதோ மிகத் தவறென நியாயப்படுத்தி - ஆக இஸ்லாமியமே சாலச் சிறந்தது என காதுப் பறை கிழியமளவிற்கு முஸ்லிம்கள் ஒன்னொரு நாட்டில் குடிபுகு முன் முல்லாக்களால் அந்தந்த நாடுகளில் கற்றுக் கொடுக்கப் படுகிறது' [400]

[400] www.faithfreedom.org/Testimonials/Abdulquddus.htm

ஜான் வாக்கர் லிண்ட்த் (John Walker Lindh) என்ற அமெரிக்கச் சிறுவன், ஆஃப்கானிஸ்தானுக்குச் சென்று அல்-குவைதாவுடன் சேர்ந்து அமெரிக்க ராணுவத்திற்கெதிராகப் போரிடச் சென்றான். அவனொன்றும் ஓரிரவிலேயே பயங்கரவாதியாகி விடவில்லை. 12 வயது சிறுவனாக இருக்கும் போதே இவனுக்கு இஸ்லாத்தில் தனி அக்கறையும் ஈடுபாடும் உண்டானது. அடிப்படைக் காரணம்: இவன் தாய் இவனை (Lee's film, Malcolm X) என்ற ஒரு திரைப்படத்துக்கு இட்டுச் சென்றாள். இவன் தாலிபானுடன் சேர்ந்து விட்ட பின்னர் 'டைம்' பத்திரிக்கைக்குப் பேட்டியளித்தபடி, ”அப்படத்தில் உலக மக்களைனைவரும் ஒரே கடவுளைத் தொழுவதைப் பார்த்தவுடன் இஸ்லாத்துக்கு என் மனதைப் பறிகொடுத்து விட்டேன்” என்றான்.[401]

இஸ்லாத்திலுள்ள கொடுமைகளைப் பற்றித் தக்க தருணத்தில் இச்சிறுவனுக்கு எச்சரிக்கை செய்ய சமூகமோ பெற்றோரோ எந்த நடவடிக்கையையும் எடுத்ததில்லை. 'டைம்' பத்திரிக்கை இவ்வாறு செப்டம்பர், 29, 2002இல் எழுதியது: "பெற்றோர்களும் இச்சிறுவனை ஏதோ ஒன்று எப்படியோ சலனப்படுத்துகிறதே என மகிழ்ச்சியுற்றனர்". இதைப் போலவே மற்ற பெற்றோர்களும், அமெரிக்க மக்கள் கடைப்பிடிக்கும் பரந்த மனத்துடன் அளித்த சுதந்திரமரபில் தங்கள் சிறுவன் ஏனைய கெட்டவழக்கங்களான போதை மருந்து, குடிப்பழக்கம், சிறு வயதில் ஆண்/பெண் உறவு, ஓரினச் சேர்க்கை வேகமாக காரைச் செலுத்துவது போன்றவைகளுக்கும் உற்சாகமளித்து, இஸ்லாம் போலவே இக்கெட்ட பழக்கங்களால் தங்கள் சிறுவர்களையும் ஒரு நாள் இழக்க நேரிடும் என அறியாமல் இன்றும் அதே தவறிழைத்து உழல்கின்றனர். 'ஜான் வாக்கர் லிண்ட்'த்தின் தாய் 'மர்லின்' தான் செய்யும் கெடுதலின் விளைவை அறியாமல் ஜானை தினமும் மசூதிக்குத் தன் காரிலேயே கொண்டு விடுவதை வழக்கமாக்கி இருந்தாள். சாயங்காலத்தில் ஜானை இஸ்லாத்தில் சேர்ந்த மற்றொரு சிறுவன் வீட்டில் வழக்கமாகக் கொண்டுவிட்டுப் போவதுமுண்டு.[402]

எந்த சுதந்திர உணர்ச்சிகளையும் சகித்துக்கொள்ளும் அமெரிக்க சமுதாயம், தங்கள் குழந்தைகள் இஸ்லாத்தில் சேருவதைக் குறித்து தவறு நடப்பதாக பல இடங்களில் இன்றும் பலர் உணரவில்லை. இந்நடவடிக்கைகளால் பயப்படுவதற்கும், அருவருப்படைவதற்கும் தேவையில்லை எனவே பெற்றோர்கள் இன்றும் நினைக்கிறார்கள். எப்போதாவது முன் நாள் அமெரிக்க சிறுவனொருவன் இன்று முஸ்லிம் உடையுடன் தெருவில் உலவும்போது அமெரிக்க மக்கள் அமைதியை இழக்கவில்லை. இதையே 'டைம்' பத்திரிக்கையும் எழுதியது. தங்கள் பாமர புத்தியால் அமெரிக்க மக்களே முட்டாளாக்கப் படுகின்றனர். இதிலிருந்து இஸ்லாமிய முல்லாக்களின் சூழ்ச்சித் திறம் நிதர்சனமாகத் தெரிகிறது. இதைத்தான் 1434 வருடங்களுக்கு முன்னர் முகம்மது மெக்கா இளைஞர்களுக்குச் செய்தார். அந்நாட்களில் இவ்விளைஞர்களும் இவ்வாறே தங்கள் பெற்றோரிடமிருந்து பிரிக்கப்பட்டனர். இன்றும் முஸ்லிம்கள் மற்ற இளைஞர்களைக் கவர இதே தொழில்முறையில் கையாள்கிறார்கள்.

ஏனைய அபாயப் பழக்கங்களான போதை மருந்து, ஆண்-பெண் உடலுறவுகள், ஓரினச் சேர்க்கை, autoerotism/ self-abuse, மது போதை, வேகமாகக் காரைச் செலுத்துவது ஆகியவைகளைக் காட்டிலும் இஸ்லாம் போன்ற வெறிப்பற்றீடுபாடுகள் மிக ஆபத்தானது. இஸ்லாத்தின் உண்மை நிறத்தை

---

[401]By Timothy Roche, Brian Bennett, Anne Berryman, Hilary Hylton, Siobhan Morrissey And Amany Radwan The Making of John Walker Lindh.
http://www.time.com/time/magazine/article/0,9171,1003414-5,00.html

[402] Time magazine September 29, 2002 edition

ஆராயமல், ஜான் லிண்டிதின் பெற்றோர்கள் "இஸ்லாத்தில் இணைந்தோருக்குச் செய்யும் விருந்தோம்பல்" எனும் முகத்திரை ரகசியங்களை அறியாமல், தாங்களாகவே அறியாமையால் இஸ்லாமியக் கிடுக்கிப்பிடியில் நிரந்தரமாக வீழ்ந்து இன்று சிக்கித் தவித்து என்ன செய்வதென்று தெரியாமல் பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு தினமும் அழுகிறார்கள். இனி அழுது என்ன பயன்? எல்லாம் போயே போச்சு!!

வெறிப்பற்றீடுபாடுள்ளவர்கள் மிக நல்லவர்கள் போன்று தங்கள் பலிக்கடாக்களுடன் ஆரம்பகாலத்தில் மிக நெருக்கமாகப் பழகி, அனேக பிரத்யேக சலுகைகளை வாரிக் கொடுத்து மிக நட்புடன் பழகுவார்கள். இப்பலிகடாக்கள் நன்கு சிக்கிவிட்டால், "பழைய குருடி, கதவைத் திறடி" என்றபடி முன்னாள் நெருக்கமானவர்கள் இந்நாட்களில் வெகு தூரமாக விலகிப் போய், ஏனைய சிறுபான்மையினரை நடத்துவது போன்று சற்றும் கண் சிமிட்டாமல் அடக்கி ஒடுக்கி கொடுமைப்படுத்தத் தவற மாட்டார்கள். அதிலும் தகவல்துறை ஆட்களைக் கண்டால் முஸ்லிம்களுக்குக் கிள்ளுக்கீரை. கையூட்டு கொடுத்து இவர்கள் எதிரில் குழைந்து பேசி இஸ்லாத்துக்குத் தகுந்தாற் போல எழுதச் சொல்லி, அந்த தகவல்துறை ஆட்களே இடத்தைவிட்டுச் சென்ற பின்னர், இவர்களை முட்டாளாக்கி விட்டதற்குத் தங்களுக்குளேயே மகிழ்ச்சியுடன் தங்களை மெச்சிக் களிப்பார்கள். இது போன்ற நிகழ்ச்சிகளில் நானும் ஒரு காலத்தில் பங்கேற்றவன்தான். இவ்வாறு விவரத்துடன் இங்கு கூற எனக்கு அனுபவம் உண்டு.

பெற்றோர்கள் கூடவே இச்சிறுவர்கள் வசித்தாலும் அவர்களுக்கே தெரியாமல், 'தங்கள் பிறந்த பொன் நாட்டையும் தங்கள் உற்றாரான பெற்றொர்களையும் வெறுத்து ஒதுக்க இஸ்லாமியம் எனும் நச்சுக் கலவையால் மூளைச் சலவை செய்யப்பட்டு, இஸ்லாமியக் குருட்டுப் போதனைகளைப் பக்குவமடையாத அச்சிறுவர்களைக் கொண்டே கூறும்படி கற்பித்து விடுகிறார்கள்'. 'யேமன்' நாட்டுப் பள்ளி ஆசிரியர் கூறியதை 'டைம்' பத்திரிக்கை மேற்கோள் காட்டி எழுதியது: "இப்போது அமெரிக்காவிலிருந்து இங்கு வந்த 'ஜான் லிண்ட்த்' அமெரிக்காவை மிக வெறுக்கிறான்' எனவும், செப்டம்பர் 23, 1998இல், 'யேமனி'லிருந்து தன் அன்னைக்கு வரும் கடிதங்களில் அமெரிக்க இருமனப்போக்கைக் கண்டித்து, ஆப்பிரிக்காவில் அவ்வப்போது அமெரிக்க தூதரகங்கள் வெடிகுண்டுக்கு ஆட்பட்டாலும், அது அமெரிக்க அரசாங்கத்தால் நடத்தப்பட்டு, இதன் குற்றங்களை முஸ்லிம்கள் மீது சுமத்துவதே வழக்கமாகிவிட்டது" என எழுதியிருந்தான். எந்த அமெரிக்கத் தூதரகமும் தங்கள் தூதரகக் கட்டடங்களைத் தாங்களே தகர்த்து அதிலுள்ள அமெரிக்கப் பணியாளர்களையும் கொலை செய்து கொள்ளுமா? இங்கு இறந்தவர்கள் பட்டியலில் முஸ்லிம்கள் ஒருவர்கூட இருக்க மாட்டார்கள். இப்படியிருந்தும் அநேக அமெரிக்க மக்களே இஸ்லாத்தின் தரமறியால் இருக்கிறார்களே! இம்மாதிரி நடப்பதை அமெரிக்காவில் மட்டுமல்ல, இந்தியா போன்ற ஜனநாயக நாடுகளிலும் காணலாம். இந்நாட்களில் முஸ்லிம்களே எல்லா குற்றங்களையும் செய்து, அவைகளை அங்கு பலியானவர்களோ அல்லது பலியானவர்களின் தோழர்களோ தான் செய்தார்கள் என'த் தட்டிக்கழிக்கும் இஸ்லாமிய சூழ்ச்சியைப் பற்றி முஸ்லிமல்லாதவர்கள் நன்கு அறிந்தும் வாளா இருந்துவிடுவார்கள். இதற்குச் சான்றாக 11 செப்டம்பர், 2001 இல் அமெரிக்க இரட்டை உயர்ந்தோங்கிய வியாபார மையக் கட்டடங்கள் விமான வெடிகுண்டுத் தாக்குதலில் 4000 யூதர்களுடன் தூள்தூளானபோது அமெரிக்க உளவுத்துறையும் (CIA) மொஸ்ஸாத் எனும் (Mossad) இஸ்ரைலி உளவுத்துறையும் சேர்ந்து நிகழ்த்தியதே அது என அமெரிக்க

முஸ்லிம்கள் குற்றம் சாட்டுகிறார்கள். உண்மையில் இக்குற்றத்தைச் செய்தது முஸ்லிம்கள்தான் எனவும் ஒவ்வொரு கட்டத்திலும் எப்படி நிறைவேற்றப்பட்டது எனவும் திசை திருப்பிக் கூறுவர். **ஒசாமா பின் லேடனே எல்லா விவரத்துடன் தற்புகழ்ச்சியுடன் இக்குற்றத்தைச் செய்தது முஸ்லிம்களே என ஒப்புக்கொண்ட போது கூட மீண்டும் மீண்டும் குற்றம் சாட்டுவார்கள்.** இக்குற்றத்தைப் புரிந்தபோது குற்றாவாளிகளுக்கு உதவியது அமெரிக்காவில் வாழும் முஸ்லிம்கள்தான் என ஒசாமா விலாவாரியாகத் தெரிவித்துள்ளான். இப்போதாவது தெரிகிறதா இஸ்லாமியப் பாம்பின் இரட்டை நாக்குக் கொள்கை! அமெரிக்காவிலுள்ள பலர் மர மண்டைகளில் இச்செய்திகள் மோதினாலும் இதெல்லாம் ஏற்க மறுக்கிறதே!

ஜான் லிண்ட்த் போகப்போக இஸ்லாம் ஒன்றே உண்மை மத இயக்கம் என நம்பும் மட்டும் உருவேற்றப்பட்டான். இதையே இச்சிறுவனும் மட்டு மீறிய உணர்ச்சியார்வத்துடன் மனப்பூர்வமான விருப்பத்துடன் தன் செயல்பாணியாக ஆக்கிக் கொண்டான். பின்னர் குரானைப் படித்து அதையும் உருவேற்றி மனப்பாடம் செய்து, “உயிருள்ளளவும் ஜிஹாதைச் செயலாற்றுவோம்” எனும் போர்க்குரலாக மடிக்கணினி முகப்புத் திரையில் (Lap top front screen page) எழுதிக் கொண்டான்.[403]

இந்த **போர்க்குரல் வசனத்தின் மூலம் அல் புகாரி- 4.52.88)**யில் உள்ளது. முகம்மதுவின் தோழர்கள் இவ்வசனத்தை பாடிக்கொண்டு போருக்கான அகழியை தோண்டினார்கள். ஒரு தடவை முஸ்லிமாக ஆகிவிட்ட பிறகு, ‘ஜான் வாக்கர் லிண்ட்த்’ முகம்மதுவின் தற்காதலெனும் நீர்க்குமிழிப் பிரபஞ்சத்தில் புகுந்துகொண்டான் எனப் பொருள். ஒரு மூச்சில் செப்டம்பர்/11/2001 விமான வெடிகுண்டு வெடிப்பு முஸ்லிம்கள் செய்யவில்லை என்பான், மற்றொரு மூச்சில் ‘ஜிஹாதை’த் தன் வாழ்நாள் முடிவு வரை செய்வேன் என உறுதியுடன் கூறிக்கொள்கிறான்.

ஜான் தன் சொந்த நாட்டுடன் எல்லாத் தொடர்பையும் அறுத்துக்கொண்டான். ஏனெனில், **முஸ்லிம்கள் இஸ்லாத்தில் நம்பிக்கையில்லாத நண்பர்களுடன் தொடர்பை வைத்துக்கொள்ளக்கூடாது. பிறந்த நாட்டுப்பற்று கூடாது: குரான் வசனம்: 9:23** - ஈமான் கொண்டவர்களே! உங்கள் தந்தைமார்களும் உங்கள் சகோதரர்களும், ஈமானை விட்டு குஃப்ரை நேசிப்பார்களானால், அவர்களை நீங்கள் பாதுகாப்பளர்களாக எடுத்துக் கொள்ளாதீர்கள். உங்களில் யாரேனும் அவர்களை பாதுகாப்பாளர்களாக எடுத்துக் கொண்டால், அவர்கள்தான் அநியாயக்காரர்கள் ஆவார்கள்.

**இஸ்லாத்தில் நம்பிக்கையற்றவர்களிடம் எப்போதுமே சண்டையிடு எனக் கூறும் குரான் வசனம்: 9.29** - வேதம் அருளப்பெற்றவர்களில் எவர்கள் அல்லாஹ்வின் மீதும், இறுதி நாளின் மீதும் ஈமான் கொள்ளாமலும், அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் ஹராம் ஆக்கியவற்றை ஹராம் எனக் கருதாமலும், உண்மை மார்க்கத்தை ஒப்புக் கொள்ளாமலும்இருக்கிறார்களோ. அவர்கள் (தம்) கையால் கீழ்ப்படிதலுடன் ஜிஸ்யா (என்னும் கப்பம்) கட்டும் வரையில் அவர்களுடன் போர் புரியுங்கள்.

**இஸ்லாமில் நம்பிக்கையில்லாதவர்களைக் கொன்றுவிடு:-- குரான் வசனம்: 9:123** - நம்பிக்கை கொண்டவர்களே! உங்களை அடுத்திருக்கும் (தொல்லை விளைவிக்கும்) காஃபிர்களுடன் போர் புரியுங்கள்; உங்களிடம் கடுமையை அவர்கள் காணட்டும் -நிச்சயமாக அல்லாஹ் பயபக்தியுடையவர்களுடன் இருக்கிறன் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

[403] Ibid.

ஜான் தன் தாய்க்கு 2000இல் எழுதிய கடிதத்தில், அமெரிக்க ஜனாதிபதித் தேர்தல் முடிந்த பிறகு அமெரிக்க புது ஜனாதிபதி 'ஜியார்ஜ் புஷ்'ஷை "உங்கள் ஜனாதிபதி" எனக் குறிப்பிட்டான். "ஏனெனில் அவன் ஒரு முஸ்லிம் அல்ல" எனக் கூடுதலாக எழுதினான். ஒரு முஸ்லிம், முஸ்லிமல்லாதவர் ஆட்சியை ஒப்பக்கூடாது. அவர்களுக்குக் கீழ்ப்படியக்கூடாது. அவர்களை கொன்றழிக்கும் வரை போரிடவேண்டும். **குரான் 25:52 -"ஆகவே, (நபியே!) நீர் இந்த காஃபிர்களுக்கு வழிபடாதீர். இதன் மூலம் (குர்ஆன் மூலம்) அவர்களுடன் பெரும் போராட்டத்தை மேற்கொள்வீராக"**.

ஜான் வாக்கர் லிண்ட்த்துடன் மற்றும் பல இளைஞர்களும் சமூகத்தில் சதி செய்யும் இஸ்லாத்துக்குப் பலிகடாக்களாகியவர்கள். அநேகமாக சொந்த லாபத்திற்கோ அல்லது பொதுமக்களை வேண்டுமென்றே ஏமாற்றவோ இவர்களைப் போலவே இன்னும் பலர் நம்மிடையே இருக்கவும் செய்கிறார்கள்.

****இத்துடன் முன் கூறியபடி, 'அப்துல் குத்துஸ்' எழுதிய நீண்ட பகுதி முடிவுற்றது. இவைகளை இங்கு கொடுக்கக் காரணம்: இஸ்லாத்து யதார்த்தங்களை ஒரு முன்னாள் முஸ்லிம் கூறியவாறே கொடுக்கப்பட்டுள்ளது.**

பேராசிரியர் Prof. Michael Sells of the University of North Carolina தன் மாணவர்கள் கோடை நாட்களில் படித்தறிய 'குரான் அணுகுமுறை' எனும் தலைப்பில் குரானில் உள்ள மெக்காவில் முகம்மது வாழ்ந்த நாட்களில் கூறிய கடுமையில்லாத சில குரான் வசனங்களை மட்டும் தொகுத்தெடுத்துக் கொடுத்தார். இத் தொகுப்பில் இஸ்லாத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் மீது வெறுப்பைக் காட்டும் வசனங்களைக் கொடுக்கவில்லை. காரணம், அது அடிவயிற்றைக் கலக்கி விடுமாம். இவ்வளவு பெருந்தன்மையுள்ள இஸ்லாமிய சார்புள்ள பேராசிரியரை எங்காவது கண்டதுண்டா?!. இம்மாதிரி எதற்காக அரைகுறையாக அளித்து இதற்கு உண்மையெனவும் பெயரிட வேண்டும்? இதன் உண்மைக் காரணம் தன் மாணவர்கள் இஸ்லாம்-'பெருந்தகைமை, அன்புடைமை, பண்புடைமை ஆகிய நற்குணங்களை போதிக்கும் இயக்கமே' என்ற ஏமாற்றும் தக்கியா நோக்கத்தோடு கூறப்பட்டது தான். இதுதான் இஸ்லாமிய 'ஷரியா' சட்டத்தை அனுசரித்து அல்லாவின் நன்மைக்காக எச்செயலையும் செயல்முறையில் நடத்த ஒப்புதலளிக்கப்பட்ட 'தக்கியா' எனும் புனித ஏமாற்றுதல் எனும் இஸ்லாமியக் கோட்பாடு. இம்மாதிரி புனித ஏமாற்றுதலை Karen Armstrong என்பவரும் இவர் போன்று John Esposito என்பவரும் இவர்களைத் தவிர அனேக இஸ்லாமிய நிபுணர்களும் இவ்வாறே உண்மைக்குப் புறம்பாகக் கூறி வருகின்றனர். இவர்களனைவரும் ஏன் வேண்டுமென்றே இஸ்லாத்தின் கீழ்த்தர பகுதிகளை மறைக்க வேண்டும்? இவ்வாறு செய்யும் போது மடமையால் செய்தனரா அல்லது ஏதாவது கொடுநோக்குடன் செய்கிறார்களா? எப்படியாயினும் முடிவு ஒன்றுதானே! இதனால் பாதிக்கப்படப் போவது முஸ்லிமல்லாதவர்கள்தானே! இம்மாதிரியே Karen & Esposito போன்றவர்கள் உபயத்தால் தவறுகளை உண்மையென மக்கள் எண்ணத்தானே! இதைப் படித்த பொதுமக்களை அறியாமையால் இஸ்லாம் எனும் முள்வலையில் சிக்க வைத்து இஸ்லாமிய பலிகடாக்களாக ஆக்க வைத்து விடுகிறார்கள். இதனால் மனித இனத்தின் எதிரியான இஸ்லாம் பெருக வழியும் சில ஏமாளிகளுக்காவது குழியும் தோண்டப் படுகிறது. இவர்களெல்லாம் பிறரை ஏமாற்றுவதற்குக் காரணம் என்ன? என பதில் கூறும் பொறுப்பிலுள்ளவர்கள்தானே? Karen Armstrong முதலில் கிறித்தவத்தை விட்டார். ஏனெனில், பைபிள் உண்மையில்லை என ஆரம்ப காலத்தில் தீர்மானித்தவர். இவ்வளவு பெரிய முடிவை எடுத்தவருக்கு, இஸ்லாத்தின் குரானே 'கிறித்தவ பைபிள்-யூதர்களின்

ஜூதாயிசம்' ஆகியவைகளின் நகலெனக் கண்டுபிடிக்க எப்படித் தெரியாமல் போயிற்று? இஸ்லாத்தை மட்டும் இவ்வளவு போற்றிப் புகழ, மகத்தான ஞானியாக எப்படி எப்போது ஆனார்? இதன் அடிப்படையென்ன? பெட்ரோ-பண மூட்டையா?

ஒரு முறை ஒரு வெறிப்பற்றீடுபாட்டில் காலெடுத்து வைத்து விட்டால் அதிலிருந்து திரும்ப வழி கிடைக்காமல், இவர்களின் சமூக சட்டவிரோதச் செயல் புரியும் கூட்டத்துடன் சேர்ந்துவிட வேண்டும். இங்கு எல்லாமே போலிக் கருத்துக்கள், அறியாமை, பயம், பகற்கனவே மெய்மையில் உலகமென எண்ணும் இயல்பு, கொடூர எண்ணங்களே இஸ்லாத்தில் தெய்வத்தன்மை என உணர்ந்து கொள்ள வேண்டி வரும். இங்கு வருவதற்கு முன் இவர்கள் நம்பிக்கை கொண்டிருந்த உயர்தரக் கருத்துக்கள், சரி எனும் உண்மை என்பவைகளெல்லாம் மிகக் கறைப்பட்டுத் தெளிவின்றி மக்கிப் போகும். இப்போது இஸ்லாம் எனும் மாசுக்கருத்து உடலில் முடக்குவாதம் பீடிப்பது போன்று இஸ்லாத்தில் சேர்ந்தவர்களுடைய இயல்புகளில் மெல்லப் படர ஆரம்பித்து விடும். இப்படிச் சேர்ந்தவர்கள் முடிவில் இஸ்லாத்தின் நன்மைக்காக கொலை கொள்ளைகளில் உயிர் துறக்கவும் தயாராக உள்ள 'ஜிஹாதிகளாக' ஆக்கியும் விடும்.

இந்த நிகழ்ச்சியை உளஇயல் தொடர்பான விளக்கங்களை Osherow நமக்களிக்கிறார்: ஒவ்வாமை அல்லது மாறுபாட்டுக் கருத்தியல்படி (dissonance theory) எவ்வப்போது ஒருவர் தனக்குள்ள பொதுக் கருத்துக்கு உளவியல் வகையில் இயல்புக்கு மாறான காரியத்தைச் செய்தால், இதே இயல்புக்கு மாறான நிலைமையே மனதுக்குப் பிடிக்காதவாறு அதிக பதற்ற நிலையையும் (unpleasant state of tension) தன்னிச்சையாக உண்டாக்கிவிடும். இதன் தொடர்ச்சியாக, ஒருவர் இதே ஒவ்வாமையைக் குறைத்துக் கொள்ள, தான் முன்னர் கொண்டிருந்த செய்கைகளையோ அல்லது நம்பிக்கையையோ மாற்றிக்கொள்ள இப்புதிய நம்பிக்கையில் மனம் நன்கு ஈடுபடத் தனது பழைய மனப்பான்மையை மாற்றிக் கொள்வார். அதுதான் இக்கோவில் அங்கத்தினர்களுக்கும் உண்டானது. ஜிம் ஜோன்ஸின் மக்கள் கோவிலில் நடந்த பல நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்தால் இதற்கு நன்கு பொருள் விளக்கம் அளிக்கும். ஜேம்ஸ் டவுனில் நடந்த மிக பயங்கர நிகழ்ச்சிகள் எதுவுமே வலிமையை உபயோகித்து நடந்தவையல்ல; மேலும் இவைகள் திடீரென எதிர்பாராமல் எரிமலையென வெடித்துக் கிளம்பவில்லை. இம்மாதிரி அங்குள்ளவர்களின் மூளையில் திடீரென உதிக்க ஏதும் விபரீதமாக நடக்கவும் இல்லை. ஆங்கே மக்கள் தங்களுடைய விருப்பத்தையும் வாக்குறுதிகளையும் '**நியாயப்படுத்த ஒவ்வாமை**' அல்லது '**மாறுபாட்டுக் கருத்திய'லே** (dissonance theory) முழுதுமாக விளைந்தது எனச் சுட்டிக் காட்டப் பெறுகிறது. உதாரணமாக, ஒரு பெரிய உயர்ந்தோங்கிய தண்ணீர்த் தொட்டியிலிருந்து உடைப்பு முதலில் சின்னஞ்சிறு சாதாரண சொட்டுகளாகத்தான் ஆரம்பிக்கும். பின்னர் பெரிய வெள்ளமாகத் தண்ணீர்த் தொட்டியே உடைந்து பெரும் ஓசையுடன் பெருகிக் கொட்டும்; இதே அங்குள்ளவர்களுக்கு பேராபத்துடன் எல்லோருக்கும் கடுந்துயர் விளைவிக்கிறது.

மக்கள் கோவிலில் முதலில் சீடர்களுக்கு பின்னால் வரப் போவதின் விளைவுகள் எப்படி இருக்குமென அறிமுகs சடங்கிலிருந்து நாடக ஒத்திகை போன்று நடத்தப்படுகிறது. ஆக முதலில் ஒத்திகையாக நடந்ததை நியாயப்படுத்த உண்மையாக நடந்த அரங்கேற்ற நிகழ்ச்சிகளில் அப்படியே நடந்தேறியது. அப்படி நடக்கும்போதுகூட சீடர்களுடைய ஒழுகலாறே இங்கு நமக்கு விளக்கமாகிறது. போகப்போக அச்சீடன் தன்னுடைய நேரத்தில் பெரும் பகுதியை மக்கள் கோவில் நடவடிக்கைகளில் ஈடுபடுத்துவான். அங்கு செய்யும் தொண்டைத் தவிர,

அரசியல்வாதிகளுக்குக் கடிதங்களை அனுப்பவும் தகவல் துறைக்குத் தங்கள் கோவிலின் மகத்தான காரியங்களைப் பற்றிச் சிலாகித்துச் சொல்லவும் நேரிடுகிறது. இதைத் தவிர இக்கோவிலுக்கு நன்கொடை வசூலிக்கவும் தொடர்பு கொள்வார்கள். சீடர்களும் தங்கள் சேமிப்பு, சொத்து, சமூகநலக் காசோலைகள் எல்லாவற்றையும் மக்கள் கோவிலுக்கே தன்னிச்சையெனப் பொய்கூறிக் கட்டாயப்படுத்திக் கொடுக்கக் கட்டளை இடப்படும். அம்மாதிரியே சீடர்களும் ஜிம் ஜோன்சின் உள்நோக்க விவரமறியாமல் அவன் சொன்னபடி செய்யும் தலையாட்டி பொம்மைகளென நடந்து கொண்டனர். இவைகளைத் தவிர சீடர்கள் தன்னிச்சையாக செய்த குற்றம் சாட்டத் தகுதியுள்ள நிகழ்சிகளைப் பற்றியும் அனேக வெற்றுக் காகிதங்களில் கையொப்பமிட்டு எழுதித் தரவேண்டும். (ஒருவேளை வரும் காலத்தில் ஒரு சீடன் முரண்டு பிடித்து கோவிலை விட்டு வெளியேற முயற்சித்தால் ஜிம் ஜோன்ஸ் வெற்றுக் காகிதங்களில் சீடனுக்கெதிராக தன்விருப்பப்படி எழுதி சீடனுக்குப் பாதகமாக, அவன் மானத்தை வாங்க உபயோகப்படுத்த முடியுமல்லவா?). இவைகளை ஏற்காது மறுப்பு தெரிவித்தால் அது ‘கோவிலின் மீது இருக்கவேண்டிய நம்பிக்கைக் குறைவு’ என கணிக்கப்படும். இதனால் எப்போதாகிலும் சீடர்கள் மக்கள் கோவிலை விட்டோடி விடத் தீர்மானித்தாலும், அதைச் செயல் முறையில் காட்ட இயலாது. இதனால், மக்கள் கோவிலில் தங்கிவிடத் தங்கள் உள்மனதைத் திருப்திபடுத்தி இச்செய்கையை நியாயப்படுத்தவும் நேரும்.

இதை மில்ஸ் (Mills (1979)) விளக்குகிறார்: ”காப்பீட்டுத் தொகையையும் (insurance proceeds) மக்கள் கோவிலுக்கே அர்ப்பணித்தாகிவிட்டது; சொந்த சொத்தும் பறிக்கப்பட்டு விட்டது; இனி அங்கிருந்து வெளிநாட்டுக்குத் தப்பியோடப் பயண இசைவுப் புத்தகமும் (passport) பறி போனது. அவரவர் பெற்றோர்களையும் உற்றோர்களையும் துறந்தாகி விட்டது; பெற்றோர்களிடம் விட்டுவிட்டு வந்த சீடர்களின் குழந்தைகள் கூட வெளிப்படையாகத் தங்கள் விரோதத்தைச் சீடர்கள் மேல் காட்டுகின்றனர். இவைகளை எல்லாம் ஜிம் ஜோன்ஸ் சிறிது காலத்தில் சாதனைகளாகத் தான் ஒருவனே செய்து முடிக்க முடிந்தது. இனி சீடர்களிடம் ஜிம் ஜோன்சும் அவனுடைய கொள்கைகளும்தான் மிஞ்சியது. இதிலிருந்து விடுபடச் சீடர்களுக்குத் துணிவில்லை, ஆதலால்தான் சீடர்களும் தங்கள் ஆற்றல்களையும் எஞ்சிய வாழ்க்கையையும் மக்கள் கோவிலுக்கே முடிவில் அர்ப்பணம் செய்ய முடிவில் தீர்மானிக்க வேண்டியதாகிறது”.

இதே போன்ற நிகழ்ச்சிகளை மெக்காவிலிருந்து மதீனாவுக்குக் புதிதாகக் குடிபெயர்ந்த ஆரம்பகாலத்து முஸ்லிம்களுக்கும் கூறலாம். இதற்கு ஆதாரங்கள்: எல்லாவற்றையும் மெக்காவில் துறந்துதறித் தள்ளிவிட்டு முகம்மதுவின் சொல்லுக்குப் பயந்து அவருடன் மதீனாவுக்குச் சென்றனர். புது இடத்தில் இவர்களுக்கு வேலை, வீடு, வாசல், வருமானம் உற்றார் உறவினர் என ஏதும் கிடையாது. முகம்மது தன் இக்கட்டான தருணத்தில் மதீனாவிலுள்ள ‘அன்சார்’ எனும் இனத்தை வேண்டி, இச்சமயத்தில் தன் சீடர்களையும் தங்களுடன் தங்க வைத்து உதவக் கேட்டுக்கொண்டார். முஸ்லிம்களுக்கு இது மிகக் கஷ்டமான காலம். ஆங்கே ஒரு அன்சார் தன்னுடைய மனைவியையே புதிதாகக் குடியேறிய முஸ்லிமுக்கு மனமுவந்து கொடுப்பதற்கு இசைந்தான். அந்தக் கதை இதோ: ‘அப்துர் ரஹ்மான் இப்னு ஒளஃப்’ எனும் மெக்காவிலிருந்து மதீனாவில் புதிதாகக் குடியேறிய புது முஸ்லிம் இவ்வாறு கூறினான்: ‘ஆரம்ப காலத்தில் முகம்மது ‘சா’த் இப்னு அர்-ரபி’யுடன் எனக்கு அறிமுகப்படுத்தி நல்ல தோழமையை உண்டாக்கிக் கொடுத்தார். நட்புறவு நன்கு உறுதிப்படுத்திய பின்னர், ஒரு நாள்,

அப்துர்-ரஹ்மானிடம், ‘சா’த் இப்னு அர்-ரபி’ கூறியது: ‘நானோ மதீனாவில் அன்சார்களுக்குள் மிகப் பெரிய செல்வந்தன். என் செல்வத்தில் பாதியையும் எனது இரு மனைவியரில் உனக்குப் பிடித்த ஒரு மனைவியையும் அளிக்கத் தயாராக இருக்கிறேன். அவளை நான் விவாகரத்து செய்து காத்திருக்கும் சமயத்திற்குப் பிறகு நீ அவளை மணந்து கொள்ள நானே எல்லா ஏற்பாடும் செய்து கொடுக்கிறேன்’ என்றான். திருமணமும் நடந்த சில நாட்களுக்குப் பின் நல்ல வாசனைத் திரவியங்களை பூசிக்கொண்டு நறுமணத்துடன் முகம்மதுவிடம் ‘அப்துர் ரஹ்மான் இப்னு ஔஃப்’ சென்றான். முகம்மது கேட்டார்: ‘உனக்கு மணமாகிவிட்டதா?’ அதற்கு அவன் ‘ஆம்’ என்றான். ‘யாரை மணந்தாய்?’ ‘ஒரு அன்சாரின் முன்னாள் மனைவியை மணந்தேன்’ என்றான்.[404]

இக்கதையை நட்புறவைப் பேணும் முஸ்லிம்களின் நற்குணம் பற்றித் தற்புகழ்ச்சியாகப் பழைய முஸ்லிம்கள் புதிதாக நுழைந்த முஸ்லிம்களுக்குப் பிரத்யேகமாக சுய விளம்பரத்திற்கு அடிக்கடிக் கூறிக்கொள்வார்கள். **இப்படித் தற்பெருமையுடன் கூறிக்கொள்ளும் போது முஸ்லிம்கள் தங்களுடைய அந்தரங்கத்தையும் திருமணத்தின் புனிதத்தன்மையையும் காற்றில் பறக்க விட்டு விடுவார்கள்.** இது போன்று இஸ்லாதுக்காகத் தங்கள் ரகசியம், சுதந்திரம் ஆகிய எல்லாவற்றையும் துறக்கத் தயாராகி விடுவர். இதைக் குறித்து எவரும் புகார் சொல்வதில்லை. எப்படியும் சில சுயநல முஸ்லிம்கள் வேண்டாத இடங்களில் வீணான செய்திகளை ஏறுமாறாகப் போட்டுக் கொடுப்பவனாகக் கூட (informer) இருக்கலாம். ஏடாகூடமாக ஏதாவது செய்து விட்டால், இது கொலையிலும் கூட விளையலாம் எனும் பயம் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் உள்ளூர உண்டு. இதனால் வேறு வழியின்றி ‘சாய்ந்தால் சாயும் செம்மறியாட்டுக் கூட்டமாக’ ‘இஸ்லாமுக்கே ‘ஜே!’ப் போட்டு மற்ற முஸ்லிம்களைப் போலவே இருப்பது என்றென்றும் விவேகமுள்ள நடத்தையென இருப்பார்கள் (அபூ பக்கர் மற்றொரு உதாரணம்). இதனால், ஒரு முஸ்லிமையோ அல்லது காஃபிரையோ கொல்ல ஆணை கிடைத்தால் மறு பேச்சின்றி நடத்திக் காட்டுவார்கள். இதனால் இப்பேற்பட்டவர்களுக்கு இஸ்லாத்தின் மேலிடத்தில் நல்ல பெயரும் கிடைக்கும். மற்ற முஸ்லிம்களைக் காட்டிலும் தானொரு படி உயர்ந்ததாகவும் காட்டிக் கொள்ளலாமே! இவை எல்லாமே மனித இயல்புடன் கடவுள் படைத்ததாயிற்றே!

இவ்வாறு ஒரு ஹத்தீசில் காணலாம்: “கண்ணிலாதவனிடம் ஒரு அடிமைப்பெண் இருந்தாள். அப்போது இவள் முகம்மதுவைப் பற்றி அவதூறாகப் பேசி அவரைக் கீழ்த்தரமாக இகழ்ந்து கூறுவதுண்டு. இக்குருடனுடன் ஒரு நாள் அவள் புணர உடைகளைக் கழற்றித் தானே நெருங்கும்போது தயாராக வைத்திருந்த கூரிய குத்துவாளால் அவள் வயிற்றில் குத்திக் கிழித்துக் கொன்றான். கொலை செய்யப்பட்டவள் காலுக்கிடையில் ஒரு குழந்தையும் அகப்பட்டுக்கொண்டு அதன் உடலிலும் ரத்தம் சொட்டியது. இத்தகவல் முகம்மதுவுக்குக் காலையில் தெரிய வந்தது. ஒரு கூட்டத்தைக் கூட்டி இக்கொலை நிகழ்ச்சியைப் பற்றி விசாரித்தார். முழு விவரம் தெரிந்தபின்னர், **”இக்கொலைக்குப் பழி வாங்கத் தேவையில்லை” எனத் தீர்ப்பளித்தார்**.[405] **ஏனெனில் இவள் முகம்மதுவைப் பற்றி அவதூறாகப் பேசிவிட்டாளாம்.** இதனால் நாம் அறிய வேண்டியது: உதாரணமாக, முன் விரோதம் காரணமாகவோ அல்லது ஒருவனைப் பிற்காலத்தில் பிடிக்காது போனாலோ, அவனைக் கொலை செய்ய வேண்டுமென தீர்மானித்து, அவனைக் கொலையும் செய்துவிட்டால், கொலை செய்தவன் கொலைக் குற்றத்திலிருந்தும்

[404] Sahih Bukhari *Volume 3, Book 34, Number 264*
[405] Sunan Abu-Dawud Book 38, Number 4348

கூடத் தப்பித்துக் கொள்ளலாம். அதாவது. இவன் அல்லாவின் தூதரை அவமதித்தான்; ஆகையால், இவனைக் கொலை செய்தேன் என ஒரு அபாண்டப் பொய்யைக் கூறிவிட்டால், கொலை செய்தவனுக்கு 'ஷரியா'படி தண்டனை கிடையாது. இதற்குச் சாட்சியே தேவையில்லை. சாட்சியையும் உண்டாக்க முடியுமானால் இன்னும் மெத்த நல்லதுதானே! இப்படி ஒரு சூழ்நிலை இருக்குமானால், முகம்மதுவுடனோ அல்லது இஸ்லாத்திலோ எவனுக்கு ஒத்திசைவில்லாமல் போகும்? இதனால் தெரிவிக்கும் தகவல் மிகத் தெளிவாக உள்ளது. "இஸ்லாத்தில் சொன்னதைச் செய், அப்படிச் செய்யாது போனால் எச்சமயத்திலும் நீ கொல்லப்படலாம்".

பாகிஸ்தானும் ஒரு பைத்தியக்கார விடுதி போன்றே ஆகி விட்டது. உதாரணம்: சல்மான் தசீர், எனும் பாகிஸ்தான் அரசியல்வாதி எப்போதும் 'தெய்வ நிந்தனை" எனும் பாகிஸ்தான் சட்டத்துக்கு எதிராக நீதிமன்றத்தில் வழக்காடுவதுண்டு. இவர் மிகப் பிரபலமான வக்கீல். இவரே இவருடைய மெய்காப்பாளர் ஒருவரால் சுட்டு விழ்த்தப்பட்டார். கொலை செய்தவனின் வாக்குமூலம்: 'இதனால் இஸ்லாமை விட்டோடும் எண்ணம் உள்ளோருக்கு பாடம் கற்பிக்கவே' தான் தன் எசமானரைக் கொலை செய்ததாக தற்பெருமையாகப் பேசினான். இவனே பாகிஸ்தானில் பெரிய புகழ்சான்ற இஸ்லாமியப் பெருவீரன் (Islamic 'HERO') என அவனுக்கு மலர்மாலை முதலிய மரியாதை செய்யப்பட்டன. பாகிஸ்தான் தண்டனைச் சட்டப் பிரிவுப்படி (**Section 295-C of Pakistan's Penal Code for Blasphemy**), "எவனொருவன்: நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ; எழுத்தாலோ; வாய்ப்பேச்சாலோ; கண்ணால் காணும் வகையிலோ; வெளிப்படையாகவோ; மறைமுகமாகவோ அல்லாவுக்கோ அல்லது முகம்மதுவுக்கோ எதிராக எதையும் சுட்டிக் காட்டினால் இக்குற்றத்தைச் செய்தவர்கள் 'அல்லாவின் தூதர் முகம்மது'வின் புனிதப்பெயரின் துய்மையைக் கெடுத்து விட்டதாக இக்குற்றம் புரிந்தோருக்குக் கொலைத் தண்டனையொடு அபராதமும் விதிக்கப்படும்".

முகம்மது எக்கணமும் மனவாட்டம் அடையாதிருக்க அவ்வப்போது அல்லா இதைத் தன் முழு நேர வேலையாகவும் 'உடலுறவுக்கு எவளையாவது அச்சமயத்தில் வசதி செய்து தருவது முதற்கொண்டு (pimp) இதற்கான உடல் வலிமை ஆகிய எல்லாவற்றிலும்' முகம்மதுவின் உடல் தேவைகளை நிறைவேற்றி வைக்கக் காத்திருப்பதாகத் தெரிகிறது!!

முகம்மது ஒரு தடவை மிகுந்த பண்புக் குறைவாக நடந்து கொண்டார். அவரைக் காண நெடுந்தூரத்திலிருந்து வந்த 'அரேபியர்கள்' சரியாக மரியாதை காட்டவில்லை என அல்லாவின் குரலாகத் தானே குரானில் எழுதிக் கொண்டார். இந்நிகழ்ச்சியைப் பற்றி அல்லாவுக்குத் தெரிந்து இதற்கான வசனங்களையும் உடனேயே காப்ரியேல் மூலம் குரானில் பிதுக்கிக் கொண்டு எழுத உடனுக்குடன் 'வாஹி' வெள்ளமாக அதாவது 'இறைச்செய்தி'யாக அனுப்பியும் விட்டாராம்! இதனால் என்ன தெரிகிறது? குரான் வசனங்களை சமயத்திற்கேற்றவாறு முகம்மதுவே எழுதிக்கொண்டு அவைகளை அல்லா கூறியதாக விளம்பரப்படுத்தினார் என்றே நமக்குத் தெளிவாகப் புலப்படுகிறது. முகம்மது மீது அல்லாவுக்கு அத்தனை கரிசனம், அக்கறை இருந்த்தாம்!

**குரான் வசனம் 49: 2 லிருந்து 4வது மூன்று வசனங்களில்**:

**49:2** -- "மு..்மின்களே! நீங்கள் நபியின் சப்தத்திற்கு மேலே உங்கள் சப்தங்களை உயர்த்தாதீர்கள்; [[[...]]]

**49:3** -- நிச்சயமாக, எவர்கள் அல்லாஹ்வுடைய தூதரின் முன்பு, தங்களுடைய

சப்தங்களைத் தாழ்த்திக் கொள்கிறார்களோ அ(த்தகைய)வர்களின் இதயங்களை அல்லாஹ் பயபக்திக்காகச் சோதனை செய்கிறான் -[[[...]]]

**49.4 -** (நபியே!) நிச்சயமாக, எவர்கள் (உம்) அறைகளுக்கு வெளியே இருந்து உம்மை இரைந்து அழைக்கிறார்களோ, அவர்களில் பெரும்பாலோர் விளங்கிக் கொள்ளாதவர்களே!

முகம்மதுவின் பெயரைச் சொல்லிக் குரலைக்கூட உயர்த்துப் பேசாமல், மன்னருக்கு அளிக்கும் மரியாதையை முகம்மதுக்கு அளிக்க வேண்டுமாம்! மொழிபெயர்ப்பின் நோக்கத்தில் இக்குரான் வசனத்தில் உள்ளவைகளை நிரூபிக்க அவ்வாறே மொழிபெயர்ப்பாளர் என்ற முறையில் கூறியிருக்கிறேன்.

**அடுத்து மிதவாத முஸ்லிம் எப்படித் தீவிர வன்முறையாளராக ஆக்கப்படுகிறார் எனவும் பார்த்து விடுபோம்.** மிதவாதி முஸ்லிமாக இருந்தவர், படிப்படியாக ஒரு பயங்கர வன்முறையாளராக ஆவது பற்றி அனேக தடவை மற்றவர்களால் எளிதில் அறிய முடியாது. ((முதல் அத்தியாய கடைசி பத்தியில் - (தக்கியா=Taqqiah என) மேற்கோளாகக் கொடுக்கப்பட்ட 882வது திருக்குறளையும் இங்கே நினைவு கொள்க. (வாள்...அஞ்சற்க - கேள் போன்ற...உறவை அஞ்சுக)

புதிதாக இஸ்லாத்துக்கு மாறியவர்களுக்கு "இஸ்லாத்தில் உள்ள எழில் மிகு தத்துவங்கள்" எனும் தலைப்பில் முதன் முதலில் அறிமுகப் பாடம் கற்றுக் கொடுக்கப்படும். முதலில் இஸ்லாம் ஒரு சுலபமான வாழ்க்கை வழி எனவும் சமத்துவமும் அமைதியையும் செயலில் நிறைவேற்றி(!!!), ஒரே கடவுள் எனும் கொள்கையுள்ள இயக்கமெனவும் கூறப்படும். மேலும் உலகிலுள்ள எல்லா மதங்களில் உள்ள கொள்கைகளையும் அதிலும் யூத மதத்தையும் கிறித்தவத்தையும் மதிக்கும் இஸ்லாமிய இயக்கமென ஆரம்பத்தில் பேச்சளவில் கூறப்படும். அடுத்து இவ்விரு மதங்களும் இஸ்லாமுடன் ஒத்துப் போகாதவைகள் என்றும் இவைகள் தங்கள் மதத்திலுள்ள நல்லவைகளைக் கூடக் கடைபிடிக்கத் தெரியாது அம்மதங்களைக் கெடுத்துவிட்டார்கள் என ஓயாது ஓதப்படும். .இதனால் இஸ்லாம்தான் ஆதிகாலத்திலிருந்து நிகழ்காலம் வரை தன் அசலான மாசுபடுத்த முடியாத தூய்மைத் தோற்றத்தைக் கொண்டது என புதுப் முஸ்லிம்களுக்கு மூளையில் மெல்ல மெல்ல ஊசி மருந்து திரவம் போல் செலுத்தப்படும். ஆகவே இஸ்லாமே கடவுளால் அங்கீகரிக்கப்பட்ட இயக்கமெனவும் இஸ்லாத்தை வெறுத்தால் உண்மையை வெறுப்பதற்கொப்பாகும் எனவும் போதிக்கப்படும். இப்படி இஸ்லாத்தை வெறுத்தவர்களே மிகவும் பாபம் செய்தவர்களாக கடவுளால் முடிவு செய்யப்படும் என வற்புறுத்திக் கூறப்படும்.

மற்ற மதத்தவர் இஸ்லாத்தின் மீது பொறாமை கொண்டவர்கள்; இஸ்லாத்திலுள்ள உண்மைகளை மறைப்பதால் இவர்கள் உள்ளங்கள் வியாதி படைத்தது. பகைமையால் இஸ்லாம் போன்ற நல்ல தத்துவங்கள் நிறைந்த இயக்கத்தைக் கூட மறுக்கிறார்களே!. இவர்களெல்லாம் அல்லாவின் எதிரிகள். ஆக மற்ற மதங்களில் உள்ளோரை அல்லாவே வெறுக்கிறார். அல்லாவை ஒப்பாதவர்கள் உண்மையை மறுக்கிறார்கள். ஆனால் முஸ்லிம்களெல்லோரும் சகோதரர்கள் எனவும், 'கா∴பிர்கள்' எல்லோரும் கூட்டாக, அருவருக்கும் தீயொழுக்கம் உள்ளவர்கள், (ஆகையால் அழிக்கப்பட வேண்டியவேண்டியவர்கள்): ஆக, கா∴பிர்கள் அல்லாவின் எதிரிகளென புது முஸ்லிம்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டு பையப்பைய உருவேற்றப்படும்! மேற்கூறியவைகள் போன்று சொல்லிச் சொல்லி, புது முஸ்லிம்களுக்கு இக்கருத்துக்களால் மெல்ல மூளை சலவை செய்யப்பட்டுவிடும். இவர்களுக்கு முன்னிருந்த தனித்தன்மை செத்துவிடும்; அநாமதேயங்களாக 'ஒழுங்கற்ற இஸ்லாமிய உம்மா'வுக்கும்

அல்லாவுக்கும் அடிமையாகி விடுவார்கள். (பின் வரும் ஒரு காலகட்டத்தில் இம்முஸ்லிம்களே பலிகடாவாகி விட்டோமென உள்ளுக்குள் குற்ற உணர்ச்சியுடன் வாழ்வார்கள்). ஆனால் இன்றும் உலகை நோக்குவதில் ஒரு மாறுபட்ட கருத்தோடு தான் பார்க்கிறார்கள். பார்ப்பார்கள். உடன், **'நமக்கெதிராக அவர்கள்'** (we vs they) என்ற கருத்துப்படிவமே நாளுக்கு நாள் நிலைத்து விடுகிறது. இதில் "அவர்களென்பது" (they) முஸ்லிமல்லாதவர்கள்; கெட்டவர்கள்; **அல்லாவின் எதிரிகள்**, முஸ்லிம்களை அடக்க விரும்பும் கொடியோர்; **நாய்கள், பன்றிகள், எலிகள்; குரங்குகள் எனும் வெவ்வேறு பெயர்களால் குறைவுபடுத்திக்** குறிப்பிடப்படும். இதில் 'நாமெல்லோரும்' என்பது (we) **முஸ்லிம்கள்**, அல்லது முஸ்லிமல்லாதவர்களின் கொடுமைகளுக்குள்ளாகும் முஸ்லிம் 'பலிகடா'க்கள் எனவும் கூறப்படும். தினமும் கொஞ்சம் கொஞ்சமாக இப்புது முஸ்லிம்கள் மனத்தில் இவைகளால் முழுப் பயங்கரவாதிகளாக முல்லாக்கள் ஆக்கி விடுவார்கள். வெறிப்பற்றீடுபாடுகளுடைய செயல்படும் வழியே **படிப்படியாய் நிகழும் ' (மட்டமான) கருத்துத் தோற்றுவித்தலில்'** (indoctrination) இஸ்லாத்தின் மையப்பகுதி உண்மைகளும் மெய்யான நிகழ்ச்சி நிரலும் புது முஸ்லிம்களிடமிருந்து மறைக்கப்பட்டு, இம்முஸ்லிம்களுக்கு எதெது கூறவேண்டுமோ அவைகள் மட்டுமே மெல்ல சின்னக் கரண்டியால் உணவு ஊட்டப்படுவது போன்று சிறுகச்சிறுக போதித்து உண்மையான இஸ்லாமிய வெறியர்களாக ஆக்கப்படுவார்கள். பின் இருக்கவே இருக்கிறது. முதலில் புதியவர்களை வெறியர்களாக ஆக்கிவிட வேண்டும். அவ்வளவே!

### உயிர்த் தியாகத்தை உரிமையுடன் கேட்டுப் பெறுதல்

தற்காதலர் இறுதியாகத் தன் சீடர்களின் வாழ்வையும் சாவையும் தன் கட்டுப்பாட்டுக்குள் வைக்க முற்படுவார். இதனால் தானும் கடவுளாக ஆகிவிட்டோம் எனும் எண்ணத்தில் மிதப்பார். தன் சீடர்கள் முழுப் பணிவுடன் இவ்வெறிப்பற்றீடுபாட்டின் தலைவர் சொன்ன சொல்லுக்குக் கட்டுபட்டு இருக்க வேண்டும் என்பதற்கான இவ்வெண்ணத்தை மனத்தில் இருத்திக்கொண்டு, இதற்கு அனுசரணையாகச் சீடர்களுக்குச் சொந்தமான எல்லாவற்றையும் தனக்கு அளித்துவிட்டு இச்செய்கையால் தங்கள் தலைவர் மீதுள்ள பக்தி விசுவாசத்தை நிரூபிக்கச் செய்வார். இதில் சீடர்களின் உயிரையும் சேர்த்துத் தான் உரிமையுடன் கேட்டுப் பெறுகிறார். இதற்கெல்லாம் தலைவர் கொண்டுள்ள 'இயக்கத்தின் பெயரால் இருக்கும் போலிக் காரணமே' மிக முக்கியமாகும். இஸ்லாத்தில் முகம்மது கூறியபடி தங்கள் உயிரைத் தந்து 'ஷாஹீதான'வர்களுக்கு, இப்புவியிலில்லா வசதிகளை, சுவர்க்கத்தில் எல்லா சுகமான வசதிகளுடன் இடம் முன்கூட்டியே பதிவு செய்யப்பட்டு விட்டது (guranteed Reservation in Heaven for 'Jihadis'!) என உறுதியளிக்கிறார். அதாவது இப்படி சுவர்க்கத்தில் இடம் கிடைக்க வில்லையெனில், சீடர்கள் ஷாஹீதாகி இறந்த பிறகு 1434 ஆண்டுகளுக்கும் முன்னர் இறந்துபோன முகம்மதுவிடம் வந்து கேட்டுப் பார்த்து விட்டு, அவருக்கும் இயலாவிட்டால் பின்னர் உச்ச நீதிமன்றத்தில் வழக்கு தொடர முடியுமா! கேட்பதற்கே மிக வேடிக்கையாக இருக்கிறதல்லவா? **இதற்கொரு குரான் வசனம் வேறு: 3:169** -"அல்லாஹ்வின் பாதையில் போரிட்டுக் கொல்லப்பட்டவர்களை மரித்தவர்கள் என்று நிச்சயமாக எண்ணாதீர்கள் - தம் ரப்பினிடத்தில் அவர்கள் உயிருடனேயே இருக்கிறார்கள்-(அவனால்) அவர்கள் உணவளிக்கப்படுகிறார்கள்".

அல்-புகாரி தன் ஹத்தீசில், "ஜிஹாதில் பங்கு கொண்டு அல்லாவுக்கான காரியத்தில் மரித்த முஸ்லிம்களுக்காக 100 தனித்தனி வகைகளில் சுவர்க்கங்களில்

ஷாஹீதுகளின் பெயர்களை முன்னரே பதிவு செய்துகொண்டுவிட்டார்".[406]. இன்னொரு ஹத்தீசில் அல் புகாரி எழுதி வைத்தது: "சாதாரணமாக எந்த ஷாஹீதும் மறுபடி இப்புவிக்குத் திரும்பி வர நினைக்கமாட்டார், ஏனெனில் அவருக்கு சுவர்க்கத்தில் அவ்வளவு வசதிகளை அல்லாவே தந்து விடுவார். அப்படி இருந்தும் இந்த ஷாஹீதுகள் மீண்டும் மீண்டும் பத்து தடவை புவிக்குச் சென்று அடிக்கடி ஷாஹீதுகளாக ஆகிவிடவே விரும்புவர். ஏனெனில், சுவர்க்கம் இவ்வளவு மேன்மை படைத்தது.[407]. மற்றொரு ஹத்தீசில் அல்-புகாரி உறுதிபடக் கூறியது: இது சீடன் ஓமர் கேட்ட கேள்விக்குப் பதில்: "முஸ்லிம் ஷாஹிதுகள் சுவர்க்கம் புகுவர் எனச்சொன்னீர்கள்: அஃதே போன்று அல்லாவின் மீது நம்பிக்கையில்லா 'பேகன்- காஃபிர்கள்' நரகத்துக்குப் போவார்களா?" எனக்கேட்டதற்கு முகம்மதுவின் ஆணித்தரமான பதில், "ஆமாம். இக்காஃபிர்கள் எரியும் நரக நெருப்பில் தள்ளப்படுவார்கள்" என்றார்.[408]

Osherow கூறுகிறார்: "முடிவாக ஜிம் ஜோன்ஸ் அவன் கொண்ட கொள்கைகளுக்காக 911 உயிர்களை ஒன்றாகவே பலி வாங்கிக் கொண்டான். ஆனால் சிறு குழந்தைகளையுமா கொல்ல வேண்டும்? இதையெல்லாம் விருப்பு வெறுப்பின்றி எல்லா அம்சங்களையும் கருத்தில் கொண்டு சீர்தூக்கி நோக்கினால், முதலில் இந்நிகழ்சியே நடந்திருக்கக் கூடாது. எப்படியோ நம்ப முடியாதது நடந்து முடிந்து விட்டது. மேலும் இவ்வளவு மனிதர்கள் தங்கள் சொத்துகளை குழந்தைகளையும் வாழ்க்கையையும் ஒருவனின் ஆதிக்கத்தில் உள்ள கோவிலுக்காகத் தியாகம் செய்ய இயலுமா? இந்த நிலைமையைத் தனக்கு சாதகமாக ஆக்கி, இதற்கேற்ற வழிமுறையைச் செய்துகொண்டு, இதற்கும் சீடர்களைத் தங்களுக்குள் நியாயப்படுத்தி அங்கீகரிக்கச் செய்து, ஒரு செலவில்லாமல் செய்து முடிக்க ஜேம்ஸுக்கு எப்படி முடிந்தது?"

முகம்மது கூடத் தன் முஸ்லிம்களை எப்படியோ சமாதானப்படுத்தித், தாம் கூறியபடி நடந்து கொள்ளவும் தாம் அங்கீகரித்த கடவுள் அல்லாவை மட்டுமே தொழவும் இதையே அல்லா வழிமொழிந்ததாக குரான் வசனமாகச் செய்து காட்ட முடிந்ததல்லவா?! **குரான் வசனம் 51:56: "இன்னும், ஜின்களையும், மனிதர்களையும் அவர்கள் என்னை வணங்குவதற்காகவே அன்றி நான் படைக்கவில்லை."**

குஃட்சியின் ஹத்தீஸ்படி (குஃட்சியையும் நம்பத்தகுந்ததெனக் இஸ்லாத்தில் கூறுவதுண்டு) வாழ்க்கையின் நோக்கமே, அல்லாவைத் தெரிந்து தொழவும் இதை நடக்கும்படிச் செய்த முகம்மது கூறியபடி அவரையும் அல்லாவையும் சேர்ந்து நம்பிவிடவும் முஸ்லிம்களுக்கு முடிவாக வலியுறுத்தப்பட்டது. ஆக இக்குறிக்கோளே இன்றும் ஒவ்வொரு முஸ்லிமின் வாழ்க்கை நோக்கமாகவும் கடமையாகவும் ஆகிவிடுகிறது. அதனால்தான் அல்லாவுக்காகச் செய்யப்படும் எக்காரியத்தையும் சட்ட விரோதச் செயலானாலும் அல்லது குற்றத் தொடர்புடைய செயலானாலும் இஸ்லாத்தால் அனுமதிக்கப்படுகிறது.

தொழில்துறை விஞ்ஞானத்தில் சிறந்த 'அமி ஸ்கோபி' என்பவர், 'மைக் ஹெஸ்' என்பவருடன் Popeater.com எனும் இணையத்திற்காக நடந்த ஒரு நேர்காணலில் கூறியது: "தொழில்துறை விஞ்ஞானத்தில் உள்ளவர்களிடம் உள்ள மிக ஆபத்தான குணம் என்னவென்றால், இவர்களால்தான் மக்களுக்கு விடிவுகாலம் ஏற்படப்போகிறதென நம்பிச் செயல்படுகிறர்கள். இதனால் இவர்கள் எல்லாச்

[406] Bukhari Volume 4, Book 52, Number 48
[407] BukhariVolume 4, Book 52, Number 72
[408] Bukhari Volume 4, Book 52, Number 72

சட்டதிட்டங்களையும் மீறி, நினைத்ததை நடத்த வேண்டுமெனக் கருத்தில் கொண்டு, வருங்காலத்திற்கு எதெது மிக நல்லதெனப் பலவற்றை இவர்களே முடிவு செய்து விடுகிறார்கள். தாங்கள் நினைத்ததை அப்படியே சாதித்துக் கூறவும் தங்களை விமரிசனம் செய்பவர்களை மௌனிகளாக்கவும் தேசிய டெலிவிஷன்களிலும் அவ்வப்போது தோன்றுகிறார்கள். இவர்கள் செய்யும் தில்லுமுல்லுகளை அறிந்த இவர்கள் கீழ் பணி புரிவோர் சிலரைத் தேவையென்றால் உடலால் துன்புறுத்தி, சித்திரவதைகளையும் செய்து, அடித்து, அச்சுறுத்தி அல்லது பணி நீக்கம் செய்து அல்லது கொலையும் செய்து தங்கள் பாதையை அனுசரித்துச் செல்லச் செய்து விடுகிறார்கள். இதற்காகப் பணியாளர்களின் குடும்பத் தொடர்பையும் உபயோகிக்கத் தயங்க மாட்டார்கள். இவர்களெல்லாம் மட்டுமீறிய வெறியுணர்ச்சியார்வம் நிறைந்தவர்கள். இவர்களுக்குத் தாங்கள் நினைத்தவாறு முடிவை அடைய வேண்டியது முக்கியமே தவிர, அதைச் செய்து முடிக்கும் வழி சட்டவிரோதமாக இருப்பினும் அவை இவர்களுக்கு நியாயமான செயல்தான்" என சொல்கிறார்.

Osherow எழுதுகிறார்: "இவ்வாறே ஜிம் ஜோன்சும் தன் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்து தன் சீடர்கள் அனைவரையும் தான் கூறும், 'இறுதிச் சடங்கை' மிக சாமர்த்தியமாக, வெகு கவனத்துடன் பலருடன் கூடி நடத்தும் பல்லியல் இசையைப் போல பிசிறு (அபஸ்வரமின்றி) இல்லாமல் (orchestration) ஒரே நோக்குடன் சீடர்கள் அவனுக்குக் கொடுத்த வாக்குறுதிப்படி செய்து முடித்தான். கொடுமையான முடிவைச் செய்து காட்ட முதற்படியில், தலைவர் விடுக்கும் ஆரம்ப நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட வைப்பதே இறுதிச் சடங்கிற்கு ஏற்றதாகி விடும் எனச் சமூக உளநூல் ஆய்வாளர்களும் விற்பனையைத் தொழிலாகக் கொண்டவர்களும் கண்டு பிடித்துள்ளனர்.[409]

ஆரம்ப வேளையில் சீடர்களை ஒப்ப வைப்பது மிகவும் அநியாயமாக இருப்பினும், மிக எளிதாகிறது. ஆரம்பத்தில் ஒப்புக்கொண்டவர்களுக்குத் தாங்கள் ஒப்புக்கொண்ட அதையே முடித்துக் காட்டப் போகப்போகத் தங்கள் நடத்தையால் இறுதிச் சடங்குக்கு உகந்தாற்போல பெரிய செயலைச்செய்ய இறுதியில் இணங்கி விடுவார்கள். சாவிலாவது ஜிம்மைவிட்டு விடுதலை அடையலாமே!

Osherow இவ்வாறாக ஜிம் ஜோன்சின் சீடர்கள் கூண்டோடு தற்கொலைக்கு உடன்பட்டதற்கு விளக்கம் கொடுக்கிறார்: "தற்கொலைச் சாவு பற்றி பயமின்றி எதிர்கொள்ளத் 'தன்மீது சீடர்களுக்குள்ள நம்பிக்கையைப் பரிசோதனை செய்வது' என்ற பெயரில் பல ஒத்திகைகளை ஏற்கனவே அவன் நடத்தினான். இதையும் சீடர்கள் முழு விருப்பத்துடன் செய்து காட்டினர். ஜிம் ஜோன்சின் பழைய சீடனொருவன் பின்னர் ஞாபகத்துடன் சொன்னது: ஜிம் சிரித்துக்கொண்டே கூறியது, 'இது தற்கொலைக்கு, ஒத்திகைதான். ஒருவரும் சாகவில்லையே!; ஆக இதுவும் நல்ல படிப்பினைதான். இவ்வாறாக இறுதியில் தற்கொலை செய்துகொள்ள அவன் மிக உறுதியுடன், உயிரை அர்ப்பணம் செய்யும் வகையில் செருக்குடன் கூறியது. ஒருவர் கொண்டுள்ள நம்பிக்கைக்காக உயிர் துறப்பது ஒரு சிறப்புரிமை, அவ்வுரிமையை இப்போது நிலை நாட்டிக்கொள்ளப் போகிறேன் என்றான்'.[410]

முகம்மது தன் செல்வத்தையும் செல்வாக்கையும் பெருக்கிக் கொள்ள அநாவசியத் தற்கொலைக்கே பரிந்துரைக்கவில்லை; அதற்கு பதிலாக, அல்லாவின் நிமித்தத்திற்காக உயிர் துறந்து 'ஷாஹீதாக' ஆகி விடுவதை ஆதரித்து 'அதற்காகத்

[409] Freeman, J., AND Fraser, S. Compliance without pressure: The foot-in-the-door technique. *Journal of Personality and Social Psychology,* 1966, 4, 195-202.
[410] Winfrey, C. Why 900 died in Guyana. *New York Times Magazine,* February 25, 1979.

தற்கொலை செய்துகொள்' எனப் பரிந்துரைப்பார். அதையே வெவ்வேறு விதங்களில் கட்டாயப்படுத்தினார். (ஹிட்லரும் அவ்வாறே ஜெர்மனிக்காக உயிர்த் தியாகம் செய்ய 'நாசி'களிடம் கோரினான்).

தனக்கு வேண்டிய அதிகாரம், செல்வம் ஆகியவைகளைப் பெருக்கிக் கொள்ளும் ஒரே சுயநல முடிவை எவ்வகையாலும் அடைய, அதாவது தனக்குச் செலவில்லாமல் மற்றவர்கள் சொத்து சுகம் உயிரைத் தியாகம் செய்து அதற்காகச் சுவர்க்கம் எனும் புதுக்கருத்துப் படிவத்தை இஸ்லாத்தில் உருவாக்கிக் காட்டி, முஸ்லிம்களைத் தனக்காகப் போரிட எப்படி முகம்மது வார்த்தைகளைத் திரித்துத் திசை திருப்பிச் செய்யக் கூறினார் எனக் கவனிக்கவும். இதைத் தவிர முகம்மது தன்னையே தன் வீரர்களுக்கு ஒரு முன்னுதாரணமாகக் காட்டிக் கொள்ளவும் இல்லை. எப்போதுமே எதிரிப்படையுடன் வீரத்துடன் போரிட்டு தன் போர்க்கலைத் திறமை, யுத்த தந்திரங்களால் வென்றார் என்ற சரித்திரமே எந்த இஸ்லாமிய ஆவணங்களிலும் கிடைக்காது. இது உண்மை. 'மாற்றிக் கூற எந்த முல்லாவாலும் முடியாதெனச் சவாலையும் விடலாம்'. முகம்மதுவுக்குத் 'தன்னுயிர் வெல்லக்கட்டி'. முகம்மதுவுக்கு தன் பாதுகாப்புதான் எல்லாவற்றைக் காட்டிலும் மிக முக்கியமானது. வெறிப்பற்றீடுபாட்டுத் தலைவர்கள் எல்லோருக்கும் இவ்வாறே சுயநலப் பைத்தியக்காரத்தனம் கட்டாயம் குடியிருக்கும்.

உலகத்திலுள்ள முஸ்லிமல்லாத மக்கள் (80%) உறுதியுடன் இருப்பது: மதத்தின் பெயரால் உயிரைக் கொல்வது அல்லது வெடிகுண்டுடன் தற்கொலை செய்து கொள்வது சுத்த பைத்தியக்காரத்தனம், வெறுப்புக்குரியது என கருத்தில் கொண்டாலும் சொன்னாலும், முஸ்லிம்கள் அவ்வாறு பார்ப்பதில்லை. **'ஜிஹாத்'** எனும் கருத்துப்படிவம் இஸ்லாத்தில் மட்டுமே உள்ளது. இந்த கருத்தை ஏற்காத எந்த முஸ்லிமும் முஸ்லிமாகக் கருதப்படுவதில்லை. மிதவாதி முஸ்லிம் என்பதே ஒரு **'முரண்தொடை' (oxymoron).** அதாவது முஸ்லிமும் மிதவாதமும் ஒன்றுக்கொன்றுடன் இணைந்து இருக்க இயலாது. ஒருவர் 'மிதவாதக் கொள்கையுடைய மனிதனாகவும் அதே சமயம் முஸ்லிமாகவும் இருந்து கொண்டு' கொலைக்கோ / தற்கொலைக்கோ எதிர்ப்பு தெரிவிக்காது மௌனிகளாகக் கிடக்கவும் முடியாது. ஆக மிதவாத முஸ்லிமும் கொலைக்குத் தடை கூறாதவரை கொலைக்கு உடந்தைதானே!

Osherow எழுதும் போது: **"ஜேம்ஸ்டவுன்'** தலைமையகமாகக் குடிபெயர்ந்த போது, இத்தற்கொலைப் பயிற்சிகள் அடிக்கடி நடைபெற்றது. இதற்கு ஜேம்ஸ் **'வெண் இரவுகள்'** எனப் பெயரிட்டு இருந்தான். "இதைச் சொல்வதே மகா முட்டாள்தனமான வெறியார்வமாகத் தோன்றினாலும், இந்த நிகழ்ச்சிகள் மக்கள் கோவிலில் குடிபுகுந்தோருக்கு நியாயமாகப் பட்டது". இதுதான் ஆச்சரியத்திலும் ஆச்சரியம். ஏன் இவ்வாறு சாவுக்கென ஒத்திகையைச் செய்யச் சொல்ல வேண்டும்? ஏனெனில், வருங்காலத்தில் ஜிம் ஜோன்ஸின் தில்லு முல்லுகள் அம்பலமானால், தற்கொலையைத் தவிர வேறொன்றுமில்லை எனும் இக்கட்டான சமயம் ஒன்று உருவாகும். ஜிம் ஜோன்ஸ் தான் பிடிபடு முன்னர், திடீரென 'தற்கொலை செய்துகொள்' எனச் சீடர்களுக்குக் கடைசி வினாடிகளில் ஆணையிட்டால் இதில் அநேகர் பின்வாங்கி மறுத்து விடலாமல்லவா? ஓரிரு ஒத்திகை என வழக்கமாக்கிக் கொண்டால், பிற்காலத்தில் பழைய மாதிரியே இதுவும் ஒரு ஒத்திகை எனக் கூறி முதலில் சீடர்களை ஏமாற்றி உண்மையில் அதே சமயம் தற்கொலையையும் செய்து கொள்ள ஏற்பாடு செய்ய முடியுமல்லவா? மக்கள் கோவிலில் வசித்த சீடர்கள் மிகச் சாதாரணமானவர்கள். அவர்களுக்குப் பைத்தியம் பிடிக்கவில்லை, மேலும் முட்டாள்கள் எனச் சொல்லவும்

முடியாது. ஆனால் இவர்கள் தங்கள் முழு நம்பிக்கை, புத்தி ஆகியவைகளை ஒரு கொடூரமான பைத்தியத்திடம் அர்ப்பணித்துக் கொண்டதால், ஜிம் ஜோன்ஸின் பைத்தியக்காரத்தைக் கண்மூடித்தனமாகப் பின்பற்ற வேண்டியதாயிற்று. மேற்கூறிய ஒழுகலாற்றை முஸ்லிம்களுக்கும் ஒப்புமையாகக் கூறலாம்.

Osherow மற்றொன்றையும் இங்கு கூறுகிறார்: "பயிற்சிகள் என ஓர் பொய்யைச் சொல்லி இறுதியாக வகுத்திருந்த தற்கொலைச் சடங்கையும் இது வரை செய்த ஒத்திகை போன்றே உயிரைக் குடிக்காத போலிச் சடங்கு என்றே கடைசி வரை நினைத்திருந்தனர். அங்குள்ள வேதியலறிந்த சீடர்களுக்கு, தங்களுக்குக் குடிக்கக் கிடைத்த திரவம் 'அசல் பயங்கர நச்சென' உடனே தெரிந்தது. செனேடர் 'ரயான்' வருகை அனுபவமும் சிலருக்கு இப்போது மிகவும் உதவியது. அப்போது அங்கிருந்த சில சமையல்காரர்களும் ஒரு சில சீடர்களும் ஏதேதோ சாக்கு போக்குச் சொல்லி கடைசிப் பயிற்சியில் கலந்து கொள்ளவில்லை. இதனால் ஜிம் ஜோன்சும் கோபத்தால் என்ன செய்வதென மூளை குழம்பி, என்ன செய்யப்போகிறானென எதிர்பார்க்கும் படி ஆயிற்று. இறுதியில் குழந்தைகள் முதலில் இறப்பதைக் கண்டாலும், சில சீடர்களுக்கு இச்சடங்கு உண்மைத் தற்கொலை எனப் புரிந்தாலும், இன்னும் சிலர் ஏதோ விபரீதம் நடக்க உள்ளது என மட்டும் அறிந்தனர்.

**தங்கள் தவறான செயல்களையே நியாயப்படுத்துதல்**

தவறுகளை செய்துவிட்டு அத்தவறுகளையே நியாயப்படுத்துவது ஏன் என்பது 'மக்கள் கோவிலி'ன் நடவடிக்கைகளை ஆராய்ந்தால் புரியும். அங்கு எல்லாமே தலைவர் 'ஜிம் ஜோன்ஸ்' எதெதைச் செய்யச் சொல்கிறாரோ அதன்படியே சீடர்களும் நடந்து கொள்ள வேண்டும்.

Osherow விளக்குகிறார்: "தவறான செய்கைகளை நியாயப்படுத்துவதற்கு எவரெவர் தலைவர் சொல்படி நடக்கவில்லையோ அதன் முதல் தாக்கம் உடலுக்கும் மனதுக்கும் பொறுக்க முடியாத தண்டனைதான். பயமுறுத்தலும் தண்டனையும் எங்கு உள்ளதோ ஆங்கே தலைவர் கட்டளைப்படி எல்லாமே தன்னிச்சையாக நடக்குமல்லவா? ஒருவரின் நடத்தைகளை அறிய சிறிய அச்சுறுத்தலே போதும்; இதுவே கடுமையான அச்சுறுத்தலைவிடப் பலனை அளிக்க வல்லது.[411]. இச்சிறிய அச்சுறுத்தலின் பாதிப்பே வரும் நாட்களுக்கும் போதியதாகப் பெரும் அச்சுறுத்தலுக்கும் உதாரணமாகப் போகும். [412]

இவ்வாறாக மிகச் சிறிய அச்சுறுத்தலால் கூட எவரும் ஒரு காரியத்தைச் செய்யும்போது அவ்வச்சுறுத்தல்படி நடந்துகொள்ளத் தன்னையும் தன் தனியில்புகளான ஒழுகலாற்றையும் கட்டாயப்படுத்தி மாற்றிக் கொள்ள வேண்டிதாகிறது. கடுமையான அச்சுறுத்தல்கள் நேர்ந்தால் உடனுக்குடன் கேட்டுக்கொண்டவாறே இணக்கத்துடன் செய்ய ஆரம்பித்துவிட வேண்டி வரும்.

மற்றோரைச் செயலாற்ற வைக்கும் திறனுள்ளவர்களால் ஆற்றப்படும் அச்சுறுத்தல்களும் ஏன் எவ்வாறு அச்சுறுத்துகிறார் அல்லது இனிமேல் வரவிருக்கும் செயல்கள் என்னென்னவாக அல்லது எவ்வாறு இருக்கலாம் எனத் தெளிவாக அறிந்து கொள்ளவும் இயலாது. இம்மாதிரிச் செயல் புரிபவர்களுக்குத் தன்னால் பிறர் என்னென்ன எவ்வாறு துன்பமடைகிறார் எனத் தெரிந்த அடுத்த

---

[411] Aronson, E. , and Carlsmith, J. M. Effect of the severity of threat on the devaluation of forbidden behavior. *Journal of Abnormal and Social Psychology*, 1963, 66. 584-588.
[412] Freedman, J. and Long-term behavioural effects of cognitive dissonance. *Journal of Experimental Social Psychology, 1965,* 1, 145-155.

கணத்தில் அதை நியாயப்படுத்தத் தருக்கரீதியில், மதம் போன்ற கோட்டுபாடுகளை மேற்கோள் காட்டி, மதி நுட்பத்திற்கேற்ற வழியில் அல்லது துன்பப்பட்டவரைப் பற்றித் தரக்குறைவாக நற்பெயரைக் கெடுத்து இவரைப் பற்றி இகழ்ச்சிக்குரியவைகளைக் கூறி இத் தண்டனைகள் இவருக்குக் கொடுத்தது மிகப் பொருத்தம்தான் என நியாயப் படுத்தி விடுகிறார்.[413]

இது மிகக் கடுஞ்சோதனையானது. ஜேம்ஸ்டவுனில் இருந்த நம்பிக்கை உள்ளவர்களே தலைவர் சொல்படி கேட்காதவர்களை நிந்தித்தார்கள்; அவர்கள் தங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவரானாலும் சரி, அதற்காகத் தண்டனை வழங்கியது பொருத்தமே என பழி சுமத்துவார்கள். மக்கள் கோவிலில் வந்து சேர்ந்த சாதா மக்களுக்கு ஆற்றும் கொடுமை, இழைக்கப்பட்டவர்களுக்கு உணர்வதிர்ச்சியும், மனப்புண்ணால் ஏற்பட்ட உடல்நலக் குறைவையும் உண்டாக்க வல்லது. இது தவறெனத் தெரிந்தாலும், இதையும் மேற்கூறியவாறே நியாயப்படுத்தி விடுவார்கள்.

முஸ்லிம்களும் தங்கள் உற்றார் உறவினர்களுடனும் போரிட வேண்டி வரும். இவைகளையும் நியாயப்படுத்தி அவர்கள் மீது தண்டனை வழங்கியதும் பொருத்தமே எனப் பழி சுமத்துவார்கள். முஸ்லிம்கள் இதற்கான மற்றொரு வாதத்தையும் முன்வைப்பார்கள். அல்லாவின் ஆணையெனவும், இது எல்லோராலும் ஒப்பவேண்டியதல்லாமல் அதைத் தாங்கள் எவ்வகையாலும் தடுக்க முடியாது, அப்படி இத்தண்டனைகளை அளித்தது சாலப் பொருத்தமெனக் கூறி வெந்த புண்ணில் வேலையும் ‘சதகெ’னக் குத்தி மனவலியைத் திணிப்பார்கள்.

ஜென்னி மில்ஸ் எனும் பெண்மணி மற்றோருக்குச் சாவு நிகழ்வதற்கு முன்னரே மக்கள் கோவிலிருந்து ஒடிவிட்டாள். அவள் Six Years with God (1979) எனும் புத்தகத்தை வெளியிட்டு அதில், “ஒவ்வொரு தடவை மற்றவர்களிடம் நான் மக்கள் கோவிலில் ஆறு வருடங்கள் கழித்தேன் எனக் கூறும்போது என்னிடம் மிகக் கடுமையான, பதிலளிக்க முடியாத பல கேள்விகள் எழுப்புவார்கள். முக்கியக் கேள்வியாக எல்லோராலும் கேட்கப்படுவது: ‘மக்கள் கோவில் இவ்வளவு மோசமாக இருந்தால் அதில் நீயும் உன் குடும்பமும் இவ்வளவு நாட்களை ஏன் கழித்தீர்கள்?’ என்று கூறியுள்ளாள்.

இதற்கு பதிலையும் Osherow கூறுகிறார். ”சமூக உளவியல் ஆராய்ச்சிகளில், இந்த நியாயப்படுத்தும் நடைமுறையும் **‘சிந்தனை சார்ந்த ஒவ்வாமை’க்** (cognitive dissonance) கருத்தியல்படி, இம்மாதிரி நடக்கும் அறிவுக்குப் பொருந்தாத ஒழுகலாறுகளுக்குத் தக்க விளக்கமளிக்க முடியும்”.[414]

தாங்கள் செய்யும் எல்லாக் கொடுமைகளையும் நியாயப்படுத்துவதில் தான் ‘இஸ்லாமே’ அடங்கி உள்ளது. முஸ்லிம்கள் செய்யாத கொடுமைகள் அக்கிரமங்கள் ஒன்றுமே உலகில் மிச்சமிருக்க முடியாது. இருந்தும் அவைகள் எல்லாவற்றையும் நியாயப்படுத்தி விடுவார்கள்.

இஸ்லாமில் நம்பிக்கையுள்ள ஒருவன், ‘அபூ ஹுதைஃபா’ என்பவன் ‘பாதர்’ போரில் பங்கு கொண்டான். ஆனால் இவனுடைய தகப்பன் எதிரில் இருந்த ‘குரைஃஷ்’ படை அணியிலிருந்து போரிட இருந்தான். அப்போது முகம்மது, எதிர்ப்படையிலிருக்கும் அணியில் தன் மாமன் ‘அப்பாஸ்’ எனும் தன் ஒற்றனைக் கொல்லாமல் விடுமாறு ஆணையிட்டார். அப்போது ‘அபூ ஹுதைஃபா’ தன் குரலை

---

413 Davos, K., AND Jones, E. Changes in interpersonal perception as a means of reducing cognitive dissonance. *Journal of abnormal and Social Psychology,* 1960, 61, 402-410.

414 *See Aronson*, E. *The social animal* (3rd ed.) San Francisco: W. H. Freeman and Company, 1980. AND Aronson, E. The theory of cognitive dissonance: A current perspective. In L. Berkowitz (ed.), *Advances in experimental social psychology*. Vol. 4, New York: Academic Press, 1969.

உயர்த்தி, ”நாம் நம்முடைய தந்தைகளை, மாமன்களைக் கொல்லவேண்டும்! ஆனால், அல்லாவின் தூதருடைய மாமனை மட்டும் கொலை செய்யாமல் இருக்க வேண்டுமா?” என அதிகப்பிரசங்கமாகக் கேட்டதால் முகம்மது முகம் சிவந்து, “அல்லாவின் தூதர் முகம்மதுவின் மாமனையும் கொல்லத்தான் வேண்டுமா, சொல் ‘ஓமர்’ என அவனைப் பார்த்துக் கேட்டார். ‘ஓமரும்’ முகத்துதி சைகையாக, தன் கத்தியை உடைவாளை வெளியில் எடுத்து ‘அபூ ஹுதைஃபா’ தலையை நானே கொய்வேன்; அல்லாவின் அதாவது முகம்மதுவின் ஆணைக்கெதிராகப் பேசிய போலியான முஸ்லிம் இவனே! (அபூ ஹுதைஃபா)” என்றான்.[415]

இந்த அச்சுறுத்தல் உடனுக்குடன் தன் செயல்திறத்தைக் காட்டியது. ‘அபூ ஹுதைஃபா’வுக்கு உடனே நாடகரீதியில் ஒரு மாற்றம் தெரிந்தது. இதற்கப்புறம் அவன் முகம்மதுவின் அதிகாரத்துக்குட்பட்டும் முன் மாதிரி அதிகப்பிரசிங்கித் தனமாகப் பேசாமல் முழு மரபு முஸ்லிமாகக் காட்சியளித்தான். அடிக்கடி இவ்வாறு பேசிக் கொண்டிருந்தான்: ‘நான் அவ்வாறு கூறிய நாளிலிருந்து எனக்குள் ஒரு பாதுகாப்பின்மையைத்தான் உணர்ந்தேன். என் தந்தையின் உயிரற்ற உடல் சம்பிரதாயமற்ற வகையில் இழுத்து வந்து ஒரு கிணற்றில் தள்ளியதைப் பார்த்து மிகக் கலங்கினேன்” என்றான். இதைப் பார்த்த முகம்மது, ”உனது முஸ்லிமல்லாத தந்தை மறைந்ததை நினைத்து வருந்துகிறாயா?” எனக் கேட்டார். நான் அழுவதன் காரணம் வேறு. என் தகப்பனார் மிக பரந்த மனமுடையவர். நானே அவரிடம் இஸ்லாத்துக்காகப் பரிந்து பேசி அவரை முஸ்லிமாக்கி இருப்பேன். இப்போது அவர் உயிருடன் இல்லை. அதற்காகத்தான் வருந்துகிறேன்” என்றான். இந்த பதிலைக் கேட்ட முகம்மது அவன் தலையில் தன் கையை வைத்து ஆறுதலளித்து, ஆசீர்வதித்துச் சொன்னார்: ‘இனி கவலைப்படாதே’ எனத் தேற்றினார்.[416]

அபூ ஹுதைஃபா ஒரு ஆரம்பககால முஸ்லிமானதால், முகம்மதுவின் சினமும், ஓமரின் கொலைப் பயமுறுத்தலுமாக இரண்டும் சேர்ந்து அவனுடைய மனப்பான்மையைப் பலமாக ஆட்டி உலுக்கி மாற்றியது. இக்கொலை நிகழ்ச்சிக்குப் பின் தானும் தன் தந்தையின் படைக்கு எதிரிதானே; ஆதலால், இக்கொலை மனத்துக்கே மிக சங்கடமானாலும், இத்தண்டனை நியாயம்தான் என போகப்போக மனத்துள் உடன்பட்டுத் தன்னை ஆசுவாசப் படுத்திக்கொண்டான்.

லியோ டால்ஸ்டாய் கூறினார்: “எவனொருவன் தன் வாழ்க்கையில் துன்பநிலை ஏன், எதனால் ஒரே குழப்பமாக உள்ளது என ஆராயாது தன் வாழ்க்கையைத் தவறான வழியிலேயே தொடர்ந்து நடத்தி வருகிறானோ, அம்மனிதனின் மீட்சியும் தண்டனையின் தொடர்ச்சியும் அங்கேதான் உருவாகிறது” என்றார். [417]

## தன் பொறுப்பிலிருந்து தொடர்பற்ற நிலை

ஆயிரக்கணக்கான சாதா ஜெர்மனி மக்கள் கூட ‘நாசி’ப் படையின் தலைமையில் அதி பயங்கர அக்கிரமங்களை செய்யும் போது பெருங்களப் படுகொலைகளுக்கு (Holocaust) உடந்தையாயினர். ந்யூரம்பர்க் (Nuremberg) சர்வதேச நீதிமன்ற வழக்கில், இக்கொலைக் குற்றம் சாட்டப்பட ஜெர்மனி மக்கள் ஒவ்வொருவரும் ‘எங்களுக்குக் கொடுப்பட்ட கட்டளையைத் தான் நாங்கள் நிறைவேற்றினோம், நாங்களாகவே செய்யவில்லை’ என வாதாடினார்கள். இப்படிச்

---

[415] Muir; The Life of Mohammet Vol. III Ch. XII, Page 109. (Sirat Ibn Ishaq p. 301)
[416] Muir; The Life of Mohammet Vol. III Ch. XII, Page 109; (Waqidi, p. 106; Sirat p. 230; Tabari, p. 294)

[417] The Kreutzer Sonata

சென்னவர்களுள் மிக முக்கியமான ‘ஈச்மன்’னும் (Eichmann) அவனுடைய கூட்டாளிகளுமாகச் சேர்ந்து ‘பெருங்களப் படுகொலை’யின் நோக்கத்திற்காகக் கூட்டுச் சேர்ந்து ஆற்றிய இப்படுகொலைகளுக்கு ‘நன்நெறியின் பெயரில் அவர்களே பொறுப்பு’ என நிரூபிக்க, 1961இல், ‘Yale University psychologist’ “Stanley Milgram” உளஇயல் தொடர்பான ஒரு பரிசோதனையை நடத்தினார்.

இதற்காக, அதிர்ச்சி தரும் ‘மின்சார அதிர்ச்சி இயந்திரத்தை’ (shock generator) நிறுவி, முப்பது மாற்றான்கள் (switches) மூலம் மின்சாரத்தை ஓட்டவும் நிறுத்தவும் இணைத்தார். இச்சாதனங்களின் ஒவ்வொன்றிலும் தொடர்ந்து பதினைந்து மின்அலகுக்கூறு பெருகும்படி (15 volt increments) ஏற்பாடு செய்து கொண்டார். இதனால் அவர் அடுத்தடுத்து இயக்கும் சாதனத்தை ஓட்டும் போதும் நிறுத்தும் போதும் பதினைந்து கூட்டி 15 முதல் 450 மின் அலகுக் கூறுகள் வரை அதிகரிக்கும்படி செய்தார். இந்த ஏற்பாட்டால் தன்னிடம் பரிசோதனைக்கு வந்த தொண்டர்கள் அனைவருக்கும் அதிர்ச்சி தரும் மின்சாரம் உடலில் பாயும். அதாவது முதல் சாதனத்தில் குறைவாக 15 அலகுக்கூறிலிருந்து முப்பதாவது சாதனத்தில் 450 அலகுக்கூறு வரை அடுத்தடுத்துப் படிப்படியாக அதிகரிக்கும். இங்கு உண்மை ஒன்றைச் சொல்லியாக வேண்டும். ([அதாவது ‘மின்சார அதிர்ச்சி இயந்திரம்’ (shock generator) என்பதே போலி. உண்மையில் ஒவ்வொரு சாதனத்தை அடுத்தடுத்து அழுத்தினாலும், ஒரு சப்தம் தான் உண்டாகும். இதுதான் உண்மை. கடைசியாக 450 அலகுக்கூறை ஒரே சமயத்தில் அழுத்தினால் அதைத் தாங்கிக் கொள்ள இயலுமா என்ன!). இதற்கான தொண்டர்களை “மின் அதிர்ச்சியால் நினைவாற்றலைத் தெரிந்து கொள்ளும் பரிசோதனை’ எனப் பத்திரிக்கையில் விளம்பரம் கொடுத்து ஆளெடுப்பு செய்தார். இவ்வாளடுப்பின்போது தொண்டர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மணி நேர பரிசோதனைக்கு உட்பட்டோருக்கு $400 (நானூறு டாலர்) ஊதியமாக அளிக்கப்படுமென விளம்பரத்தில் தகவல் கொடுத்தார். தொண்டர் ஒவ்வொருவரும் பரிசோதனை செய்ய இருந்த Milgramஐத் தனித்தனியாகச் சந்தித்தனர். 1. இந்த ஏற்பாட்டின் போது, Milgramக்கு வேண்டிய கூட்டாளி ஒருவர், தொண்டருக்கு முன்பாகவே Milgramக்கே பரிசோதனை செய்பவராவார். 2. இந்த ஏற்பாட்டை ஒவ்வொரு தொண்டருக்கும் முன்னரே விளக்கமாகக் கூறப்பட்டது. 3. அதன் படி வந்த முப்பது தொண்டர்களில் ஒவ்வொரு ஜோடியில் ஒருவர் பரிசோதனை செய்பவராகவும் (ஆசிரியர்/teacher) அடுத்தவர் பரிசோதனைக்கு ஆட்பட்டவருமாவார் (மாணவன்/learner). 4. இதில், யார் ஆசிரியர், யார் மாணவன் என்பது ‘குலுக்குச் சீட்டு முறையில் (lottery) நிர்ணயிக்கப்படும். 5. ஒவ்வொரு ஜோடியின் பரிசோதனையின் போதும் ஆசிரியரோடு பரிசோதனைக்கு ஏற்பாடு செய்த *Milgram*ம் உட்கார்ந்திருப்பார். 6. அடுத்ததாக, ஒவ்வொரு ஆசிரியரும் உட்கார்ந்து மாற்றான்களைச் (switches) செயலாற்றச் செய்யவும், ஒவ்வொரு மாணவனும் அடுத்த அறையில் அதிர்ச்சி தரும் ‘மின்சார அதிர்ச்சி இயந்திரத்தின்’ (shock generator) முன் உட்கார வைக்கப்பட்டு அதிர்ச்சியைப் பெற்றுக் கொள்ளவும், ஆசிரியரை நேரில் பார்த்துக் கொள்ள முடியாதவாறும் வழி செய்யப்பட்டது. 7. அடுத்து, பரிசோதனையின் போது மாணவன் ஒரு இருக்கையில் (chair) கட்டப்பட்டுவான். மாணவனின் மணிக்கட்டுகளில் வெவ்வேறு மின்வாய்கள் (electrodes) பொருத்தப்படும். 8. இந்த ஏற்பாட்டின்படி ஒவ்வொரு தடவையும் அதிர்ச்சி எவ்வளவு நேரம் செய்யலாம் என முன்னரே நிர்ணயிக்கப்பட்டும். இதன்படி, ஜோடிகள் முன்னரே ஒவ்வொருக்கொருவர் நோவு தர நேரிடும் என்பது பற்றியும் அறிந்தவராவார்கள். 9. ஒவ்வொரு ஆசிரியரும் மாணவரும் பரிசோதனைக்கு முன்னர் அறிமுகமானதால் அவர்களுக்கு மின் அதிர்ச்சி வருமெனத் தெரியும். 10.

இன்னொன்றும் முன்னரே சொல்லப்பட்டது. உரிய நேரத்திற்கு மேல் மின் அதிர்ச்சி தந்தால் ஒவ்வொரு தவறுக்கும் தண்டனையாகப் பதினைந்து மின் அலகுக்கூறு கூட்டி அதிர்ச்சி தரப்படும் எனக் கூறப்படும். 11. ஆனால் உண்மையில் மாணவனுக்கு மின் அதிர்ச்சியே தரப்பட மாட்டாது, இது ஒரு சுத்தப் பொய். பதிலாக ஒவ்வொரு தடவையிலும் பெரிய ஒலிதான் ஒலிக்கும். மாணவன் இனி தன்னால் தாங்கிக்கொள்ள இயலாது எனச் சொன்னால் நிறுத்தப்படும். 12. ஒவ்வொரு பரிசோதனைக்குப் பின்னர் மாணவனிடமிருந்து ‘அடுத்த’ பரிசோதனையை ஆரம்பிக்கவோ அல்லது நிறுத்தவோ சொல்லப்படும். 13. வெவ்வேறு தகவல்கள் இவ்வாறு பரிமாறிக் கொள்ளப்படும். அதாவது ‘பரிசோதனைக்காகத் தொடரத்தான் வேண்டும்’ ’உனக்கு வேறொரு தேர்வுக்கும் இடமில்லை’ எனவோ மென்மையான அதிர்ச்சியாகவோ அல்லது அதிக அதிர்ச்சியாகவோ தரப்படும். 14. இதற்கும் மேலாக ஏதாவது கேள்வியிருந்தால் பரிசோதனை செய்யும் Milgramமுடன் தொடர்பு கொள்ளலாம். 15. இப்பரிசோதனை மாணவன் ‘யார் இதற்குப் பொறுப்பு எனக் கேட்டால், Milgram பொறுப்பென பதிலளிப்பார். 16. இப்பரிசோதனை பலருக்கு வேதனை அளித்தது. இருந்தும் நடந்தேறியது.

இப்பரிசோதனையின் முடிவு உலகில் எல்லோரையும் திடுக்கிடச் செய்தது.

முதலில் இம்மாதிரி காட்டுமிராண்டித்தனமான பரிசோதனைக்கு 1% அல்லது 2% மனநிலை திரிந்தவர்கள்தான் சம்மதிப்பர் என உலகோர் நினைத்திருந்தார்கள். ஆனால் உண்மையில் பரிசோதனைக்கு வந்தவர்களில் 65% பங்கு கொண்டனர்.

இதனால் எல்லோரும் அறிய வேண்டியது: எவனும் ஒரு நல்ல வெளுப்பு / காவி மேலுடுப்புடுப்பாக அல்லது அங்கியாக உடுத்தி இதற்குத் தகுந்த தலைப்பாகை, நீண்ட தாடி, மீசை, அலை அலையாக்க் காற்றில் பறக்கும் தலை முடியென கைத்தடியுடன் தானொரு நிபுணன் எனவோ அல்லது ஓர் இயக்கத் தலைவன் (நாசி ஹிட்லர் போன்ற) எனவோ அதிகாரத் தோரணையுடன் பணியிடவோ ஆரம்பித்தல், அதற்கு 100க்குக் குறைந்தது 65 பேர்களாவது இவனை நம்பி அவன் சொல்படி உடன்படுவரென இப்பரிசோதனையால் தெரிகிறது.

Stanley Milgram பரிசோதனைகள் மனிதரின் கெட்ட இயல்புகளைப் படம் பிடித்துக் காட்டுகிறது. மேலும் மனிதர்கள் எவ்வாறு மிக பயங்கரமான அக்கிரமங்களையும் ஆணைகளுக்குக் கட்டுப்பட்டுச் செயலாற்றுகிறார்களெனவும் அறிய முடிகிறது. ‘ஹிட்லர் என்ற ஒரு மனித சர்வாதிகாரி’யின் ஆணைகளுக்கே கட்டுப்படும் மனிதர்களுக்குத் தாங்கள் நம்பும் அல்லா-முகம்மது எனும் பெயரால் உள்ள அதிகாரத்திற்கும் கட்டாயம் கட்டுப்படுவார்கள் எனவும் இதனால் தெளிவாகத் தெரிகிறது! இஸ்லாத்தில் உள்ள கொடுமைக் கொள்கைகளை மக்களும் இங்குதான் நேராகக் காணலாம். இதிலிருந்து நமக்கு விளங்குவது: கொஞ்சமும் கருணையற்று, மனசாட்சியின் உறுத்தலின்றி மிகச் சாதாரண முஸ்லிம்களும் முஸ்லிமல்லாத மக்களுக்குத் துன்பமளிக்கத் தயங்க மாட்டார்கள் எனத் தெளிவாகத் தெரிகிறது. எவ்வெப்போது மனிதர்கள் மற்றொரு சாதாரண மனித தெய்வத்தன்மையையும் அதிகாரத்தையும் நம்புகிறார்களோ, அக்கணமே அம்மனிதர்கள் தங்கள் ‘நுண்ணறிவைத் துறந்து’ தாங்கள் சுயமாக சிந்திக்கும் பழக்கத்தையும் உடனே முழுமையாக உடன் நிறுத்தி விடுவார்கள். இதைப் போலவே, ஒரு மதத்தை நம்புபவன் அதற்காகப் பரிந்துரைப்பது: தான் மதத்திற்காக எக்காரியத்தையும் செய்தாலும் அது, என் பகுத்தறிவுக்கும் நம்பிக்கைக்கும் ஒத்திசைவாக உள்ளது எனவும் அதுவே இம்மதத்தின் மிக முக்கியமான சித்தாந்தம் என மதச்சீடரொருவர்

என்னிடம் கூறினார். இவ்வாறு எப்போதாவது அம்மத சீடனுக்கே தான் எதைச் சரியென மனத்தால் புரிந்து கொள்கிறானோ அதற்கும் கடவுள் தூதர் சொல்வதற்கும் இடையே ஏதாவதொரு கருத்தில் பொருந்தாதிருந்தால், தான் சரியென நம்பியதையும் தியாகம் செய்து கடவுள் எவ்வாறு சொன்னாரோ அதையே சரி என தயங்காது ஒப்புக்கொண்டு பின்பற்றுவான். இதுதான் மனித இயல்பு. மதம் இவ்வாறு மனிதனின் கைகளிரண்டையும் சிந்திக்கும் சக்தியையும் நிரந்தரமாக ஆண்டாண்டு காலமாகக் கட்டிப் போட்டு வைத்துள்ளது. கடவுள்-தூதர் இரவைப் பகலெனச் சொன்னால், மனிதன் அக்கடவுள்-தூதரை நம்புவானே தவிர தன் கண்களையே நம்ப மறுத்துவிடுவான். இதன்படி கடவுளின் அல்லது அவர் தூதரின் விவேகத்தோடு மனிதனின் உணரும் சக்தியை ஒப்பிடும்போது மனிதன்தான் குறைபாடுள்ளவனென என வாதாடவும் செய்வான். இதுதான் மதத்தின் பலனும், இயல்பும். ஒவ்வொரு மதத்தில் நம்புபவர்களும் இதையே சரியெனக் கூறுவர். இங்கே மிக முக்கியமாகக் கவனிக்கவும்: காரணமற்ற, வரம்பு மீறிய, கடவுள் பெயரால் கூறப்படும் கட்டளைதான் இங்கே எடுத்துக்காட்டாகச் சொல்லப்படுகிறது.

**எப்போது மனிதனின் மனச்சாட்சி கழட்டி எட்டாத தூரத்தில் தூக்கி எறியப்படுகிறதோ, அங்கே மனிதன் மனிதனாக மாட்டான். மிருகமாவான்.** இதைத் தவிர கீழே கூறப்பட்டுள்ள அடிக்குறிப்பின்படி, ஆங்கிலேயர் ஆட்சி இந்தியாவில் நடைபெறும் போது, ஒரு மதத்தில் கடவுளைத் தினமும் உபாசிக்கும் பரமபக்தரால், தான் உபாசிக்கும் கடவுளையும் மதத்தையும் எவரொருவர் நம்பவில்லையோ, அவரைக் கொல்லத் தன் ரௌடி-சீடர்களுக்குக் கட்டளையிட்டு, அதன்படி கொலைகளும் செய்யப்பட்டன எனக் கூறப்படுகிறது. இதற்காக சீடர்களைக் கைதுச் செய்து விசாரிக்கும்போது கொஞ்சமும் மனச்சான்றின் உறுத்தலின்றி, தாங்கள் கொலை செய்தது மிகச் சரிதான் அதற்காகப் பெருமை கொள்கிறோமெனவும் கண் சிமிட்டாமல் தற்பெருமை கொண்டனர்.

இதில் ஒரு ரௌடியே, தான் 900 விதவித கொலைகளையும், இவைகளைத் தவிர 30 ஏழைகளை பயணத்தின் போதும் கொன்றேன் எனக் கூறும்போது அவனிடம் இக்கேள்வி கேட்கப்பட்டது. ‘முதலில் நீ கொலை செய்தவர்களுடன் நட்புடன் பழகி, இதனால் அவர்களுக்கு உன்னுடன் உள்ள நட்பு பாதுகாப்பானது எனத் தவறாக எண்ணச்செய்து பின் எதற்காக வேண்டுமென்றே கொன்றாய்?’ அதற்கு அந்த ரௌடி (Buhram) கூறிய பதில், ‘நீங்கள் கூறுவது போன்றல்ல. நானோ ஒரு வேடன், ஒரு வேட்டையாடுபவனுக்கு அகப்பட்ட பலியைக் கொல்வதற்கு முன்னர் ஏற்படும் அசாதாரண உணர்ச்சியால் என்னிடமிருந்து தந்திரத்துடன் தப்பித்துப் போக நினைக்கும் பலிக்கும், அதை ஏமாற்றும் திறன் உள்ள எனக்கும் உள்ள போட்டியில் அப்பலியே கடைசியில் உன் காலடியில் சரணாக வந்து விழும் காட்சியைக் கற்பனை செய்து காணும் மகிழ்ச்சியில் மயிர்ச்சிலிர்ப்பு (thrill) உண்டாகுமல்லவா? அந்தப் உணர்ச்சிப் பரவச நிலைக்காகத்தான் பெருமகிழ்ச்சியோடு கொலை செய்தேன்’ என்றான். ஆக, ரௌடி எப்போதும் தனக்கு அகப்பட்ட பலியை ஒரு சிறப்பான பொழுதுபோக்கு விளையாட்டெனவே நினைக்கிறான்! [418]

எந்த ரௌடியும் சாதாரணக் குற்றம் மட்டும் செய்பவனல்ல. இவர்களுள் கடவுளிடத்தில் அதீதமான பக்தி செலுத்தி மிக சிரத்தையுடன் அக்கடவுளுக்கான சடங்குகளைத் தீவிரமாகச் செய்பவர்கள் சிலருண்டு. இக்கொலைகளைச் செய்யும்போது கடவுள் தங்களுக்கிட்ட ஆணையைத்தான் நிறைவேற்றுவதாகவும், மேலும் அப்பலிகள் முன் செய்த தவறுகளுக்குத் தக்க தண்டனை

[418] Thug or a Million Murders writtenby Brigadier – General Sir William T. F. Horwood, p 7

அனுபவிக்கிறார்கள் என்றும்தான் அக்கடவுளின் மிக எளியக் கருவி எனவும் கூறி தாங்கள் செய்த கொலைகளை நியாயப்படுத்துகிறார்கள். இக்குற்றங்களையும் ரௌடிகளுக்குக் ‘கடவுளிடமிருந்து தகுந்த இசைவுச் சகுனம்’ கிடைக்கும் வரைக் காத்திருந்துதான் இக்கொலைகளைச் செய்வதாகச் சொன்னான்.

இதை ஒரு புத்தக வடிவில் எழுதிய ‘William Sleeman, the British administrator in India’ என்பவர் இம்மாதிரி ரௌடிகளைச் சற்றும் சோர்வின்றி வங்காளத்தில் மிருகங்களை வேட்டையாடுவது போன்று வேட்டையாடி சுமார் 500 ஆண்டுகளாக பல ரௌடி சந்ததிகளால் தொடர்ந்து கடவுள் பெயரால் நடந்து வந்த பேரச்சம் விளைவிக்கும் பயங்கர படுகொலைகளைச் சுத்தமாக ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தார். இவர்களில் பெரும்பான்மையானவர்கள் முஸ்லிம்கள் என அறிந்த நாம் இந்நாட்களில் வியப்படையத் தேவையில்லை. ஏனெனில் அவர்களே அப்படித்தான்!

அப்போது அவர் ஒரு ரௌடிக் குழுவிடம் நடத்திய விசாரணையில் கேட்ட கேள்விகள்:

ஸ்லீமன்: நீங்கள் செய்த கொலைகளின் போது பழிபாவமறியாத உங்கள் பலிகள் மீது உங்களுக்குக் கொஞ்சமாவது பரிவிரக்கமோ அல்லது கருணையோ எப்போதுமே உண்டாகவில்லையா?

சாகிப் கான்: (அழுத்தந்திருத்தமாக) ‘இல்லவே இல்லை’

இவர்களில் பாஃரிங்கியா என்பவன் ஒரு மிக அழகான பெண்ணைக் கொலை செய்தவன்: இவளுக்காக உண்மையில் எனக்கு முதலில் இரக்கமுண்டானது. ஆனால், கொலைக்குப் பின் எங்களுக்குக் கிடைக்கும் பிரசாதமான சக்கரைக் கட்டியை சுவைத்து உண்ணும் போது கிடைக்கும் சுகத்தை நினைத்த மாத்திரத்தில், எனது கடவுளின் இயல்பை நினைவு கூர்ந்து அப்போது கருணை முக்கியல்ல கடுமையே முக்கியமென உணர்ந்தேன்.[419]

ஸ்லீமன்: ஒரு ஏழைப் பயணி அல்லது ஒரு பயணியர் கூட்டத்திடம், எந்தப் பொருளும் இல்லாத ஏழையாக இருப்பவர்களையும் ஏன் கொலை செய்தாய்? ‘நல்ல சகுன’த்தைக் கேட்டாயா? அல்லது உனக்கு வேறு பலியைக் கொலை செய்ய ‘நல்ல சகுனமே’ கிடைக்கவில்லையா? இவர்கள் ஏழ்மையைப் பற்றித் தெரிந்தும் ஏன் விட்டுவிடவில்லை?

டோக்ரா எனும் ரௌடி: இவர்களையாவது விட்டு விடுவதாவது? நடக்காது! முடியவே முடியாது. (No chance).

நாசிர்: எப்படி அவர்களை விட்டு விடுவது? இது வானுலகத்திலிருந்து வந்த ஆணையாகையால், அவர்களைக் கொல்லாமல் எப்படி விட்டு விடுவது? பின் எப்படி எனக்கு இவர்களைப் போன்ற பலிப் பயணிகள் ஒட்டு மொத்தமாக எங்கு கிடைக்கும்?

மோர்லி: நிச்சயமாக இல்லை. எங்கள் கையிலுள்ள பயணிகளை, அவர்களிடம் பொருளோ அல்லது ஒன்றுமே இல்லாது போனாலும், ‘நல்ல சகுன’த்திற்கு முன்னர் விட்டு விட்டால், நாசிர் கூறுவது போல, கடவுளிடமிருந்து வந்த ஆணையை மீறுபவர்களாவோமல்லவா?[420]

ஸ்லீமன்: உன் சொற்படி எல்லாக் கொலைகளும் மனிதனால் செய்யப்படுவதில்லை? இவைகளெல்லாம் கடவுள் நிகழச் செய்கிறாரா!

நாசிர்: நிச்சயமாக.[421]

---

[419] ibid. p. 41
[420] ibid. p. 38-40
[421] ibid. p.33

ரௌடியின் மனப்பாங்கிற்கும் ‘ஜிஹாதி’யின் உறுதியான நம்பிக்கைக்கும் உள்ள இயல்புக்கும் உள்ள ஒற்றுமை நம் கவனத்தை ஈர்க்காமல் இருக்க முடியாது. நம்பிக்கையாளர்கள் சிந்திக்கும் திறனை அறவே கைவிட்டு விடுகின்றனர். **இதுதான் நம்பிக்கையால் விளையும் இயல்பு. இதனால் எல்லா மத நம்பிக்கைகளும் தவறு எனக் கிடையாது. இதை மீண்டும் மீண்டும் இங்கு குறித்துக் கொள்ளவும்.** இங்கே குறிப்பிட்டது தங்கள் சீடர்களையே தேவைப்பட்டால் கொலை செய்யும் இஸ்லாத்தைப் போன்று ஆண்டாண்டு காலமாகக் கொலைப் பயத்தால் மட்டுமே வளர்ந்த பெருங்கேடு விளைவிக்கும் துர்போதனைகளைத் தங்கள் சீடர்களுக்குப் போதிக்கும் போது எஞ்சிய எல்லா முஸ்லிம்களும் கண்மூடித்தனமாக நம்ப வேண்டியதாகிறது என்பதையே. இதுதான் பெருங்களப் பலிக்கு (Holocaust) வழித்துறை. பெருங்களப் பலியையே போதிக்கும் முஸ்லிம்களும் வெறியார்வம் மிக்க நம்பிக்கையாளர்கள். உலகத்திற்கே இவர்களால் பெருங்கேடு விளைகிறது என்று இதனால்தான் கூறுகிறேன்.

ஒவ்வொரு தடவையும் தன் பலிகடாவான கபடற்ற மக்களைத் திடீர்த் தாக்குதலுக்கும் கொள்ளக்கும் உட்படுத்தும்போது முகம்மது முஸ்லிம்களுக்கு ஐயத்தையும் அச்சத்தையும் போக்கும் வழியில் கூறியது: ‘அல்லாவே நேராக புவிக்கு வந்து மக்களைக் கொலை செய்ய வரவில்லை. மாறாக முஸ்லிம்களையே கருவிகளாக்கித் தன் பலிகடாக்களைக் கொலை செய்விக்கிறார். ஆகவே நாமெல்லோரும் கடவுளின் கருவிகள். ஆகவே அல்லாவின் காரியத்தை நாமே செய்கிறோம். இதற்கும் ஒரு குரான் வசனத்தை எடுத்து விட்டிருக்கிறார் படியுங்கள்: **குரான்** 8:17 -- (பத்ரு போரில்) எதிரிகளை வெட்டியவகள் நீங்கள் அல்ல - அல்லாஹ்தான் அவர்களை வெட்டினான்; (பகைவர்கள் மீது மண்ணை) நீர் எறிந்தபோது அதனை நீர் எறியவில்லை, அல்லாஹ்தான் எறிந்தான்; மு..மின்களை அழகான முறையில் சோதிப்பதற்காகவே அல்லாஹ் இவ்வாறு செய்தான்; [[[...]]].”

இப்பாதுகாப்புறுதியால் முஸ்லிம்கள் எத்தனை கொடூரக்கொலைகளைச் செய்தாலும் அவைகளுக்குண்டான குற்றங்களிலிருந்து தங்கள் தொடர்புகளை அறுத்துக் கொள்ளலாம்.

## சீடர்களின் முழுகக் கவனத்தைத் தம் ஆதிக்கத்தால் ஆளுதல்

அப்துல்லா இப்னு கா..ப் இப்னு மாலிக் ஒரு கதையைக் கூறி, முகம்மது எவ்வாறு தன் சீடர்களின் முழுக் கவனத்தையும் தம் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளக் கையாண்ட உத்திகளை விளக்கி, கட்டுப்பாட்டுக் கருத்தை மெய்ப்பித்துக் காட்டியுள்ளான். இளைஞன் ‘கா..’ப்’ எப்போதும் முகம்மதுவுடன் எல்லா திடீர்த் தாக்குதல்களிலும் கொள்ளயடிப்பிலும் பங்கு கொண்டவன். இதனால் மிக்க செல்வந்தனாகிவிட்டான். இவனுக்கு வீடுகளும் பழத் தோட்டங்களும் உண்டு. ‘தாபுக்’ கொள்ளைக்கு முகம்மதுவும் ஏனையோரும் தயாராக்கிக் கொண்டிருக்கும் போது, இவன் தோட்டத்தில் நிறைய பழங்கள் நன்கு பழுத்து இன்னும் சில தினங்களில் பறிக்கத் தயார் நிலையில் இருந்தன. தான் சண்டைக்குப் போய்விட்டால் எல்லாப் பழங்களும் தானே கீழே விழுந்து பாழாகிவிடும்; இதனால் வரும் வருமானமும் கிடைக்காமல் போகும். ஆகவே, இச்சமயத்தில் மட்டும் முகம்மதுவுடன் ‘கஸ்வா’வுக்குச் செல்லவில்லை. (‘கஸ்வா’ என்றால் சாதாரணமாக முகம்மது தானே செல்வதுண்டு. சில சமயம், தான் கூட சென்றாலும், கொள்ளையடிப்புத் தாக்குதலில் தாமே நேரில் சண்டையிடாமல் மேற்பார்வையிடக் கூடச் செல்வார்), கொள்ளையடித்து விட்டுத் திரும்பி

வந்தவுடன் தம்முடன் கொள்ளைக்கு வராதவர்களை அழைத்துத் தன்னுடன் கொள்ளையடிக்க ஏன் வரவில்லை என விசாரணை செய்தார். பலர் தக்க காரணம் கூறியதால், அவர்களை பொய்யர்களென மட்டும் திட்டி இவர்களுக்கு நரக நெருப்புதான் கிடைக்குமெனத் திட்டி, மன்னித்து விட்டுவிட்டார். ஆனால், என் போன்று மூவர் அவருக்குத் திருப்தியான காரணங்களைக் கூற முடியவில்லை. கா:'ப் தான் பழங்களைப் பறிப்பதற்காக பின்தங்கி விட்டதான உண்மையை ஒப்புக் கொண்டான். இவன் தான் மூவரில் இளையவன். ஆக எங்கள் மூவரையும் சமூக ஒத்திவைப்பு செய்துவிட மற்ற முஸ்லிம்களுக்குக் கட்டளையிட்டார். அங்கிருந்த எவரும் எங்களுடன் பேசுவதில்லை, பழகுவதில்லை. இம்மாதிரி 50 நாட்கள் தண்டனையை அனுபவிக்கத் தீர்ப்பளித்தார். அப்போது எல்லா நண்பர்களுக்கும் 'அன்னியன்' ஆனேன். என்னால் முடிந்ததற்கு மேலாக முகம்மது தொழுகை நடத்தும் போதும் ஓரத்தில் தொழுகை செய்தேன். என்னைப்பார்த்து என் வணக்கத்தை ஏற்றுக்கொண்டாரா என ஓரக்கண்ணால் பார்ப்பேன். நான் பார்க்காத சமயத்தில் என்னைக் கவனித்து, நான் பார்க்கும்போது முகத்தைத் திருப்பிக் கொள்வார். நாற்பது நாட்களுக்குப்பின்னர் என்னைப் பார்த்து உன் மனைவியுடன் உடலுறவு கொள்ளக் கூடாதென ஆணையிட்டார். 'நானும், இதற்கிணையாக அவளை விவாக ரத்து செய்துவிடச் சொன்னாலும் செய்துவிடுகிறேன் எனக் கூறினேன்'. இதற்கும் பதிலில்லை. இதனால் என் மனைவியை அவள் ஊருக்கு அனுப்பித் தனியாக இருந்தேன். மற்ற இருவருக்கும் அதே தண்டனைதான். இதில் 'உமைய்யா' என்பவன் படு கிழவன்; அவன் மனைவியைக் கிழவனுக்கு உதவி செய்ய அனுமதித்தார். ஐம்பதாவது நாளில், 'பி:ஜிர்' தொழுகையை காலையில் முடித்துவிட்டு இருக்கையில், எங்கிருந்தோ ஒரு குரல், 'பழையபடி உன்னுடன் எல்லோரும் உறவுகொள்வர்' என ஒலித்தது. நானும் வணங்கினேன். மக்களும் என்னிடம் வந்து வாழ்த்து தெரிவித்துப் பழக ஆரம்பித்தனர். 'கஸ்வா' கொள்ளைக்குப் போகாததற்கு தண்டனையை 50 நாட்கள் அனுபவித்த பின்னர் மன்னிப்பு கிடைத்தது.[422]

இந்நிகழ்ச்சியை **குரான்** (9:118)இல் -"(அல்லாஹ்வின் உத்தரவை எதிர்பார்த்து) விட்டு வைக்கப்பட்டிருந்த மூவரையும், (அல்லாஹ் மன்னித்து விட்டான்;) பூமி இவ்வளவு விசாலமாக இருந்தும், அது அவர்களுக்கு நெருக்கமாகி அவர்கள் உயிர் வாழ்வதும் கஷ்டமாகி விட்டது -அல்லாஹ்(வின் புகழ்) அன்றி அவனைவிட்டுத் தப்புமிடம் வேறு அவர்களுக்கு இல்லையென்பதையும் அவர்கள் உணர்ந்து கொண்டார்கள் - [[[...]]]." இம்மாதிரியே முகம்மது தன் சீடர்களை அச்சுறுத்தித் தன் அதி பயங்கரமான ஆதிக்கத்தால் அடக்கி ஆண்டார். இவர் மதீனா வந்த பிறகு அங்கு நடந்த இயல்வாழ்க்கையே முற்றிலும் மாறியது. உளஇயல் சார்ந்த ஆதிக்கம் மிகக் கடுமையானது. இதனால் மக்கள் அவரிடம் பொய் சொல்லவோ அல்லது ஏதாவது சாக்கு போக்குகளைக் கூறவோ மிகவும் அஞ்சினர். ஆனால் முகம்மது தனக்குள்ள சக்தியைப் பற்றிப் பொய் சொல்லத் தவறியதில்லை. தமக்கு எல்லோர் மனதிலும் உள்ள எண்ணங்கள் யாவும் தெரியும் என வீணாகத் தன் பொய்க் கூற்றால் அனைவரையும் மௌனிகளாக்கிப் பயனற்றவர்களாக்கினார். உண்மையில் இது வெறும் பாசாங்கு நிலை தான். இதுதான் முழுமையான ஆதிக்கம். 'ஜார்ஜ் ஆர்வெல்' எழுதிய '1984' எனும் புனைக்கதையில் வரும் 'பெரியண்ணனும்' மக்கள் எண்ணங்களை முன்னெச்சரிக்கையாகத் தெரிந்து கொள்ள முடியுமெனப் புளுகி மக்களைத் தன் ஆதிக்கத்தில் கிடத்தினான். மக்களுக்கு சுந்திரமே வாழ்க்கைக்கு ஆதாரம்.

[422] Bukhari Volume 5, Book 59, Number 702

